# பதினெட்டு புராணச்சுருக்கம்





மூன்றும் பாகம்.

மாம்பலம் குருகுல வெளியீடு

॥ ஸ்ரீ: ॥

# பதினெட்டு புராணச் சுருக்கம்.

## (மூன்றும் பாகம்.)

[ ஸ்ரீ மார்க்கண்டேய புராணம், ஆக்நேய புராணம், ஸ்ரீ பிரும்ம வைவர்த்த புராணம், ஸ்ரீ லிங்க புராணம் ஆகிய நான்கு புராணங்கள் அடங்கியது ]

ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

" மாம்பலம் குருகுல வெளியீடு."

2, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம்,

தி. நகர், சென்னை 17.



துர்முகஹு ஐப்பசிமீ] 1956. [விலை ரூ. 4.

# பொருளடக்கம்.



ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், சீர்காழி.



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதி **ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

श्रीः

॥ श्रीमुखं ॥

मुद्रा

**श्रीमत्परमहंस परिव्राजका चार्यवर्य**
**श्रीमच्छंकर भगवत्पाद प्रतिष्ठित**
**श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु**
**श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादैः**

**श्री· श्रीवत्स सोमदेवशर्मणे क्रियते नारायणस्मृतिः ।**

தங்களால் தமிழ் பாஷையில் எழுதப்பட்டு நம்முன் வைக்கப்பட்டுள்ள பதினெண் புராணச் சுருக்கமென்னும் நூலின் மூன்றாம் பாகத்தைப் பார்வையிட்டோம்.

நமக்கு தர்மங்களைப் போதிக்கும் மூலப்ரமாணங்கள் வேதங்கள். அவைகளின் பொருள் எல்லோராலும் எளிதில் அறியமுடியாதது. ஸம்ஸ்கிருத பாஷையில் பாண்டித்ய முள்ளவர்களும் சீக்ஷா முதலிய அங்கங்களின் உதவியைக் கொண்டுதான் புரிந்துகொள்ளக் கூடும். ஆகவே அவ்வேதங்களின் பொருளை எல்லோரும் எளிதில் அறிந்துகொள்வதற்காக பதினெண் புராணங்கள் ஸ்ரீ வேத வ்யாஸ முனிவரால் இயற்றப்பட்டுள்ளன. இவைகளின் பொருளை ஸம்ஸ்கிருத ஞானமில்லாதவர்கள் ஓரளவாவது உணர்வதற்குத் தாங்கள் எழுதியுள்ள இந்நூல் மிகவும் உபகாரகரமாகும். இத்தகைய உயர்ந்த நூலை எழுதியுள்ள தாங்களும் இந்நூலைப் படிக்கும் ஆஸ்திகர்களும் ஸகலமான ச்ரேயஸ்களையும் அடையுமாறு ஸ்ரீ சந்த்ர மௌளீச்வரரை ப்ரார்த்திக்கிறோம்.

விஜய யாத்ராஸ்தானம்
ஸ்ரீ காஞ்சீ க்ஷேத்ரம்
துர்முக ஆச்வின
பகுளசதுர்த்தி.

**நாராயண ஸ்ம்ருதி:**

## ஸ்ரீ பண்டேர்காரி ஸ்ரீமடம்

## ஸ்ரீவித்யாமான்ய தீர்த்த ஸ்வாமிகள் ஸ்ரீமுகம்.

---

ஸ்வஸ்தி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய முதலிய பிருதுகளால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ ஜகத் குரு **மத்வாசார்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களான உடுப்பி ஸ்ரீ பண்டேர்காரி மடாதிபதிகளான ஸ்ரீ வித்யாமான்ய தீர்த்த ஸ்வாமிகள்**

தர்மஸேவா துரந்தரர் முதலிய அநேக பிருதுகளுள்ள **ஸ்ரீ ஸோமதேவ சர்மாவிற்காக** ஸ்ரீ நாராயண ஸ்மரணம் செய்கிறார்கள்.

தங்களது தர்மப்ரசார க்ரந்தங்கள் மிகக்கொண்டாடத்தக்கன. லோகோபகாரமானவை. பௌர்ணமீ சந்த்ரனுடைய நிலாவினால் ஓஷதி வனஸ்பதிகள் போல் மிக்க உயர்ந்த ப்ரமாணமான புராணார்த்தங்களை ப்ரகாசப்படுத்துவதால் ஸோமதேவன் என்ற அர்த்தம் பொருந்திய பெயருள்ள தங்களால் ஸாதுக்கள் ஆநந்தமாக வாழ்கிறார் என்று மிக ஆநந்தமடைகிறோம்.

இப்பெரிய கைங்கர்யத்தில் ஆஸ்திகர் எல்லோரும் ஸஹாயம் செய்யவேண்டுமென கோருகிறோம்.

நாராயண ஸ்மிருதி:

ஸஹாய தநம் ரூ. 25–0–0 அனுப்பியுள்ளோம்.

[27-10-56 ] ஸ்ரீ வித்யாமான்ய தீர்த்தரு.

# பதிப்புரை.

பகவான் ஸ்ரீ வேதவ்யாஸரது திருவருளால் மூன்றாவது பாகமும் பூர்த்தியானது. அப்பப்பொழுது பூர்ண அனுக்ரஹம் செய்வதுடன் தமிழில் எழுதிய இந்த புராண நூல்களைக் கடாக்ஷித்தும் அநுக்ரஹம் புரியும் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கரபகவத் பாதாளின் கருணையை என்னென்று புகழ்வது? "உலகப் பற்றில்லா உத்தமருக்கு உலகமே குடும்பம்" என்பது போல் தெய்விகமான பூஜை ஜபம் அநுஷ்டானம் இவைகளுடன் பக்தர்கள் சிஷ்யர்கள் கூறும் குறைகளைக் கேட்டு தக்கபடி அருள்புரியும் ஸ்ரீமத் ஆசார்யவர்யரின் ஆத்ம சக்தியுடன் கூடிய அநுக்ரஹமே மூன்றும் பாகம் முடிவதற்கு முழு முதற் காரணமாம்.

ஸ்ரீ பண்டேர்காரி மடாதிபதிகளான ஸ்ரீவித்யாமான்ய தீர்த்த ஸ்வாமிகள் ஸ்ரீமுகமளித்து தன ஸஹாயம் செய்துளார். நமஸ்காரத்துடன் நமது நன்றியையும் ஸமர்ப்பிக்கின்றோம்.

நமது விக்ஞாபநத்தைக் கண்டவுடன் தாராளமாக நன்கொடையளித்து உற்சாஹப்படுத்திய உத்தமர்களுக்கும் சந்தாதாரர்களாகச் சேர்ந்து பேருதவி புரிந்தவர்களுக்கும் ஸ்ரீ வேதவியாஸரின் அருள் பரிபூரணமாகக் கிடைக்கும். ஆழம் தெரியாமல் ஆற்றில் இறங்கி விட்டோமே என அஞ்சினேன். பொருளெனும் ஊன்று கோலைத்தந்து ஆதரவு நிறைந்த உத்ஸாஹ சொற்களால் தூக்கிவிட வந்தவர்களை மறக்கமுடியுமா?

பிரும்மஸ்ரீ, பாரதகேஸரி T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள் ஸஹாயத்தால் சிரஜீவி S. சங்கரன் (கேனன் டன்கர்லி), ரு 100/-, ஸ்ரீ சுப்பையா பிள்ளை ரூ. 50/- மற்றவர்கள் கணிசமாக செய்த உதவிக்கும் ஷை சாஸ்திரிகளுக்கும் வள்ளல்களுக்கும் கடமைப்பட்டுளோம். டாக்டர் காந்தாமணிஅம்மாள் தான் அளித்ததுடன் ஸ்ரீமதி வாஸன் ரூ. 50/- மற்றும் சில பெண்மணிகளையும் இந்த கைங்கர்யத்திலீடுபடும்படி செய்தது மிகக் கொண்டாடத்தக்கது.

எனது நண்பரான ஸ்ரீ நாராயணய்யரின் புதல்வர் ஸ்ரீ சுந்தரேசய்யர் உழைப்பு மறக்கத்தக்கதல்ல.

ஆஸ்திகமும் அன்பும் ததும்பும் சொற்களுடன் முதல் தவணையாக ரூ. 50 அளித்த பிக்ஷாண்டார்கோவில் ஸ்ரீ G. ராஜகோபாலப்பிள்ளையவர்களுக்கு நன்றி செலுத்தி தர்மம் தழைக்க அவருக்கு நீண்ட ஆயுளையும் ஆரோக்யத்தையும் செல்வத்தையும் தரும்படி ஸ்ரீ தியாகராஜனை வேண்டுகிறோம்.

ஸ்ரீகாமகோடி கோசஸ்தானம், பி. ஜி. பால் கம்பெனி இவைகளை நடத்தும் குரு பக்தசிகாமணி ஸ்ரீ நீலகண்டய்யரவர்கள், முன்னுள்ள ஸ்ரீ ஜகத்குருவின் படத்தை அச்சிட்டுத் தந்து 3வது பாகத்திற்கு வேண்டிய பேப்பர்களையும் தந்து உபகாரம் செய்துளார். மற்றும் வேண்டிய உதவி செய்வதாக வாக்களித்த இவ்வுத்தமருக்கு நன்றியுடன் நீண்ட ஆயுளைத் தரும்படி ஸர்வேஶ்வரனை வேண்டுகிறோம். இட்ட பணியைத் தட்டாது செய்யும் சிஷ்யன் சிரஜீவி கந்தனுக்கு ஆசீர்வாதம்.

இரண்டாம் பாகம்போல் மூலக்ரந்த விஷய அநுக்ரமணிகையை ஒவ்வொரு புராணத்திலும் சேர்த்திருக்கிறோம். அந்தந்த புராணத்திற்கேற்ற படத்தையும் சேர்த்துளோம்.

தென் மொழியில் தேர்ச்சி இல்லாததால் வல்லினம் இடையினம் தவருதல் மிக மலிந்து இருக்கும். மற்ற தவறுகளும் தோன்றுவதியற்கை. ஆதலாலதை க்ஷமித்து ஆசீர்வதிக்கவும்.

நன்கொடையாளர் பெயரும் சில தார்மிக ஆஸ்திக வித்வான்களின் அரிய அபிநந்தநமும் இதில் சேர்க்கப் பட்டிருக்கின்றன. நாம் பிரார்த்திக்காமலே பல வித்வத் சிரோமணிகள் கூறிய ஆசி மொழிகளுக்கு வந்தநம்.

ஆஸ்திகர் கூறும் அரிய யோசனைகளைக் கேட்க ஸந்நத்தமாக இருக்கிறோம். முடிந்ததைச்செய்கிறோம்.

குருகுலம், சாந்தாச்ரமம்,
2, ஸ்டேஷன்ரோடு,
W. மாம்பலம், சென்னை-17.

ஆஸ்திகரன்பன்,
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவசர்மா.

# 18 புராணம் பற்றி
# சில அரிய அபிப்ராயங்கள்.



*ஸ்ரீ ஜி. ராஜகோபால்பிள்ளை*, F. R. H. S., *பிக்ஷாண்டார்கோயில்.*

*மஹத்தான காரியத்தில் மிக ஊக்க முயற்சியுடன் பதிப்பு வேலை நடந்து கணிசமான முறையில் இக்காலத்தில் புராண வரலாறுகளின் சுருக்கம் தெளிவாக வெளிவருவது ஆஸ்திக தமிழ் நாட்டின் தவப்பயனேயாகும். தங்களது தவ வலிமையினுல்தான் இவை வெளிவரவேண்டுமென வியாஸாதிகளின் கருத்தாகலாம்.*

*தங்கள் அருமருந்தான புத்தகத்திற்கு முதல் முறையாக ரூ. 51/- அனுப்பியுள்ளேன். அடுத்த தை மாதம் ரூ. 25/- அனுப்புகிறேன்.*

*2. ஸாஹித்ய சிரோமணி, பிரும்மஸ்ரீ* ***ராம. தங்கஸாமி தீக்ஷிதர்****, சிதம்பரம்.*

*இரண்டாம் பாகம் ரொம்ப நன்ருக இருக்கிறது. பெரும் முயற்சியும் சிரமமும் எடுத்துக்கொண்டு உலக நன்மைக்காகப் பாடுபட்டுப் போடும் புத்தகம். தற்கால நாவல்களில் ருசியுள்ளோர் ஆதரிக்க மாட்டார்கள். பவபூதி சொன்ன வண்ணம் 'காலம் எல்லை இல்லாதது' இதை ஆதரிப்பவர் உண்டாவார்கள். இதன் ரஸத்தை அனுபவிப்பார்கள்" பணி செய்வதே என் கடன் என பரோபகாரிகளின் க்ஞாநச்செல்வம் பிறர்க்கே பயன் படும்.*

*3.* ***பா. நாகராஜன்****, குருத்வாடி.*

*தாங்கள் மிகுந்த சிரமத்துடன் சிரத்தா பூர்வமாய் வெளியிடும் பத்ரிகையும், புராணச் சுருக்கமும் அபூர்வமான தர்ம கைங்கரியமாகும்.*

4. **ஸ்ரீ பரமசிவன்**, ஆடிடர், கள்ளிக்கோட்டை.

பகீரதன் தவம் செய்து கங்கையை கொண்டு வந்தது போல் அரிய பெரிய தர்ம கார்யத்திலீடுபட்டிருக்கிறீர்கள். இது மானவர் மனோமலத்தை அகற்றும். தமிழ் உலகிற் கேற்பட்ட பாக்யமிது. ரத்தின பொக்கிஷத்திற்கு இது ஒரு திறவுகோல். இரண்டாம் முறை காணிக்கை ரூ. 50 இத்துடன் சமர்ப்பிக்கிறேன் [முன்னம் ரூ. 100 அளித்த வர் இவர்.]

5. திராவிடக்கவிமணி **வே. முத்துஸாமி அய்யர்**, M.A., L.T., ரங்கநாதபுரம்.

செப்பரும் சீரார் சோமதேவ சர்மாப் பேர்பூண்ட
விப்பிரர் திலக! நீங்கள் மேற்கொண்ட பத்தோ டெட்டு
திப்பிய புராண நூலின் செவ்விய பதிப்பு நோக்கி
அத்புதம் இதுவென்றேத்தி அகம்மிக மகிழ்கின்றேனே.

எத்தனை கிளைக்கதைகள் எத்தனை தத்துவார்த்தம்
எத்தனை சாஸ்திர நுட்பம் எத்தனை வாழ்க்கைப் பண்பு
எத்தனை முன்னோர் கண்ட இரகசியக்குறிப்பின் ஏற்றம்
அத்தனையும் சேர்ந்தோங்கும் அரும் பொருள் நிதியாம்.

எழுத்துப் பிழைகள் அதிகம், எனக்கு பேஜ் ப்ரூப் அனுப்பக் கூடுமானால் திருத்தி அனுப்புகிறேன்.

6. **ஸ்ரீ T. S. வைத்தியநாதன்**, B.A., B.L., திருக்கருகாவூர்.

புத்தகம் மிகவும் அவசரக்கோலமாயும், கோர்வை யின்றியும் இருந்தால் படிப்பவர் சிரமப் படுவார்கள். பணத்திற்குத் தக்க உழைப்பில்லையே என்று ஏங்குவார் கள். அறிவாளி என்று பொதுஜனங்கள் நினைக்கக்கூடிய வர்களின் அபிப்ராயத்திற்கே மதிப்பு உண்டே தவிர தநிகர் என்பதால் மட்டும் உண்டாகாது. அப்படிப்பட்ட அபிப்ராயங்களை புத்தகத்தில் அச்சிட்டு வைப்பது ரஸ மாகாது. கிரந்தங்களின் கௌரவத்திற்கு ஹாநி ஏற்படும். ஏராளமான தகவல்களை கொடுப்பது நோக்கமாக இருக் கக்கூடாது.

---

# நன்கொடை அளித்தவர்.

| [10—7—56 முதல் 24—10—56 வரை.] | | ரூ. |
|---|---|---|
| ஸ்ரீ பண்டேர்காரி மடம் ஸ்ரீ வித்யாமான்ய தீர்த்த ஸ்வாமிகள் | .. | 25 |
| ,, S. கிருஷ்ணசாமி அய்யர், மைலை. | ... | 25 |
| ,, C. R. பட்டாபிராமன், B. L. ,, | ... | 20 |
| ,, S. அண்ணுசாமி, ,, | ... | 25 |
| ,, P. S. ராகவராம் சாஸ்திரி, B. L. ,, | ... | 25 |
| ,, S. V. சுப்பய்யா, அபிராமபுரம். | .... | 51 |
| ,, J. V. பதரிநாராயணன், மைலை. | .... | 25 |
| ,, R. நடராஜன், A. C. A., ராயப்பேட்டை. | .... | 25 |
| ,, P. S. அய்யாசாமி அய்யர், பீஹார். | ... | 20 |
| ,, R. மாதவாசாரியார், T நகர். | .... | 25 |
| ,, R. கோபாலசாமி அய்யங்கார், ,, | .... | 25 |
| ,, D. நாராயண அய்யர், மைலை. | ... | 20 |
| ,, S. ஸ்ரீநிவாஸன், பாம்பே... | .... | 25 |
| ஸ்ரீமதி வாஸன், சென்னை. | ... | 50 |
| ஸ்ரீ K. S. சங்கரன், மைலை. | ... | 100 |
| ,, K. R. ராமாநுஜன், மைலை. | ... | 20 |
| ,, K. V. அய்யர், பாம்பே. | .... | 25 |
| ,, S. K. யக்ஞநாராயணன், நாக்பூர். | .... | 25 |
| ,, டாக்டர் V. R. சுப்ரமண்ய அய்யர், திருச்சி. | | 25 |
| ,, S. துரைஸ்வாமிஅய்யர், ராயபேட். | .... | 25 |
| ,, V. V. நடராஜன், பாம்பே. | .... | 25 |
| ,, கோகுலதாஸ் ஜம்நாதாஸ், ஸாவகார்பேட். | | 25 |
| ,, V. D. ராமஸ்வாமி அய்யங்கார், சென்னை. | | 25 |
| ,, ஸ்ரீமதி ராஜம் மண்டலம், மைலை. | .... | 30 |
| ,, V. வெங்கடசுப்பய்யர், ஸெகண்டராபாட். | | 20 |

ஸ்ரீ C. R. சிதம்பரம், பாம்பே. .... ரூ. 25
,, P. V. கிருஷ்ணஸ்வாமிஅய்யர், பல்லாவரம். 21
,, R. S. வெங்கடேச்வரன், பாம்பே. .... 20
,, A. V. ராஜகோபாலன், கல்கத்தா. .... 20
,, G. ராஜகோபால்பிள்ளை, பிக்ஷாண்டார்கோவில். 51
முதல் 51-ம், அடுத்தமுறை 25-ம் அளிப்பதாக வாக்களித்தார்.
,, ஆடிடர் பரமசிவன் 100அளித்து 2வது முறையாக 50
,, V. கோவிந்தராஜய்யர், கொளிஞ்சிவாடி. 20
,, பண்டிட் M. S. M. சர்மா, பாட்ணு. .... 20
,, S. கிருஷ்ணய்யர், T. நகர். .... 25
,, R. N. ராஜன், முத்தியால்பேட். .... 20
,, H. செல்லம் அய்யர், கல்கத்தா. .... 25
,, S. R. கிருஷ்ணமூர்த்தி, ராவ்ஸாஹிப், மைலே. 20
,, V. ராமதாஸ், நாமக்கல். .... 25
,, K. A. சர்மா, மதுங்கா. 25
,, S. ராமமூர்த்தி சாஸ்திரி, T. நகர். 25
,, நாகலக்ஷ்மி அப்பாத்துரைஅய்யர், அரியலூர். 20
,, G. விஶ்வநாதன், பத்தமடை. 20



## ஸ்ரீமார்க்கண்டேய புராண அட்டவணை.

## ஆக்நேய புராண அட்டவணை.

---

## பிரும்ம வைவர்த்த புராண அட்டவணை.

---

## ஸ்ரீ லிங்க புராண அட்டவணை.

# 9. ஸ்ரீ மார்க்கண்டேய புராணம்.



ஸ்ரீ மார்க்கண்டேயர்.

மாம்பலம் குருகுல வெளியீடு.

# ஸ்ரீ மார்க்கண்டேய புராண மூலக்ரந்த அநுக்ர மணிகா.

——:o:——

[134 அத்யாயம். 6680 சுலோகம்.]

1 மார்க்கண்டேயரை ஜைமினி பாரத விஷயம் கேட்டல். அப்ஸரஸ்ஸுகளுக்கு சாபம் வந்தது.
2 கந்தர வித்யுத்ரூப யுத்தம். சடக உத்பத்தி.
3 சமீகரிடம் பிங்காக்ஷாதிகள் சாபம் பற்றி கூறல்.
4 விந்த்யத்திலுள்ள 4 பக்ஷிகளிடம் ஜைமினி கேள்வி.
5 திரௌபதி ஐவரை மணந்ததேன்? இந்திரரே பதி.
6 பலராமர் பிரும்மஹத்தி செய்யக் காரணம்.
7 விசுவாமித்ரரால் ஹரிச்சந்திரன் ராஜ்யமிழந்தது. இளம் பாண்டவர் இறக்கக் காரணம்.
8 ஹரிச்சந்திர சரிதம்.
9 ஆடிபக (விச்வாமித்ர வஸிஷ்ட) யுத்தம்.
10 பக்ஷிகள், தந்தை அளித்த சாபங் கூறுதல்.
11 புத்ரன் எப்படி எதற்காக உண்டாகிறான்?
12 மஹா ரௌரவம் முதலிய நரகங்கள்.
13 வைச்யராஜ யம புருஷ ஸம்வாதம்.
14 கர்ம பலங் கூறுதல்.
15 வைச்யராஜன் ஸ்வர்க்கம் செல்லுதல்.
16 கற்பு-அநஸூயை வரம். தத்தாத்ரேயர் கர்க்க உபதே[சம்.
17 தத்தாத்ரேய கார்த்தவீர்ய ஸம்வாதம்.
18 அச்வதரநாகனிடம் குவலயாச்வன் பற்றிக்கூறல்.
19 பாதாளத்தில் பாதாளகேதுவைக் கொன்று மதாலஸையை குவலயாச்வன் மணத்தல்.
20 தாளகேது வஞ்சனை. மதாலஸை மரணம்.
21 அச்வதரன் தபஸ். மதாலஸை ஜீவித்தெழுந்திருத்தல்.

**ஸ்ரீ மார்க்கண்டேய புராண மூலக்ரந்த அநுக்ர மணிகா முற்றிற்று.**

# ஸ்ரீ மார்க்கண்டேய புராண

## அவதாரிகை.

---

இது ஒன்பதாயிரம் சுலோகங் கொண்டதென்றுலும் 6680 சுலோகமே அச்சில் காணப்படுகிறது. 134 அத்யாயங்கள் இருக்கின்றன. மார்க்கண்டேய புராணத்தில் மார்க்கண்ட சரிதம் இல்லை. அவர் க்ரௌஷ்டி எனும் சிஷ்யனுக்குக் கூறியது ஆதலின் இப் பெயரிடப்பட்டது.

பதினுன்கு மன்வந்தர சரிதமே இதில் விரிவாக வர்ணிக்கப்படுகிறது. 78 முதல் 90 வரை பதிமூன்று அத்யாயங்கள் ஸ்ரீ தேவி மாஹாத்மியம். அது சிறந்த மாலா மந்த்ரம். சண்டீ என்ற பெயருடன் ஹிந்தியில் வடநாட்டில் ஒரு பத்ரிகை நடக்கிறது. தேவீ பக்தர் சண்டி யாகம் செய்வர். ஸூர்யவம்சத்தரசர்களது சரிதமும் குவலயாச்வ சரிதமும் நவரஸம் நிறைந்தது. ச்ராத்த தர்மம் ஸதாசாரம் யோகம் ஞானம் வர்ணாச்ரம தர்மம் ஸ்திரீ தர்மம் முதலிய அநேக தர்மங்களும் இதில் வர்ணிக்கப் பட்டிருக்கின்றன.

படிக்கப் படிக்கப் பேரின்பத்தை அளிக்கும் அரிய புராணமிது. ஏனைய தாத்காலிக நூல்களைப்படித்துப் பலர் (விசேஷமாகப் பெண்மக்கள்) மனது தர்மத்தில் ஆசை இல்லாதிருப்பதை ஆஸ்திக உலகறியும். படிக்க மிக ருசியாயிருப்பதுடன் பல தர்மங்களைப் புகட்டும் இப்புராணத்தை எல்லோரும் படிப்பதற்காகவே மொழி பெயர்ப்பாக இல்லாமல் ரஸமான பாகத்தைத் தழுவி எளிய நடையில் எழுதுகிறோம்.

தர்ம தொண்டன்,
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

---



# 9. ஸ்ரீ மார்க்கண்டேய புராணம்.

[ஸம்ஸ்கிருத மூலமும் ப்ரவஸர் பர்ஜிதன் ஆங்கில மொழிபெயர்ப்பும் பாம்பே கோபாலநாரயணன் கம்பெனியில் கிடைக்கும்.]

यद्योगिभिः भवभयार्ति विनाशयोग्यम्
आसाद्य वन्दितं अतीव विविक्त चित्तैः ॥
तद्वः पुनातु हरिपाद सरोजयुग्मम्
आविर्भवत्क्रम विलंघित भूर्भुवः स्वः ॥

### ஜைமினி மார்க்கண்டேயரை யடுத்தல்.

*தபஸ்வியான மார்க்கண்டேயரை வணங்கி ஜைமினி கேட்டார். "மஹர்ஷே! நிர்க்குணனான மஹா விஷ்ணு வாஸுதேவனுயித் தோன்றக் காரணமென்ன? பாண்டவர்கள் ஐவரும் ஒரே பெண்ணை மணந்தது நியாயமா? தீர்த்த யாத்ரைக்குச் சென்ற பலராமன் ஏன் பிரம்மஹத்தி செய்தார்? இளம்பாண்டவர்கள் அகால மரணமடைந்ததேன்? இதை விளக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தார்".*

*ஜைமினே! "கர்ம காலமாதலால் விரிவாக இவைகளை உரைக்க அவகாசமில்லை. உமக்கு இதை உரைப்போரைச் சொல்கிறேன். பிங்காக்ஷன், விபோதன், ஸுபுத்ரன், ஸுமுகன் என்ற த்ரோண புதல்வர்கள் சாபத்தினல் பக்ஷிகளாய் இருக்கின்றனர். அவர்கள் ஸகல சாஸ்திரார்த்தங்களையும் உணர்ந்தவர்கள். அவரருகே சென்று ஸந்தேகத்தை அகற்றிக்கொள்வாயாக" என்ருர். ஜைமினி, "ஸ்வாமின்! முனி குமாரர்கள் பறவை யாவதற்குக்காரணம் யாதோ"? என்று வினவ, மார்க்கண்டேயர் கூறினர்.*

சக்ரன் நாரதரைப் பார்த்து, ஸ்வாமின்! தங்களது முன்னிலையில் அப்ஸரஸ்ஸுகள் ஆட ஆக்ஞை யளிப்பீராக என்றார். நாரதர் சற்று யோசித்து இவர்களில் சிறந்த ஸங்கீதமும் உயர்ந்த அழகும் உள்ளவள் ஆடட்டும் என்றார். ஊர்வசி, மேனகை, ரம்பை, திலோத்தமை முதலியவர்கள் நானே சிறந்தவள் நானே சிறந்தவள் என சண்டையிட்டனர். இந்திரன் நாரதரைப் பார்த்து இவர்களிற் சிறந்தவர் யாரென நீரே கூறுமென்றார். நாரதர் இமயமலையில் தவம் புரியும் துர்வாஸரை மோஹவலையில் சிக்கும்படிச் செய்பவளே மேலானவள் என்றார். இதைக்கேட்டு அனைவரும் பயந்து என்னால் முடியாதென்று அகன்றனர். வபுஸ் என்ற அப்ஸரஸ், நான் சென்று வருகிறேனென கிளம்பினாள்.

அம் மஹரிஷி தவம் செய்யும் இடத்திற்கு அருகே தங்கி இனிய ஸங்கீதம் பாடினாள். இவளது குரலோசையைக் கேட்டு தவத்தை இழந்து ஞானதிருஷ்டியால் விஷயத்தை யறிந்து அருகிலே வந்த அப்ஸரஸ்ஸை நீ பதினாறாண்டு பக்ஷியாக இருப்பாய் எனச் சபித்தார். அவள் அவர் காலில் விழுந்து மன்னிக்கும்படி வேண்ட நான்கு புதல்வர்களைப் பெற்று பாரதப் போரில் அடிபட்டு பக்ஷிசரீரத்தை விடுவாய் என்றார்.

## முனிகுமாரர்கள் பக்ஷியானார்கள்.

கருடனது வம்சத்திய ப்ரலோலுபர் என்ற பக்ஷிக்கு கங்கன், கந்தரன் என இரு குமாரர்கள் இருந்தனர். கங்கன் ஒரு ஸமயம் வித்யுத்ரூபனெனும் ஓர் அஸுரனை அவனது மனைவியுடன் விற்றிருக்கக்கண்டான். அவன் பெண்களோடு புருஷரிருக்கும் இவ்விடத்திற்கு நீ ஏன் வந்தாய்! என்றான். இது பொதுவான ஸ்தலமாதலின் நான் ஏன் இங்கு வரலாகாதென்றான் கங்கன். கோபங் கொண்ட அரக்கன் பக்ஷியின் கழுத்தை அறுத்துவிட்டான்.

தனது ஸகோதரன் கதியை அறிந்த கந்தரன் ஆராத் துயரமடைந்தான். என் அண்ணனைக்கொன்ற அரக்கனைக் கொன்றே திரும்புவேனெனச் சபதம் செய்தான். மதுபானத்தால் மயங்கி இருக்கும் அந்த ராக்ஷஸனைக்

கண்டான். தனது நீண்டு கூறிய அலகுகளால் ராக்ஷஸனது மார்பைப் பிளந்தான். அவன் மனைவி "ஓ பக்ஷியே! என்னை மனைவியாக ஏற்றருளும். நான் உமக்கேற்ற உருவத்தை எடுப்பேன்" என்றாள். அங்ஙனமே அவனும் அவளை அங்கீகரித்தான். இவ்விருவர்களுக்கும் வபுஸ் என்ற அப்ஸரஸ் தார்க்ஷி என்ற பெண்ணைப் பிறந்தாள். துரோணனென்பான் இவளை மணந்தான். தார்க்ஷி கர்ப்பமாய் இருக்கும்போது ஒருநாள் ஆகாயத்தில் பறந்து பாண்டவ கௌரவ யுத்தம் நடைபெறும் குருக்ஷேத்ரம் சென்றாள். அங்கே அர்ஜுநன் பகதத்தனை நோக்கி எய்த அம்பு, இவள்மேல் பட்டது. உடனே அவள் வயிற்றிலிருந்து நான்கு முட்டைகள் கீழே விழுந்தன. பக்ஷி உடலை விட்டு வபுஸ் தேவலோகஞ் சென்றாள்.

அம்முட்டைகளை உடையாமல், அதே ஸமயத்தில் ஓர் யானையின் கழுத்திலிருந்த பெரிய மணி அறுபட்டு விழுந்து நன்கு மூடிக்கொண்டது. கடவுள் அருளால் நான்கு குஞ்சுகள் உண்டாகி கத்திக் கொண்டிருந்தன. இதற்குள் பாரதப்போர் முடிந்து சரதல்பத்தில் சயனித்துள்ள சந்தனுகுமாரரிடம் பாண்டவர் தர்மோபதேசம் பெற்றனர். இதைக்கேட்க சமீகர் சிஷ்யர்களுடன் அங்கு வந்தார். இப்பறவைகளின் சப்தம் அவர் காதில்பட மணியைத் தூக்கி குஞ்சுகளைக் கண்டார். அன்புடன் அவர் அவைகளை வளர்த்து வந்தார். ஒருநாள் அவைகள் பூலோகத்தைச் சுற்றிப்பார்த்து மலர்ந்த முகத்துடன் வீற்றிருந்தன. அவைகளைக்கண்டு சமீகர் நீங்கள் ஸாமான்யமான பக்ஷிகளாகத் தோற்றவில்லை. உண்மையைக் கூறுங்கள், நீங்கள்யார்? என்றார்?

பக்ஷிகள் தனது பூர்வஜன்மத்தைக்கூற ஆரம்பித்தன. விபுஸ்வான் என்ற பிராமணனுக்கு ஸுக்ருஷர், தும்புரு என்று இரு குமாரர்கள் தோன்றினார்கள். ஸுக்ருஷருடைய புதல்வர்களே நாங்கள் நால்வரும். நாங்கள் தந்தையுடன் தபோவனம் சென்று தர்ப்பம் ஸமித்துக்களைச் சேர்த்து வந்தோம். அச்சமயம் ஓர் பயங்கரமான பக்ஷி எங்கள் கண்முன் தோன்றி பசியால் வாடி மெலிந்த குரலுடன் முனிவர்களே! விந்திய சிகரத்திலிருந்து பெருங்காற்றினால் அடிபட்டுக் கீழே விழுந்தேன்.

ஏழு நாட்களாக இரையின்றி வாடிய எனக்கு ஏதேனும் புசிக்கக் கொடுப்பீரோ? என்றது. எங்கள் தந்தை, அப்படியே யாகட்டும். உனக்கு என்ன உணவு வேண்டும் என்ருர். மஹரிஷே நரமாம்ஸமே எனக்குத் தேவை யென்றது பக்ஷி. மஹரிஷி, வயதான பின்பும் மாம்ஸ ஆசை அகல வில்லையோ? நான் சொன்ன சொல்லை நிறைவேற்றுவது என் கடன். என்று கூறி புதல்வர் களைப் பார்த்து எவரேனும் இப்பக்ஷிக்கு உடலை யளிப் பீரா? என்ருர்.

நாங்கள் அதை மறுக்க கோபங்கொண்டு நீங்கள் பக்ஷிகளாவீர்கள் என்று அவர் எங்களைச் சபித்தார். நாங்கள் அவர் காலில் விழுந்து தந்தையே! நமது உடலை நகரமாகக்கொண்ட அரசன் ஜீவன். புத்தி மனஸ் என்ற இரு மந்திரிகளைக்கொண்டு ஒன்பது கோட்டைவாசல்கள் வழியாக அவன் உலவி வருகிருன். காமம் கோபம் லோபம் மோஹம் என நான்கு சத்ருக்களும் இவரது கிங்கர்களான இந்திரியங்களையும் நகரத்தையும் கொள்ளைகொள்கின்றனர். ஆதலின் அவர்களுக்கு வச மாகிய அரசனும் மோஹவலையில் சிக்கிக் கிடக்கிருன். அப்படியிருக்க யார் தான் உடலில் ஆசை கொள்ளாதவர்? உயிரைவிட உயர்ந்த பொருள் வேறு ஏதேனும் உண்டோ? தேகாபிமானம் கொண்டதற்காக எங்களைப் பக்ஷி யாகும்படிச் சபித்துவிட்டீர். எங்களை மன்னித்து சாப மகல வழி கூறுமென வேண்டினேம். சொன்னசொல்லை மாற்ற முடியாது; ஸகல ஞானத்தையும் பெற்று விந்திய மலை சென்று மனுஷ்யரைப்போல் நன்மை அடைவீரென ஆசீர்வதித்தார்.

பிறகு அப் பக்ஷிக்கு எங்கள் தந்தை தனது உடலை அளித்தார். இதைக் கண்டு வியந்த தேவேந்திரன் பக்ஷி ரூபத்தை மாற்றி நிஜ ரூபத்தைக் காட்டி முனிவரே! உம்மைச் சோதிக்க வந்தேன், என்று கூறி மஹர்ஷிக்கு ஞானத்தை யளித்து மறைந்தார். இங்ஙனம் மார்க்கண்டே யர் கூறி அப்பக்ஷிகளிடம் சென்று உமது ஸந்தேஹத்தை அகற்றிகொள் என்ருர். ஜைமினி விந்திய மலைக்கு வந்தார். ஆங்கு ஓரிடத்தே வேத த்வனியைக் கேட்டு குஹையில் நுழைந்து பக்ஷி வடிவமான மஹர்ஷிகளைப்

பணிந்தார். அவர்கள் அதிதிக்கு அர்க்யம் பாத்யம் முதலியவைகளை யளித்து ஆஸனத்திலமர வேண்டினர். ஜைமினியும் பக்ஷிகளை வணங்கி மார்க்கண்டேயரிடம் கூறிய சங்கைகளை அகற்றும்படி இவர்களை வேண்டினார்.

## ஸந்தேஹ விளக்கம்.

பக்ஷிகள் பிரபஞ்ச ஸ்ருஷ்டியைக்கூறி நிர்க்குணனான பகவான் அவதரித்த காரணத்தை விளக்கினார்கள். தேவேந்திரன் ஒரு ஸமயம் த்வஷ்டாவின் புதல்வனைக் கொல்ல அவர் கோபம்கொண்டு தன் சடையிலிருந்து ஓர் மயிரை எடுத்து ஹோமம் செய்தார். அதிலிருந்து இந்திரனைக் கொல்ல விருத்திராஸுரன் என்பவன் தோன்றினான். இந்திரன் அவனை ஸமாதானம் செய்து பாதி ராஜ்யம் அளிப்பதாகக் கூறி வஞ்சனையாகக் கொன்றார். அதனால் இந்திரனை ப்ரம்மஹத்தி சூழ்ந்தது. அவனுடலிலிருந்த வர்ச்சஸ் யமனிடமும், பலம் வாயுவினிடமும், அழகு அச்வினிகளிடமும் சென்றது.

அஸுரர்கள் அவனியில் அரசர்களாகத் தோன்றினார்கள். பாபிகளான இவர்களது சுமையைச் சுமக்கமாட்டாமல் பூதேவி கோரூபம் கொண்டு விஷ்ணுவைச் சரணமடைந்தாள். அவர் கிருஷ்ணனாக அவதரித்ததோடு லோகோபகாரமாக இந்திரனைக் குந்தியினிடம் பாண்டவர்களாகப் பிறக்கச் சொன்னார். அவருடைய வர்ச்சஸ் தர்மனாகவும், பலம் பீமனாகவும், இந்திரனது பாதியம்சம் அர்ஜுனனாகவும், அழகு நகுல ஸஹதேவனாகவும் தோன்றிற்று.

நிர்க்குணரானாலும் லோகக்ஷேமத்திற்காக பகவான் கிருஷ்ணனாக அவதரித்தார். பாண்டவர் ஐவரானாலும் ஒரே இந்திரனது அம்சமாதலின், திரௌபதி ஒரே புருஷனை மணந்தவள் ஆவாள். பலராமர் துர்யோதனாதிகளிடம் அன்புகொண்டவர். தனது ஸஹோதரனான கிருஷ்ணன் பாண்டவரிடம் அன்பு பூண்டவர். கௌரவரோடு தான் சேர்ந்தால் கிருஷ்ணனோடு போர் புரிவதாகுமென பாரதப் போரில் கலவாமல் தீர்த்தயாத்திரை சென்றார். நைமிசாரண்யத்தில் புராண கதை நடந்துகொண்டிருக்கும்போது பலராமர் அங்கு சென்றார். எல்லோரும்

எழுந்து நின்று ஆஸனமளிக்க ஸூதபுராணிகர் மட்டில் ஆஸனத்தில் அமர்ந்தபடியே இருந்தார். அதனால் கோபம் கொண்ட பலராமர் அவரைக் கொன்றார். உடனே ஸூதருக்கு ப்ரம்மலோகம் கிடைத்தது. இவ்வுண்மையை யறியாத ரிஷிகளையும் மற்றோரையும் திருப்தி செய்து வைக்கவே பன்னிரண்டாண்டு பலராமரும் ப்ரும்மஹத்தி அகல விரதம் பூண்டார்.

## இளம் பாண்டவர் இறக்கக் காரணம்.

த்ரேதாயுகத்தில் ஹரிச்சந்திர மஹாராஜன் மனுநீதி வழுவாமல் அரசுபுரிந்து வந்தான். அவ்வரசன் வேட்டையாட வனம் சென்றான். ஆங்கு அபயம் அபயம் என்ற ஒரு குரலைக் கேட்டான். எனது ஆளுகையில் யார் அபலைகளை ஹிம்ஹிப்பது? இதோ வந்தேன்! என்று அரசன் அங்கு சென்றான். அந்த குரல் விச்வாமித்ரரால் ஸாதிக்கப்படும் வித்யையினிடமிருந்து தோன்றியதாம். விச்வாமித்ரரது வித்யைக்கு விக்னத்தைத் தேட விநாயகர் விரும்பினார். இவ்வரசனுள்ளே புகுந்து கார்யத்தை ஸாதிக்கக் கருதினார். ஆதலால் ஹரிச்சந்திரனது வாக்கிலிருந்து உக்ரமான இந்த த்வனி கிளம்பியது.

விச்வாமித்ரர் அருகில் வந்து அரசன் தனது குற்றத்தை உணர்ந்து அச்சத்துடன் ஐயனே! அறியாமல் செய்த பிழையைப் பொருத்தருள்க! ரக்ஷிப்பதும் தானமும் ராஜதர்மமென்பதை அறிவீர் என்று பன்முறை வணங்கி வேண்டினான். விச்வாமித்ரர், யாருக்குக் கொடுக்க வேண்டும்? யாரைக் காக்கவேண்டும்? என்பதைச் சொல் கேட்போம் என்றார். ஹரிச்சந்திரன் மஹர்ஷே! மான்யரான தங்களைப் போன்ற முனிவருக்குக் கொடுக்கவேண்டும். ஆபத்திலடிபட்டோரைக் காக்க வேண்டும் என்றான். நல்லது நீ ராஜதர்ம மறிந்தவனாயின் யாகதீக்ஷைபுரியும் எனக்குத் தக்ஷிணை யளிப்பாயாக என்றார். அரசன் அகமகிழ்ந்து ஆர்ய! அடியேனுடைய மனைவி மக்களையும் அகண்ட பூமண்டலத்தையும் தங்களுக்கே தந்தேன் என்றான். மஹர்ஷி, மிக ஸந்தோஷம்! உன் உடல், உன் மனைவி, உன் மகன், உன் தர்மா தர்மம் இவைகளை நீக்கி மற்றதைப் பேரன்புடன் பெற்றுக்கொண்டேன். ஆயினும் யாக தக்ஷிணையை மட்டிலும் ஒருமாதத்தில்

கொடுத்துவிடு, இப்பொழுதே என் நகரத்தை விட்டு நட என்றார். அங்ஙனமே அரசன் கிளம்ப, உங்களது ஆடை ஆபரணங்களைக் களைந்து என்னிடமளித்து மரவுரியைத் தரித்துக்கொள் என்றார் ரிஷி. அரசன் அப்படியே செய்தான். மன்னன் மனைவியுடன் கால் நடையாக வீதியில் செல்வதைக்கண்ட குடிகள் கண்ணீர் விட்டுக் கதறினர். இளகா மனமுடைய கௌசிகன் தடிகொண்டு மன்னன் மனைவியை வேகமாக நட என்று அடித்தார். அப்பொழுதும் அரசன் பொறுமையுடன் விதியை நினைத்துத் தனது கர்மாவை நொந்து விரைவாக அவளை அழைத்துச் சென்றான்.

தேவ பூமியான காசி சென்று, வேள்வி தக்ஷிணையை எப்படித் தருவதென்று சிந்தை கலங்கி நின்றான். சந்த்ரமதி, நாத! எல்லா தர்மத்தையும் விடச் சிறந்தது ஸத்யமாகும். உயிரைக் கொடுத்தாவது ஸத்யத்தைக் காப்பவர் ஸத்யலோகம் செல்வர். ஸத்புத்ரனைப் பெற்ற தாங்கள் கற்பிற்கழிவு இல்லாதபடி என்னை விற்று முனிவர் தனத்தைத் தரலாகாதோ? என்றாள். இச்சொல் வஜ்ரம்போல் அரசனது செவியில் விழுந்தது. ஆயினும் அதைச் செய்ய அரசன் இசைந்தான். ராஜபத்நியை விலைக்கு வாங்குபவருண்டோ? என்று கேட்டான். அவளை வாங்குவதாக ஓர் வேதியன் முன்வந்தான். அதைப்பெற்று "அவனளித்தது அற்ப தனம். தவத்தில் சிறந்த எனக்கு இது ஈடாமோ"? என்றார் விச்வாமித்ரர். குழந்தை ரோஹிதன் அப்பா! பசிக்கிறதே! அம்மா அன்ன மளிக்காமல் எங்கேயோ போகிறாளே! என்று அன்னையின் துணியைப் பிடித்திழுத்து அழுதான். அரசன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். கருணையில்லாத அந்த பிராம்மணன் குழந்தையைக் காலால் உதைத்துக் கீழே தள்ளி சந்த்ரமதி! உன்னை யான் விலைக்கு வாங்கிவிட்டேனல்லவா? எழுந்திரு! என் பின்னே வா! வீட்டைப் பெருக்கு! இப்பிள்ளையை புருஷனிடம் விட்டுவிடு என்றார்.

சந்த்ரமதி, ஸ்வாமின்! தங்களுக் கிஷ்டமான தனத்தைக் கொடுத்துவிட்டு பால் மணம் மாறாப் பாலகனைத் தாயுடன் இருக்கும்படி தயை புரியும் என்றாள். அந்தணரும் அதற்கிசைந்தார். கோபமே உருவாக அமைந்த

கௌசிகர், அரசே இன்று மாலைக்குள் நீ தனமளிக்கா விடில் உன்னைச் சபித்துவிடுவேன் என்றார். வேந்தன் தன்னைத்தானே விலை கூறினான். ஒரு சண்டாளன், வேண்டிய தநமளித்து இவரை வாங்கினான். கௌசிகரது செயலைக்கண்டு கோபிக்காதவரில்லை. மன்னனது ஸத்யத்தைக் கண்டு மகிழாதவரில்லை. சந்திரமதியையும் ரோஹிதனையும் பார்த்துக் கல்லும் கரைந்தது. பாறையும் பிளந்தது. விச்வேதேவரில் ஐவர் இதை ஸஹியாமல் இம்முனிவன் எந்த கதியை அடைவனோ? இப் பாவியின் உள்ளம் கல்லோ? வஜ்ரமோ? எனக் கடிந்து பேசினர். இதைக்கேட்ட விச்வாமித்ரர் அவர்களைப் பார்த்து என்ன சொன்னீர்கள்! கௌசிகனது தவத்தை அறியீரோ? நீங்கள் பூமியில் பிறந்து ஸந்ததி இல்லாமல் அற்பாயுளாக இறப்பீர்கள் என சபித்தார். அவர்களே பாண்டவர்களுடைய குமாரர்களாகப் பிறந்து இளமையிலேயே அச்வத்தாமாவால் கொல்லப்பட்டனர்.

ஸத்ய ஹரிச்சந்திரன் சண்டாளனிடம் அடிமைபூண்டு சுடுகாடு சென்று தோட்டி வேலை செய்துவந்தான். அந்தணருக்குப் பணிவிடை செய்யும் அரசகுமாரனை அரவந் தீண்டியது. சந்த்ரமதியின் துயரத்திற்கு அளவுண்டோ? புலம்பினாள்! கதறி அழுதாள்! எவரிடம் கூறித் துக்கத்தை அகற்றுவள்? அருமைப் புதல்வனைத் தூக்கிச் சுடுகாடு சென்றாள். தோட்டிக்கு அளிக்க காசின்றிக் கதறினாள். என்னைப்போல் துர்ப்பாக்கியசாலியான நீ என்ன ஹரிச்சந்த்ரன் மனைவியோ? என்று தோட்டி ஹரிச்சந்த்ரன் கூறினான்.

அவன் ரோஹிதன் எனக்கண்டு மூர்ச்சையுற்றான். விழித்தெழுந்து தீயில் பட்ட புழுபோல் துடித்தான். இருவரும் தவித்துக் குழந்தையுடன் தீக்குளிப்பதாக தீர்மானித்தனர். தன்னுடல் அடிமையாதலின் யஜமானனுக்குச் சொல்லாமல் இறப்பதும் தர்ம விரோதமோ? என்று அஞ்சினர். குழந்தையை இழந்ததால் மதியையுமிழந்து யஜமானனுக்குத் தக்கபடி வேலை செய்யாமல் இருப்பதை விட இறப்பதே மேல் என்று எண்ணினர். அக்னியை வளர்த்து அதை ப்ரதக்ஷிணம் செய்தனர். உடனே ஹரிஹரப்ரம்மாதி தேவர்கள் அவர்களெதிரே தோன்றினர்.

ஸத்யசீலா! நில்! நில்! ஸாஹஸம் செய்யாதே! உன் ஸத்யத்தைச் சோதித்தோம். மாநிலத்தில் உனக்கீடு எவருமில்லை. இதோ உன்னை விலைக்கு வாங்கிய சண்டாளனைப்பார்! இவனே தர்மதேவதை! எல்லோரும் மகிழ்ந்தோம். இந்த்ரனது அமிர்த வர்ஷத்தால் எழுந்துவரும் உன் குழந்தையைப் பார்! இதோ விமானம் வந்துளது! இதன் மீதேறி ஸ்வர்க்கம் வருக! என்றுரைத்தனர். அரசன் மிக்க ஆச்சர்யமடைந்தான். தேவர்களைப் பணிந்து போற்றினன். அப்பா! என்று ஓடிவரும் குழந்தையை ஆவலுடன் கட்டித் தழுவினன். முத்தமிட்டு உச்சி முகர்ந்தான். கற்பரசியான மனைவியுடன் மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தான். ரோஹிதாச்வனுக்கு முடிசூட்டி சந்திரமதியுடன் ஸத்திய ஹரிச்சந்த்ரனையும் அவன் நகர ஜனங்களையும் ஸ்வர்க்கத்திற்கு அழைத்துச் சென்றனர் தேவர்.

## விச்வாமித்ரரும் வஸிஷ்டரும்.

தீர்த்த யாத்ரைக்குச் சென்ற வஸிஷ்டர் தன்னூருக்குத் திரும்பினர். விச்வாமித்ரர் தன் சிஷ்யனன ஹரிச்சந்த்ரனுக்குச் செய்த தீங்குகளைக் கேட்டார். கோபங்கொண்டு விச்வாமித்ரரைக் கொக்காகும்படிச் சபித்தார். விச்வாமித்ரரும் வஸிஷ்டரை "ஆடி" என்ற பக்ஷியாகும்படிச் சபித்தார். இருவரும் பக்ஷி ரூபம்கொண்டு மூவாயிரமாண்டு போர் புரிந்தனர். இவர்களது பாரத்தை ஸஹியாமல் ஒருபுறம் பூமி சாய்ந்தது. தேவர் பிரம்மனிடம் ஓடி முறையிட்டனர். பிரம்மா போரை நிறுத்தும்படி இருவரையும் கூறி பக்ஷி உருவத்தையும் மாற்றி பூர்வ ரூபத்தை யளித்தார். இருவரும் பிரம்மனைப் பணிந்து தவத்திற்குச் சென்றனர்.

## கௌசிக சரிதம்.

ப்ரதிஷ்டான நகரில் கௌசிக பிராம்மணர் ஜன்மாந்தர பாபத்தினல் அங்கமெலாம் அழுகிச் சொட்டும் பெரிய வியாதியினல் பீடிக்கப்பட்டு வந்தார். பதிவிருதா சிகாமணியான அவர் மனைவி ஸமயத்திற்கேற்ற பணிவிடை செய்துவந்தாள். நாற்றத்தைக் கவனியாள். அவர் செய்யும் ஹிம்ஸையைத் தபஸாக எண்ணுவாள். க்ரூரமான சொற்களை ஆசீர்வாதமாகக் கருதுவாள்:

அவரை மன்மதனாக நினைத்து இன்பமாகப் பேசுவாள். வியாதியின் கொடுமையால் இவ்வளவையும் அவர் மதியாது தடிகொண்டு அவளை நையப் புடைப்பார். தன் தவறுக் கேற்ற சிக்ஷையென்று எண்ணி முகம் கோணாது மனம் மாறாது அவரை அர்ச்சித்து வந்தாள்.

கௌசிகர் ஒரு தாஸியிடம் ஆசை கொண்டார். அவ்வுத்தமி தனது நகைகளை விற்று அவ் வேசிக் களித்து அவளைப் பணிந்து மன்றாடி தனது கணவனது விருப்பைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்றாள். இக் கற்பரசியின் சொல்லை மறுக்க முடியாமல் அப்படியே ஆகட்டுமென்று சொன்னாள் வேசி. அன்றிரவு புருஷனைத் தோளில் தூக்கித் தாஸிவீடு சென்றாள் கௌசிகி. நடுவழியில் மாண்டவ்ய முனிவர் கழுவிலேற்றப்பட்டிருந்தார். இருளாதலின் அதை யறியாமல் கௌசிகர் வியாதியின் உபாதை பொறுக்காமல் காலை உதைத்துக்கொண்டார். அது மாண்டவ்யரது தலையில்பட அவர் தன்னை உதைத்தவன் ஸூர்ய உதயத்திற்குள் இறப்பான் என சபித்தார். இதைக் கேட்டு அக்கற்பரசி ஆஹா! என்னருமை நாதனை இறக்க? யான் என் செய்வேன்? அவரை விட்டு ஒரு க்ஷணமேனும் யான் ஜீவித்திரேன்! என் மாங்கல்யத்தை இழக்க நான் செய்த குற்றம் யாது? என்று கதறி அழுது ஸூர்யனே உதிக்காமல் போகட்டும் என்றாள்.

## அனஸூயை சரிதம்.

பல நாட்களாகியும் ஸூர்யனுதிக்காமற் போகவே கர்மானுஷ்டானங்கள் நடைபெற வில்லை. தேவர்களுக்கு உணவு இல்லாமற் போகவே ஒன்று கூடி ப்ரம்மாவைச் சரணமடைந்தனர். ப்ரம்மா கற்பரசியின் சாபம் கற்பரசியினால்தான் அகல வேண்டும் என்று கூறி பதிவிருதா சிகாமணி அத்ரிபத்னியான அனஸூயையிடம் வந்தார்கள். பதிவிருதை அவர்களைத் தக்கபடி அர்ச்சித்து, வந்த காரியத்தை வினவினாள். ப்ரம்மதேவர் சொல்லியதைக் கேட்டு தேவர்களுடன் கௌசிகரது ஆச்ரமத்திற்குச்சென்றாள். தக்கபடி அவளை வரவேற்று பூஜித்தாள் கௌசிகி.

அனஸூயை கௌசிகியைக் குசலம் கேழ்க்கும்வகையில், பதியையே பரமாத்மாவாக எண்ணுகிறாயா? அவர்

என்ன குற்றம் செய்தாலும் அதைப் பொருட்படுத்தாது அவரைப் போற்றி வருகிருயா? என்று பலவகையாகப் பதிவிருதை தர்மத்தைக் கேட்டாள். கௌசிகி, அனஸூயை வந்த கார்யத்தை வினவ, அவள் தேவர்களது பிரார்த்தனையைத் தெரிவித்து ஸூர்யனை உதிக்கும்படிச் சாபத்தை அகற்ற வேண்டினாள். கௌசிகி தனது கணவன் மரணத்தைப்பற்றிக் கூற, அஞ்சாதே! அவரது ஆயுள் விருத்தியுடன் ரோகமும் அகன்று திவ்ய சரீரத்தையும் பெறுவார்! என வாக்களித்தாள். உடனே கௌசிகி, யான் கணவனையே தெய்வமாக நினைப்பது ஸத்யமானால் கதிரவன் உதிக்கட்டு மென்றாள். ஆதித்தியனும் உதித்தான். கௌசிகரும் கீழே விழுந்தார். உடனே அனஸூயை பதியையே தெய்வமாக எண்ணிப் பணிவிடை செய்வது ஸத்யமானால் கௌசிகர் திவ்ய சரீரம்பெற்று பிழைத்தெழுந்திருக்கட்டு மென்றாள். உடனே மன்மதனைப் போன்ற சரீரம்பெற்று கௌசிகர் எழுந்தார். ஸதியும் பதியுமாக அனஸூயையயும் தேவர்களையும் போற்றிப் பணிந்தனர். ஓ கற்பரசியே! உனக்கு யாது வரம் வேண்டும் என்று தேவர்கள் வினவ அனஸூயை மும்மூர்த்தியும் எனக்கு மூன்று புதல்வராகத் தோன்ற வேண்டுமென்றாள்.

## தத்தாத்ரேயர்.

அனஸூயைக்கு, அத்ரியினுடைய தேஜஸ்ஸினால் பிரம்மாவின் அம்சமாக சந்திரன் தோன்ற, அதைத் திக்குகள் தங்களுக்கு வேண்டுமெனப் பெற்றுக்கொண்டன. ஸத்வகுணம் நிறைந்த மஹா விஷ்ணுவின் அம்சமாகத் தத்தாத்ரேயர் தோன்றினர். ஸகல கலைகளிலும் கைதேர்ந்த தத்தாத்ரேயர் உலகப் பற்றற்று ஆத்மத்யானம் செய்ய ஆசைகொண்டார். அவர் ஜலத்திற்குள் முழுகி தவம் புரிந்தார். அந்த ஜலக்கரையில் தேவ வருஷத்தில் நூறாண்டு முனி குமாரர்கள் இவரை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். கரையேறி வந்த தத்தர் இவர்களைக் கண்டு தனது மாயையினால் ஓர் தாசியைப் படைத்து இருவரும் மதுபானம் செய்து விடனைப்போல் நடநம் செய்தார். இது இங்ஙனமிருக்க:—

கார்த்தவீர்யார்ஜுனன், குடிகள் செய்யும் பாபம் அரசனை அண்டுமாதலால் எனது நாட்டு ப்ரஜைகள் களவு, காமம், கொலை முதலிய குற்றம் செய்யும்வரை யான் ராஜ்யத்தை விரும்பேன் என்றான். பலர் சொல்லியும் இவன் பிடிவாதமாக இருந்ததால் புரோஹிதரான கர்க்கர் கார்த்தவீர்யனிடம் தத்தாத்ரேயரை ஆராதித்து உனது விருப்பைப் பெற்றுவா என்று கூறினார். இந்திரன் தத்தரிடம் வரம் பெற்ற வகையை வர்ணித்தார் கர்க்கர். அர்ஜுனா! முன் ஒரு ஸமயம் தேவ அஸுர யுத்தம் நடைபெற்றது. அச்சமயம் தேவர்களால் அஸுரர்களை வெல்ல முடியவில்லை. பிருஹஸ்பதி தனது ஞானதிருஷ்டியால் நன்கு யோசித்து இந்திரனை அழைத்து தத்தாத்ரேயரைச் சரணமடைந்து ஜயம் பெறுவாய் என்றார். தேவேந்திரன் தத்தரை வணங்கி ஆராதித்துப்போற்றி வந்தான். இங்ஙனம் பலகாலம் சென்றபின் தத்தர் தேவர்களை நோக்கி மதுபானம் செய்பவனும் மாதரோடு திரிபவனுமான என்னை ஏன் உபாஸிக்கிறீர்கள்? என்னால் என்ன பயன் உங்களுக்கு உண்டாகப் போகிறது? என்றார். உண்மையை உணர்ந்த தேவர்கள், ஸ்வாமின்! அக்னிக்கு அழுக்குண்டோ? குற்றமற்ற உங்களைக் குற்றமுள்ளவரெனக் கருதுவோர் பாபியாவர் என்றார்கள்.

உடனே உண்மையை அறிந்த தேவர்களைப் பார்த்து தத்தர், அஸுரர்களை அழைத்து யுத்தம் புரியுங்கள்! என்றார். தேவர்கள் தத்தர் பலத்தைக்கொண்டு தைத்யரைச் சண்டைக் கிழுத்தனர். அஸுரர்கள் தேவர்களை நன்கு புடைக்க, அடி பொறுக்காமல் தேவர்கள், தத்தாச்ரமத்திற்கு அபயம்! அபயம்! என்று ஓடி வந்தனர். அஸுரர்களும் அவர்கள் பின்னே ஓடி வந்தனர், ஆங்குள்ள பெண்மணியைப் பார்த்து அஸுரர் மதி மயங்கினர். சண்டையை மறந்து தத்தரை மதியாது அப்பெண்ணைத் தூக்கிப் பல்லக்கில் வைத்துத் தலையில் சுமந்து சென்றனர். "தத்தாத்ரேயர் ஸ்திரீ காமனையால் அஸுரர் பலம் அகன்றது, தேஜஸ் குன்றியது. இவளைத் தலையில் தூக்கிச் சென்றதால் அவளும் அவர்களைவிட்டு நம்மிடம் வருவாள். பாதத்தில் லக்ஷ்மியை த்யானம் செய்தால் வீட்டை யளிப்பாள்.

துடையில் த்யானம் செய்தால் தனத்தையும், குஹ்ய ஸ்தானத்தில் த்யானம்செய்தால் மனைவியையும், மடியில் த்யானம் செய்வோருக்குக் குழந்தையையும், ஹ்ருதயத்தில் த்யானம் செய்வோருக்கு இஷ்டத்தையும், கண்டத்தில் த்யானம் செய்வோருக்கு ஆபரணங்களையும் அளிப்பாள். தலைமீது வைப்போரை விட்டுவிடுவள். ஆதலால் அஸுரர்களை ஸுலபமாக நீங்கள் வெல்லலாம்'' என்றார். அங்ஙனமே தேவர் அஸுரரை ஜயித்தனர். ஆதலால் நீயும் அவரைப் பணிந்து உனது இஷ்டத்தை நிறைவேற்றுவாய் என்றார் கர்க்கர்.

உடனே கார்த்தவீர்யார்ஜுனன் தத்தர் ஆச்ரமம் சென்று பக்தியுடன் அவரைப் பூஜித்தான். அவன் குருவின் காலைப் பிடிப்பான். சந்தன மறைப்பான். ஸமித் தர்ப்பங்களையும் கந்தமூலங்களையும் கொண்டுவருவான். அவர் எச்சிலை எடுத்து சுத்திசெய்வான். இதுபோல் பக்தியுடன் பார்த்திபன் செய்யும் பணிவிடைகளைக் கண்டு பரமாநந்தமடைந்தார். பெண்ணுடன் மதுபானம் செய்யும் என்னை ஏன் நீ அடுத்தாய்? என்று தத்தர் கூற, பரம்பொருளான தங்களுக்குக் குற்றம் ஏது? என்றான் கார்த்தவீர்யன். பரம ஸந்தோஷமடைந்த அவர் எவர்க்கும் கிட்டாத பல வரங்களை அர்ஜுனனுக்குக் கொடுத்தார். பிறர், திருட எண்ணும்போதோ மற்ற பாபத்தைச் செய்யக் கருதும்போதோ வில்லாளியாக அவர் எதிரே நான் தோன்ற வேண்டுமென்றும், வேண்டியபோது ஆயிரம் கைகள் வேண்டுமென்றும் அர்ஜுநன் வேண்டினான். அங்ஙனமே அளித்துப் பட்டாபிஷேகம் செய்து கொள்ளும்படி தத்தர் அவனுக்கு உத்தரவிட்டார். இவனது ராஜ்ய பட்டாபிஷேகத்திற்கு தேவர்களும், யக்ஷர்களும், கந்தர்வர்களும், கின்னரர்களும், நாகர்களும் வந்தனர். கார்த்தவீர்யன் தனது ராஜ்யத்தில் எவரும் எவருக்கும் எவ்வகையான தீங்கும் செய்ய முடியாதாகையால் தன்னைத் தவிர வேறு எவரும் வில்லை ஏந்தலாகாதென்றான். தர்மம் தவறாது ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தான். யக்ஞம், தானம், தபஸ் முதலியவைகளாலும் அகண்ட செல்வத்தினாலும், தத்தாத்ரேயரது அருளாலும் ஒப்பற்ற கீர்த்தி பெற்ற இவனுக்கு எவனும் ஈடில்லை.

## குவலயாச்வன்.

முன் ஒரு ஸமயம் சத்ருஜித் என்ற ஓர் அரசன் இருந்தான். அவன் தேவேந்திரனுக்கு ஸமமானவன். அவனுக்கு ஓர் அருமைப் புதல்வன் உண்டு. அவன் பெயர் ரிதத்வஜன். இவனது உயர்ந்த குணத்தையும் வீர்யத்தையும் கண்டு வியக்காதவரில்லை. நாகலோகத்திலுள்ள அச்வதரன் எனும் நாகராஜனது இருகுமாரர்கள் இவனது நண்பர்களானூர்கள். அன்றன்று அவர்கள் அரசகுமாரனைக் கண்டு களித்து விளையாடி மாலை மனைக்குச் செல்வார்கள். அச்வதரன் தனது குமாரர்களைத்தினந் தோறும் எங்கு சென்று வருகிறீர்கள்? என்ருர். அவர்கள் எங்களது அருமை நண்பன் ரிதத்வஜன் என்னும் ராஜ குமாரனிருக்கிருன். மானிடப் பிறவியில் இவனைப்போன்ற உத்தம குணமுடையவனைக் காண்பதரிது என்ருர்கள். குணமுள்ளவருக்கு நமது சக்திக்கேற்றபடி ஏதேனு மளிப்பதல்லவோ தர்மம்! என்ருர் தந்தை. அவனது சிந்திய செல்வம் ஸ்வர்க்க லோகமெனலாம். நிறைந்த மனமுடைய அவனுக்குக் குறை ஏது? ஆயினும் ஓர் குறைமாத்ரம் உளதென அவனது சரிதத்தைச் சொல்ல ஆரம்பித்தனர் நாக குமாரர்.

காலவர் என்ற ரிஷி சத்ருஜித்தின் அரண்மனைக்கு வந்து, ஸமீபகாலம் தொட்டு ஓர் ராக்ஷஸன் பற்பல உருவெடுத்து தபஸ்விகளைப் பயப்படுத்துகிருன். ஸமாதியைக் கலைக்கிருன். என்செய்வேனென்று யான் சிந்தை கலங்கியபோது அசிரிரியான வாக்குத் தோன்றிற்று. மஹர்ஷே! உமது பயத்தை அகற்றும் குதிரையைத் தந்தேன்! இது குவலயமெல்லாம் சுற்றுமாதலால் இதற்குக் குவலயாச்வம் எனப் பெயர். இக்குதிரையின் மீதேறத் தகுந்த வீரன் ரிதத்வஜனே!

இதை அவனிடம் கொடும். அவன் அசுரனைக் கொன்று சந்தோஷமளிப்பான் என்றது. குதிரை இதோ நிற்கிறது. ராஜகுமாரனை அனுப்பி தேவவாக்கை நிறைவேற்றும் என்று கூற சத்ருஜித் குமாரனை அழைத்து தபோவனம் சென்று ஜயலக்ஷ்மியோடு திரும்புவாய் என்று கட்டளையிட்டார். குவலயாச்வத்தின் மீதேறிய

ரிதத்வஜன் குவலயாச்வன் எனப் பெயர் பெற்று பன்றி உருவம்கொண்டு ஹிம்ஸிக்கும் அஸுரனைப் பின் தொடர்ந்து சென்றான். அது வெகுதூரம் இழுத்துக் கொண்டு பாதாளம் சென்றது. விரைவாகப் பின்சென்ற வேந்தன் அதன் மீது பாணத்தை எய்திப் பாதாளம் சென்றான்.

அங்கு ஸ்வர்ணவர்ணமான ஓர் நகரத்தைக் கண்டான். அதில் ஓர் அழகிய அரண்மனை. அங்கு எவரும் ஸஞ்சரிக்கவில்லை. குதிரையை ஓர் இடத்தில் கட்டிவிட்டு அங்குமிங்கும் அலைந்து பார்த்தான். மின்னற்கொடி போல் ஓர்பெண் விரைவாக மாடிமீது ஏறினாள். பெண்ணே! இந்நகரம் எவருடையது? இங்கு ஜனஸஞ்சாரமில்லாத காரணம் யாது? நீ யார்? எங்கு செல்கிறாய்? என்று கேட்டான். அவள் பதில் கூறாது விரைவாகச் சென்றாள். அரசனும் தொடர்ந்து சென்று ரத்னக் கட்டிலில் சோர்வுடன் உட்கார்ந்திருக்கும் ஓர் கன்யாரத்னத்தைக் கண்டான். இவனைக் கண்டவுடன் அவள் மோகமடைந்தாள். அரசன் அவள் தோழியைப்பார்த்து பெண்ணே! உண்மையைக் கூறு! தன்னந்தனியே நீங்கள் இங்கிருக்கக் காரணம் யாது? என்னைக் கண்டவுடன் இவள் ஏன் மோஹமடைந்தாள்? என்று வினவினான். ஐயா! விச்வாவஸு என்ற கந்தர்வ ராஜன் குமாரி. மதாலஸை என்பது இவள் பெயர். ஒரு ஸமயம் உத்யானத்தில் வஜ்ரகேது புத்ரனை பாதாளகேது இவளைத் தூக்கிவந்து ஒருவருமறியாமல் இந் நகரத்திலே வைத்திருக்கிறான். த்ரயோதசியில் இவளை மணப்பதாக தீர்மானித் திருக்கிறான். அக்நிக் கேற்ற ஹவிஸ்ஸை நாய் தின்பது தர்மமோ? நேற்று தற்கொலை செய்துகொள்ள முயன்றாள். காமதேனு இதைத் தடுத்துப் பெண்ணே! மனுஷ்ய லோகத்திலிருந்து ஓர் ராஜகுமாரன் இங்கு வந்து அஸுரனைக் கொல்வான். அவனே உனக்குப் பதி என்றது. நமக்கும் நல்லகாலம் பிறக்குமோ? என ஏங்கி நிற்கிறாள் மதாலஸை. நானோ, விந்த்யவானது புதல்வி குண்டலா. வீரபுஷ்கரமாலி என்ற என் கணவனை சும்பனெனும் அரக்கன் கொன்றான். தீர்த்தயாத்ரை செய்து காலத்தைக் கழித்து வருகிறேன். பரிதாப நிலையிலுள்ள இவளுக்கு

உதவ இங்கு வந்தேன். இன்று யாரோ ஒருவன் பன்றி வடிவமுள்ள பாதாளகேதுவைக் கொன்ருன். தேனு அவனையே பதியாகக்கொள் என்றது. அழகிற் சிறந்த உம்மை விட்டு மற்றவரை மணக்க மனமில்லாமல் மதாலஸை மயங்கி விழுந்தாள் என்று ஸகிகூறினுள்.

தாங்கள் யார்? என, தயை புரிவீரா? என்ருள். அரசன் தனது வரலாற்றைக் கூறி பன்றியைக் கொன்றவன் தானே என்ருன். இதைக் கேட்டதும் மதாலஸை மனமகிழ்ச்சியுடன் எழுந்தாள். கை கூப்பிக் கடைக் கண்ணுல் கணவனை நோக்கி வெட்கத்தால் தலை குனிந்து நின்ருள். அரச குமாரன் எதிர்பாராமல் தெய்வமளித்த மாதரசியான மதாலஸையைக் கண்டு மகிழ்ந்தான். ஆயினும் தந்தையின் உத்திரவின்றி தானே மணப்பது தர்மமல்ல என்ருன். உடனே மதாலஸை குல குருவான தும்புருவை நினைக்க அவர் வந்து விதிப்படி விவாஹம் செய்துவைத்தார். அந்த குவலயாச்வத்தின் மீது மதாலஸையுடன் அமர்ந்து ராஜகுமாரன் கிளம்பும் பொழுது இதோ கொண்டு போகிருன்! இதோ கொண்டு போகிருன்! என்ற சப்தம் செய்து எண்ணிறந்த ராக்ஷஸ ஸேனை எதிரில் வந்தது. அரசன் அறைக்ஷணத்தில் அவைகளை அழித்தான்.

குவலயாச்வன் ஜயலக்ஷ்மியுடன் கன்யா லக்ஷ்மியையும் பெற்று பூலோகம் வந்தான். பல நாளாகப் பிரிந்திருந்த அருமைப் புதல்வனைத் தந்தை அன்புடன் வரவேற்ருர். அற்புத வடிவம் வாய்ந்த கன்னிகையைக் கண்டு இத்திருமகள் யார்? என்று வினவ! இவள் தங்கள் மருமகளே! என்று நடந்ததைக் கூறினுன். குலத்திற்கும் குணத்திற்கும் அன்பிற்கும் அழகிற்கும் ஏற்ற மனைவி புத்ரனுக்குக் கிடைத்ததைக் கண்டு மன்னன் மகிழ்ந்தான். புத்ர! இக் குதிரை மீதேறி உயிரைக் கொடுத்தாவது உத்தமரைப் பூஜி. இதுவே நமக்குச் சிறந்த தர்மம். இதனுல் நற்கீர்த்தியும் நற்கதியும் உண்டாகுமென சத்ருஜித் குவலயாச்வனுக்கு உபதேசம் செய்தான்.

ஒரு ஸமயம் யமுனுதீரத்தில் ஒரு கபடமுனியைக் கண்டான். பாதாளகேதுவின் ஸஹோதரனுன தாளகேது அவன். தன் அண்ணனைக் கொன்ற குவலயாச்வனைக்

கொன்று பழிதீர்க்க விரும்பினன். அவன் முனி வேஷம் பூண்டு அங்கு வந்த குவலயாச்வனைக் கண்டு ராஜகுமார! எனக்கோர் ஸஹாயம் செய்வாயா? என உமது விருப்பைக்கூறும் என்றான் ராஜகுமாரன். நான் ஜலத்திற்குள் வருண யாகம் செய்யப் போகிறேன். அதற்கு உனது மாலையைத் தக்ஷிணையாக அளிக்க வேண்டும். எவரும் வேள்வியைக் கலைக்காமல் காவல்புரி என்றார்.

அங்ஙனமே ஆகட்டுமென ராஜகுமாரன் காத்திருந்தான். தாளகேது ஜலத்தில் மூழ்கி மாயையினால் கரையேறி குவலயாச்வனது வீடு சென்றான். அங்கு மதாலஸையின் காதில் விழும்படி சத்துருஜித்தைப் பார்த்து அரசே! உனது மகனை ஓர் அஸுரன் கொன்றான் என்றான். அவனது வியோகத்தைப் பொறுக்காது பரிதபிக்கும் உங்களுடைய துக்கத்தை நீக்க அவனது ரத்நமாலையைக் கொண்டுவந்தேன் என்று அதைக் கீழே எறிந்தான்.

இதைக் கேட்ட மதாலஸை இது உண்மையோ! என் நாதனுக்கா இக்கதி நேர்ந்தது? பிராணப்ரிய! என்னை விட்டுத் தாங்கள் செல்லுவது நியாயமோ? உம்மைவிட்டு ஒரு க்ஷணமும் யான் பிரிந்திரேன்! என நீர் உணரமாட்டீரா? இதோ வந்தேன்! வந்தேன்! என்று கூறி ரத்நமாலையை கண்ணில் ஒத்திக்கொண்டு உயிரை விட்டாள். புத்ர சோகம் பொறுக்காமல் அரசனும் மனைவியும் அலறினார்கள். விழுந்து புரண்டார்கள். தனக்குத்தானே தேர்ந்தெழுந்த அரசன் ஆஹா! என்ன அறியாமை? எனது புதல்வன் அந்தணனுக்காக அல்லவோ உயிரை இழந்தான். இது நமது குல தர்மம். வீரஸ்வர்க்கம் பெற்ற வீரனை நாடி வருந்துவது அழகாகுமோ? என்று கூறி அந்தணனை நோக்கி ஐயனே! அருமைப் புதல்வனது உடலேனும் காணக் கிடைக்குமோ? என்று வினவ, மஹர்ஷி மன்னனது உடலாதலால் தக்கபடி தபோதனர்கள் அதைத் தஹனம் செய்து விட்டனர் என்றார். அரசன் மதாலஸையினது உடலை ஸம்ஸ்காரம் செய்தார். இதைக்கண்டு கார்யம் முடிந்ததென கபடமுனி யமுனையிலிருந்து கரையேறி ராஜகுமார! யக்ஞம் பூர்த்தியாய்விட்டது. இனி நீ செல்லலாம் என்றார். குவலயாச்வனும் தன் நகருக்கு

வந்தான். தன்னைக் கண்டவுடன் ஜனங்கள் பேரானந்தம் பெற்று உடனே துக்கமடைவதற்கும் காரணமறியாமல் திகைத்தான்.

யாருக்கு என்ன ஆபத்தோ? என்று உள்ளம் நடுங்கி அருமைத் தந்தையினது அரண்மனைக்குச் சென்றான். இவனைக் கண்டவுடன் அரசன் ஒன்றும் புரியாது தபோதனர் சொன்னது பொய்யோ! தனயன் வருவதுதான் மெய்யோ! உத்தமபதிவிருதையான மதாலஸை உயிரை இழந்தாள். அருமைப் புதல்வனே என்னெதிரிலே காண்கிறான். இஃது என்ன விந்தை? என்று சிந்தை கலங்கி தனயனை அன்புடன் தழுவி நடந்ததைக்கூறு என்றான். மன்னனும் மகனும் சேர்ந்து பாதாளகேதுவினது ஸ்ஹோதரன் பழிவாங்கவே இதைச் செய்திருக்க வேண்டும் என்று தீர்மானித்தனர். ஆயினும் உயிரைவிட இன்பமான மதாலஸையை இழந்த துன்பம் இருவரையும் வாட்டியது. குவலயாச்வனது துக்கத்திற்கு அளவேயில்லை. செய்ய வேண்டிய ஈமக் கடன்களைச் செய்து முடித்தான். மனதிற்கிசைந்த மதாலஸையை யிழந்தபின் மாநில வாழ்வில் வெறுப்பு கொண்டான். இனி ஒரு க்ஷணமேனும் உயிரை வைத்திருப்பது உசிதமல்ல. பொய்யான என் மரணத்தைக்கேட்டு மனம் முறிந்து மதாலஸை மெய்யாக இறந்தாள். ஸத்யமாகவே மதாலஸை இறந்தும் இப்பாவி உயிர் ஏன் விலகவில்லை? என் மனம் கல்லோ? வஜ்ரமோ? தானே செல்லாத உயிரை நானே மாய்த்துக்கொள்வேன்! எனத் தீர்மானித்தான். ஆயினும் வயது சென்ற தந்தையை விட்டுச்செல்வதும் ஆத்மஹத்தியும் பெரும் பாபமன்றோ? என்று அஞ்சினான்.

மாதரசியான மதாலஸையை மதித்து மற்றோர் மனைவியை மனதிலும் மதியாது தந்தைக்குப் பணிவிடை செய்து மிகுந்த காலத்தைக்கழிப்பேன். போகத்தை விரும்பேன். துறவிகோலம் கொள்வேன் என்று அங்ஙனமே அனுஷ்டித்து வருகிறான், என்று இக்கதையை நாக குமாரர்கள் தந்தையிடம் கூறி இதற்கேதேனும் பரிஹாரம் செய்தால் இதுவே எமது நண்பனுக்கு நாம் செய்யும்நன்மை என்றனர். அச்வதரன், தவத்தினால் தனக்கிஷ்டமான கார்யத்தை ஸாதித்துக்கொள்ள, கம்பலன் என்ற

தனது ஸஹோதரனோடு தபோவனம் சென்றான். ஸரஸ்வதி தேவியை த்யானம் செய்தான். போற்றினான். கலைமகள் எதிரே தோன்றி யாது வரம் வேண்டும்? என்றாள். அழகாகப் பாடித் துதித்து அரனை ஆராதிக்க நீ எங்களது நாவில் ஸாந்நித்யம் செய்து விரைவில் சிவன் அருள் புரியும்படி அனுக்ரஹிக்க வேண்டு மென்றான். அங்ஙனமே வரம் பெற்று கைலாஸநாதனைத் துதித்துப் பாடி ஆராதித்தார்கள். கைலாஸ நாதன் எதிரில் தோன்றி பரோபகாரத்திற்காக நீ செய்யும் தபஸ் என்னைப் பர வசமாக்கியது. உன் இஷ்டம் கைகூடும். உன் விருப் பைச் சொல் என்றார்.

பக்தவத்ஸல! குவலயாச்வன் என் மைந்தனது நண் பன். மதாலஸையை இழந்து பரிதவிக்கிறான். அவனை எழுப்பி அவனுக் களிக்கவேண்டியது என் கடமை என் றான். அச்வதர! நீ பித்ரு தேவர்களைக் கருதி ஓர் சிராத் தம் செய். மத்யம பிண்டத்தைப் புஜி. உனது நடுப் படத்திலிருந்து முன்போலவே பூர்வ ஞானத்துடன் மதா லஸை எழுந்திருப்பாள் என்று கூறி மறைய அச்வதரன் அங்ஙனமே செய்து மதாலஸை வர மகிழ்ந்தான். அவளை மறைத்து வைத்து புதல்வர்களை நோக்கி உனது நண்பனை அழைத்துவா என்று கூறினான்.

குவலயாச்வன் விரும்பாவிடினும் நண்பனுக்காக அவர் கோரியபடி நாகலோகம் சென்றான். நாகராஜன் அன்புடன் வரவேற்று உபசரித்தான். சில நாட்கள் சென்றபின் ராஜ குமாரா! உனக்கு எப்பொருளில் ஆசை? எனது ஸந்தோஷத்திற்காக எதை யேனும் ஏற் றுக்கொள் என்றான். ஸர்ப்பராஜ! வரத்தை மறுப்பது தர்மமன்று. எப்போதும் என் புத்தி தர்மத்திலேயே இருக்கும்படி வரமருளும் என்றான்.

அச்வதரன் தர்மசீல! உமது புத்தி இயற்கையாகவே தர்மத்திலுள்ளது. மனுஷ்ய லோகத்திற்குக் கிடைக்காத வரத்தைக் கேள் என்றார். மதாலஸையைத் தவிர மற் றொன்று மில்லை. இதை இவரிடம் வரமாகக் கேட்பது வெட்ககரமானதென்று எண்ணினான். ஆயினும் தானொன் றும் பேசாமல் தனது நண்பர்கள் முகத்தை நோக்கினான். இங்கிதமறிந்த நாககுமாரர் மதாலஸைதான் மன்னனுக்கு.

மாநிலத்தில் கிட்டாத வரம். அதை அருள்வீராகில் எங்களுக்கு ஆநந்தம் என்றான். அச்வதரன், இது உமக்குச் சம்மதமா? என்று அரசனைக் கேட்க அரசகுமாரன் ஆர்ய! அதற்கென்ன சந்தேகம்? மாயையினால் தோற்றுவித்து மறைத்தாலும் போதும் என்றார்.

உடனே அச்வதரன் அரண்மனையிலிருந்து மதாலஸையை அழைத்துவந்தான். அவளைக் கண்டவுடன் அரச குமாரன் லஜ்ஜையையும் விட்டு ஓடி மாதரசே! வருக! வருக! என்று தழுவச்சென்றான். அச்வதரன் அரசே! அவள் மாயையால் தோன்றியவளன்றோ? அவளைத் தொட்டால் மறைந்து விடுவள் என்றான். அவளைத் தொடவும் முடியாதெனக் கேட்டவுடன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். அவர் களைத் தெளிந்தெழுந்ததும் அச்வதரன் நடந்ததைக்கூறி பரிஹாஸமாக அவள் மாயையால் தோன்றியவள் எனக் கூறியதை மன்னிக்கும்படி பிரார்த்தித்தான். குவலயாச்வன் தன் பொருட்டு அச்வதரனது பரோபகார சிந்தையைக் கொண்டாடினான். பலமுறை அவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டான். இவனது தந்தை, மனைவியுடன் குவலயாச்வன் வருவதைக்கேட்டு பரமானந்தமடைந்தான். ஊரை அலங்கரித்தான். பெரிய தோர் உற்சவமாகக் கொண்டாடினான். புற்றுயிர் பெற்றெழுந்த மதாலஸை மாமி மாமனுடைய பாதாரவிந்தத்தைப் பணிந்து முன்போலவே பர்த்தாவுடன் கூடி வாழ்ந்து வந்தாள்.

குவலயாச்வனே பூவலயத்தை ஆளும் சக்ரவர்த்தியானான். அவனுக்கு நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். முதல் குழந்தை பிறந்தவுடன் அதற்கு விக்ராந்தன் எனப் பெயரிட்டான். மதாலஸை நகைத்தாள். குழந்தை அழும் பொழுது அதைத் தாலாட்டினாள். குழந்தாய்! ஏன் அழுகிறாய்? நீ யாரோ? நான் யாரோ? உனக்குமெனக்கும் என்ன ஸம்பந்தம்? நீ யார்? உடலோ? அல்லவே? உனக்குப் பசி, தாகம், தூக்கம், துன்பம் ஏது? என்று வேதாந்தம் உபதேசித்தாள். இளம் பிராயத்திலேயே குழந்தையின் சிறுமூளையில் பசுமரத் தாணிபோல் பதிந்தது. இல்லற வாழ்க்கையை வெறுத்து துறவு பூண்டு வனஞ் சென்றான்.

இரண்டாவது புத்ரனுக்கு அரசன் ஸுபாஹு என்றும் மூன்ருவது புத்ரனுக்கு சத்ருமர்த்தனன் என்றும் பெயரிடும் பொழுது முன்போலவே மதாலஸை பரிஹாஸமாகச் சிறித்து வேதாந்த உபதேசம்செய்து அவர்களையும் துறவிகளாக்கி விட்டாள். நான்காவது புதல்வன் பிறந்து நாமகரணம் செய்யும்போது மதாலஸே! நீயே இதற்கு உசிதமான பெயர் வை! என்ருன் அரசன். மதாலஸை அலர்க்கன் எனப்பெயரிட்டாள். அர்த்தமில்லாப் பெயரிது. நான் நல்ல பெயர் வைத்தபோது நீ நகைத்தக் காரணம் யாதென்ருனரசன். மதாலஸை, ஸ்வாமின்! தாங்கள் சூட்டிய நாமம் எங்ஙனம் அர்த்த முள்ளதாகும்? அசைவற்ற ஆன்மாவுக்கு விக்ராந்தன் என்றும் உடலில்லா ஆன்மாவுக்கு ஸுபாஹு என்றும், சத்ரு மித்ரனில்லாத ஆத்மாவிற்கு சத்ருமர்த்தனன் எனவும் பெயரிடுவதும் உசிதமோ? என்ருள். மதாலஸே! நீ கூறுவது விந்தை. அலர்க்கன் என்பதன் பொருள்தான் என்ன? என்ருன்.

மதாலஸை, மன்னர் திலகமே! நாமரூபமற்ற நாதனுக்கு நாமம் சூட்டுவது அழகாகுமோ? வியவஹாரத்தில் மட்டும்பயன்படுமே யல்லாது பரமார்த்த நிலையில் நிலை நிற்குமோ? வியவஹாரத்திற்கேற்றபடி ஓர் பெயர் வைத்தேன். வேறொன்றுமில்லை என்ருள். அரசன் மூன்று புதல்வர்களை துறவியாக்கியது போதும். இதையேனும் இல்லறமார்க்கத்தில் ஈடுபட்டு தேவ ரிஷி பித்ரு பூஜை செய்யும்படிச்செய். நமது குலம் குன்ருது விருத்தியாக வேண்டுமென்ருன்.

மதாலஸை அக் குழந்தையைத் தாலாட்டும் போது இல்லறத்தைப் போதித்தாள். காமத்தால் பாண்டு மாண்டான். கோபத்தால் அனுஹ்ராதன் புதல்வன் இறந்தான். லோபத்தால் ஜலன் துன்புற்ருன். மதத்தினுல் வேனன் அழிந்தான். மானத்தினுல் அனுயு ஆயுளை இழந்தான். ஸந்தோஷத்தினுல் புரஞ்ஜயன் மரணமடைந்தான். ஆதலின் இவைகளில் ஏமாருதே. தர்மத்துடன் பிரஜைகளைப் பரிபாலனம் செய். பிரஜைகளின் புண்யத்தில் பங்கு கிடைக்கும். பிராமணரது பாதத்தை அலம்பும்பொழுது பிசாச ஜன்மமடைந்த பித்ருக்கள் ஸந்தோஷிக்கின்றனர்.

ச்ராத்தத்திற்கு வேண்டிய பதார்த்தங்கள் கிடைத்தபொழுதும், துஸ்வப்னம் தோன்றியபோதும், ஜன்ம நக்ஷத்திரத்திலும் க்ரஹங்கள் பீடிக்கும்போதும், யோகி வரும்போதும், ச்ராத்தம் செய்யவேண்டும். கர்த்தாவும் போக்தாவும் நியமம் தவறினல் பித்ருக்கள் துன்புறுகின்றனர். ச்ராத்தத்தில் தௌஹித்ரன், குதபம், எள்ளு, வெள்ளிப் பாத்ரம் இவைகள் சிலாக்கியமானவை. கோபம், வழி நடத்தல், அவசரம் முதலியவை ச்ராத்த தினத்தன்று விடத்தக்கவை.

தூரஸ்த்ரீயைப் பார்த்தல், மயிர் புழு முதலியவைகள் உள்ள அன்னம், குரூரமாகப் பேசுதல், தியில்பட்ட துணி முதலியவைகளை அடியோடு அகற்றவேண்டும். இதுபோல் மிக விஸ்தாரமாக ஸதாசாரம் கூறப்பட்டுளது. அலர்க்கனிடம் ராஜ்யத்தைக்கொடுத்து குவலயாச்வன் மதாலஸையுடன் தபோவநம் சென்ருன். மதாலஸை மகனைப் பார்த்து அலர்க்க! யான் சொன்ன தர்மங்களை மறவாதே. உனக்கு அகற்ற முடியாத ஆபத்து வருங்காலத்தில் இம் மோதிரத்தை இழுத்து உள்ளே பார்! தக்க உபதேசம் அதில் வறைந்திருக்கும். அதைப் பின்பற்று என்று கூறி ஓர் அழகிய மோதிரத்தைக் கொடுத்து விட்டுப் பர்த்தாவுடன் வநம் சென்ருள்.

பல்லாண்டுகள் சென்றும் அலர்க்கனுக்கு போகத்தில் வெறுப்புண்டாகவில்லை. இவனது ஸகோதரனை சுபாகு என்பவன் காசி ராஜனை அலர்க்கனிடம் போரிட அழைத்தான். அலர்க்கன் தனக்கு வந்த துன்பத்தை எண்ணி அன்னை அளித்த கணையாழியைத் தேய்த்தான். அதில் :

संगः सर्वात्मना त्याज्यः स चेत्त्यक्तुं न शक्यते ।
स सद्भिः सह कर्तव्यः सतां संगो हि भेषजम् ॥

"ஸங்கத்தை விடு. முடியாவிடில் ஸாது ஸங்கத்தைக் கைக்கொள். காமத்தைக் களையமுடியாவிடில் மோக்ஷத்தில் காமத்தை வை" என்ற அரிய உபதேசம் அங்கு வறையப் பட்டிருந்தது. உடனே அலர்க்கன் ராஜ்ய ஆசையை விட்டு ஸத்ஸங்கத்தால் முக்தி பெற்ருன். தத்தாத்ரேயரை அடுத்து, ஐயனே! யான் பஞ்ச பூதங்களல்ல.

மஹோ வ்யாபாரங்களல்ல. மூவ்வகை துக்கங்களையும் அனுபவிப்பவனல்ல. நித்யனாய், நிர்மலனாய், நிராமய மாய், நிரஞ்ஜனனாய் நிற்கும் பரமாத்மா. பகவந்! அக் ஞானத்தாலன்றோ உடலை நானென நினைத்துத் துன்பம் தோன்றுகிறது. பந்தத்தை யளிக்கும் நான், என்னுடை யது என்ற எண்ணம் தடிக்கிறது. நான் என்பதை விட் டவனன்றோ நன்மை பெறுவான். நம் வீட்டில் வளர்த்த பக்ஷியை ஓர் பூனை புசித்தால் எவ்வளவு துக்கம் உண்டா குமோ அவ்வளவு துக்கம் பூனை எலியைத் தின்னும்போது உண்டாவதில்லை. ஆதலின், அஹங்காரத்தை அகற்றி மெய்ப்பொருளைக் காட்டி மோக்ஷாமிருதத்தை ஊட்டு மென்றான். இதைக்கேட்ட தத்தாத்ரேயர் யோக மார்க் கத்தை விரிவாக அலர்க்கனுக்குக் கூறினார்.

## அதர்ம ஸ்ருஷ்டி.

சிரத்தை காமனையும், ஸ்ரீ தர்ப்பனையும், (கொழுப்பு) தைர்யம் நியமத்தையும், துஷ்டி ஸந்தோஷத்தையும், படைத்தது. அதர்மன் ஹிம்ஸையை மனைவியாகக் கொண்டான். ம்ருத்யு அலக்ஷ்மியை மணந்தான். இந்த தம்பதிக்கு பதினான்கு துஷ்டப் புதல்வர்கள் தோன்றி மனிதர்களது, பத்து இந்திரியங்களிலும் தங்கி ஸமயம் பார்த்து மானிடரைக் கொல்கின்றனர். இவர்களில் துஸ்ஸஹன் என்பவன் மிகக் கொடியவன். ஸகல உல கையும் பக்ஷிக்க அவன் ஆரம்பித்தபோது சதுர்முகப் பிரம்மன், அவனது அஹங்காரத்தை அடக்கினார். துஸ்ஸஹன் அவரைப்பணிந்து எனக்கேற்ற உணவும் இடமும் அளிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தான். பிரம்மா, ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்காத மனிதன் உனக்கு இருப்பிடமாகும். எச்சில், புழு, மயிர், நாயின் பார்வை முதலியவைகளால் அசுத்தமானதும் உடைந்த பாத்திரத் திலுள்ளதும், உடைந்த ஆஸனத்திலுட்கார்ந்து புஜிப்பவ னது அன்னமும், தூரஸ்த்ரீயால் பார்க்கப்பட்டதும், சிரத்தையில்லாமலோ ஹோமம் செய்யாமலோ கோபத் துடனே வியாதியுடனே தானம் செய்ததுமான அன்ன மும் உன்னைச் சார்ந்ததாகும் என்றார்.

அன்றியும் கர்ப்பஸ்திரீ ஸங்கமம், சாஸ்திர நிந்தை, பங்திபேதம், பூஜை வைச்வதேவமில்லாத பாகம்

சண்டையுள்ள வீடு, காரணமில்லாத உபவாஸம், ப்ரம்ம சர்யமில்லா அத்யயநம், யோக்யதையில்லாதவன் செய்த யாகம், இவைகள் துஷ்டனுன உனக்கு வாஸஸ்தலமாகும். வைச்வதேவம் செய்து பலியிடுவோர் வீடும், சஞ்சலபுத்தி இல்லாதவனும், ஜிதேந்திரியனும், ஸந்தோஷமுள்ள தம்பதிகளும் வெட்கம் முதலிய குணம் நிறைந்த பதிவிருதையிருக்குமிடமும், நீ போகத்தக்கதல்ல. காலை மாலைகளில் வாசற்படியை அலங்கரித்து பூஜிப்போரில்லத்தைக் கண்ணெடுத்தும் பார்க்காதே. தூங்கி எழுந்தவுடன் சூர்யன், தீபம், லக்ஷ்மி, சந்தனம் வீணை, மது, நெய், தாம்ப்ரபாத்ரம் முதலியவைகளைத் தர்சிப்பவர் மனைக்குச் செல்லாதே. முறத்தின் காற்று, குடத்தின் ஜலத்தால் ஸ்நானம்செய்தல், வஸ்த்ரஜலம், நகம்பட்ட ஜலம், இவை நீ வஸிப்பதற்கேற்ற இடமாகும் என்று ப்ரம்மா கூறினர்.

இந்த துஸ்ஸஹனுக்கு நிர்மார்ஷ்டி என்றோர் மனைவி உண்டு. அவளுக்கு ருது காலத்தில் சண்டாள தர்சனத்தால் எட்டு பிள்ளைகளும், எட்டு பெண்களும் உண்டானர்கள். தந்தாக்ருஷ்டி என்பவன் முதல் புதல்வன். அவன் மனிதர்கள் பல்லில் வஸித்து குழந்தைகளைப் பீடிக்கிருன். வெள்ளைக்கடுகை, ராக்ஷஸர்களைக் கொல்லும் மந்திரத்தால் ஜபித்து இறைத்தால் அவனது பீடை அகலும். உக்தி என்பவன் வாக்கில் தங்கி நின்று குழந்தைகளை ஹிம்ஸை செய்கிருன். நற்சொற்களாலும் பகவந் நாம கீர்த்தனத்தாலும் அவனை அகற்றலாம். பரிவர்த்தகன் என்பவன் கர்ப்பத்தையும் குழந்தையையும் மாற்றி விடுகிருன். வெள்ளைக் கடுகால் வெல்லத்தக்கவன் அவன். அங்கத்ருக் என்பவன் வாயுவைப்போல் சரீரத்தைப் பிடிப்பான். தர்ப்பங்களால் அவனை வெல்லலாம். சகுனி என்பவன் பக்ஷிகளிடம் தங்கி நமது கார்யத்தைக் கெடுப்பான். ஆரம்பித்த கார்யத்தை விடுவதே அதற்கு சாந்தியாம். கண்டப்ராந்தரதி என்பவன் கழுத்திலிருந்து ஹிம்ஸிப்பான். பிராமணர்களது வாக்காலும், தேவஸ்தோத்ரத்தாலும், கோமூத்ரத்தாலும், அதைச் சாந்தி செய்யலாம். கர்ப்பஹா என்பவன் கர்ப்பத்தைக்கெடுப்பவன். சிவ, ராம, கிருஷ்ண என்ற மந்திரங்களை எழுது

வதாலும் நல்ல புஷ்பத்தைத் தரிப்பதாலும், சௌசத்தி ஞலும் அவனை வெல்லலாம். ஸஸ்யஹா என்பவன் எட்டாவது புதல்வன். பயிர் பச்சைகளை அழிப்பவன். பழைய பாதரக்ஷையைப் பயிரினருகே தொங்கவிடுவதால் அவனை வெல்லலாம்.

நியோஜிகை என்கிற பெண் பரபுருஷரிடத்திலோ பர ஸ்திரீகளிடத்திலோ ஆசையை உண்டுபண்ணுவாள். நற்சாஸ்திர உபதேசத்திஞல் அவளை வெல்லலாம். விரோதினீ என்பவள் குடும்பத்தில் ஒருவர்க்கொருவர் விரோதத்தை உண்டு பண்ணுகிறவள். பொறுமையா லும் சாஸ்திராசார ஸேவையாலும் இவளை ஜயிக்கலாம். ஸ்வயம்ஹாரகரீ என்பவள் அன்னம் முதலியவைகளைக் கெடுப்பவள். ஹோமத்திஞல் இவள் பீடை அகலும். ப்ராம்மிணீ என்பவள் சித்தத்தைச் சஞ்சலப்படுத்துகிற வள். பூஸூக்த ஜபத்தாலும் வெள்ளைக்கடுகாலும் இவளை அடக்கலாம். ருதுஹாரிகா என்பவள் ருது மூல மாக பெண்களைக் கெடுப்பவள். நதிஸ்நாநத்திஞல் இதை அகற்றலாம். ஸ்மிருதிஹா என்பவள் நினைவை அகற்று கிறவள். ஏகாந்த இடத்தில் வீற்றிருந்து இதை வெல்ல லாம். பீஜஹாரிணீ என்பவள் பீஜத்திலிருந்து புருஷர் களைக் கெடுப்பவள். சுத்தான்னத்திஞலும் நதிஸ்நாநத்தி ஞலும் அதைப் போக்கலாம். த்வேஷிணீ என்பவள் எல்லோருக்கும் துவேஷமுண்டாகும்படியான கார்யத்தை செய்யத் தூண்டுகிறவள். மது பால் ஹோமத்தால் அதையும் அகற்றலாம். இங்ஙனம் துஸ்ஸஹனது ஸந் ததியான பதினறுபேரும் உலகிற்குப் பல வகையான ஹிம்ஸையைச் செய்கிறவர்கள். யமன், கழுகின் உருவை யும், காலன் காக்கையின் உருவையும், நிருருதி கோட் டான் உருவையும், வியாதி பெருங்கழுகின் உருவையும் எடுத்ததால், இவைகள் உட்கார்ந்த வீட்டில் வஸிக்க லாகாது.

## ஸ்வாயம்புவமநு.

தானே தோன்றியதால் ஸ்வயம்பூ என பிரம்மன் பெயர் பெற்ருன். அவரது அருளால் தோன்றிய 'பிரயவ்ரதர்' என்பவரே ஸ்வாயம்புவ மன்வந்தரத்திற் குக் காரணமானவர். இவருக்கு ஆக்னீத்ரர், மேதாதிதி,

வபுஷ்மான், ஜ்யோதிஷ்மான், த்யுதிமான், பவ்யன், ஸவனன். என ஏழு தநயர்கள் தோன்றினர். முறையே அவர்களுக்கு ஜம்பு, ப்லக்ஷ, சால்மலி, குச, க்ரௌஞ்ச, சாக, புஷ்கர என்ற ஏழுத்வீபங்களையும் பகுத்துக் கொடுத்தார். அங்கு பாரதவர்ஷம், கிம்புருஷ வர்ஷம் மேரு வர்ஷம், ரம்யக வர்ஷம், ஹரி வர்ஷம், ஹிரண்மய வர்ஷம், என்ற வர்ஷங்களைப்படைத்து அங்குள்ள மலை நதி அரண்யம் முதலியவைகளையும் பிரம்மா ஸ்ருஷ்டித்தார்.

## ஸ்வாரோசிஷமநு.

வருணை நதிக்கரையில் ஓர் அந்தணர் வஸித்து வந்தார். இவர் இல்லத்தை நாடி வந்த அதிதியை அர்ச்சித்து ஆஸனத்தில் அமர்த்தினர். அதிதி அடியேனல் ஆகத் தகுந்த கார்யம் ஏதேனுமுளதோ? என்றார். இப்பூமியைச்சுற்றி ஆங்காங்குள்ள விசேஷங்களைக்காணவேண்டுமென்பது எனது அவா. அந்த உபாயத்தை அடியேனுக்கு அருள் புரிய வேண்டுமென்றார். ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறேன், உள்ளங்காலில் ஓர் அஞ்ஜநத்தைப் பூசுகிறேன். விரைவில் நீ உலகெலாம் சுற்றி உனது ஊருக்குத் திரும்புவாய் என்றுகூறி அங்ஙனமேசெய்தார். பூஸுரன் பூலோகத்தை ப்ரதக்ஷிணம் செய்ய ஹிமாலயம் சென்றார். ஆங்குள்ள அழகைக்கண்டு வியந்து இரண்டு மூன்றுநாள் தங்கி பின்னர் மற்ற இடங்களுக்குச் செல்லலாமென எண்ணினர். கந்தர்வர்களது கானமும், அப்ஸரஸ்ஸுகளின் அழகும் இவருள்ளத்தைக் கொள்ளைக்கொண்டது. அங்கு பனியின்மீது அவர் காலை வைக்க ஆங்குள்ள அஞ்ஜனம் கறைந்தது. ஆங்கு வரூதினி எனும் அப்ஸரஸ் இவர் அழகைக்கண்டு மோஹித்தாள். உருண்டு திரண்டு ஒன்றாக உருவெடுத்து வந்த அழகேபோல் அவரெதிரில் அவள் தோன்றினள். மாதரசே! நீ யார்? இங்கு எனது பாதத்திலுள்ள ஸித்தாஞ்ஜனம் பனியால் கறைந்தது. வீடு செல்ல வகையறியாது விழிக்கிறேன். இன்று மாலைக்குள் இல்லமேகும் வகையைக் கூறுவாயாக என்றார். ஸுந்தரா! நீர்இங்கு தங்கி மானிடப் பிறவிக்குக் கிட்டாத மாபெரும் சுகம் பெறுவாயாக. என்றாள்.

பெண்மணீ! அந்தணனுகப் பிறந்த என்னுடல் இம்மைச் சுகத்தைப்பெறவோ தோன்றிற்று? இம்மையில் மிக துன்பமனுபவித்து மறுமையில் பேரின்பம் பெறுவதற்கல்லவா பெறற்கரிய இவ்வுடலைப்பெற்றேன். பரோபகார சிந்தைகொண்டு யான் வீட்டை அடையும் வகை கூருயோ? என்ருர். அவள் அவ்வந்தணரை மணம்புரிய நிர்ப்பந்தம் செய்தாள். அப்பூஸுரோத்தமன் தன்னையும் அறியாது தன் மனம் அவளிடம் செல்லுமோ? என்று அஞ்சினர். கார்ஹபத்யமெனும் அக்னியை வேண்டி, என்னுள்ளத்தே இருந்து பரஸ்திரீகளிடமும் பரத்ரவ்யத்தினிடமும் என் மனம் ஆசையில்லாமற் செய்ய வேண்டுமென்று த்யானம் செய்தார். அக்னி அவரை ஸூர்யமண்டலம்போல் பிரகாசமுள்ளவராகச் செய்தார். வரூதினி அவர் அருகே வரமுடியவில்லை. அவர் தன் இருப்பிடம் வந்து விதிப்படி கர்மா செய்து வந்தார்.

அக்கட்டழகியோ, அவரை நினைத்து நினைத்து உருகினள். கலியெனும் கந்தர்வன் இவளது அழகைக்கண்டு மயங்கி தன்னை மணக்கும்படி வேண்டினன். அவள் தன் மனதிற்கேற்ற மணாளனை வரித்தபடியால் வேறெவரையும் விரும்பேனென்ருள். அந்த கந்தர்வன் அவ்வந்தணன் உருவைத்தாங்கி அவள் எதிரே தோன்றி ப்ரியே! சிற்றின்பத்தில் ஈடுபடும் என்னை நீ கண்ணெடுத்துக்காணலாகாது என்ருர். அதற்கிசைந்த வரூதினி தனது மனோரதம் பூர்த்தியானதென மகிழ்ந்தாள். இங்ஙனம் இருவரும் கூடிக்குலவ அவளுக்கோர் கரு தோன்றி மிக ப்ரகாசமாக விளங்கியது. கந்தர்வன் இனி இங்கிருந்தால் தீங்குநேரும் என்று அவளிடம் விடைபெற்று சென்ருன். தேஜோராசி போல் விளங்கும் அக்கர்ப்பம் பத்துமாதம் தாயின் குக்ஷியில் வளர்ந்து வெளி வந்ததும் அதன் உருவுக்கேற்றபடி ஸ்வாரோசிஸ் என்று பெயரிட்டார்கள். ஸகல கலைகளிலும் தேர்ச்சி பெற்றனவன்.

இவன் ஒரு ஸமயம் மந்தர மலைச்சாரலில் "அபயம் அபயமென" அலரும் குரலைக்கேட்டு அங்கு ஓடினன். அஞ்சேல்! அஞ்சேல்! நீ யார்? உன்னைப் பயமுறுத்தியவன் யாவன்? என ஸ்வாரோசிஸ் வினவ, இந்திவர!

வித்யாதரன் புத்ரி யான். மனோரமை என பெயர். விபாவரீ கலாவதி எனும் இரு தோழிகளுடன் தவத்தால் இளைத்து மெலிந்த முனிவரைக்கண்டேன். யான் அந்த மில்லா அந்தணரைக்கண்டு எள்ளி நகைத்தேன். முனிவர், பெண்ணே! உன்னை ஓர் ராக்ஷஸன் ஹிம்ஸிக்கக் கடவன் என்றும் நீங்கள் குஷ்டரோகத்திற்குள்ளாவீர்கள் என தோழிகளையும் சபித்தார். சொல்லொணுத் துன்பம் அனுபவிக்கிறோம். அஸ்திரசஸ்திர மந்திரங்களை உமக்கு ஓதுகிறேன். அவனைவென்று ரக்ஷியும் என்று மனோரமை வேண்டினுள். இதனிடையில் அவ்வரக்கனோடிவந்து அவளைப் பக்ஷிக்க ஆரம்பித்தான். அரசன் அம்பை அவன்மேல் விட, அவன் ராக்ஷஸ உடலைவிட்டு திவ்ய சரீரம்பெற்று இவரைப்பணிந்துப்போற்றினுன். ஐயனே! உமது அருளால் என் சாபமகன்றது. இந்திவராக்ஷன் என்ற கந்தர்வன் யான். இவள் எனது மகளே ஆவள். ப்ரம்மமித்ரனென்ற மஹர்ஷி ஆயுர்வேதத்தின் கரைகண்டவர். அவரை அணுகி எனக்கு வித்யையைக் கற்பிக்கும்படி வேண்டினேன். அவர் முடியாதென மறுத்தார். மற்ற சிஷ்யர்களுக்கு அவ்வேதத்தைக் கற்பிக்கும் போது யான் மறைந்திருந்து ஆறுமாத காலத்திற்குள் அகில வித்யையையும் கற்றுணர்ந்தேன். அக்கல்வி பூர்த்தியானபொழுது அவரை ஏமாற்றினேனென இறுமாந்து நகைத்தேன். முனிவர் ராக்ஷஸனுவாய் என சபித்தார்.

அவரைப் பணிந்து குற்றத்தை மன்னித்தருள வேண்டினேன். சாந்தமான அவர் எனது சொல் வீணுகாது! சிறிதுகாலம் அரக்கனுகி உன் மகளையே புஜிக்க ஆரம்பிப்பாய். அச்சமயம் ஓர் அரசனல் சாபமகலு மென்முர். உம்மால் என் மகளும் ஆபத்திலிருந்து விடுபட்டாள். நானும் சுத்தனுனேன். ஆதலால் உமக்கு இப் பெண்ணையும் ஆயுர்வேதத்தையும் தருகிறேனென அளித்தான்.ஸ்வாரோசிஸ் மனைவியுடன் விபாவரீ என்ற இவளது தோழியைக் கண்டார். தான் பெற்ற ஆயுர்வேத மஹிமையால் அவள் குஷ்டத்தை அகற்றினுர். விபாவரி என்ற அவள் தோழியின் குஷ்டத்தை நீக்கி ஸ்வாரோசிஸ் அவளையும் ஏற்று இரு மனைவிகளுடன் பூஸஞ்சாரம்

செய்தார். மனைவியின் மற்றொரு தோழியான கலாவதியைக்கண்டார். அவளது நோயையும் அகற்றினார். கலாவதி தன்னையும் மணக்கும்படி வேண்டி தான் யார் எனக்கூறினாள்.

பாரன் என்ற ரிஷி புஞ்ஜிகஸ்தலையிடம் என்னைப் பெற்றார். சந்திரகலையை ஊட்டி தந்தை என்னை வளர்த்தார். கலாவதி என்ற என்னை ஓர் அரக்கன் என் தந்தையருகே வந்து தனக்குத் தரும்படி வேண்டினான். அவர் மறுக்கவே ராக்ஷஸன், அவரைக்கொன்றான். நான் உயிரை மாய்த்துக்கொள்ள ஆரம்பித்தேன். அம்பிகை என்னைத்தடுத்து ஸ்வாரோசிஸ் உன்னை மணப்பான் என்று கூறி மறைந்தாள். ஆதலின் ஏனையோருடன் என்னையும் ஏற்றருள்வீராக என்றுரைத்தாள்.

அப்படியே அவர் இவளையும் ஏற்று மூவருடன் ஆங்காங்கு சென்று ரமித்துக்கொண்டிருந்தார். ஒரு ஸமயம் தடாகத்தில் இவர்கள் ஜலக்ரீடை செய்யும்போது ஆங்குள்ள ஹம்ஸி, ஹம்ஸனைப் பார்த்து, நாதா! புருஷன் ஒரே மனைவியை மணந்து ரமிப்பதன்றோ நியாயம்? இவ்வரசனைப்போல் பல மனைவிகளில்லாமல் என் ஒருவளிடமே அன்பு பூண்டதால் நாம் இருவருமே பாக்யசாலி என்று கூறியது. இதைக்கேட்ட ஸ்வரோசிஸ் தலைகுனிந்து வெட்கத்துடன் வேறிடம் சென்றான். ஆங்கு ஓர் மான், நான் வெட்கமற்ற ஸ்வாரோசிஸ் அல்ல. பல மனைவிகளை யான் ஏற்கமாட்டேன். ஒரே மனைவியான உன்னைவிட வேறெதுவும் எனக்கு விருப்பமானதல்ல என்று தன் மனைவியிடம் கூறிற்று. ஸகல ப்ராணிகளது பேச்சையுமறிந்த ஸ்வாரோசிஸ்ஸுக்கு இம்மானினது சொல் மனதை யறுத்தது.

சிறிதுகாலம் சென்றபின் மனோரமை விஜயனையும், விபாபரீ மேருநந்தனையும், கலாவதி பிரபாவனையும் பெற்றெடுத்தாள். தந்தை மூன்று மைந்தர்களுக்கும் தனித்தனியாக மூன்று ராஜ்யத்தை அளித்து தான் ஒரு ஸமயம் வேட்டையாட வனம் சென்றான். அங்கு ஓர் பன்றியை அடிக்கும்போது மான் ஒன்று விரைவாக ஓடிவந்து

அரசே! துன்பக்கடலில் அமிழ்ந்த என்னை முதலில் கொல்லும் என்றது. அரசன் மானைப்பார்த்து உனக்கு என்ன துன்பம்? என்று வினவ? புருஷன் என்னைக் கண்ணெடுத்தும் காணாது மற்ற மனைவிகளோடு கூடிக்குலவுகிறான். குலமகளுக்கு இதைவிடத்துன்பம் வேறுளதோ? என்றது.

அரசன் உன் பதி யார்? என்று கேட்க, நீயே! என்று மானுரைக்க, விந்தைகொண்ட வேந்தன் மிருகத்தை மனிதன் மணப்பதுண்டா? என்றான். மான் நீர் என்னை ஆலிங்கனம் செய்து பின் உண்மையை அறிவீர் என்றது. அரசன் அங்ஙனமே செய்ய, மானுடல் மறைந்து மாதரசி தோன்றினாள். அவள் ஐயனே யான் வனதேவதை. உம்மை மணந்து ஓர் புதல்வனைப் பெற வேண்டுமென்பது தேவர்களது விருப்பம் என்று கூறினாள். அரசன் அவளை ஏற்று த்யுதிமன் எனும் புத்ரனைப் பெற்றான். இங்ஙனம் ஸ்வாரோசிஸ் மனைவிகளுடனும் மக்களுடனும் கூடிக்குலவ ஓர் ஹம்ஸி பதியை, ஸ்வாரோசிஷனைப்போல் மக்களைப் பெற்றும் போகத்தில் உமக்கு ஏன் இன்னும் ஆசை அகலவில்லை? என்றது. இதைக்கேட்டு வெட்கம்கொண்ட அரசன் தனயனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்து தான் தவம் புரிய வனம்சென்றான். இவர்களது காலமே ஸ்வாரோசிஷ மன்வந்தரம் எனப்படும்.

## ஔத்தம மந்வந்தரம்.

உத்தானபாதனது புத்ரனான உத்தமன் பஹுலை எனும் மனைவியிடம் பேரவா கொண்டவன். அவளில்லாது எக்காரியத்தையும் செய்யத் துணியான். அவள் இவனிடம் கௌரவம் வைக்காமல் அலக்ஷியம் செய்து வந்தாள். ஒரு ஸமயம் பலர் கூடியுள்ள ஸபையில் அரசன் அன்புடன் மனைவியை அழைத்து மதுவையளித்து அருந்து என்றான். அவள் அலக்ஷியமாக அதை மறுத்துவிட்டாள். கோபங்கொண்ட அரசன் அவளை மனித ஸஞ்சாரமில்லாத அரண்யத்தில் கொண்டு விட்டு விட்டான். பலகாலம் சென்றபின் அவ்வரசனின் அரண்மனையையடுத்து, அந்தணனொருவன், அரசே! என் மனைவியை

இரவில் எவரோ எடுத்துச் சென்றனர். அவள் இருப்பிடத்தைத் தேடி என்னிடமளிப்பது உமது கடமையாகும் என்றான். இதைக் கேட்ட பூபதி, பிரம்மன்! உமது மனைவியை யான் கண்டறியேன். அவள் எத்தகையவளெனக் கூறினால் அவளைத் தேடிப் பிடிப்பது ஸுலபமாகும் என்றான்.

அந்தணன் அரசனைப் பார்த்து, அவள் க்ரூரமான கண்ணுடையவள். ஒருகை நீளமாகவும் ஒருகை குட்டையாகவுமிருக்கும். முகம் சிறுத்தும் உடல் பெருத்துமிருப்பாள் என்றார். ஸ்வாமின்! ஸுந்தரவடிவமான நீர் அந்தமில்லா அம்மாதை விட்டு வேறொரு ஸுந்தரியை மணக்கலாகாதா? என்று வேந்தன் வினவினான். மஹாராஜ! போகத்தை மோக்ஷமாகக் கருதியவருக்கு உமது சொல் ருசியாகும். தர்மத்தில் நாட்டமுள்ளவர் இங்ஙனம் செய்யலாகுமோ? என்று கூறி வேறொன்றும் கூறாது என் மனைவியைத் தேடித்தாரும் என்றான்.

அரசன் அங்ஙனமே ரதத்தின் மீதேறி பூமியெல்லாம் சுற்றி அவளைக் காணாது ஓர் தபோவனம் சென்றான். ஆங்குள்ள சிஷ்யன் அரசனுக்கு நல்வரவு கூறி, ஆசார்யனிடம் அழைத்துச்சென்று குரோ! இவன் ஏற்றவனாயின் அர்க்யத்தை அளிக்கிறேன் என்றான். ஆசார்யன் சற்று ஆலோசித்துப் பார்த்து அர்க்யமளிக்காது அரசனைக் குசலம் விசாரித்தார். தனக்களிக்க ஆரம்பித்த அர்க்யத்தைக் கொடாமல் நிறுத்திய காரணம் யாதென வேந்தன் வினவ, முக்கால முணர்ந்த முனிவர், நீ பத்னியை த்யாகம் செய்தவனாதலின் அர்க்யம் கொடாது நிறுத்தினேன் என்றார். அரசன், அந்தணனது மனைவி எங்கு சென்றனள் என ஞானதிருஷ்டியால் கண்டு கூறும்படி வேண்டினான். அத்ரி எனும் ராக்ஷஸனது புதல்வனான பலாகன் என்ற அஸுரன் அவளை வனத்தில் வைத்திருக்கிறானென்று கூற, அரசன் அங்கு சென்று அந்தண ஸ்திரீயைக் கண்டு அவளே தான் தேடியவளென அறிந்தான். அவ்வரக்கன் எங்கிருக்கிறான் என அறிந்து அவனருகே சென்றான். அவனும் அரசனை வரவேற்று அர்க்யபாத்யமளித்ததைக் கண்டு வியந்து வேந்தன், நீ ஏன் பூஸுரனது மனைவியைக் கொண்டு வந்தாய்? என்று வினவினான். அவன், அரசே!

மிக அழகான என் மனைவிகளிருக்க அந்தமிலா மாதை போகத்திற்காகக் கொண்டுவரவில்லை. நான் நரமாம்ஸம் புஜிப்பவனுமல்ல.

ஆனால் கல்வியிற் சிறந்த அவ்வந்தணோத்தமன் செல்லும் யாகங்களில் குற்றமற அவன் வேள்வியை நடத்தி வைப்பதால் எனக்கு மட்டுமே யல்லாது எனது இனத்தைச் சார்ந்த அஸுரர்களுக்கே அங்கு பங்கில்லாமல் போகிறது. மனைவியின்றி செய்யும் தர்மம் பயன்படாதாதலால் அங்கு சென்று அஸுரர்கள் ஆனந்திக்கின்றனர் என்றான்.

அன்றியும், அரசனே! உமது விருப்பப்படி இவளை யான் அவள் பதியினிடம் அனுப்புகிறேன். எனக்கேற்ற உணவளிப்பது தங்கள் கடமை என்றான். அரசன் இவளிடமுள்ள துராசாரத்தை ஏற்று இவளை விடு என்றார். அங்ஙனமே அரக்கன் செய்ய, அம்மாது நற்புத்தி கொண்டு நான் முற்பிறவியில் செய்த பயனை இப்பொழுது அனுபவித்தேன் என்றாள். இவளைக்கண்டு புருஷன் ஆனந்தமடைந்து அரசனைப் போற்றினான்.

அரசே! உமது பத்னி, கபோதனென்ற நாகராஜனால் பாதாளம் கொண்டு செல்லப்பட்டாள். அவன் மனைவி மனோரமையும், பெண் நாந்தையும் அவளது கற்பைக் காக்க ஏகாந்த இடத்தில் மறைத்து வைத்தனர். நாகன் அவளை அளிக்கும்படி பலமுறை வேண்டியும் நாந்தை பிடிவாதமாக அனுப்ப மறுத்தாள். ஆதலின் கோபங்கொண்ட தந்தை, பெண்ணை ஊமையாகும்படிச் சபித்தான் என்று மஹர்ஷி கூற, அரசன் மஹர்ஷே! எனக்கு மனைவி ப்ரதிகூலமாக இருப்பதேன்? என்று வினவினார். மஹர்ஷி, க்ஞானதிருஷ்டியால் இதை அறிந்து உனது விவாஹத்தில் கிரஹங்கள் ஸரியாக இல்லாததால் இங்ஙனம் நேர்ந்ததெனக் கூறினார். இதைக் கேட்ட அரசன் தனது விதியை நொந்து தன் நகரமடைந்து இழந்த பத்னியைப் பெற்ற பூஸுரரைத் தர்சித்தான். அவ்வேதியனும் பேருபகாரம் புரிந்த மன்னனுக்கு ப்ரத்யுபகாரம் செய்வதே சிறந்த தர்மமென்று எண்ணினான்.

இருவருக்கும் ப்ரீதி உண்டாகும்படி மைத்ரீ எனும் இஷ்டியை ஏழுமுறை செய்துவைத்து, ராஜன்! இனி உமது பத்னி அநுகூலமாயிருப்பள் என்ருர். அரசன் நண்பனுன ராக்ஷஸன் மூலமாக பாதாளத்தில் நாகபுதல்வியான நாந்தையினிடமுள்ள தனது மனேவியை அழைத்து வந்தான். ராஜபத்னி, கணவனேப் பணிந்து, தனது கற்பைக்காத்து தந்தையின் சாபத்திற்கு ஆளான நாந்தையின் சாபத்தை யகற்ற வேண்டினுள். அந்த பிராமணேத்தமர் அவள் விருப்பிற் கிணங்கி ஸரஸ்வதியை நாடி ஓர் இஷ்டி செய்தார். அவள் அருளால் நாந்தை நாவு பெற்று மன்னன் மனேவியைப் போற்றினுள். நாந்தை, வேந்தே! வேண்டிய வரத்தைப் பெற்றுக்கொள்வாயாக! என்று கூற மன்னன், மன்வந்தர கர்த்தாவான மகனே வேண்டினுன். ஔத்தமன் என்ற அக்குழந்தையால் மூன்ருவது மன்வந்தரம் தோன்றிற்று.

## தாமஸ மந்வந்தரம்.

ஸ்வராஷ்ட்ரனென்ற அரசன் சூர்யனே உபாஸித்து நீண்ட ஆயுளேப் பெற்ருன். அவனது மனேவிகள் அற்ப ஆயுளாக இறப்பதால் பல மனேவிகளே மணந்தான். எல்லோரும் தன்னெதிரில் இறக்க, மன்னன் வருந்தினுன். விமர்த்தன் எனும் அரசன் இதே ஸமயமென இவனது ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டான். ஸ்வராஷ்ட்ரனும், தபோவனம் சென்ருன். மனேவிகளேயும், நாட்டையும் இழந்ததால் அவனுக்கு வைராக்யமுண்டாயிற்று. பஞ்சாக்னி மத்தியிலும், ஜலத்திலும் நின்று தவம் புரிந்தான். ஒரு ஸமயம் ப்ரவாஹம் பெருகி இவனே அடித்துச் சென்றது. எங்கும் கரை தட்டாமல் பிரவாஹம் இழுத்துச் செல்ல இருண்ட ஓரிடத்தே நின்ற அரசனது கைக்கு ஓர் மான் வால் அகப்பட்டது. அதைப்பிடித்துக் கொண்டே இன்னும் இருண்ட இடம் சென்ருன்.

பிரவாஹம் தணிய மான், அரசே! மனிதரான நீர் மிருகமான என்னே இச்சிப்பது தர்மமோ? லோலனுன என் குழந்தை இடமளிக்காதிருக்க நீர் எங்ஙனமென்னே அடைவது? என்றது. அரசன் நீ யார்? லோலன் யார்? என்று வினவ, மான் கூறியது. நரேந்திர! நான்

உமது உத்பலாவதி எனும் முதல் மனைவி. யான் இளமையில் பெண்மானோடுக் குலவும் ஓர் ஆண் மானை அடித்தேன். அது, பெண்ணே! ஸுபதன் என்ற முனிவன் யான். பெண் மானின் பேரழகைக் கண்டு மானுருவம் தாங்கி இத்துடன் ரமிக்கிறேன். என்னை நீ மணப்பதானல் உன்னைச் சபிக்காமல் விடுவேன் என்றார். அதைக் கேட்டு மான் அல்ல நான் தங்களை மணக்க, என்றேன். அவர் நீ மானாகவே ஆவாய் என்று சபித்தார். க்ஷமிக்கும்படி வேண்ட, உன் கணவனை நீ தொடும்பொழுது உனக்கு கர்ப்பமும், முன் பிறவி அறிவும் பெண்ணுடலும் உண்டாகும். உன் குழந்தை சத்ருவை ஜயித்து ராஜ்யத்தை ஆள்வான் என ஆசீர்வதித்தார் என்று அவள் கூறினாள். இருட்டில் பிறந்த இக்குழந்தைக்கு மஹர்ஷிகள் தாமஸன் எனப் பெயர் வைத்தார்கள். தந்தையைப்போல் அவனும், ஸூர்யனை உபாஸித்து அவரிடமிருந்து அஸ்த்ர சஸ்திரங்களைப் பெற்றான். தக்க வயது வந்தவுடன் தந்தையின் சத்ருவை வென்று தரணியை ஆண்டு வந்தான். அவனே தாமஸ மன்வந்தரத்திற்குக் காரணமானவன்.

## ரைவத மந்வந்தரம்.

ரிதவாக் என்ற மாமுனி புத்ரபாக்யமின்றி வருந்தினார். ஈசனருளால் அவருக்கு ஓர் குழந்தை பிறந்தது. அவருடலில் பெரு வியாதிதோன்றி பெரும் துன்பத்தை விளைவித்தது. அபூர்வமாகத்தோன்றிய புதல்வனும் அவருக்கு அதிக துக்கத்தை விளைவித்தான். அவர் ஆசாரத்திற்கும் அனுஷ்டானத்திற்கும் நேர் விரோதமாக அவர் புத்ரன் பிறர் மனைவியைக் கெடுப்பது முதலிய பற்பல பாபங்களைச் செய்தான். கர்காசார்யரை அர்ச்சித்து எனக்கு இத்தகைய புதல்வன் தோன்றக் காரணம் யாதென வினவினார். கர்க்கர் இது ஜனிக்கும்போது ரேவதியின் நான்காம்பாதமாதலின் துராசார முள்ளவனாக இருக்கிறான் என்றார். ரிதவாக் அருமையான பிள்ளையை நாசம் செய்த நீ, கீழே விழக்கடவாய் என ரேவதியைச் சபித்தார். அவளது ஒளியிலிருந்து ஓரழகிய கன்னிகைத்தோன்றினாள். ப்ரமுசி என்ற முனிவர் அதை எடுத்து ரேவதி என்று நாமம் சூட்டி வளர்த்தார். முனிவர்

அவளுக்கேற்ற பதியைத்தேட அவனியெலாம் திரிந்தார். எங்கும் இவளுக்கு ஏற்ற பதி கிடைக்காததால் அக்னி சாலைக்குச் சென்று அவரை ரேவதிக்கு ஏற்ற பதி யார்? என்று வினவினர்.

க்ரமசீலனுக்குக் காளிந்தியினிடம் உதித்த துர்க்கமன் உன் கன்னிகையின் பதி ஆவான் என்று அக்னி கூறினர். இதனிடையில் துர்க்கமஹாராஜன் ப்ரமுசியின் ஆச்ரமம் வந்து ரேவதியைப் பார்த்து, ப்ரியே! முனிவரெங்கே? என்ருன். இதைக் கேட்டுக்கொண்டே வந்த முனிவர் அரசனை அர்ச்சித்து, உனது ராஜ்யமும் உன் மனைவியும் குசலமா? என்று விசாரித்தார். பல மனைவிகளில் எவளை விசாரிக்கிறீர்? என்ருனரசன். எவளை நீர் சற்று முன் ப்ரியே! என அழைத்தீரோ? அம்மனைவியையே வின வினேன் என்ருர் ப்ரமுசி.

உடனே துர்க்கமன், மஹர்ஷே! மனதில் ஒன்றும் எண்ணாது ப்ரியே! என்றது குற்றமோ? என்ருன். அக்னி ஆணையைக்கூறி விதிப்படி விவாஹத்தைச் செய்து வைக்க ரிஷி ஆரம்பித்தார். ரேவதியோ தனக்கு, ரேவதீ நக்ஷத்திரத்திலேயே விவாஹம் செய்ய வேண்டுமென பிதாவை ப்ரார்த்தித்தாள். ப்ரமுசி, பெண்ணே! ரிதவாக் கின் சாபத்தினுல் கீழே தள்ளப்பட்ட அந்நக்ஷத்திரம் சிலாக்யமானதல்ல என்ருர். ரேவதி, உமது மஹிமை யால் அவள் ஏன் தந்நிலையைப் பெறலாகா தென்ருள். அங்ஙனமே ப்ரமுசி ரேவதியை முன்போல் அவள் இருப் பிடத்தில் அமைக்க பிறகு ரேவதியிலேயே மணம் முடிந் தது. ரேவதியும் துர்க்கமனும் முனிவரைப்பணியும் போது மன்வந்தர கர்த்தாவான புதல்வன் உண்டாகட்டும் என்ருர். ரேவதியின் புத்ரனைக்கொண்டு ரைவத மந்வந் தரம் உண்டாயிற்று.

## சாக்ஷுஷ மந்வந்தரம்.

அநமித்ரனென்ற அரசன் மனைவி பத்ரா. அவள் தனது குழந்தையை மடியில் வைத்து லாலனை செய்யும் போது பூர்வஜன்மாவை அறிந்த அக்குழவி, களுக்கென சிரித்தது. அன்னை நகைக்கும் காரணம் என்ன? என்ருள். அக்குழவி பிறந்து ஏழு எட்டு நாளில் என்னிடம் ஆசை

கொண்டு தாலாட்டுகிருய்! அருகில் மறைந்து நிற்கும் மார்ஜாரி, ஜாதஹாரிணி என்ற இரு பூதங்கள் என்னைக் கொண்டு செல்லக் காத்திருப்பதை அறியவில்லையே என நகைத்தேன் என்றது. ஜாதஹாரிணி அக்குழந்தையைத் தூக்கி விக்ராந்த அரசனுடைய வீட்டில் விட்டு ஆங்குள்ள ஹைமினியின் குழந்தையை ஓர் அந்தணன் வீட்டில் கொண்டு விட்டு, ஆங்குள்ள குழந்தையைக் கொன்று தின்றது. விக்ராந்தன் என்ற வேந்தன் தனது மைந்தனுக்கு ஆனந்தன் எனப்பெயரிட்டு உபநயமும் செய்தான். குரு, ஆனந்தனை அவன் தாயை நமஸ்கரித்து வரும்படி சொன்னர். ஆனந்தனே குரோ! யான், பெற்ற தாயைப் பணிவதா? வளர்த்த தாயையா என்று வினவ, குரு ஆச்சர்யத்துடன் விஷயத்தைக் கூறுவாய் என்றுர். அநமித்ரனுக்கு பத்ரையினிடம் தோன்றிய என்னை ஜாதஹாரிணி இங்கு கொண்டுவிட்டு இங்கு உண்டான குழந்தையை போதனெனும் பிராமணன் வீட்டில் வைத்து அவர் குழந்தையைத் தின்று சென்றது. இவ்வீட்டுக் குழந்தை போதனது மனைவியால் வளர்க்கப்படுகிருன். அவனை அழைத்து வைத்துக்கொள்ளுங்கள். நான் தவம் செய்யச் செல்கிறேன் என்றுன்.

விக்ராந்த ராஜன் சைத்ரனெனும் தன் குழந்தையை அழைத்து வந்து யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்தான். புத்ரனை இழந்த போதரைப் போஷித்தான். ஆனந்தன் முக்திபெற தவம் செய்ய பிரும்மா ஞான சக்ஷுஸ்ஸைப் பெற்றுள்ளதால் சாக்ஷுஷன் என உனது பெயர். நீ சாக்ஷுஷ மந்வந்தரத்திற்குக் காரணமாவாய் என்றுர்.

## வைவஸ்வத மந்வந்தரம்.

ஸூர்யன் ஸம்க்ஞையை மணந்து மனு எனும் ஒரு குழந்தையைப் பெற்றுன். இவரே இந்த வைவஸ்வத மந்வந்தரத்திற்குக் காரணமானவர். ஸவிதா, ஸம்க்ஞையை உன்னை ஆவலோடு நோக்கும்போது நீ கண்ணை மூடிக் கொண்டதால் (நேத்ர ஸம்யமம் செய்வதால்) மக்களை ஸம்யமனம் செய்யும் யமனைப் பெறுவாய் என்றுர். இரண்டாம் முறையும் கண்ணைச் சஞ்சலமாக்கி பார்த்ததால் ஓடும் நதியைப் பெண்ணுகப் பெறுவாய் என்றுர்.

அவளுக்கு யமனும் யமுனையும் பிறந்தனர். இந்த ஸூர்ய னது முதல் புதல்வனான வைவஸ்வதமனுவே இவ்வேழா வது மன்வந்தர கர்த்தா. இவரது இரண்டாம் புத்ரரான ஸாவர்ணி எட்டாவது மன்வந்தர கர்த்தா.

## தேவீ மாகாத்மியம்.

ஸ்வாரோசிஷ மனுவின் வம்சத்தில் 'ஸுரதன்' என் றோர் அரசன் தோன்றினன். இவனது சத்ருக்கள் திடீ ரென்று தோன்றி போருக்கழைத்தனர். இவன் யுத்தத் திற்குத் தயாராகயிராததால் புறங்காட்டியோட நேர்ந் தது. தன் செல்வம், மந்திரி முதலியவர்களால் கவரப் பட்டது. தபோவனஞ் சென்று 'ஸுமேதஸ்' என்ற ரிஷியுடன் தங்கினன். துக்கியான ஸமாதி எனும் வைசிய னைக் கண்டான். 'உனது துன்பத்திற்குக் காரணம் யாதென' அரசன் வினவ, பொன்னாசை கொண்ட தன் மனைவி மக்கள் பேராசையால், தன்னிடமுள்ள தனத்தைப் பிடுங்கிக்கொண்டு தன்னை விரட்டியதாகக்கூறி, அவர்களை நினைத்து வருந்துகிறேன் என்றான். இதனிடையே 'ஸுமே தஸ்' அங்குவர, இருவரும் அவரடிபணிந்து, 'எங்களிரு வருக்கு மட்டுமல்ல! உலகிற்கே தோன்றிய மோகம் எங் கிருந்து பிறந்தது? எத்தகையது? எதனால் அகலும்? என கூறுங்களென்று வேண்டினார்கள். மஹர்ஷி மாயா தேவியை மனதால் பணிந்து, இவ் விருவர்களுக்கும் மாயையின் மஹிமையைக் கூற ஆரம்பித்தார்:—

மாயை, இன்று நேற்று தோன்றியதல்ல. பண்டிதர் களையும் மயங்கும்படிச் செய்யும் மாயை அனாதியானது. துஷ்டர்களைச் சிக்ஷிக்கப் பல உருவமெடுப்பாள். அவளே யோக நித்ரை. உலகைப் படைக்கக் கருதி பரமன் தனது நாபியிலிருந்து சதுர்முகனைத் தோற்றி வைத்தான். தேவீ பாகவதத்திலும் இதைக்காணலாம். நாராயணனது காதுக் குரும்பியிலிருந்து மது கைடபன் என, இரு ராக்ஷஸர்கள் தோன்றி, பிரம்மனைப் புஜிக்க ஆரம்பித்தனர். இவர் களைக்கண்டு நடுங்கிய சதுர்முகன், பரமனைச்சரணமடைந் தார். அவர் நித்திரையிலீடுபட்டிருந்ததால், மாயாதேவி அவரை யெழுப்ப அவரது கண், வாய், நாஸிகை, ஹ்ருத யம், மார்பு முதலிய இடங்களை விட்டு வெளிக்கிளப்பி னாள். சக்தி வடிவமான தேவி, வெளிச் சென்றவுடன்

நித்ரை தெளிந்த விஷ்ணு சங்க சக்ர கதாபாணியாக அவர்களுடன் ஐயாயிரமாண்டு போர்புரிந்தார். எவரும் ஜய அபஜயம் பெறவில்லை. இவர் வீர்யத்தைக் கண்டு மெச்சிய அரக்கர்கள் உமக்கு வேண்டிய வரத்தைக் கேளு மென்றூர்கள்.

மாதவர், என் கையால் நீங்கள் இறக்கவேண்டும் என்றூர். ராக்ஷஸர்கள், அவரை வஞ்சிக்க எண்ணி பூமியில் எங்களைக் கொல்லும்; என்றூர்கள். மஹாவிஷ்ணு மாயா சக்தியினுல் தன் துடையை பூமியாக்கி இவர்களைக் கொன்றூர்.

## மஹிஷாஸுர மர்த்தனி.

மஹிஷாஸுரன் எண்ணிறந்த வரங்களைப் பெற்று தேவர்களை ஹிம்ஸித்து வந்தான். இந்திர பதவியையும், அஷ்டதிக் பாலகர் ஸ்தானத்தையும் அபஹரித்து எங்கும் ராக்ஷஸ ஆக்ஷியை அமைத்தான். தேவர்கள் பிரம்மாவுடன் ஹரிஹரர்களைச் சரண மடைந்தனர். இம்மூர்த்திகளது முகங்களிலிருந்தும் தேவர்களுடைய முகங்களிலிருந்தும் தோன்றிய கோபக்கனல் ஒன்றுகச் சேர்ந்து பெண்ணுருவாக அமைந்தது. ஒவ்வொரு அவயவத்திலும் தேவர்கள் அமர்ந்து தமது ஆயுதங்களையும் தந்தனர். தேவி உலகெலாம் நடுங்கும்படி அட்டஹாஸம் செய்தாள். இதைக் கேட்டுத் திடுக்கிட்டு பலர், ப்ரக்ஞையற்று விழுந்தனர். மஹிஷாஸுரனும், கர்ஜிக்கும் துவனியைக்கேட்டு தேவியிடம் ஸேனைபதியான சிக்ஷுரனை அனுப்பினுன். அவன் அபரிமிதமான ஸேனையுடன் மஹாஹனு, உக்ர தர்சனன், பிடாலன், காலன் முதலிய வீரர்களுடன் ரண களஞ் சென்றுன்.

ஆங்கு தேவி அனுயாஸமாக அஸுரப் படைகளைச் சூலாயுதத்தால் கொன்று குவித்தாள். அடங்காக்கோபங் கொண்ட சிக்ஷுரன், தேவியைச் சரவர்ஷத்தினுல் மறைத்தான். அரை க்ஷணத்தில் தேவி அச் சரங்களை உதறித் தள்ளி அவன் குதிரையைக் கொன்று தேரை முறித்து ஸாரதியையும் நாசம் செய்தாள். அடங்காக் கோபங் கொண்டு சிக்ஷுரன் தேவியின் ஸிம்மத்தை அடித்துத் தேவியின் கையை வெட்டவந்தான். அக் கத்தி முறிந்ததே

தவிர தேவியிடம் காயம் தோன்றவில்லை. தேவி சூலத்தால் அவன் சூலத்தை முறித்து அவனையும் கொன்றாள். சாமரன் எனும் வீரன் சக்தியை அம்பிகை மீதுவிட ஹுங்காரத்தால் அவள் அதை அழித்தாள். தேவியின் ஸிம்மம் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சாமரனைக் கொன்றது.

பாஷ்கலன், தாம்ரன், அந்தகன், உக்ராஸ்யன், உக்ர வீர்யன், மஹாஹநு, பிடாலாஸ்யன் முதலிய வீரர்கள் தேவியினிடம் போர்புரிந்து இறந்தனர். மஹிஷாஸுரன் தனது கொம்புகளாலும், கால்களாலும், வாலாலும் தேவியின் ஸேனையை அழித்தான். அம்பிகை எருமையான அவ்வஸுரனைப் பாசம்கொண்டு கட்டினாள். உடனே அவன் ஸிம்மமாகிப் போர்புரிந்தான். தேவி சூலத்தால் அதைத் தாக்க, அவன் மநிதனாகத் தோன்றினான். அம்பினால் அம்பிகை அவனை யடிக்க யானையாகி துதிக்கையால் தேவி ஸிம்மத்தை இழுத்தான். வாளால் தேவி கையை அறுக்க, மறுபடியும் அவன் மஹிஷனாகி யுத்தம் செய்தான். தேவி வீரபானம் செய்து அட்டஹாஸம் செய்தாள். பின்னங்கால்களால் உதைக்க மஹிஷன் வர தேவி கத்தியால் அவன் கழுத்தை வெட்டினாள். அரக்கனது மரணத்தைக் கண்டு மகிழ்ச்சி கொண்ட தேவர்கள் மஹிஷாஸுர மர்த்தினியை மந்தார மலர்மாரிப் பொழிந்துப் போற்றினர். ஸகல தேவர்களும் துதிக்க கருணையுள்ள தேவி யாது வரம் வேண்டுமென்றாள். அவ்வப்போது தோன்றும் அரக்கர்களை அழித்து அபயம் அளிக்கவேண்டுமென்று அமரர் பிரார்த்திக்க, அங்ஙனமே ஆகட்டுமென்று, அம்பிகை மறைந்தாள்.

## தூம்ரலோசன வதம்.

சும்ப நிசும்பர் என்ற அரக்கர்கள் தவம்செய்து வரம் பெற்று, ஸகல தேவர்களையும் வென்றனர். இந்திரன் அதிகாரத்தையும், சந்திர ஸூர்யர்கள் ஸ்தானத்தையும் பிடுங்கித் தாங்களே அவ்வேலை செய்துவந்தனர். அமரர்களைத் துன்புறுத்தினர். ஒன்றுகூடி தேவர் அம்பிகையைத் துதித்தனர். கங்காஸ்நாநம் செய்யச் சென்ற

பார்வதி உங்களது இஷ்டத்தைப் பூர்த்திசெய்யும் சக்தி இதோ வருகிறுள் என்று தன் உடலிலிருந்து ஓர் தேவியை எடுத்துக் கொடுத்தாள். அவளே கௌசிகி, காளிகை, கௌரி, தன் சக்தி வெளியில் சென்றதால் கறுப்பானுள். இக்காளிகையைக்கண்டு சண்டமுண்டரெனும் கிங்கரர்கள் சும்ப நிசும்பரிடம் சென்று இவள் அழகை வர்ணித்தார் கள். உலகிற்கே ஒளியாய், ரதிக்கும் அழகளிப்பவளாய், ஸுந்தரியாயுள்ள காளிகையின் அழகையும் பலத்தையும் கேட்டு இவ்விரு அஸுரர்களும் அவளிடம் காமனை கொண் டனர்.

ஸுக்ரீவனெனும் தூதனை அனுப்பி உலகில் உத்தமர் களான எங்களில் ஒருவனுக்கு அழகுவாய்ந்த நீயே தக்க மனைவியாவாய். வேண்டியபொருளை உனக்களிப்போம், ஒருவரை மணந்துகொள் என வேண்டினர்கள். இதைக் கேட்ட தேவி நகைத்து என்னைப்போரில் வெல்கிறவனையே மணப்பேன். அவர்களை போருக்குவரச்சொல் என்றுள். தூதன் பெண்ணே! உலகில் இவர்களைக்கண்டு தேவரும் மூவரும் நடுங்கி ஓடினரென்றுல் நீ அவர்களோடு போர் புரிய சக்தியுள்ளவளோ? நீ பிழைக்க விரும்பினுல் ஒரு வரை மணந்துகொள் என்றுன். தேவி தூதரான நீ நான் சொன்னதை அங்கு சொல்லவேண்டும். சொன்னதைச் செய்! இல்லையேல் அவர்களுடன் உன்னையும் கொல் வேன் என்றுள். இதைக்கேட்டு பயந்து ஓடி தூதன் நடந்ததை அவர்களிடம் அறிவித்தான்.

சும்ப நிசும்பர் தூம்ரலோசனனை யழைத்து அவளைக் கொல்லாமல் பிடித்துவா என்றுர்கள். அவனும் அறுபதி ஞயிரம் ஸேனையுடன் தேவியைப்பார்த்து ஒருவரை மணந்தால் ஸுகம் பெறுவாய். இல்லையேல் பலாத்கார மாக உன்னைத் தூக்கிச்செல்வேன் என்று தூம்ரலோசனன் அவளருகே வர ஹுங்காரத்தினுல் அம்பிகை அவனைச் சாம்பலாக்கினுள். இதையறிந்த அரக்கர்கள் சண்டமுண்ட ரென்ற ஸேனுபதிகளை யனுப்பினர்கள். சண்டன் ஓடிவந் தான். அம்பிகையும் கைவாள் கொண்டு அவன் சிரத்தை யறுத்தாள். முண்டனும் உக்ர கோபம் கொண்டுவர சண்ட முண்டர் தலையையும் வெட்டி இரு சிரங்களையும் கையி லேந்தி பார்வதியினிடமளித்து சும்ப நிசும்பர்களையும்

வதம் செய்வதாக வாக்களித்தாள். கௌரி சண்டனைக் கொன்றமையால் சண்டிகையென உனக்கு நாமமளித்தோம் என்றாள்.

சும்பன் தேவியுடன் போர்புரிய கிளம்பினான். ஸகல தேவர்களும் தத்தம் உடலிலுள்ள சக்தியைக் கிளப்பி தேவிக்கு ஸஹாயமாக அனுப்பினார்கள். ப்ரஹ்மாணி, மாஹேச்வரீ, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹீ, நாரஸிஹ்மீ, இந்திராணி, முதலிய ஸகல சக்தி தேவிகளும் வாஹனங்கள் மீதேறி அஸுரனோடு யுத்தம் செய்ய வந்தனர். தேவி சும்ப நிசும்பரிடம் தூதியையனுப்பி நீங்கள் தேவராஜ்யத்தை விட்டு என்னைச் சரணமடைந்து பாதாள லோகத்திற்குச் செல்லுங்கள். இல்லையேல் யுத்தத்திற்கு வாருங்கள் என்றாள். அந்த சக்திக்கு அன்றுமுதல் சிவதூதி எனப்பெயர். மாத்ருகணங்கள் ஆயுதங்களை ஏந்தி ராக்ஷஸ ஸேனையை சின்னாபின்னமாகச் சிதைத்தனர். ரக்தபிந்து என்ற அஸுரன் சக்திகளை அடிக்க ஆரம்பித்தான். இந்திராணி வஜ்ராயுதத்தால் அவனைத் தாக்க அவனது உடலிலிருந்து எவ்வளவு ரக்தபிந்துக்கள் சிந்தினவோ அவ்வளவு இவனைப்போன்ற இராக்ஷஸர்கள் கிளம்பிப் போருக்கு வந்தனர். ஸகல மாத்ருகணங்களும் வீராவேசத்துடன் அவர்களைக்கொல்ல அவரவர் ரக்தம் சிந்திய விடத்திலிருந்தும் கோடிக்கணக்கான ரக்தபிந்து ராக்ஷஸர்கள் தோன்றி உலகெலாம் பறவி நின்றனர்.

சாமுண்டி காளியை யழைத்து ராக்ஷஸர்களுடைய ரக்த பிந்து கீழே சிந்தாமல் குடித்துவிடு என்று கட்டளையிட்டாள். காளி, அவன் ரக்தத்தைப்பருக, ரக்தமற்ற ரக்த பிந்துவைத் தேவி சாமுண்டி கொன்றாள். ஸகல தேவர்களும் பூமாரி பொழிந்து தேவியைப் போற்றினார்கள்.

## சும்ப நிசும்ப வதம்.

நிசும்பன் அளவற்ற அரக்கர் படைகளை அழைத்து வந்து கதைகொண்டு தேவியின் ஸிம்மத்தைத்தாக்கினான். தேவி, அவனது கேடயம் கத்தி முதலியவைகளைப் பொடியாக்கினாள். அவன் அனுப்பின சக்தியையும் நடுவழியிலேயே நாசம் செய்தாள். சூலம் ஏந்தி வீராவேசம்

கொண்டு வரும் அவனைப் பாணவர்ஷத்தால் கீழே விழும்படி அடித்தாள். சும்பன் ஓடிவர தேவியின் ஸிம்மம் ப்ரளயகால இடிபோன்ற ஓர் கர்ஜனை செய்தது. தேவி கௌசிகியும், வானிலேறி இரண்டு கரங்களாலும் பூமியை ஓங்கி ஓர் அறை அறைந்தாள். இதைக்கண்டு நடுங்கிப் பல அரக்கர்கள் மாண்டனர். சும்பன் உலகெலாம் பற்றி எரிக்கும் ஓர் சக்தியை அனுப்ப, தேவி தனது சரவர்ஷத்தால் அதைப் பஸ்மமாக்கினாள். நிசும்பனும் மூர்ச்சை தெளிந்து எழுந்து தேவியைத் தாக்கினான்.

கௌசிகி அவைகளைப் பொடி பொடியாக்கவே அஸுரன் கதையை எறிந்தான். அதை முறித்து சூலத்தினால் நிசும்பனைத் தேவி தாக்க அவன் அடிப்பட்டுக் கீழே விழுந்தான். அவன் உடலிலிருந்து மற்றோர் பயங்கரமான அரக்கன் உதித்து அம்பிகையோடு சண்டைக்குவர, கத்தியால் அவன் சிரஸைச் சேதித்தாள். பிறகு மாத்ருகணங்களுக்கும் ராக்ஷஸஸேனைக்கும் கடும்போர் நிகழ்ந்தது. சும்பன் ஓடிவந்து தேவியை சக்திகளைக்கொண்டே நீ ஜயம் பெறுகிறாய் என்று கூற தேவி, நானே இத்தனை வடிவமாகத் தோன்றியவள் என்று கூறி ஸகல மாத்ருகணங்களையும் தனக்குள்ளே லயமாக்கிக் கொண்டாள். சும்பனும் தேவியும் மிக பயங்கரமாக யுத்தம் செய்தனர். தேவி அவன் வில்லை முறிக்க சக்தியைக் கையிலேந்தி ஓடிவந்தான். அம்பிகை அதையும் அழித்து கத்தியுடன் ஓடிவந்த அவன் கத்தியைக் கத்தியினால் முறித்தாள். இருவரும் ஆயுதமின்றி சிறிது நேரம் முஷ்டி யுத்தம் செய்தனர். சும்பன் ஆகாயத்தில் நின்று அடிக்க ஆரம்பிக்கவே தேவியும் அங்கு சென்று அவனைக்கீழே தள்ளி சூலத்தினால் அவன் மார்பைப் பிளந்தாள். அஸுரராஜன் கீழே விழுந்து இறக்க ஸகல தேவர்களும் அம்பிகையைப் போற்றி புஷ்பவர்ஷம் வர்ஷித்து ஆடிப்பாடி அம்பிகையைக் கொண்டாடினார்கள்.

பகவதி, யாதுவரம் வேண்டுமென வினவ, தேவர்கள் முவ்வுலகும் ராக்ஷஸ உபாதையின்றி இருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தனர். தேவி அங்ஙனமே ஆகட்டுமென்று கூறி இவ்விரு அஸுரர்களும் மற்றுமோர் முறை மாநிலத்தில் தோன்றப் போகின்றனர். யசோதையினது

கர்ப்பத்தில் யான்தோன்றி விந்தியாசல நிவாஸினீ என்ற பெயருடன் அவர்களைக் கொல்வேன். ரக்த தந்திகா, சதாக்ஷி, சாகம்பரீ, துர்க்கா, பீமா, பிரமரா, முதலிய நாமம்கொண்டு அந்தந்த காலத்தில் தோன்றும் துர்க்கமன் அருணன் முதலியவர்களைக்கொன்று ரிஷிகளையும் தேவர்களையும் காப்பாற்றுவேன். என்றுகூறி பரதேவதை மறைந்தாள்.

இக்கதையை ஸுமேதஸ் என்ற மாமுனி ஸுரதனுக்கும் ஸமாதிக்கும் கூற அம்பிகையை அர்ச்சிக்கும் வகையை உபதேசம்பெற்று, தேவியை தர்சிக்க ஓர் நதி தீரம் சென்று தேவீ ஸூக்தத்தை ஜபித்து வந்தனர். நியமத்துடன் மூன்று ஆண்டு இவர்கள் முனைந்து தவம் புரிய தேவி எழுந்தருளி ஸுரதன் ஸ்வராஜ்யத்துடன் நற்பிறவியையும் ஸமாதி க்ஞானத்தையும் வேண்ட, அரசனை மன்வந்தர கர்த்தாவாகவும் இருக்கும்படி ஆசிர்வதித்து மறைந்தாள். இதே ஸப்த சதி எனப்படும். சண்டீ ஹோமத்திற்குரிய மந்திரமிதே.

## ரௌச்ய மந்வந்தரம்.

ருசி என்ற மஹர்ஷி நைஷ்டிக ப்ரும்மசாரியாகத் தவம்புரிந்து வந்தார். அவர் இல்லறத்தை விட்டு துறவறத்தை நாடிட அவரைக்கண்டு பித்ருக்கள் நீ ஸந்ததியற்று எங்களுக்குத் தர்ப்பணமும் பிண்டமும் அளிப்பவர் இல்லாதபடி செய்வதால் நாங்கள் தலை கீழாகத் தரணியில் விழுகிறோமென்று கூறி ருசிக்கு விவாஹத்தில் ருசி உண்டாக்கினர். ருசி ஸம்ஸாரத்தினால் வரும் துன்பத்தைக் கூறி பரமனையடையவே பாடுபடுவதாகக் கூறினார். பித்ருக்கள் பலனைக்கருதாது நித்யநைமித்திக கர்மாக்களை யனுஷ்டித்தால் ஞானம் பிறக்கும் என்றனர். துர்முகன் என்பவர் வந்து பித்ருக்களின் நன்மையை நாடும் நீ அவர்களையே ஆராதி. கன்னிகையைப் பெறுவாய் என்று கூறி மறைந்தார்.

ருசி பித்ருக்களை ஆராதித்துத் தர்ப்பணம் செய்து அவர்களைத் துதித்தார். ஜ்யோதிர்வடிவமாக பித்ருக்கள் அவர் எதிரே தோன்ற தக்க மனைவியை யளிக்க வேண்டுமென்று வரம் கேட்டார். பித்ருக்கள் அதிவிரைவில்

அழகிய மனைவியைப் பெறுவாய். அவளிடம் தோன்றும் புதல்வன் மன்வந்த்ர கர்த்தாவாக இருப்பான் என்று கூறினர். அன்றியும் நீ துதித்த ஸ்துதிகளை ச்ராத்த காலத்தில் படித்தால் த்ரவ்யலோபம் ச்ரத்தாலோபம், காலலோபம், நியமலோபம் முதலிய தோஷங்கள் இருந்தாலும் அவை அகன்று ச்ராத்தம் பூர்ணமாகும் என்று கூறி மறைந்தனர். அந்நதியிலிருந்து ப்ரம்லோசா என்ற அப்ஸரஸ் தோன்றி மாலினி எனும் தனது கன்னிகையை ஏற்கும்படி வேண்டினள். அங்ஙனமே மஹர்ஷி விதிப்படி அவளை மணந்து ரௌச்யனெனும் மகனைப் பெற்றார். அவரே ரௌச்ய மன்வந்தர கர்த்தா.

## பௌத்ய மந்வந்தரம்.

ஆங்கிரஸ மஹர்ஷியின் சிஷ்யர் பூதி. இவர் மிகக் கோபமுள்ளவர். அவரது ஸஹோதரர் ஸுவர்ச்சஸர். தன் யாகத்திற்கு பூதியை அழைத்தார். பூதி அங்கு செல்லும் போது ப்ரசாந்தனெனும் தன் சிஷ்யனிடம் அக்னியை ரக்ஷித்து வா. அதிதி பூஜை தவறாதே என்று கட்டளையிட்டுச் சென்றார். ப்ரசாந்தன் அவரிட்ட கட்டளையை அனுஷ்டித்து வந்தான். ஒருநாள் அக்னி அணைந்து விட்டது. சிஷ்யன் என்ன செய்வதெனத் தெரியாமல் வருந்தினன். வேறு அக்னியை எடுத்து மூட்டி ரக்ஷித்தால் குருவின் கோபம் இரட்டிக்கும். என் செய்வது? என சிஷ்யன் நிராத்துயரமடைந்தான்.

அந்த அக்னியையே ஆராதித்து அபசாரத்தை அகற்றுவேனென, அக்னியைத் துதித்தான். ஏழு நாக்குகளுடன் கூடிய அக்னி யாது வரம் வேண்டுமென்றார். சிஷ்யன் இங்கு அவிந்த அக்னி தானே தோன்ற வேண்டும். குருவிற்கு ஓர் புத்ரன் வேண்டும், என் குரு கோபமகன்று எல்லோரிடமும் அவருக்கு அன்பு ததும்ப வேண்டும் என இவ்வரங்களை வேண்டினன். அக்னியும் அங்ஙனமே ஆகட்டுமென்று கூறி தனக்கென ஓர் வரமும் கேளாத சிஷ்யனது குருபக்தியைக் கொண்டாடி பூதியினது புதல்வன் பௌத்ய மந்வந்தரத்திற்குக் காரணமாயிருப்பான் எனக் கூறி அக்னி மறைந்தார்.

பூதி ஆச்ரமம் வந்து ப்ரசாந்தனைப் பார்த்து என் மனம் உன்னிடமும் எல்லோரிடமும் பேரன்பு பூண்டிருக்கிறது. எனது கோபம் எங்கோ சென்றது. யாது காரணம்? என்று கேட்க அவரும் நடந்தவற்றைக் கூறினர். சிஷ்யனது குணத்தைக் கண்டு பூதி அந்த க்ஷணத்திலேயே அஷ்டாதச வித்யைகளும் தோன்றட்டுமென அருள் புரிந்தார். அக்னியின் அருளால் பூதிக்கோர் புதல்வன் தோன்றி பௌத்ய மன்வந்தரத்திற்கு அவன் காரணமானன்.

## மந்வந்தர ச்ரவணபலன்.

பதினன்கு மந்வந்தரங்களையும் படிப்பவர் அல்லது கேட்பவர் பலவித பயனைப் பெறுவர். ஸ்வாரோசிஷ மனு சரிதத்தால் விருப்பம் பூர்த்தியாகும். ஔத்தமரது சரிதத்தால் தனத்தைப் பெறலாம். தாமஸ சரித்தைக் கேட்டு க்ஞானம் பெறலாம். ரைவத மந்வந்தரத்தைக் கேட்போர் புத்தியையும் மன்திற்கிசைந்த மனைவியையும் பெறுவர். சாக்ஷுஷ மந்வந்தரத்தால் ஆரோக்ய முண்டாகும். வைவஸ்வத மந்வந்தரம் பலத்தை அளிக்கும். சூர்யஸாவர்ணி சரிதம் ஸத்புத்ர பௌத்ரர்களைத் தரும். ப்ரம்ம ஸாவர்ணி பெருமையை யளிக்கும். தர்ம ஸாவர்ணியால் சுபமுண்டாகும். ருத்ர ஸாவர்ணி புத்தியையும் ஜயத்தையும் அளிக்கும். தக்ஷஸாவர்ணி, கெட்டவனை உத்தமனுக்கும். ரௌச்ய மன்வந்தரம் சத்ருவைக்கொல்லும். பௌத்ய மந்வந்தரம் தேவப்ரஸாதத்தைத் தரும். அக்னிஹோத்ர ஸாவர்ணி ஸகல ஸௌபாக்யத்தை அளிக்கும்.

## முதாவதி ஸௌநந்தா.

நாபாக சரிதம் பல கிளைக்கதைகளுடன் ரஸமாக உளது.

குஜ்ரும்பன் எனும் அஸுரன் பாதாளத்திலிருந்து பூமிக்கு வர ஓர் த்வாரத்தை ஏற்படுத்தி அதன் வழியாக பூமிக்கு வந்து எல்லோரையும் ஹிம்ஸித்து வந்தான். இது இங்ஙனமிருக்க, விதூரதன் என்ற அரசன் தற்செயலாக வேட்டையாட வனம் சென்றுன். ஸுவ்ரதர் எனும் முனிவரைப் பணிந்தான். அவர் அரக்கனைப்பற்றி கூறினர்.

ஸுநந்தை எனும் ஆயுதமே இவனுக்குப் பலத்தை அளிப்பது. அதை அபலைகள் தொட்டால் சக்தியற்றதாய் விடும். அதனால் அவனைவென்று லோகோபகாரம் செய்! என்றார். அம்முனிவர் கூறியதை அரசன் மந்திரிகளுக்கு விரித்துரைத்தான். இதைவிதூரதன் பெண்ணான முதாவதி அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்தாள். முதாவதி உத்யானத்தில் உலவி வர குஜ்ரும்பன் அவளைத் தூக்கிச் சென்றான். விதூரதன் கன்னிகையைக் காணாது மனங் கலங்கி இவ்வரக்கன் கொண்டு சென்றதாக அறிந்து பாதாளத்திலுள்ள குஜ்ரும்பனைக் கொன்று எனது புத்ரியை விடுவித்துவரும் வீரனுக்கு முதாவதியை அளிப்போம் என்று பறைசாற்றினான். பலந்தன் ஆங்குசென்று அஸுரர்களை நடுங்கும்படி பாதாளத்தைத் தாக்கிப்பகைவரை வென்றான். இராஜ குமாரன் அரக்கருடன் மூன்று நாள் கடும்போர் புரிந்தான். முடிவாக ராக்ஷஸன் அபஜெயம் அடையவே ஸுநந்தை அவனது நினைவுக்கு வந்தது. உடனே சுசிருசியாக அதைக் கந்த மால்யாதிகளால் அர்ச்சித்துப் பணிந்து துதித்து அதைக் கையிலெடுக்க ஆரம்பித்தான்.

அம்முஸலத்தைத் தொழும் வ்யாஜமாக முதாவதி அதைத்தன் கரத்தால் பலமுறை தொட்டாள். அதனால் அது தனது சக்தியை இழந்தது. ஆக்னேயாஸ்திரத்தால் அரச குமாரன் அரக்கனைக் கொன்றான்.

முதாவதியை விடுவித்து வந்து, விதூரதன் அரண்மனையில் கொண்டுவிட்டானவனை. அவ்வரசனும் பலந்தன் செய்த பேருபகாரத்திற்குக் கைம்மாறாக முதாவதியை அவனுக்குக்கொடுத்து மணம் செய்வித்தான். பாதாளத்திலிருந்து ஆதிசேஷன் வந்து ஸுநந்தமெனும் முஸலத்தை முதாவதி தொட்டதனால் உனக்கு ஜெயம் உண்டானது. ஆதலின் இதை மறவாதிருக்க, முதாவதியை ஸௌநந்தை என்று அழையுங்கள் என்று கூறி மறைந்தான்.

## கனித்ரன்.

பலந்தவம்சத்தில் தோன்றிய ப்ரஜாதிக்குக் கனித்ரன் முதலிய ஐந்து புதல்வர்கள் தோன்றினார்கள். மூத்தவன் எல்லோரும் இன்புறவேண்டுமென கருதினான். இவனது

இளையோரில் ஒருவன் சௌரி என்பவன். இவனுக்கு விச்வவேதி என்று ஓர் மந்திரி இருந்தான். அவன் அரசனை அடுத்து, மன்ன! மாநிலமனைத்தையும் ஆள்வது மன்னர் தர்மமன்றோ? நீர் உமது ஸஹோதரனிடம் அடங்கிக் கிடப்பதும், அகண்ட பூமண்டலத்தை ஓர் குடையின் கீழ் ஆளாததும் ஓர் பெருங் குறை. உமது தந்தை ஒன்றாக ஆண்ட பூமண்டலத்தை ஐவரும் பிரித்துக்கொண்டீர்கள். இதனால் உமது வருவாய் குறைந்து கீர்த்தியும் குன்றி உமது பெயருக்கேற்ற சௌர்யத்தை வெளியிட அவகாசமே இல்லாமல் போகிறது. ஆதலால் எவ்வகையினாலாவது மூத்தவரான கனித்ரனை ஜயித்தால் உமக்கு நன்மையுண்டு எனக்கூறினான்.

மூத்த ஸஹோதரனைத் தந்தைபோல் கருதவேண்டுமென சாஸ்திரத்திற்குட்பட்டு குணமற்றவனாயினும் அவனைப்போற்றக் கடமைப்பட்டிருக்கிறேன். உயர்குணம் வாய்ந்த உத்தமனைப் பூஜிக்கவேண்டுமேயல்லாது அவனது ராஜ்யத்தை அபஹரிப்பதென்பது அடாத செயல் என்றான் சௌர்யன். அமைச்சன், எடுத்த கார்யத்தை முடிக்க எண்ணி அவனது சுத்த மனதை மெதுவாகக் கலைத்து பொறாமையை ஊட்டினான். சௌர்யனுமிசைந்து வர, மற்ற ஸஹோதரர்களையும் கலந்து கனித்ரனைக் கொல்ல விச்வவேதி சதியாலோசனை செய்தான். நான்கு ஸஹோதரர்களின் புரோஹிதர்களையும் வசப்படுத்தி ஆபிசாரம் செய்தான். அவர்கள் செய்த ஹோமத்திலிருந்து நான்கு பூதங்கள் தோன்றி கனித்ரனிடம் கனவேகமாகச் சென்றன. கனித்ரனது சாந்த குணத்தையும் புண்யத்தையும் கண்டு அவனை அண்டமுடியாமல் திரும்பி வந்து விச்வவேதியையும் புரோஹிதர்களையும் கொன்று தின்று சென்றன. ஏககாலத்தில் அம் மந்திரியும் நான்கு புரோஹிதர்களும் இறந்ததைக்கேட்டு எல்லோரும் ஆச்சர்யமடைந்தனர். கனித்ரன் இவர்கள் இறந்த காரணத்தை அறிந்து தனக்காகவே அவர்கள் இறக்கக்கேட்டு துயரமடைந்தான். தானே பாபம் செய்ததாகக்கருதி புழுவாய் துடித்தான். இப்பாபத்தையகற்ற தவம் செய்யத் தீர்மானித்தான். முன்னூறாண்டு மூன்று மனைவிகளுடன் தவம் புரிந்தான். முடிவில் உயர்லோகங்களைப் பெற்றான். இச் சரிதத்தைக் கேட்போர் பாபமகலும்.

## மற்றோர் கனித்ர சரித்திரம்.

கனித்ரனது புதல்வன் க்ஷுபன். அவனைத் துதி பாடகர்கள், நீ குணத்தில் உனது முன்னோனை க்ஷுபனை ஒத்திருக்கிறாய் என்று பாட, அவர்கள் மூலமாக அந்த க்ஷுபனது சரிதத்தையுணர்ந்து, அவனைப்போல் அந்தணனுக்கு வரி வாங்காது தர்மபரிபாலனம் செய்தான். உத்தம பாத்ரத்தைத்தேடி இருமடங்கு தருவான். அவன் புத்ரன் விவிம்சன் தந்தை போலவே தரணியைத் தர்மமாக ஆண்டு வீரஸ்வர்க்கம் சென்றான். அவனது புத்ரனே கனித்ரன். முன் கனித்ரனைப்போலவே இவனும் ஸகல தர்மங்களுக்கும் இருப்பிடம். யாகத்தில் பூமியைத் தக்ஷிணையாக வேதியருக்கு அளித்தான். தவம் செய்து குபேரனை ஒத்த தனம் பெற்றான். மறுபடியும் எண்ணிறந்த யாகங்களைச் செய்தான். புத்ரனில்லாததால் அக்னியை ஆராதித்துக் குழந்தைபெற முயற்சித்தான். சுத்தமான மாம்ஸம் கொண்டுவர ஒரு மானை அடிக்க ஆரம்பித்தான். மற்றோர் மான் வந்து என்னைக் கொன்று என் மாம்ஸத்தை ஹோமம் செய் என்றது. அரசன், மிருகமே! நீயே உன் உடலை யளிக்க முன் வந்த காரணம்யாது? என்று வினவ, அது கூறிற்று. வேந்தே! மைந்தனில்லாப் பாதகன் யான். பாரினில் புத்ரபாக்யத்திற்கு ஈடு மற்றென்றுண்டோ? அழிந்தே தீரும் உடலைப் புத்ரனைத்தரும் ஓர் யாகத்திற்களித்தால் மறு பிறப்பிலேனும் மக்களைப்பெறுவேனோ என்று முன்வந்தேனென்றது.

மற்றோர் மான் ஓடிவந்து, அதை அகற்றி என்னுடலை ஏற்றுக்கொள்ளும் என்றது. அரசன் அதையும் காரணம் வினவ, நான் பெரும் குடும்பி. நான் தனித்திருந்தபொழுது ஒரே துக்கமிருந்தது. மனைவியை மணந்தவுடன் துன்பமிரண்டானது. மக்களைப் பெற்றவுடன் துன்பம் பலவாகப் பெருகிற்று. ஆதலின் துக்கக்கடலான இல்லறத்தை விட்டு நன்னுடு செல்லத் துணிந்தேன் என்றது. இவைகள் மன்னன் மனதை மயக்கின. இன்பத்திற்குக் காரணம் ஸந்ததி. மக்களே துன்பத்திற்கும் காரணம் என்ற கூற்றும் நியாயமே. இவ்விரண்டும் முறையே இல்லறம் துறவறம் எனும் இரண்டு சிறந்த தர்மங்களைக் கற்பிக்கின்றன. இல்லறத்தில் ஈடுபட்டு

வைராக்யம் பெற்றவன் எளிதில் துறவறம் சென்றுப் பேரின்பம் பெறலாம். ஆதலின் இவ்விரண்டு மாணையும் கொல்லாது கொல்லா விரதம் கொண்டே பித்ருக் கடனை அகற்றும் புத்ரனைப் பெறுவேன் என்று நிச்சயித்து, இந்திரனை நாடித் தவம்புரிந்தான். இவனது தவத்திற்கு ஈடுபட்டு இந்திரன், எனது அம்சத்திலுைல் உனக்கு ஓர் குழந்தை தோன்றும் எனக்கூறி மறைந்தான்.

**பலாச்வன்.**

அந்த புத்ரனுக்குத் தந்தை பலாச்வனெனப் பெயரிட்டான். இவனது வீர்யத்தைக் கண்டு தந்தை இவனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்தான். இவனும் தர்மநீதி தவருது ராஜ்ய பரிபாலனம் செய்து திக்விஜயம் செய்யக் கிளம்பினன். எல்லோரும் இவனது பலத்தைக் கண்டு பயந்து கப்பமளித்து தங்கள் ராஜ்யத்தைக் காத்துக்கொண்டனர். ஏக சக்ராதிபதியானன் பலாச்வன். இவனிடம் தோல்வியடைந்து கப்பம் கட்டும் சிற்றரசர்கள் அனைவரும் ஒன்றுகூடி இவன் எதிர்பாராத சமயத்தில் இவனைத் தாக்கினர். பலாச்வன் பகைவர்களைக் கொன்ருன். என்ருலும் இவனது சேனை அழிந்ததால் தனியே நின்று முகத்தில் இரு கரங்களையும் வைத்து என்செய்வதென பெருமூச்சு விட்டான். அக்காற்றிலிருந்து கைவிரல் வழியாக நால்வகைச் சேனைகள் வந்தவண்ணமாகவே இருந்தன. அரசன் இவைகளைக்கொண்டு பகைவர்களைக் கொன்று வெற்றி பெற்ருன். இவனது கையிலிருந்து சேனைகள் உண்டானதால் இவனுக்குக் கரந்தமன் எனக் காரணப் பெயர் வழங்கியது.

ஒரு ஸமயம் வீர்ய சந்திரன் எனும் அரசன் தனது புத்ரிக்கு ஸ்வயம்வரம் என்று செய்தியனுப்ப ஏனைய அரசர்களைப் போல் கரந்தமனும் அங்கு சென்ருன். இவனது வீர்யத்தையும் அழகையும் கண்டு, வீரா என்ற ராஜகுமாரி இவனுக்கே மாலையிட்டாள். மற்ற அரசர்கள் இவனேடு போர்புரிந்தனர். கரந்தமன் இந்திரனது அம்சமாதலால் சத்ருக்களை வென்று வெற்றி மாலையும் விவாஹமாலையும் சூட்டப்பெற்ருன். இப்புதிய தம்பதிகளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

## அவிக்ஷிதன்.

இக் குழந்தைக்கு அரசன் அவிக்ஷிதன் எனப் பெயரிட்டான். இவனுக்கு இளமையிலேயே இல்லறத்தில் வெறுப்பு தோன்றிற்று என்றாலும் ஸ்வதர்மமென க்ஷத்ரியப் பெண்கள் ஸ்வயம்வரத்திற்குச் சென்று மற்ற அரசர்களுடன் போர்புரிந்து பெண்ணைத் தூக்கிவருவான். அப்பெண் யாரை விரும்பினாளோ? அவனுக்கு விவாஹம் செய்துவைப்பான். இங்ஙனம் பல அரசர்களை முதுகு காட்டி ஓடும்படிச் செய்தான்.

விசால தேசத்து அரசனுடைய பெண்ணான வைசாலினீ என்பவளுக்கு ஸ்வயம்வரம் நடந்தது. பற்பல அரசர்கள் குவிந்தனர். அவிக்ஷிதனும் அங்கு சென்று வழக்கப்படியே அப் பெண்ணைத் தூக்கிச்சென்றான். மற்ற அரசர் அனைவரும் ஒன்றுகூடி அவிக்ஷிதனைத் தோல்வி அடையும்படிச்செய்ய பெருமுயற்சி செய்தனர். இவன் தைர்யமாய் அனைவருடனும் போர் புரிந்தான். ஒருவனோடு பலர் போர்புரிவது தர்மமல்ல என்றாலும் த்வேஷத்தினால் அனைவரும் ஒன்றுசேர்ந்து இவனை எதிர்த்தனர். நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டு பல்லாயிரம் பாணங்களை வர்ஷித்தனர். முன்னும் பின்னும் பாணம் வந்து எதிர்க்க அரசகுமாரன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். இதுதான் தக்க ஸமயமென்றெண்ணி அவ்வரசர்கள் அவிக்ஷிதனை சிறையில் அடைத்தனர்.

வைசாலினியோ, மற்ற அரசர்களை விட்டு அவிக்ஷிதனிடமே ஆசைகொண்டு அவனையே மணப்பேன் என்றாள். புத்ரன் சிறைப்பட்டதைக் கேட்டு கரந்தமன் விசாலநகரம் சென்று அந்த க்ஷத்ரியர்களோடு போர் புரிந்தான். மூன்று தினத்தில் அம்மன்னர்களை ஜயித்து விசால ராஜனால் வரவேற்கப்பட்டான். உடனே அவிக்ஷிதனை விடுவித்து வைசாலினியை மணக்கும்படிவேண்டினான். எவளையும் நான் மணம்புரிந்துக்கொள்ளப் போவதில்லை என்று அவன் கூறினான். வைசாலினீ ஒரே பிடிவாதமாக அவனை மணப்பது அல்லது இறப்பது என்ற முடிவுக்கு வந்தாள். தந்தையிடம் விடைபெற்று தபோவனம் சென்று அடுத்தபிறவியிலாவது அவனையே மணப்பதென

கடுந்தவம் புரிந்தாள். மூன்று மாதம் உணவின்றி காய க்லேசம் செய்தாள். உயிரை விடவும் ஆரம்பித்தாள். அச்சமயம் தேவர்கள் ஒன்று கூடி, வைசாலினீ! ஸாஹஸம் செய்யாதே! ஆத்மஹத்தி மிகப் பாபகரமானது! உனக்கு சக்ரவர்த்தித் தோன்றப்போகிறுன்! அயச்சங்கு எனும் அஸுரச்ரேஷ்டனைக் கொல்லப் போகிறுன் என்றுர்கள்.

அவிக்ஷிதனது தாய் வீரை அச்சமயம் யார் எதைக் கேட்டாலும் கேட்டதைக் கொடுப்பதென்ற ஸங்கல்பத்துடன் ஒரு விரதத்தை ஆரம்பித்தாள்.

கரந்தமனது மந்திரி ஏகாந்தமாக அரண்மனையில் வீற்றிருக்கும் அரசனைக்கண்டு அடிபணிந்து விக்ஞாபனம் செய்துகொண்டான். வேந்தே! உங்களது மைந்தன் விவாஹத்தில் வெறுப்புகொண்டு பிரம்மசாரியாய் இருக்கிறுன். தங்களுக்கோ அதிக வயதாய் விட்டது. நமது பலஹீனமான நிலையைக்கண்டு பகைவர்கள் நமது ராஜ்யத்தைக் கொள்ளைகொள்வர். ஆதலின எங்ஙனமேனும் உமது புதல்வன் மணம் புரியும் வழியைத் தேடவேண்டும் என்றுன். அதற்கு யாது பதில் கூறுவதென்று அரசன் யோசித்துக் கொண்டிருக்கையில், வீரையின் விரதம் முடிந்து புரோஹிதர் கூறியபடி அவிக்ஷிதன் யார் எதை வேண்டுமாஞலும் கேட்கலாம் தருகிறேன் என்று உத்கோஷம் செய்தார்.

இதுதான் தக்க ஸமயமென்றெண்ணி அரசன் "எனக்கு ஒன்று வேண்டும்" என்றுன். அரச குமாரன், யான் உமக்குத் தருவது என்பது பாக்யமே! கூசாமல் கேளுங்கள். தந்தேன்! தந்தேன்! என்றுன். அரசன் உனது புதல்வன் முகத்தை எனக்குக் காட்டு. அதை யான் காணவேண்டுமென்றுன். விரைவில் ஈசனருளால் அங்ஙனமே செய்கிறேன் என்று வாக்களித்தான்.

அவிக்ஷிதன் வேட்டைக்காக காட்டை யடைந்தான். அங்கே அபயம்! அபயம்! என்ற தீனநாதத்தைக் கேட்டான். அஞ்சேல்! அஞ்சேல்! என அருகில் ஓடினுன். ஓர் கட்டழகியைக் கண்டான். நீ யார்? உனக்கு என்ன ஆபத்து? எனக் கேட்டான். அவள் யான் வைசாலினீ.

எனது கணவன் அவிக்ஷிதன். அவனை மணக்க யான் தவம்புரிகிறேன். த்ருடகேசன் என்பவன் என்னை ஹிம்சிக்கிறான் என்றாள். அவிக்ஷிதன், தான் எவளையும் மணக்காவிடினும். அவ்வஸுரனோடு போர்புரிந்து அவனைக் கொன்றான். தேவர்கள் இவனருகே வந்து உனக்கு யாது வரம் வேண்டும் என்றனர். அரசன் என் தந்தையிடம், என் புதல்வன் முகத்தைக் காட்டுவதாகக் கூறினேன். அது நிறைவேற வேண்டும் என்றான். தேவர்கள் இவளே வைசாலினி. இவள் மூலமாக உனது இஷ்டம் நிறைவேறும் என்று கூறி மறைந்தனர். அவிக்ஷிதன் அவளை மணக்க இருவர்க்கும் மருத்தன் என்ற குழந்தை பிறந்தது. மருத்தன் நரிஷ்யந்தன் தமன் முதலியவர் சரிதம் விரிவாக உளது.

கரந்தமன், தந்தையே தநயனுவதாக ச்ருதி சொல்கிறது. எனது ஐயம் உனது ஐயமே ஆகும் ஆதலின் அரசனுக்குரியதான அரசாங்கத்தை ஏற்று அவனியை ஆண்டுவா என்றார். அவிக்ஷிதன், தாங்கள் என்ன கூறினும் அவமான மடைந்த நான் ராஜ்யத்தை விரும்பேன் என்று கூறி மறுத்தான். தக்கவயது வந்தவுடன் இருவருமாகக்கூடி மருத்தனுக்கு மகுடாபிஷேகம் செய்துவைத்தனர். ஆயிரமாண்டு தவம் புரிந்து கரந்தமன் இந்திரலோகம் சென்றான். அவனுக்குப் பிறகு அவன் மனைவி நூறாண்டு தவம் புரிந்து பதிலோகம் சென்றாள்.

மருத்தன் பிருஹஸ்பதியின் ஸஹோதரரான ஸம்வர்த்தரைப் புரோஹிதராகக்கொண்டு எண்ணிறந்த யாகங்களைச் செய்தான். இவனது ராஜ்யமெல்லாம் தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டது. இதைக்கண்ட ஸம்வர்த்தர் ஸுவர்ணமுஞ்சமெனும் மலையின் கொடிமுடியைத் தவவலிமையால் கொண்டுவந்து கொடுத்தார். அதைக்கொண்டும் அவன் பல யாகம் செய்துவந்தான். ஒருநாள் இவனது பிதாமஹி அனுப்பியதாக ஒரு மஹரிஷி இவனருகே வந்தார். மருத்த! நீ முன்னோரது வழியைப் பின்பற்றி ராஜ்யத்தைப் பரிபாலிக்க வேண்டும். உனது ஆளுகையில் பாதாளத்திலிருந்து கொடிய ஸர்ப்பங்கள் வந்து ஏழு முனி குமாரர்களைக் கொன்றன! தீர்த்தங்களை விஷமாக்கு

கின்றன! யக்ஞத்திற்காக பாவனமாய் வைக்கப்பட்டிருக்கும் ஹோமத்ரவ்யத்தில் மலஜலம் கழிக்கின்றன! எப்பாடு பட்டாவது இவர்களைக்கொன்று முனிவர்களைக் காப்பது உன் தர்மம். ராஜ்யம் சுகத்திற்காக ஏற்பட்டதல்ல. இங்கு மிகக்லேசங்களை யனுபவித்து மறுமையில் பேரின்பம் பெறவேண்டும். தக்கபடி ஸாதுக்களை ரக்ஷிக்காவிடில் நரகத்தை யடைவாய்! இது உன் மூதாதையின் ஆணை. ஆதலின் அவ்வாக்ஞையை நிறைவேற்று எனக் கூறி முனி வனம் சென்றார்.

மருத்தன் அம்முனி குமாரர்களைப் பிழைப்பிக்கவும் கொடிய ஸர்ப்பங்களைக் கொல்லவும் பிரதிக்ஞை செய்து கொண்டான். மிக பயங்கரமான யமாஸ்திரத்தைப் பாதாளத்தை நோக்கி ப்ரயோகம் செய்தான். ப்ரளயகால அக்னியைப்போல் மிக மிக பயங்கரமாய் வரும் அக்னி ஜ்வாலையைக் கண்டு நாகர்கள் பயந்து பாதாளத்தை விட்டு மூலைக்கு ஒருவராய் ஓடினார்கள். மருத்தனுடைய தாய், முன்னம் தங்களுக்கு அபயப்ரதானம் செய்தது அவர்களது நினைவுக்கு வந்தது. உடனே அங்கு சென்று அவளைச் சரணமடைந்தனர். அவள் தன் கணவனைப் பார்த்து, நாதா! யான் பாதாளம் சென்றபோது எனக்கு அவர்கள் செய்த பேருதவியைக் கண்டு பெருமகிழ்ச்சி பெற்று ஆபத்து வந்தபோது அவர்களைக் காப்பதாக வாக்களித்தேன். ஆதலின் இது ஸமயம் தாங்கள் அவர்களைக் காக்கவேண்டும் என்று பிரார்த்தித்தாள். இதைக் கேட்ட அரசன், மற்றவராயின் நாம் போர்புரிந்து ஸர்ப்பங்களைக் காக்கலாம். நமது புதல்வனன்றோ முனி குமாரர்களைக் காக்க எண்ணி இக்கொடிய ஸர்ப்பங்களைச் சிக்ஷிக்கக் கிளம்பியிருக்கிறான். அவன் செய்வதும் தர்மமாதலால் அதை எங்ஙனம் தடுப்பது? என்றார். நாம் சொன்ன சொல்லை நிறைவேற்றுவதும், உயிர்களைக்காப்பதும் பெரிய தர்மமன்றோ? நம் புதல்வனையும் ரக்ஷிக்கவேண்டும். சரணமடைந்த ஸர்ப்பங்களையும் காக்கவேண்டும் என்றாளவள். அவிக்ஷிதன் தனயனை மருத்தனிடம் வந்து நீ போட்ட அஸ்திரத்தை உபஸம்ஹாரம் செய் என்றார். மருத்தன் தந்தை தாய்களைப் பணிந்து இவ்வேழு முனி குமாரர்களைப் பிழைப்பிக்கவே ஸர்ப்பங்களோடு போர்புரிகிறேன். தந்தையாயினும் தருமத்தைத்

தடுப்பது நியாயமோ? என்றான். அவிக்ஷிதன், மைந்த! சரணாகதரை ரக்ஷிப்பதென்பது பெரும் தர்மமன்றோ? ஆதலின் என் தர்மத்தை நான் செய்வேன். நீயும் தர்மமென்றெண்ணினால் அங்ஙனமே செய். நீ எனது புதல்வனே யானாலும் இவ்விஷயத்தில் சத்ருவாய்விட்டாய் க்ஷத்ரிய முறைப்படி போர்புரிவோம் என்று போர்புரிந்தான். கரந்தமனது மனைவியான பாமினி எனும் மருத்தனது பிதாமஹி அங்குவந்து முனிகுமாரர்களை எழுப்பி தனயனையும் பேரனையும் கொண்டாடி யானே மருத்தனைத் தூண்டினேன். இருவருடைய கார்யமும் செவ்வனே முடியும். யான் சென்று வருகிறேன். தர்மம் தவராது தரணியைப் பல்லாண்டு ஆளுங்கள் என்று கூறி தபோவனம் சென்றாள். முநி குமாரர் பிழைத்தனர். யமாஸ்த்ரம் சாந்தமானது. ஸர்ப்பங்கள் பயமும் நீங்கிற்று.

## புராண ச்ரவண பலன்.

பதினெண் புராணங்களுடைய பெயரை ப்ரதிதினம் சொன்னாலே பாபமகலும். இம்மார்க்கண்டேய புராணத்தைப் படித்தாலும், படிக்கக் கேட்டாலும், ப்ரம்மஹத்தி முதலிய பாபமகலும். இதைச்சொல்பவரை வேதவ்யாஸராக எண்ணிப் பூஜிக்கவேண்டும். இப் புராணமுடிவில், கோ, ஸ்வர்ணம், வஸ்திரம் முதலியவைகளை அவருக்கு அளிக்கவேண்டும். இல்லையேல் ச்ரவண பலனுண்டாகாததோடு தேவர்களும் பித்ருக்களும் தானம் செய்யாதவர்களைச் சபிப்பார்கள். ப்ரத்யுபகாரம் செய்யாமல் புராணத்தைக் கேட்பது ஞானத்தைத் திருடியது போலாம். அன்றியும் ஏழுபிறவியிலும் ஊமையாகப் பிறக்கநேரிடும். ஆதலின் பக்தி ச்ரத்தையுடன் ச்ரவணம் செய்து, வேதவ்யாஸ பூஜையும் செய்து, அறிவு, சாந்தி, புஷ்டி, ஸம்ருத்தி, செல்வம் முதலிய பலன்களை அடையவேண்டும் என்று உரைத்த ஸூத புராணிகரை நைமிச முனிகள் நன்கு பூஜித்து நலம் பெற்றனர்.

**ஸ்ரீ மார்க்கண்டேய புராணச் சுருக்கம் முற்றிற்று.**

---

# 10. ஆக்நேய புராணம்.



ஸ்ரீ அக்னிபகவான்.

மாம்பலம் குருகுல வெளியீடு.

# ஆக்நேய புராண
# மூலக்ரந்த அநுக்ர மணிகா.

1 மங்களம். சுகர் முதலியோர் வியாஸரைக் கேட்பது. வித்யாஸாரத்தைக் கூறும்படி வஸிஷ்டர் அக்நியைக் கேட்டது. அக்நி விஷ்ணு பெருமை கூறுவது.

2 மத்ஸயம் முதலிய தசாவதார மெடுக்கக் காரணம்? வைவஸ்வத மநுவுக்கு மத்ஸ்யமூர்த்தி பிரத்யக்ஷ மாதல். மத்ஸ்யமூர்த்தி, ஹயக்ரீவன் முதலிய அரக்கரைக் கொல்லுதல்.

3 தேவர்க்கு தூர்வாஸ சாபம். ஸமுத்ர மதநம். விஷ்ணு லக்ஷ்மீ பதியாகக் காரணம்? மோஹிநீ, சாஸ்தா பிறப்பு.

4 வராஹமூர்த்தி ஹிரண்யாக்ஷனைக் கொல்லுதல். நரஸிம்மாவதார்ம். வாமநாவதாரம். பரசுராமர் கார்த்தவீர்யனைக் கொன்றது.

5 ராமாயண பாலகாண்டம்—ஸீதா கல்யாணம் வரை.

6 அயோத்யா காண்டம்—பாதுகா பட்டாபிஷேகம்வரை

7 ஆரண்ய காண்டம்—ஸுக்ரீவ ஸக்யம் வரை

8 கிஷ்கிந்தா காண்டம்—ஸம்பாதி தர்சநம் வரை.

9 ஸுந்தர காண்டம்—லங்கையில் வானரஸேனை பிரவேசம் வரை.

10 யுத்த காண்டம்—ராமாச்வமேதம் வரை.

11 உத்தர காண்டம்—ராமன் வைகுண்டம் செல்லுதல்.

12 கிருஷ்ண கதா. ஹரிவம்ச ஸாரம். கிருஷ்ண ஸந்ததி வரை.

13 மஹாபாரத ஸாரம்—யுத்தாரம்பம் வரை.

14 பாண்டவ கௌரவ யுத்தம். பரீக்ஷித்பட்டாபிஷேகம்.

15 பாண்டவர் ஸ்வர்க்கம் செல்லுதல். சிரவண பலன்.

16 பௌத்தாவதாரம். கல்கியின் அவதாரம்.

17 ஸிருஷ்டி. மரீசி முதலிய மாநஸ புத்ரர் உண்டாதல்.

18 ஸ்வாயம்புவ மநு, துருவன், பிருது, தக்ஷன், ஏகாதச ருத்ரர் ஆகியவர் சரிதம்.

19 ஹிரண்ய கசிபு. பிரஹ்லாதன். 49 மருத்துக்கள்.

20 ஒன்பது வகை ஸிருஷ்டி. தக்ஷ கன்னிகைகள், சந்திரன். 60ஆயிரம் வாலகில்யர். அதர்மத்தின் ஸந்ததி.

21 விஷ்ணு முதலியவர்களின் ஸாமான்ய பூஜை. நவகிரஹ ஸரஸ்வதி பூஜைகள். எள்ளு முதலிய ஹோமம்.

22 கர்மாங்கமாக மிருத்திகா ஸ்நாநம். அகமர்ஷண ஸ்நாநம். ஸ்நாநாங்க தர்ப்பணம். மூலமந்த்ரத்தால் ஸ்நாநம்.

23 யோகத்தால் உடல்சுத்தி. நியாஸம். துவாரபால பூஜா. நவவியூஹ வர்ணநம்.

24 குண்டநிர்மாணம். அர்த்த சந்த்ர, வர்த்துள, சதுரச்ராதி குண்டம். குரு உபதேச விதி.

25 வாஸுதேவாதி மந்திரம். ஜீவ ஸ்வரூபம்.

26 முத்ரா லக்ஷணம். அஞ்ஜலி. வந்தந. வராஹ முத்ரை.

27 தீக்ஷாதாந விதி.

28 அரசர்களுக்கு அபிஷேகம் செய்யும் முறை.

29 மந்திரஸித்திக்காக ஸர்வதோபத்ரராதி மண்டலம்.

30 மண்டலத்தில் தேவதா பிரதிஷ்டா விதி. பலவர்ணங்களால் மண்டலமமைத்தல். ஸாதகனது நியமம்.

31 எல்லா நோய்களையுமகற்றக் கூடிய **அபாமார்க்க ஸ்துதி.**

32 48 ஸம்ஸ்காரங்கள். நிர்வாண தீக்ஷையின் பொருள்.

33 பவித்ர ஆரோபணம். ஸுவர்ணத்தால் பவித்ரம் அமைத்தல். எப்படி அமைப்பது? விஷ்ணு பூஜா விதி? ஆவாரண தேவதா பூஜை?

34 மண்டல மெழுதுதல். துவார பூஜை. பஞ்சகவ்ய மந்த்ரம். கும்பத்தில் பூஜை. ஹோமம் செய்யும் பிரகாரம்.

35 பவித்ர அதிவாஸ விதி.

36 விஷ்ணு பவித்ர ஆரோபண விதி. விஷ்ணு பூஜா. பிராம்மணருக்குப் பவித்ர தாநம். பவித்ர தாரண மஹிமை.

37 ஸர்வ தேவர்களுக்கும் பவித்ராரோபண விதி.

38 ஆலய அமைப்பு. பயன். ஆலயத்திற்குப் பயன் படாத பொருள் வீண். மண், மரம், செங்கல், கல், ஸுவர்ணம் முதலியவைகளால் ஆலய அமைப்பு. அதன் பயன். யமன் தூதருக்குக் கூறுமுபதேசம்.

39 ஹயக்ரீவ முதலிய 25 தந்த்ரங்கள். எங்கெந்தவிடத்தில் பிரதிஷ்டை உசிதம்? கராங்குளி முதலிய பரிபாஷைகள்.

40 வாஸ்து புருஷ ஸ்வரூபம். ஷை பூஜா விதி.

41 மண்டல விதி. 4 வகை குண்ட நிர்மாணம். செங்கல்லின் அளவு. அவைகளை வைக்கும் முறை.

42 மண்டபம் முதலிய லக்ஷணம்.

43 மண்டபத்தில் தேவ பிரதிஷ்டை.

44 வாஸுதேவாதி விக்ரஹம். அங்க அளவு.

45 பிண்டிகா முதலிய லக்ஷணம்.

46 சாளக்கிராமத்தில் மூர்த்தி லக்ஷணம்.

47 சாளக்கிராம பூஜாவிதி.

48 கேசவன் முதலிய 24 மூர்த்திகளின் ஸ்தோத்ரம்.

49 தசாவதார பிரதிமை லக்ஷணம்.

50 சண்டீ முதலிய பிரதிமை. 20 கை சண்டீ. 10 புஜ சண்டீ. நவதுர்க்கா. 18 புஜ தேவீ.

51 நவக்ரஹ பிரதிமா லக்ஷணம். அநந்த தக்ஷகாதி லக்ஷணம். இந்திரன் முதலிய 8 திக்பாலர். விசுவகர்ம, ஹநுமான், கிந்நர, வித்யாதர, பிசாச, வேதாள, க்ஷேத்ரபால ஆகியவர்களின் லக்ஷணம்.

52 64 யோகிநிகள், பைரவ, வீரபத்ர, கௌரீ, லலிதா, சண்டிகா ஆகியவர்களின் பிரதிமா லக்ஷணம்.

53 லிங்கம் முதலியவற்றின் லக்ஷணம்.

54 உப்பு, நெய், வஸ்த்திரம், மண், செங்கல், மரம், சிலை, முத்து, லோஹம், ஸுவர்ணம், தாம்ரம், பித்தளை, ரத்நம், ரஸம், ரத்நகர்ப்ப ஆகியவைகளால் லிங்க அமைப்பு. ஷை அளவு.

55 உருவங்களின் பிண்டிகா. விஷ்ணு கூறிய விக்ரஹ அளவு. லக்ஷ்மீ கூறிய ஸர்வ தேவ விக்ரஹ அளவு.

56 10 திக்பாலர்களின் யாகம்.

57 கலச அதிவாஸ விதி.

58 தேவதா ஸ்நபந விதி. பூஜை செய்யும் வகை.

59 அதிவாஸந விதி, நியாஸம். லோகபால பூஜை, பலி தாநம் முதலியன.

60 ஸாமான்ய பிரதிஷ்டா. வாஸுதேவாதிகளை 8 திக்கு களில் கலசத்தில் பிரதிஷ்டை செய்து ஹோமம். பல்லக்கில் வைத்து நகரை வலம்வரல்.

61 அவபிருத ஸ்நாநம். துவார பிரதிஷ்டை. பிராஸாத பிரதிஷ்டை. துவாஜா ரோபணம். துவஜ தண்ட அளவு. ஷை பலன்.

62 தேவீ பிரதிஷ்டா. லக்ஷ்மீ பூஜா. ஆசார்ய பூஜா. ஸ்ரீஸூக்த பூஜா.

63 கருட ஸுதர்சந பிரும்ம நரஸிம்மர் முதலியவர் பிர திஷ்டா. ஜலதாந சிறப்பு.

64 கிணறு வாபீ தடாகம் முதலிய பிரதிஷ்டை. யூப பிரதிஷ்டை. ஜலதாநத்தின் மேன்மை.

65 ஸபை, ஸபையில் உட்காரு மிடம், ஸபா பிரவேசம்.

66 தேவ ஸாமான்ய பிரதிஷ்டா. உத்யாந பிரதிஷ்டை மேன்மை மடதாநச் சிறப்பு. தண்ணீர் பந்தல் பெருமை.

67 வீட்டில் ஜீர்ணமான விக்ரஹத்தை தியாகம் செய்தல். ஜீர்ண உத்தாந வகை. ஜீர்ணமான கிணறு குளங் களைப் புதிப்பித்தல்.

68 தேவ பிரதிஷ்டையில் உத்ஸவம். அங்குரார்பணம். தீர்த்த ஸ்நாநத்திற்காக தேவ யாத்ரை. மந்த்ர ஸ்நாநம்.

69 பூர்வாங்கத்துடன் தீர்த்த யாத்ரா விதி.

70 மரம் தோட்டம் ஸெளர்ய ஈச கணேச சக்தி ஹரி ப்ரதிஷ்டா.

71 கணபதி பூஜை.

72 ஸ்நாந விதி. அஸ்திர ஸந்த்யா, ஸந்த்யா சதுஷ்டயீ, க்ஞாநிக்கு இரவில் அகமர்ஷண ஸந்த்யா.

73 ஸெளர்ய பூஜாவிதி. சண்டீசருக்கு நிர்மால்யம்.

74 சிவ பூஜாவிதி. 75 சிவ பூஜாங்க ஹோமம்.

76 பூஜா ஹோமாதிகளைப் பகவானுக்கு ஸமர்ப்பிப்பது. சண்டேச பூஜா நிர்மால்யத்தைக் களைதல்.

77 கபிலா பூஜை. வித்யா, புஸ்தக, குரு முதலியவர் வணக்கம். ஸ்நாநம் செய்து சிவனுக்கு 8 புஷ்ப பூஜை. கொஞ்சம் நிவேதனம் செய்து வைச்வதேவ பலிஹரணம்.

78 சிவபவித்ர அதிவாஸநம். நைமித்திக பூஜா. ஒவ்வொரு யுகத்திலும் வெவ்வேறு பவித்ர அபவித்ர பூஜா. பவித்ர அளவு. சிவனுக்கு ஸமமாக அங்க தேவ பூஜை. குரு பூஜை.

79 இரண்டாவது நாள் தேவி பூஜை. அதற் கங்கமாக ஹோமம்.

80 தமநக ஆரோஹணம். தமநோத்பத்தி காரணம். காலம். சிவ பூஜை. குரு பூஜை.

81 ஸமய தீக்ஷா. தீக்ஷார்த்தம். அருள்புரியத் தக்கவரிருவர். 3 வகை தீக்ஷை. ஸாதார தீக்ஷை 4. நிராதார தீக்ஷை 2 வகை. சிவ பூஜா ஜபஹோம. ஹோம பொருளின் பேதத்தால் பலத்தில் பேதம். பலனுக்கேற்ற ஹோமக் கணக்கு. தர்ப்பணம். தீக்ஷையுள்ளவரே சிவார்ச்சனையில் ஈடுபடலாம்.

82 ஸம்ஸ்கார தீக்ஷை. சிவனுக்கும் சிவைக்கும் பூஜை ஜபம் ஹோமம். கர்ப்பாதாந பும்ஸவன ஸீமந்த ஜாதகர்மாதி. குழந்தைக்கு சிவஸமய சிக்ஷணம்.

83 நிர்வாண தீக்ஷா. அதிவாஸநம். தீபதாநம். ஸெளத்ரத்தால் சிஷ்யன் உடலைக் கட்டுதல். சண்டேச லோக பால பூஜா. யாகசாலா பிரவேசம். ஸ்நபநம்.

84 நிவிருத்தி கலா சோதநம். நற் கனவு தீய கனவு. சிவபூஜா தர்ப்பண ஹோமம். பூர்ணாகுதி. 108 புவநங்கள். 10 வருணங்கள். துஸ்வப்ந சாந்தி. நிவிருத்தி. கலா சோதநம். பிராயச்சித்தம்.

85 பிரதிஷ்டாந கலா சோதநம். தத்துவ ஸந்தாநம். 60 புவநங்கள், கலா சோதநம். விஷ்ணு பூஜா. முமுக்ஷு தீக்ஷா.

86 வித்யா ஸம்சோதநம். 7 தத்துவங்கள். 21 பதங்கள். ருத்ர புவந ஸ்வரூபம். வித்யா தத்துவ விசோதநம். பிராயச்சித்தம்.

87 சாந்தி ஸம்சோதநம். குண்டத்தில் கலா நிவேசநம். முமுக்ஷு தீக்ஷா விக்ஞாபநம். சாந்தி ஸம்சோதநம்.

88 தாடந ஆகர்ஷண 8 புவந ஸித்தி தத்வ ஸஞ்சய ஸந்தாநம் சாந்தி அதீத தாடநம். ஹோமம் நிவிருத்திவத். ஸதாசிவ வாஹநம். சிஷ்ய உத்பாதநம். கர்ப்பாதாநாதி. 4 அங்குலம் சிஷ்ய சிகையைச் சேதித்தல். ஸ்நபநம், கும்ப ஸ்நாநம்.

89 ஏக தத்துவ தீக்ஷா விதி.

90 ஸாங்க தீக்ஷா. அபிஷேகம் 8 ஸாகராதிகளை வைத்து சிவன் முதலியவர்களைப் பூஜித்து சிஷ்யனுக்கு ஸ்நாநம். வஸ்த்ரமளித்து அவன் தனது சிஷ்யனுக்கு உபதேசம் செய்ய அநுக்ஞை தரல்.

91 அபிஷேகமான சிஷ்யன் செய்யவேண்டிய சிவபூஜா விசேஷம்.

92 5 வகை பிரதிஷ்டா. ஸ்தாபந, ஸ்திதஸ்தாபந, உத்தாபந, ஆஸ்தாபநம். பூ பரீக்ஷை. பூ சோதநம். மண்டபத்தில் துவார பூஜை. சிவ வாஸ்து பூஜை. கட்டபாறைக்கு பூஜை. பூமியைத் தோண்டுதல். ஆத்ம சுத்தி. மண்டப ஸம்ஸ்காரம். கல், செங்கல்களின் அளவு. சிலா பூஜை. ஹோமம்.

93 வாஸ்து பூஜை. வீட்டிலும் நகரத்திலும் வாஸ்து ஸ்வரூபம். ஷை பூஜை.

94 கற்களை வைக்கும் முறை. சாகீ முதலிய பூஜை ஹோமம் பலி இவைகளைச்செய்து சிலைகளில் தேவதாநியாஸம். பூர்ணாநந்தாதி சிலை பிரதிஷ்டை.

95 லிங்க பிரதிஷ்டை. அதற்கு உரிய மாஸ திதி நக்ஷத்ர வார யோகங்கள். மண்டப அளவு. 7 லோகங்கள். 8 தாதுக்கள். 8 விரீஹிகள்.

96 சிவ பிரதிஷ்டாங்க அதிவாஸம். அந்தந்த மூர்த்திகளின் அடையாளம்.

97 சிவ பிரதிஷ்டை. இதர தேவ பிரதிஷ்டை.

98 கௌரீ பிரதிஷ்டை. 99 ஸௌர்ய பிரதிஷ்டை.

100 துவார பிரதிஷ்டா. 101 பிராஸாத பிரதிஷ்டா.

102 துவஜாரோபணம். 103 ஜீர்ண லிங்க உத்தாரணம்.

104 கோபுர அடுக்குகளில் எங்கெங்கு எந்தெந்த தேவதைகளை பிரதிஷ்டை செய்வது ?

105 நாடு நகரம் செழிக்க வாஸ்து பூஜை. சுவறுகளின் பெயர்கள். வாயற்படி ஜன்னல் வைக்கவேண்டிய திக்குகள். விதிப்படி செய்யாவிடங்களில் துன்பம்.

106 நகர கிராமாதிகளில் வாஸ்து விதி. எந்தெந்த திக்குகளில் எந்தெந்த ஆலய பிரதிஷ்டை? வீடுகளில் எங்கெங்கு எந்தெந்த சாலை அமைக்கவேண்டும் ?

107 துவீபங்கள். அவைகளின் அதிபதி. ஸ்வயம்பு ஸிருஷ்டி. 108 மஹாமேரு வர்ணநம்.

109 தீர்த்த யாத்ரை. புஷ்கர மாஹாத்ம்யம்.

110 பிரயாகம். 111 காசி. 112 நர்மதா.

113 கங்கை மஹிமை,

114 கயா மாஹாத்ம்யம். தர்ம சிலை. கதாதரர். கயா ப்ராம்மணர்களுக்கு சாபம்.

115–116 கயா யாத்ரா விதி. 117 கயா சிராத்தம்.

118 பாரத வர்ஷத்தின் துவீபங்கள். நதிகள்.

119 ஜம்பூதுவீபம். புவநகோசம்.

120 பூமியின் அளவு. ககோளம். நவக்ரஹம்.

121 ஜோதிஷ சாஸ்திரம். 122 காலகணநம்.

123 யுத்த ஜயார்ணவத்தில் கண்ட பலவகை யோகங்கள். ஸ்வரோதய. சநி கூர்ம ராகு. சக்ர வியூகம். ஜயந்தரும் ஓஷதிகளை அணிதல். பிறரை வசியம் செய்ய ஓஷதி ஸ்நாநம், திலகம் முதலியன.

124 யுத்த ஜயார்ணவத்தில் கண்ட ஜோதிஷ சாஸ்திர சுருக்கம். சாரசரக்ஞாநம். ஓங்காரம்.

125 பல்வகை சக்கிரங்கள். மாரணம். மோஹநம். பாதநம். உச்சாடநம் இவைகளுக்கேற்ற மந்திரம். கராளீ, ரேததி, பீஷணி, பிராணஹரா இவர்களைப் பூஜிக்கும் விதி. திதி விசேஷம். சத்துரு ஸ்தம்பந மந்திரம். சஸ்திர ஸ்தம்பநம். மாரணம்.

126 கற்கவும் ராஜ்ஜியாபிஷேகம் செய்யவும் ஏற்ற நக்ஷத்திரம்.

127 உச்சி நீச ஸ்தாநத்திலுள்ள கிருஹங்களின் பலன். ராசிகள் சரமாயும் அசரமாயு முள்ளதால் உண்டாகும் சுப அசுப பலன்.

128 கோட சக்கிரம். ஆங்குள்ள ராசி, நக்ஷத்திர கிரஹங்களின் சுபாசுப பலன்.

129 அர்க்க காண்டம். 130 மண்டலங்கள். வாயு முதலிய மண்டலத்தால் ஒவ்வோரிடத்தில் உண்டாகும் ஸுக துக்கம்.

131 காத சக்கிரம். ஜய சக்கிரம்.

132 ஸேவா சக்கிரம். தாரா சக்கிரம்.

133 ஸூர்யன் முதலிய கிரகங்களின் தசையில் உண்டாகும் சுப அசுப பலன். சத்துருவை விரட்டும் பைரவ மந்திரம். சத்துருவை முறியடிக்கும் பிரயோகம். கருட சக்கிரம். பங்க வித்யை. ஸர்வார்த்த ஸித்தி வித்யை. மிருத்யுஞ்ஜய வித்யை.

134 திரைலோக்ய விஜய வித்யை. ஹோமம்.

135 யுத்தத்தில் ஜயந்தரும் வித்யை. ஜயா வித்யை. நக்ஷத்திர சக்கிரம்.

136 யாத்ரையில் நற்பயனைத் தரும் திருநாடீ சக்கிரம். மஹா மாரீ வித்யை.

137 சத்துரு ஸேனையை அழிக்க சவ வஸ்திரத்தில் தேவதையை எழுதி ஆட்டு ரத்தம் கலந்த வேப்பங் குச்சியால் ஹோமம். இங்ஙனம் 6 கர்மா.

138 உச்சாடநம் செய்யத் தளிர். யோக ரோதக ஸம்புட விதர்ப்ப முதலிய ஸம்பிரதாயங்கள். ஒரு குலத்தை அழித்தல். ஸ்தம்பநம் வச்சியம் ஆகர்ஷணம் முதலியன. பிறரது ஸமாசாரத்தை அறிய யம பூஜை ஹோமம் துர்க்கா பூஜை.

139 பிரபவா முதலிய 60 வருஷங்கள். அவைகளின் பலன்.

140 வச்சிய யோகம். பிருங்கராஜ, திலகம் மை புகை இவைகளால் வச்சியம். பெண்களை வசமாக்கக் கூடிய குடிகை. (மாத்திரை)

141 36 பதகக்ஞாநம். மும்மூர்த்திகள் கை கொண்ட, தேவராகச் செய்யக்கூடிய ஒஷதிகள். பலவகை நோய்களை அகற்றும் ஒஷதி. மிருத ஸஞ்ஜீவிநீ.

142 மந்திர ஒஷதிகளால் கருவிலுள்ள குழந்தை ஆணு? பெண்ணு? அதன் அங்கம் எப்படி இருக்கிறதெனஅறிதல். கிருஹ, ஜுவர, பூதங்களை அகற்ற வஜ்ஜிர சிருங்கலா எனும் மந்திரம்.

143 குப்ஜிகா பூஜை. பிரும்மாணீ முதலியவரின் ஆவாஹநம்.

144 ஸர்வ ஸித்திகளைத் தரும் குப்ஜிகா மந்திரம் மாலிநீ மந்திரம்.

145 சைவ சாக்தாதி நியாஸம். அஷ்டாஷ்டக தேவிகள்.

146 திரிகண்டீ முதலிய தேவதா மந்திரங்கள்.

147 துவரிதா பூஜை. ஸக உபத்திரவங்களையு மகற்றும் குஹ்ய குப்ஜிகா பூஜை.

148 யுத்தத்தில் ஜயமளிக்கும் பூஜை. தீப்தா, அமோகா, வித்யுதா ஆகியவர்களின் பூஜை.

149 லக்ஷகோடி ஹோமம். ராஜ்யம் முதலிய பயன். சத்துருவைக்கொல்ல லக்ஷகோடி ஹோமப்பொருள்.

150 மந்வந்தர ஸ்வாயம்புவ மநுவின் புத்திரர்கள். அப்பப்போது உள்ள ஸப்த ரிஷிகள். தேவதைகள்.

151 இநர வர்ண தர்மம் ஆசாரம், சண்டாளாதிகளின் உத்பத்தி அவர்களுக்குப் பிழைப்புக்கு வழி.

152 இல்லறத்தினது தர்மம். 153 ஆசிரம தர்மம். கர்ப்பாதாந ஸீமந்த ஜாதகர்ம நாமகரண செளள உபநயநம் ஆகியவைகளுக்கேற்ற காலம்.

154 விவாஹம். பிராம்மணன் 4 வர்ணங்களிலும் பெண்ணை ஏற்கலாம். க்ஷத்திரியன் 3 வர்ணங்களிலும் வைசியன் 2 வர்ணங்களிலும் சூத்திரன் தன் வர்ணத்தில் மாத்திரமும் விவாஹம் செய்து கொள்ளலாம்.

155 ஆசாரம். 6 வகை ஸ்நாநங்கள். மந்திரஸ்நாநம் மநிதரின் பொதுவான தர்மங்கள்.

156 திரவ்விய சுத்தி. மண்பாத்திர சுத்தி. யக்ஞ பாத்திரங்களுக்கு துடைப்பதால் சுத்தி. கிருஹ சுத்தி.

157 ஜநந மரணதீட்டு. 4 வர்ணங்களில் யார் யாருக்கு எப்பொழுது தீட்டு அகலும்? மந்திரமில்லாமல் சூத்திரர்களும் இறந்தவருக்குக் கர்மா செய்யவேண்டும்? ஆயுதங்களால் தற்கொலைசெய்து கொண்டவனும் பதிதனும் இறந்தால் திட்டில்லை. பிராம்மணர் சூத்திர சவத்தையும், சூத்திரர் பிராம்மண சவத்தையும் தூக்கிச் சென்றால் தோஷம். அநாதை பிராம்மண சவத்தைத் தூக்கினாலும் ஸம்ஸ்காரம் செய்தாலும் ஸுவர்க்கம். பல்முளைக்காதவர்க்கு அக்நி ஸம்ஸ்காரமில்லை.

158 ஆசௌசம். அஸ்தி ஸஞ்சயந காலம். பங்காளிகளுக்குத்தீட்டு. தற்கொலை செய்தவனுக்கு இருள் சூழ்ந்த நரகம். பத்தாவது நாள் கர்மா. தந்தை இறந்தால் புத்ரர் கடமை. புத்திரன் பிறந்த நிநத்தில் சிராத்தம் செய்தல். ஆசௌசம்.

159 இறந்தவர் எலும்பைக் கங்கையில் போட்டால் முக்தி. பதிதருக்கு உதக கிருயை வேண்டாம். நாராயணபலி செய்தல். 160 வாநபிரஸ்த்த தர்மம்.

161 பிராஜாபத்ய இஷ்டிசெய்து அக்நியை ஆத்மாவிடம் ஆரோபணம் செய்து ஸன்யாஸி வீட்டை விட்டுக் கிளம்புதல். துறவிக்கேற்ற பாத்திரம். 5 வகையாக துறவி பிக்ஷை. ஹிம்ஸை முதலிய தோஷமகல பிராணயாமம். குடீசகர். முதலிய 4 வகை

துறவிகள். யமநியம ஸகர்ப்ப, அகர்ப்ப பிராணு யாமம். பூரக ரேசக கும்பக நியாநம்.

162 பிரவிருத்தி தர்மம். நிவிருத்தி தர்மம். சிராவண பௌர்ணமியில் வேத அத்யயந உபாகர்ம. 37 அநத்யயநங்கள்.

163 சிராத்தம், பிராம்மண போஜந நியமம். தேவஸ் தாநத்தில் 2. பித்ருஸ்தாநத்தில் 3. பிராம்மண பூஜா மந்திரம். பிண்டதாநம். நாந்தி, ஏகோத்திஷ் டம். ஸபிண்டீகரணம். ஓராண்டு ஸோதகும்பம். மாஸ்யம். சிராத்தபயன்.

164 நவக்கிரஹ ஹோமம் எந்தெந்த லோஹத்தால் எந் தெந்த கிரஹம் அமைப்பது? மந்திரம். ஸமித்து ஹோமம். பசு தக்ஷிணை.

165 பலதர்மங்கள். கஜச்சாயா சிராத்தம் பித்ருக் களுக்கு அக்ஷய்யமான இன்பந்தரும். போகம், அன்ய வர்ணஸ்திரீயிடம் கர்ப்பாதாநங்கூடாது. ருதுவால் ஸ்திரீ தோஷ சாந்தி. கற்பிழந்தவர்க்கு பிராயச்சித்தமில்லை. விதுரன் சண்டாளன் ஆகிய பிறப்பிற்கு காரணம்.

166 வர்ணதர்மம். 48 ஸம்ஸ்காரங்களால் பிரும்ம வர்ச்சஸ். கர்ப்பாதாநாதி தயை முதலிய 8 ஆத்ம குணங்கள். மௌநம், ஜலம் முதலிய வற்றால் பங்க்தி தோஷம் அகலல். லக்ஷகோடி ஹோமம். கிருஹ பிரதிஷ்டை. அபிஷேக மந்த்ரவிதி, விவாஹ யாகாதிகளில் நவக்கிரஹ பூஜை. குண்டம். ஆபிசார கர்மாவிற்கேற்ற குண்டம். மாவினால் செய்த சத்ரு உடலைக் கத்தியால் வெட்டுவது.

167 மஹாபாதகங்கள், மதம்பிடித்தவன். கோபக்காரன் இவர்களுக்கு அன்னதாநம் கூடாது. தாஸியின் அன்னத்தைப் புஜிக்கக்கூடாது. பிராம்மண அன்ன மாயினும் சூத்திரன் சாப்பிட அழைத்தால் சாப்பிடக் கூடாது. யார் யார் அன்னத்தைப் புஜித்தால் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும்? நீசான் னத்தைப் புஜித்தால் சாந்திராயண பிராயச்சித்தம்

செய்து கொள்ளவேண்டும். பூனை நாய் முதலியவை விழுந்திறந்த கிணற்றைச் சுத்தம் செய்யாமல் அதைப் பயன் படுத்தக்கூடாது, பிராம்மண ஹிம்ஸை மஹாபாபம்.

168 பிராயச்சித்தம், பிராம்மண ஹிம்ஸை, கோஹிம்ஸை மத்யபாநம், ஸுவர்ணத்தைத் திருடுதல் குருஸ்திரீ கமநம் பூனையைக் கொல்லுதல் ஸ்வல்ப விலையுள்ள பொருள்களைத் திருடுதல், உணவுப்பொருளைத் திருடுதல், தகாத ஸ்த்ரீ ஸங்கம் ஆகியவைகளுக்கு பிராயச்சித்தம்.

169 பாபியுடன் சேருதல். பதிதனுக்கு நீர் முதலியன அளிப்பது. தகாதவரிடம் தாநம் வாங்குதல் நாய் நரி கடித்தல். தெரியாமல் நீசர் வீட்டில் வஸித்தல். தெரிந்து வஸித்தல். ஒரு தீட்டுக்காரி மற்றொரு தீட்டுக்காரியைத் தீண்டுதல். செறுப்பு நாய் இவை மேலேபடுதல் முதலிய எல்லாவற்றிற்கும் பிராயச்சித்தங்கள்.

170 ரஹஸ்யமான பாபம், கிருச்சிர பிராயச்சித்தத்தில் வபநம், வீராஸநம். யதிசாந்திராயணம், பாலக சாந்திராயணம் தேவ சாந்திராயணம், தப்த கிருச்ரம், கிருச்ரம், அதி கிருச்ரம். ஸாந்தபநம் மஹா ஸாந்தபநம் அதி ஸாந்தபநம் தப்த கிருச்ரம் பிரும்ம கூர்ச்சம் முதலியன.

171 ஸர்வபாப பிராயச்சித்தமான ஸ்தோத்திரம்.

172 பிரும்மஹத்தி. தடியால் பசுவை அடித்தல், ஸாந்தபநம் ரேதஸ் மல ஜலம் இவைகளை உட்கொண்டதற்கு பிராயச்சித்தம். மநிதரை அபஹரித்ததற்குப் பிராயச்சித்தம்.

173 தேவ விக்ரஹாதிகள் காணுவிடில் பிராயச்சித்தம். பாபமகல அன்னதாநம், கங்காஸ்நாநம் காசீ முதலிய க்ஷேத்ர யாத்ரை.

174 விருதத்தில் எவை கூடாது? அடிக்கடி ஜலமருந்தினல் விருதங்கெடும். பொதுவான நியமம். எதை ஏற்கக் கூடாது? கூச்மாண்டமெனும் பூஷிணிக் காயை உபயோகிக்கக்கூடாது. பிராஜா பத்யம்

முதலிய கிருச்ர லக்ஷணம். அதிமாஸத்தில் அக்நி ஆதாநம் முதலியன கூடாது, சாந்திர மாஸம். அமாவாஸ்யா சிராத்தம். கர்ப்பிணீ, பிரஸவித்தவள், ரஜஸ்வலை ஆகியவர் அசுத்தமானவர். இவர்கள் செய்யவேண்டிய விரதத்தை மற்றவரைக் கொண்டு செய்வித்தல். கோபத்தால் விருதம் நஷ்டமாகும், அதற்கு பிராயச்சித்தம், விரதம் பூர்த்தியாக விஷ்ணு ஸ்துதி, கேசவார்ச்சனை, பிராம்மண போஜநம்.

175 பிரதமையில் பிரும்ம விருதம். ஸுவர்ண பிரும்ம விக்ரஹ பூஜை. மார்கிழி பிரதமையில் சிகிவிருதம்.

176 துவிதீயா விரதங்கள். அசுவிநீ குமாரார்ச்சனை, கார்த்திகை சுக்ல துவிதீயையில் யமவிருதம். புரட்டாசி கிருஷ்ண துவிதீயை. அசூன்யசயந விருதம். கார்த்திகை கிருஷ்ண துவிதீயை. காந்தி விருதம், தை சுக்ல துவிதீயை. விஷ்ணு விருதம்.

177 திருதியா-சித்ர சுக்ல திருதியா மூலகௌரீ விருதம். வையாசி கார்த்திகை மார்கிழி இம்மாதங்களிலும் சுக்ல திருதீயைகளில் மூல கௌரீவிருதம். பங்குனி திருதீயை ஸௌபாக்ய விருதம்.

178 சதுர்த்தி-மாக சுக்ல சதுர்த்தி விநாயக விருதம். விநாயக மந்திரம். அர்ச்சனை. புரட்டாசி சதுர்த்தி அங்காரக சதுர்த்தி.

179 பஞ்சமீ - ஆவணி சுக்ல பஞ்சமியில் வாஸுகீ முதலிவர் பூஜை. நாகபஞ்சமீ.

180 ஷஷ்டீ - கார்த்திகாதியிலும் புரட்டாசியிலும் ஷஷ்டீ விருதம். மார்கிழியில் கிருஷ்ண ஷஷ்டீ விருதம்.

181 ஸப்தமீ - மாக சுக்ல ஸப்தமி ஸூர்ய விருதம்.

182 அஷ்டமீ - கிருஷ்ணாஷ்டமீ. ரோஹிணியுடன் கூட சந்திரனுக்கு அர்க்ய தாநம், விருத மஹிமை.

183 சைத்ர கிருஷ்ணாஷ்டமீ மார்க்க சீஷ்ணாஷ்டமீ தை மாதம் சம்புவிருதம், புதாஷ்டமீவிருதம் (ஷை கதை) புநர்வஸுவில் அசோக ரஸமருந்தல்.

184 நவமீ - ஆச்விந சுக்லநவமீ விருதம். ருத்ரசண்டாதி பூஜை. ஆயுதபூஜை. பூதனை முதலிய தேவதை

களுக்கு ரக்தபலி. தேவதை முன்னே மாவினால் செய்த சத்ரு உருவைக் கொல்லுதல். ஹோமம், ஜயந்தீ முதலியவர்க்கு பலிதானம்.

185 தசமீவிருதம். 186 ஏகாதசீவிருதம். விஷ்ணுபூஜை.

187 துவாதசீ, சைத்ர சுக்ல துவாதசீ, மன்மத துவாதசி விருதம். மாக சுக்ல துவாதசீ, விருகோத்ர துவா தசீ, பால்குந சுக்ல துவாதசீ கோவிந்த துவாதசீ, ஆச்விநவிசோக துவாதசீ, மார்கழியில் மதுஸூதந னைப் பூஜித்து உப்பு தானம். புரோஷ்ட பதத்தில் கோவத்ஸ துவாதசீ, திலதுவாதசீ, பால்குந மநோ ரத துவாதசீ, பாத்ர சுக்லத்தில் அநந்த துவாதசி, பௌஷ சுக்லத்தில் ஸம்பிராப்தி துவாதசீ விருதம்.

188 சிராவண துவாதசி, வாமந துவாதசி, விருதம்.

189 அகண்ட துவாதசி, பல தான்யங்களைப் பாத்ரத் துடன் தானம் செய்தல். சித்ரை மாதத்தில் ஸத்து மாவு தானம்.

190 திரயோதசீ, அநங்க திரயோதசி, யோகேச்வர ஸித்த பூஜை. அமராதீச பூஜை, விசுவேச்வரபூஜை, ஆண்டின் முடிவில் ஸுவர்ணமயமான சிவ விக்ரக தானம்.

191 சதுர்தசீ, கார்த்திக சுக்ல சதுர்தசியில் மகேச்வர பூஜை. சதுர்தசி அஷ்டமிகளில் சிவபூஜை, அநந்த சதுர்தசீ. மாவினால் அடைசெய்து நிவேதநம்.

192 சிவராத்ரீ விருதம். அசோக பூர்ணிமா விருஷோத் ஸர்க்கம். விருஷபூஜை. மாக பூர்ணிமையில் பிரும்ம பூஜை. ஸாவித்ரீ விருதம்.

193 ஹஸ்தநக்ஷத்ரத்தில் ஸௌர்ய விருதம். நந்தி விருதம். ஸோமவார விருதம். பௌமவிருதம். விசாகையில் புத விருதம். அநூராதையில் குருவார விருதம். ஜியேஷ்டையில் சுக்ரவார விருதம். மூலத்தில் சனைச்சர விருதம்.

194 மூலாதியில் விஷ்ணு பாதபூஜை. கிருத்திகையில் கேசவாதி நாமாக்களால் பத்மநாப பூஜை. கார்த் திகைமுதல் 4 மாஸம் அன்னதானம் செய்யவேண் டும். பங்குனிமுதல் 4 மாஸம், எள்ளுண்டை தானம்

செய்யவேண்டும். ஆடியில் பாயஸதாநம் செய்ய வேண்டும். அநந்த விருதம், 4 மாதம் ஆஜ்யத்தால் ஷை விருதத்திற்காக ஹோமம். சித்ரைமுதல் நெல்லால் ஹோமம்.

195 தேநு, பால், கல்ப விருக்ஷ, விருதம். திருராத்ர விருதம். கார்த்திக சுக்ல நவமியில் சிகி வாஹந விருதம். சைத்ரத்தில் திருராத்ராதி விருதம்.

196 ஆடிமுதல் 4 மாத விருதம். வைசாகவிருதம். மாசியிலும் சித்ரையிலும் குட-வெல்ல-தேநு விருதம். மார்கிழியில் நக்த விருதம். மாம்ஸத்தை விட்டால் பிராம்மணப் பிறவி கிடைக்கும். ஆச்விநத்தில் கௌமுத விருதம், ஷை பலன்.

197 மழைகாலத்தில் விறகு தாநம். ஸந்த்யா காலத்தில் மௌந விருதம். எள்ளு மணி வஸ்த்ரம் முதலிய தாநம். ஸங்கிராந்தி விருதம், உமா விருதம்.

198 தீபதாந விருதம், அதன் மஹிமை. விதர்ப்பராஜனது பெண் தீபதாநத்தால் சக்ரவர்த்தியின் மனைவியாதல்.

199 நவவியூஹார்ச்சனை. வாஸுதேவாதி பீஜங்களைத் திக்குகளில் ஆவாஹநம் செய்தல். பூஜை.

200 பூஜைக்கு அர்ஹமான புஷ்பம். தகுதியில்லாத புஷ்பம். அதனால் நல்லலோக பிராப்தி. புஷ்பத்தின் பெருமை.

201 மஹாவீசி, தாம்ர கும்பம் முதலிய நரகங்களில் பாபிகளைச் சிக்ஷித்தல்.

202 உமா ஸோமவார விருதம். வீண் பேச்சு கூடாது. பிராம்மண பூஜை தாநம்.

203 பீஷ்ம பஞ்சக விருதம். தேவபித்ரு தர்ப்பணம்.

204 அகஸ்த்ய அர்க்ய தாநம். அகஸ்த்ய ஸ்துதி.

205 கௌமுத விருதம். 206 விருதங்களும் தாநங்களும் கிரஹணத்தில் விருதபலன் அதிகம்.

207 கிணறு குளம் வெட்டுதலால் மோக்ஷம் உண்டாகும். அக்நிஹோத்ரம் வேதபரிபாலநம் இவைகளால்

முக்தி, கங்காதி தீர்த்தங்களில் தானம். விசேஷ மான பாத்ரத்தில் தானம் செய்தால் விசேஷ பலன் உண்டாகும். பலவகை வஸ்துக்களில் விஷ்ணு முதலிய தேவதா ஸ்வரூப அமைப்பு. கிருதாதி யுகங்களில் தானமுறை.

208 துலா புருஷாதி 16 மஹாதானங்கள். நெய் வெல்லம் முதலிய தானங்களும், அவைகளின் பலனும்.

209 ஆயிரம் கோதானத்தால் ஸுவர்ண விமானத்தில் கந்தர்வர்களால் துதிக்கப்படுவான்.

210 வீடு மடம் ஸபை முதலிய தானமும். அதன் பயனும்

211 யானை குதிரை அன்னதானம் இவைகளின் மஹிமை.

212 மேருதானம். பலவகை அன்னதானம் பல தாதுக்களாலாகிய மேருதானம். ரத்நமேருதானம்.

213 பூமிதானம். 214 மந்திர மஹிமை. 10 நாடீவர்ணம் அவைகளின் இடம், கார்யம். பிரும்மாதி தேவர்களை ஸ்தாபித்தல். சிறியதும் பெரியதுமான மண்டப நிர்மாண பலன்.

215 ஸந்த்யாவிதி. காயத்ரீ மஹிமை. லக்ஷஜபத்தால் ஸித்தி.

216 காயத்ரீ ஜபம். பூ முதலிய வியாஹ்ருதி லக்ஷணம்.

217 காயத்ரீ மஹிமை, ஸுவர்ண லிங்க ரூபியான மகா தேவஸ்துதி. வஸிஷ்ட வரபிரதானம்.

218 ராஜாபிஷேகம். வெள்ளி ஸுவர்ண குடங்களால் அபிஷேகம் செய்தல்.

219 பிரும்மா ஆதித்யன் ஸ்வாயம்புவமநு ஆகியவர்களின் அபிஷேக மந்திரங்கள்.

220 ஸேநாபதி ஸப்யர் ஆகியவர்களின்லக்ஷணம். தர்மாதி கார்யங்களில் யாரை நியமிப்பது? வேலைக்காரனைப் பரீக்ஷை செய்தல். பரீக்ஷிக்கும் வகை.

221 ராஜஸேவகர். வேலைக்காரர்களின் கடமை.

222 கோட்டை நகரம் முதலிய நிர்மாணம். அரசன் தன்னையும் கோ பிராம்மணர்களையும் ரக்ஷித்தல்.

223 கிராமாதிபதி. குடிகளைக் காத்தல். யாரை சிக்ஷிப்பது? யாரை விடுவது?

224 ஸ்திரீகளிடம் அதிக ஆசைவைக்காமை. உடலின் ஆரோக்யத்திற்கேற்றவேலை. எத்தகைய ஸ்திரீயை மணக்கலாம்? விளாங்காய் முதலிய 6 பொருள்களை ஸேவித்தல். சிருங்காரத்தை விருத்திசெய்யும். தூபம். ஸ்நாநம். ஓஷதிகள்.

225 அதிகாரிகளாக்கத்தக்கவர்? மித்ரலக்ஷணம். விடத்தக்க காரியங்கள். 7 அங்கமுள்ள ராஜ்யம்.

226 ஸாம தாந பேத தண்டம் எனும் 4 உபாயங்கள் ஷைபலன்.

227 நாணய அளவு. மாஷம் கார்ஷம் முதலியன. பிராம்மண க்ஷத்ரியர்களுக்குத் தனியான சிக்ஷை. பசு யானை முதலியவைகளைத்திருடியவருக்கு சிக்ஷை.

228 யுத்தத்திற்கு எந்த திக்கை நாடி புறப்படவேண்டும்? உடலில் தோன்றும் சகுந அபசகுநங்கள்.

229 சுப அசுப ஸ்வப்நம். துஸ்வப்ந சாந்தி.

230 ப்ரயாண காலத்தில் அசுப சுப சகுநங்கள். விஷ்ணு பூஜையால் அபசகுநங்களை அகற்றல். வெள்ளை புஷ்பம் சுபமானது.

231 ஆறு வகை சகுநங்கள். பசு ஒட்டை பாரத்வாஜ. ஸாரங்கம் கோட்டான், சரபம், பூனை முதலியவைகளால் தோன்றும் சுப அசுப சகுநங்கள்.

232 யுத்த பிரயாணகாலத்தில் கவனிக்கவேண்டியசகுநம்.

233 ராஜ விஜயத்திற்கு உசித காலம். நிஷித்தகாலம்.

234 ஆறுவகை குணம், இரண்டுவகை சிக்ஷை. சத்ருவை நடுங்கவைக்கும் இந்திர ஜாலம்.

235 அரசனின் நித்ய கர்மா.

236 முதல் ஏழுநாள் தனித்தனி தேவ பூஜை. கணேசனுக்கு மோதகம். ஜயத்திற்காக ஸ்நாநம். 7வது நாள் திருவிக்ரம பூஜை. யுத்தத்திற்குக் கிளம்புதல் 10 வகை வ்யூகங்கள். ஸேனையை எப்படிநிறுத்துவது? வெற்றிவந்தபின்னும் கோ தேவ பிராம்மண பூஜை. தோற்ற பகைவனைப் புத்திரனைப்போல் ரக்ஷித்தல்.

237 சக்ரன் துதித்த லக்ஷ்மீ ஸ்துதியைப் பாராயணம் செய்வதால் தோன்றும் பலன்.

238 4 வகையாகப் பொருள்தேடல். அடக்கம் தநம் தரும். காமாதிகளை வெல்வது: தர்க்கம். அர்த்த சாஸ்திரம்.

239 ராஜகுணம். ஆத்ம ஸம்பத்குணம். மித்ர தர்மம். தாஸன்பணி. 8 வர்க்கங்களைக் காக்கும்முறை.

240 6 குணங்கள், 12 ராஜ மண்டல அமைப்பு, ஸந்தி விக்ரஹம். 5வகை துவேஷம். 5வகை வாஹநங்கள்.

241 மந்திராலோசனை. கர்மஸித்தி லக்ஷணம். 3 வகை தூதர். 5 வகை நாயகர். மந்திரி. கோட்டை. பொக்கிஷம். குழந்தைகள். இவர்களது பாலநம். 5 வகை தாநம். சத்ருவைப் பயப்படுத்த இந்திர ஜாலத்தை உபயோகித்தல்.

242 ராஜநீதி. யுத்த தர்மம். வியூக அமைப்பு. கோமூத்ரம் போன்ற வியூஹத்தின் லக்ஷணம்.

243 புருஷ லக்ஷணம். 3 இடத்தில் வணக்கமுள்ளவர் உத்தமர். 244 பெண்களின் லக்ஷணம்.

245 பத்ராஸநம். சாமரம். கத்திபூஜை. கத்தி. தநுஸ் லக்ஷணம்.

246 ரத்ந பரீக்ஷை. அரசனுக்கேற்ற ரத்நம். வஜ்ரம் முத்து இந்திரநீலம் முதலியவைகளின் லக்ஷணம்.

247 வாஸ்து லக்ஷணம். வாஸ்து கர்மாவிற்கேற்ற பூமி. பூமியைத் தோண்டி இந்திராதி தேவர்களை ஆவாஹநம் செய்தல்.

248 எந்தெந்த புஷ்பங்களால் பூஜித்தால் என்னென்ன பலன் உண்டாகும்?

249 5 வகையான தநுர்வேதம். மந்திரம். எப்படி பாணத்தைத் தரிப்பது?

250 தநுர்வித்யை கற்பது, குறியை எப்படிப்பார்த்து அடிப்பது ?

251 கத்தி கேடயம். பிராந்த உத்ப்ராந்த முதலியவை.

252 எந்தெந்த வாஹநங்களில் எப்படி ஏறுவது ?

253 நீதி, யுத்தம். கபடயுத்தம். நிதியைத்தேடி எடுத்தல். யுத்த காலத்தில் பொருள் வாங்கும் முறை.

254 கடன் வாங்கி வட்டியுடன் அளித்தல். வியாபாரம்.

255 ஸாக்ஷி லக்ஷணம். பொய் ஸாக்ஷிக்குச் சிக்ஷை. எழுதி கொடுத்து கடன் வாங்கல். 7 அரச இலைகளில் நூல்களால் தீமயமான இரும்பைத் தூக்கச் சொல்லி பரீக்ஷித்தல்.

256 தாயவியாகம். தந்தைக்குப் பின் புத்திரர் ஸமமாக பாகம் பிரித்தல். வித்யையால் தேடிய தநத்தில் பங்கு. இறந்தவன் பொருளுக்கு யார் அதிகாரி? ஸ்தரீதநம் யாரைச் சார்ந்தது? ஆபத்காலத்தில் புருஷனும் அதை எடுத்துக்கொள்ளலாம்.

257 எல்லைப்பற்றிய வியவஹாரம். பொய் சொன்னவருக்கு சிக்ஷை. வேலைக்காரருக்கு ஊதியம் அளித்தல்.

258 கடுமையாகப் பேசுவது. மாநநஷ்டம் இவைகளுக்கு சிக்ஷை.

259 காயத்ரீ ஜப விதி. "அக்நிமீளே" என்ற மந்த்ர ஜப பலன்.

260 யஜுர்வேத மந்த்ர ஹோமம். அதன் பலன்.

261 ஸாமவேத—"யத இந்த்ர பயாமஹே" என்ற ஜபம் ஹிம்ஸா தோஷத்தை அகற்றும். ஸர்பஸாம ஸர்ப்ப பயத்தை அகற்றும்.

262 ஹோமவிதி. 263 உத்பாத சாந்தி. சிரீஸூக்த ஜபம் செல்வந் தரும். அமிருத அபயசாந்தி எல்லா உத்பாதங்களையு மகற்றும். கொள்ளிக்கட்டை விழுதல், அகால பிரஸவம், விகார பிரஸவம், ஆகாயத்தில் பயங்கர சப்தம் ஆகியவைகளுக்குச் சாந்தி.

264 தேவபூஜை. வைசுவதேவம் விஷ்ணு பூஜை. பிண்டம் பிடித்தல்.

265 தேவாலய ஸ்நாநம். கலசத்தில் நீருடன் ஓஷதிகளை வைத்து ஜபம். அந்த ஸ்நாந பலன்.

266 கெட்டகனவை அகற்ற ஸ்நாநம். மலடு தோஷத்தை அகற்றும் ஸ்நாநம். விநாயக ஸ்நாநம்.

267 மகேச்வர ஸ்நாநம். லக்ஷகோடி ஹோமம். அரசர் வெற்றிபெற மாகேச்வர ஸ்நாநம். சூலபாணி பூஜை. ஹோமம். நெய் ஸ்நாநத்தால் ஆயுஸ் விருத்தி. விஷ்ணுபாத ஜலஸ்நாந மஹிமை. "அவ க்ரந்தநி" ஸூக்தத்தால் கங்கணந் தரித்தல். நெய் யால் பகவானுக்கு அபிஷேகம். தூப தீப உப சாரம்.

268 நீராஜநவிதி. ஜன்ம நக்ஷத்ரத்தில் ராஜ கார்யம். அகஸ்த்ய உதயத்தில் அகஸ்த்ய பூஜை. சாதுர் மாஸ்யத்தில் விஷ்ணு பூஜை. விஷ்ணு சயநம் உத் தாபநம் இவைகளில் 5 நாள் உத்ஸவம். ஆவணி சுக்லபக்ஷத்தில் சக்ர துவஜஸ்தாபநம். இந்திராணி பூஜை. லக்ஷ்மீ ஸ்துதி. பத்ரகாளீ பூஜை.

269 குடைமுதலிவைகளை பிரார்திக்கும் மந்திரம்.

270 விஷ்ணு சக்ரம், கதை முதலியவைகளின் வர்ணனை. யக்ஷ ராக்ஷஸரைக் கொல்லும் ஹரி ஸ்துதி.

271 வேத சாகைகள். ரிக்மந்திர லக்ஷணம். ரிக்வேத சாகைகள். எல்லா புராணங்களிலும் ஆக்நேயம் சிறந்தது.

272 புராண தாந மஹிமை.

273 ஸௌரிய வம்சம். கச்யபர். விவஸ்வான் மற்ற அரசர்.

274 சந்திர வம்ச அரசர். விஷ்ணு பிரும்மா அத்திரி சந் திரன் ராஜஸூயம். சந்திரனது அழகு. புதன் அவனது வம்சம்.

275 யது ஸஹஸ்ரஜித் ஸ்யமந்தகமணி. பாண்டவர்.

276 சுருக்கமான கிருஷ்ணவதாரங்கள். நரஸிம்மாவ தாரம். 277 ராஜ வம்சம்.

278 பூரு வம்சம். ஜநமேஜயன். சந்தநு. பீஷ்மர்.

279 ஸித்தௌஷதிகள். ஜ்வரம் கீழே சென்றால் வாந் திக்கும், மேலே ஏறினல் பிரவிருத்திக்கும் மருந் தளித்தல். வாதரோகத்திற்கு தக்ராரிஷ்டம்.

280 ஸர்வரோகங்களையும் அகற்றும் ஓஷதி. உடலிலும் மனதிலும் நோய் வரும் வகை. ஞாயரன்று நெய் வெல்லம் முதலிய தாநம். சிசிராதி ருது தர்மம். வாத பித்த சிலேஷ்ம நாடீ லக்ஷணம்.

281 ரஸ லக்ஷணம். கஷாய கல்பம். லேஹ்யம். சூர ணங்களின் குணம். அஜீர்ணம். அச்சமயம் சிரம மான வேலை கூடாது. தேஹப் பயிற்சியால் கபம் முதலியன அகலும்.

282 விருக்ஷ வைத்யம். ஆலமரம் வடபுறம் விருத்தி யானால் சுபம். பிராம்மணனையும் சந்திரனையும் பூஜித்து மரம் வைக்கவேண்டும். பழமும் புஷ்பமும் விருத்தியாக காலை மாலைகளில் மரங்களுக்கு சூடு காட்டல். சில பிராணிகளின் மாம்ஸத்தாலும் நெய் யாலும் சிகித்ஸை.

283 பலவகை ரோகங்களை அகற்ற ஸிம்ஹீஸமீகஷாயம். பாலரோகஹர மருந்து. மூலத்திற்கு மோர் சிகித்ஸை. நீர்ரோக மகல மருந்து.

284 நோயை அகற்றி ஆயுளை விருத்திசெய்யும் மந்திரம்.

285 இறந்தவரை எழுப்பும் ஸித்தயோகம். வாத ஜ்வரத் திற்கு பில்வம் முதலிய ஓஷதி கஷாயம். கண்ட மாலாரி தைலம். பெண் நோய்க்கு மருந்து. குருட்டை அகற்றும் மை.

286 ஸகல நோய்களையு மகற்ற திருபலாதி சூர்ணம். குஷ்டத்தை அகற்றும் கஷாயம். அஸிதாளகதா தைலம்.

287 யானை வைத்யம். கஜலக்ஷணம். மதத்தை அகற் றவும் உண்டுபண்ணவும் மருந்து. யானை கண் ணுக்கு மை.

288 குதிரை ஏற்றம், லக்ஷணம், வைத்யம்.

289 மாதுளை திரிபலை முதலிய புஷ்டிகரமான மருந்து. வீக்கம்வடிய லேபநம். 290–291 கஜவ்யாதி சாந்தி.

292 கோ வ்யாதி சாந்தி. பசு சாணியின் மஹிமை. பசு வுக்குப் புல்லளிக்கும் புண்ணியம். மஹா ஸாந்தபந கிருச்ர விருதம். கோவினிடம் தேவர் வஸித்தல்.

293 ஸ்திரீ மந்திரம், புருஷ மந்திரம். நபும்ஸக மந்தி ரம். அவைகளின் லக்ஷணம். குரு லக்ஷணம். சிஷ்ய லக்ஷணம். கபடமாக கற்ற மந்திரம் பலியாது. ஜபவிதி. அங்கம் முக்யம்.

294 ஸர்ப்ப பேதம். சேஷ தக்ஷக வாஸுகி முதலியவர் முக்யமானவர். பிரயாணத்தில் பாம்பு சகுநம்.

295 2 வகை விஷம். விஷக்கடி வைத்யம். கருட மந்திரம்.

296 விஷத்தை அகற்றும் பஞ்சாங்க ருத்ர மந்திரம். குப்ஜிகா முதலிய தேவதா மந்திரம்.

297 விஷத்தை அகற்றும் மந்திரமும் மருந்தும்.

298 கோநாஸாதி சிகித்ஸை, மந்திரத்துடன் மருந்து.

299 பாலபீடா பரிஹாரம். ஷை தூபம். பாலக்ரஹ ஹர மந்திரம்.

300 குரு கோபத்தாலும் தேவ கோபத்தாலும் 5 வகை பைத்தியம். பாழான வீட்டில் துஷ்ட கிரஹம் வஸித்தல். துஷ்ட க்ரஹங்கள் கர்ப்பிணியைப் பீடித்தல். ஸௌர்யாதி பூஜை. அஞ்ஜனம்.

301 ஸௌர்ய பூஜா. கணபதி பூஜா.

302 இழந்த ராஜ்ய மல்லது பொருளைப் பெற மந்திரம். ஒருவரை வசியப்படுத்த மத்திரமும் ஓஷதியும். லேபமும் கோரக்ஷண மந்திரமும்.

303 வாஸுதேவ பூஜா விதி. அங்காக்ஷர அர்ச்சநம்.

304 பஞ்சாக்ஷரீ பூஜா மந்திரம். தீக்ஷா விதி. யோகபீடம் தத்புருஷாதி மூர்த்தி. தீக்ஷா நாமம்.

305 55 விஷ்ணு நாம. 306 நரஸிம்ம மந்திரம், அதனுல் துஷ்ட கிரஹம் மாரீமுதலிய சாந்தி.

307 திரைலோக்ய மோஹந மந்திரம்.

308 திரைலோக்ய மோஹிநீ லக்ஷ்மீ மந்திரம் பூஜா.

309–312 துவரிதா பூஜா. ஷை தியாநாதி.

313 பல்வகை மந்திரங்கள். சத்ரு உச்சாடந விதி. கௌரீ மந்திர அநுஷ்டாநம்.

314 துவரிதா மந்திரத்தால் நிக்ரஹ அநுக்ரஹ சக்ரம்.

315 ஸ்தம்பனம் செய்ய மந்திரம்.

316 பாம்புகடியால் இறந்தவரை எழுப்ப மந்திரம்.

317 பிரும்ம பஞ்சகம். பிராஸாத மந்திரம். பஞ்சாங்க ஸதாசிவம்.

318 கணபூஜை. சிவ காயத்ரீ, துவார உபதுவார கண பதி. ஜபஹோம பூஜை.

319 வாகீச்வரீ ஜப பூஜை ஹோமம். கபிலா ஆஜ்ய ஹோம பலன்.

320 ஸர்வதோபத்ரம் முதலிய மண்டலம்.

321 அகோராஸ்திர சாந்தி. சிவாஸ்திர பூஜை. உத்பாத விநாசக அஸ்திர சாந்தி.

322 பாசுபத சாந்தி. 323 ஆறு அங்கத்துடன் அகோ ராஸ்திரம். வசீகரண மந்திரம். சதாவரீ (தண்ணீர் முட்டாங் கிழங்கு) சூரணம் புத்திரனை உண்டு பண்ணும். மஹாமிருத்யுஞ்ஜய மந்திரம்.

324 ருத்ர சாந்தி. ஷை பலன்.

325 ருத்ராக்ஷதாரணம். அம்சம்.

326 கௌரீ பூஜா மந்திரம். தியாநம். முத்ரை. ஷை பலன்.

327 தேவாலய மாஹாத்மியம். யமலஜபவிதி. செல்வத் திற் கேற்ற அளவு ஆலயமமைத்தல் அவசியம்.

328 சந்தஸ்ஸின் ஸாரம். (விருத்தம்)

329 காயத்ரீ ரிக்கின் பேதங்கள். சந்தஸ் நிரூபணம்.

330 பாத பேதத்தால் சந்தஸ் பேதம். சந்தஸ்ஸின் தேவதைகள்.

331 உத்கிருத்யா முதலிய சந்தஸ்ஸின் ஜாதி நிரூபணம்.

332 விஷம விருத்தம். 333 பாதி ஸமவிருத்தம்.

334 ஸம விருத்தம். 335 பிரஸ்தார நிரூபணம்.

336 சிக்ஷா. கண்டஸ்தாநம் முதலிய இடங்கள்.

337 காவிய லக்ஷணம். வசநம், சுலோகம், வசநமும் சுலோகமும் என 3 வகை. ஆக்யாயிகா பேதத் தால் கத்யமெனும் வசநம் 5 வகை. மகா காவிய லக்ஷணம்.

338 நாடகம், பிரகரணம், நாட்யம், நாந்திமுகம், நடீ, விதூஷக முதலிய பாத்ரங்கள். கதையின் உபோத் காதம். ஸித்த, உத்பிரேக்ஷித முதலியன.

339 சிருங்காராதி ரஸம். ரதி ஹாஸ ஆலம்பநம். உத் திபநம். தீரன் உதாத்தன் முதலிய நாயகர். பாஷணம்.

340 ரீதி பாஞ்சாலி கௌடீ முதலிய பேதம்.

341 நிருத்தியத்தில் அங்க கர்ம. காமினிகளின் லீலா விலாஸம். சரீர சேஷ்டை. 13 வகை சிரஸ்கம்பநம். அகம்பநம். 7 வகை பூகர்மா. 9 வகை தாரகாதி கர்மா.

342 அபிநய லக்ஷணம். ரஸவிநியோகம். ஸம்போக விப்ரலம்ப என 2 வகை சிருங்காரம். கருணாதி ரஸம். சப்தாலங்காரம்.

343 அநுப்ராஸம். சக்ர பந்தம். கோமூத்ரிகா பந்தம்.

344 அலங்காரம். ஸாந்செயாலங்கார லக்ஷணம்.

345 சப்த அர்த்த அலங்காரம். 346 ராகலக்ஷணம்.

347 காவிய தோஷம் 7 வகை. கவிகள் கையாளாததும் நல்லதல்லாததுமான சொற்களைக் கையாளக் கூடாது. ஸந்தி தோஷம்.

348 ஏகாக்ஷரீ மந்திரம். மாத்ருகா மந்திரம். நவ துர்கார்சநம்.

349–359 வியாகர்ண சாஸ்திர விரிவு.

360–367 நிகண்டு (அமரம் போன்றது).

368 நித்திய நைமித்திகாதி. 4 வகை பிரளயங்கள்.

369 ஆத்யந்திக லயம். கர்ப்ப உத்பத்தி. ஆத்யாத்மிக தாபம் 2 வகை. போக உடலைவிட்டு ஜீவன் கர்மா விற்கேற்றபடி கர்ப்பத்தில் நுழைதல். சுபாசுப கர்மபலன். கர்ப்ப வளர்ச்சி.

370 உடலின் தத்துவங்கள்.

371 புண்யம் செய்தவர்களுக்கு மேல்துவாரத்தால் பிரா ணன் போகும். பாபிகளுக்கேற்ற நரகம் யாதனை.

372 அஷ்டாங்கயோகம். பலாத்காரமாக பிறர் பொருளை அபகரித்தால் மிருக ஜன்மா. மநதை அடக்கி ஹரி பூஜை செய்தால் நற்கதி.

373 ஆஸந பிராணாயாம பிரத்யாஹாரங்கள்.

374 மநதில் விஷ்ணுவை தியாநம் செய்தால் முக்தி.

375 தாரணையின் லக்ஷணம். வாருணீ. தாரணா. ஐசாநி தாரணா. தாரணையால் ஸாதகனது கிலேசமகல்வது.

376 ஸமாதி, யோகி, ஸூர்யமண்டல வழியாக பிரும்ம லோகம் செல்வது. ஸதாசாரமுள்ள கிருஹஸ்தனும் அப்படியே.

377 பிரும்மக்ஞாநம். உடல் முதலியன ஆத்மாவல்ல. திருஷ்டா, போக்தா யார்? பிரும்மத்தை அறிந்தவனுக்கு முக்தி. 378 பிரும்மக்ஞாநம்.

379 யாகத்தால் தேவனுவான். தபஸ்ஸால் வைராஜஸ்தாநம். ஸன்யாசத்தால் பிரும்மபதம். வைராக்யத்தால் பிரகிருதியில் லயம். க்ஞாநத்தால் கைவல்யம் என 5 வகை கதி.

380 அத்வைத பிரும்மக்ஞாநம். கடைசி காலத்தில் எதை நினைக்கிருனே அந்த உடல் கிடைக்கும். நிதாகரிது ஸம்வாதம்.

381 கீதா ஸாரம். 382 யம கீதா. ஷை பலன்.

383 ஹேமந்த ரிதுவில் ஆக்நேய புராணம் கேட்டால் யக்ஞபலன் உண்டாகும். ஆக்நேய புராண விஷய கிரமம். புராணம் படிப்பவனைப் பூஜித்தல். புராண புஸ்தக தாந பலன்.

**ஆக்நேய புராண மூலக்ரந்த அநுக்ர மணிகா முற்றிற்று.**



# ஆக்நேய புராண அவதாரிகை.



அக்நியைப்பற்றி புகழ்வதாலும் அக்நி வஸிஷ்டருக்கு உபதேசித்ததாலும் இது ஆக்நேய புராணமெனப்படும். வஹ்நி புராணம் என்றும் அக்நி புராணமென்றும் இதைக் கூறுவர். வஹ்நி புராணம் என்ற பெயரால் கிடைத்த அத்யாயங்களையும் சுலோகத்தையும் கொண்டு ஒருவர் அச்சிட்டார். பதினெண் புராணத்தையும் பூர்ணமாக அச்சிடக்கருதிய வெங்கடேச்வரா ஸ்டீம் ப்ரஸ் பாம்பே என்ற விடத்தில் ஆங்காங்கு ஓலைச்சுவடிகளைத்தேடி ஒருவாறு 18 யும் அச்சிட்டனர். என்றாலும் அவைகளும் பூர்ணமானவை என கூற முடியவில்லை. இந்த ஆக்நேய புராணத்தைச் சார்ந்தது என்று முப்பது அத்யாயங் கொண்ட துலாகாவேரி மஹிமை தென்னாட்டில் கிரந்தாக்ஷரத்தில் காணப்படுகிறது. அது வஹ்நி புராணத்திலும் இல்லை. ஆக்நேய புராணத்திலுமில்லை.

அன்னிய அரசாங்கம் பாரத தேசத்தை அடிமைப் படுத்தி உயர்ந்த நூல்களைத் தான் மாத்ரமல்லாமல், ஜர்மன் முதலிய அன்னிய நாடுகளும் கொண்டுபோகும்படி விட்டு விட்டது. நம்மவர்களும் ஆங்கில மோஹங் கொண்டு இதைக் கவனிக்காமலிருந்து விட்டனர். இப்பொழுதும் இதில் மாறுதலில்லை. ஆளுகைமாறி இந்தியா வசமாயின பின்பும் இந்தியர் இந்தியராக இல்லாததால் இந்நூல்களைப்பற்றி கவலை கொள்ளவில்லை. இப் புராணங்களை நன்கு ஆராய்ச்சி செய்து அச்சிட அரசாங்கம் முன்வராததால் புராணமெல்லாம் கட்டுக்கதை ஆபாஸமானது என்று கூற இடம் ஏற்பட்டது.

நமது நாட்டு கலை கலாசாரம் பண்பாடு என பேசுவோர், இவைகளையும் நம் நாட்டுக் கலாசாரம் எனக் கருதி ஊக்கம் கொண்டால் உலகில் நாஸ்திகம் தலை எடுக்காது. நாடு நலம்பெறும். ஆக்நேயம் ஒரு சிறப்பான உயர் புராணம். இதில் இல்லாத விஷயமே இல்லை எனலாம். ராமாயணம் பாரதம் கீதை பாகவதம் ஹரிவம்சம் முதலிய நூல்களின் ஸாரமிதில் கூறப்படுகிறது. விரிவான இதன் அட்டவணையிலிருந்தே இதில் உள்ள

விஷயங்கள் எவ்வளவு உயர்ந்தவை என அறியலாம். இதைப் பாரத தேச நாகரிகத்திற்கு ஒரு சிறந்த சின்னமெனலாம். ஸகல கலைகளுக்கும் இது ஒரு விதைபோலாம். ஆராய்ச்சி முறையில் இதை நன்கு கவனித்தால் இம்மைக்கு வேண்டிய பல ஸாதநங்களைப் பெறலாம். முக்யமாகப் பொருளாதார மேன்மைக்குப் பேருதவி தரும் சிறந்தநூல் ஆக்நேய புராணம்.

வேதாங்கமான தநுர்வேதம் ஆயுர் வேதம் காந்தர்வ வேதமிவைகளை எளிய நடையில் எல்லோரும் அறியும்படி கூறுகிறது. இதிலிருந்தே சில்பம் வளர்ந்தது. நோய் அகல ஓஷதிகளுடன் தேவதா ஸ்தோத்ரங்களையும் வர்ணிக்கிறது. அரசர் மகுடஞ் சூட்ட விதி, ஹயக்ரீவாதி தந்திர சாஸ்திரம், ஆலய நிர்மாணம் தேவதா விக்ரஹ நிர்மாணம், காசி கயை பிரயாகம் முதலிய யாத்ராவிதி, யுத்த சாஸ்திரம் ஆயுத நிர்மாணம், விரணசிகித்ஸை, மந்திரத்தினுலேயே பகைவரை ஜயிப்பது, நாற்பது ஸம்ஸ்காரங்கள், உத்யாநம் தண்ணீர்பந்தல் சுமைதாங்கி குளம் வெட்டுவது போன்ற எண்ணிறந்த அரும்பெரும் விஷயங்கள் நிரம்பியது இது.

இந்திய மதாபிமானி அல்லது ஸ்ரீ மடாதிபதிகள் அல்லது பாரத அரசாங்கம் இதை ஒரு அக்ஷரங்கூட விடாமல் தேசீய பாஷைகளில் பிரசுரித்து ஆங்கில வைத்யர், ஆயுர்வேத வைத்யர், புராண ஆராய்ச்சியாளர், விக்ஞாந சாஸ்திரமறிந்தவர், ஆகிய ஒரு கூட்டத்தைக்கொண்டு பெரிய ஆராய்ச்சிசாலை அமைத்து எல்லாத்துறையிலும் ஆராய்ச்சி செய்தால் அரசாங்கம் நடத்தும் ஒவ்வொரு இயக்கத்திற்கும் பேருதவியாக இருப்பதுடன் ஸ்வல்ப செலவில் பெரும் பயனைத்தரும். பாரத தேசத்திற்கும் கலைக்கும் ஒப்பற்ற கீர்த்தியை உண்டுபண்ணும். புற்றுயிரளிக்கும்.

இதில் என்ன இருக்கிறது என்று சுருக்கமாகவிளக்கும் தொண்டு செய்யவே போதிய ஆதரவின்றி சிரமப்படுகிறது. இதை நன்கு பயன் படுத்தி விசேஷ பலனைப் பெறுமாறு நண்பர்களை வேண்டுகிறேன்.

**ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.**

# 10. ஆக்நேய புராணம்.

[அக்நி வஸிஷ்டருக்குக் கூறியது. 383 அத்யாயங்கள் 15000 சுலோகங்கள்.]

**श्रियं सरस्वतीं गौरीं गणेशं स्कन्द मीश्वरं।**
**ब्रह्माणं वन्हिमिन्द्रादी न्वासुदेवं नमाम्यहम् ॥**

ஸ்ரீ லக்ஷ்மீ ஸரஸ்வதி கௌரீ கணேசன் ஸ்கந்தன் ஈச்வரன் பிரும்மா அக்நி இந்திரன் முதலியவர்களையும் வாஸுதேவனையும் நமஸ்கரிக்கிறேன். நைமிசாரண்ய முநிவர்களுக்கு ஸூத புராணிகர் ஆக்நேய புராணத்தைக் கூறினர். குரு பரம்பரையை வழக்கப்படி வர்ணித்தார். பராபர வித்யைகளைக்கூறி நாரதர் வால்மீகிக்குக் கூறியதாக ஸ்ரீ ராமாயண கதையைக்கூறினர். வால்மீகியில் காணப்படாததை மாத்திரம் கூறுவாம். பதினேறு அத்தியாயம் ராமகதை கூறப்பட்டது.

**ராம கதையில் விசேஷம்.** ராமன் சிறுவனாக இருந்த போது விளையாட்டாக கூனியின் காலைப்பிடித்து இழுத்தார். அந்த கோபத்தினால் கைகேயியிடம் கலஹம் செய்து ராமரைக் காட்டிற்கு அனுப்பினாள். காக்கை ஸீதையை ஹிம்ஸித்து கண்ணை இழந்த கதை சித்ரகூடத்திலேயே கூறப்பட்டது. ராமாயண சுலோகங்கள் சில அப்படியே இங்கு இருக்கின்றன.

**ஹரிவம்ச கதாஸாரம்.**

பாரதத்தின் மிருதியான மூன்று பர்வாவும் 318 அத்யாயங்களும் உள்ள நூல் ஹரிவம்சமென்பது. விதிப்படி இதைப் பாராயணம் செய்து கதையும் கேட்டால் பாபம் அகன்று குழந்தை உண்டாகும். இந்த நூல் தனியாக க்ரந்த எழுத்தில் நம் நாட்டிலும், பாம்பேயில் நாகர எழுத்திலும் அச்சிடப்பட்டுள்ளது.

அதில் பெரும்பாலும் ஸ்ரீ பாகவதத்தில் கூறப்பட்ட கதைகளே காணப்படுகின்றன. பெயருக் கேற்றபடி

கிருஷ்ணனது வம்சமும் கண்டா கர்ணன் முதலியவர் சரிதங்களும் உள. யசோதையிடம் உண்டான மாயா தேவியின் நாமாக்களடங்கிய சுலோகத்தை மூன்றுவேளைகளிலும் ஜபித்தால் ஸகல இஷ்டங்களும் கைகூடும்.

**आर्या दुर्गा वेदगर्भा अंबिका भद्रकाल्यपि ।**
**भद्रा क्षेम्या क्षेमकरी नैकबाहुः नमामितां ॥**

ஆர்யா துர்க்கா வேத³கர்ப⁴ா அம்பிகா ப⁴த்³ர காள்யபி
ப³த்ரா க்ஷேம்யா க்ஷேமகரீ நைக ப³ாஹு: நமாமிதாம் ॥

55 சுலோகங்களால் ஹரிவம்ச சுருக்கத்தைக் கூறினர்.

**பாரதகதை** ஸாரத்தை இரண்டு அத்யாயங்களில் வர்ணித்தார்.

## புத்தாவதாரம்.

அஸுரரிடம் தோல்வி அடைந்த தேவர் பகவானிடம் சென்று சரணம் அடைந்தனர். பகவான் சுத்தோதநனுக்குப் புத்ரனாகத் தோன்றி வேததர்மத்தை விடும்படி தைத்யருக்கு உபதேசித்தார். பௌத்தர்களான தைத்யர்களைத்தவிர மற்றும் சிலர் வேதத்தைவிட்டவர்கள் உண்டு. ஆர்ஹத என்ற ஆசார்யனாகத்தோன்றி சிலரை வேத தர்மத்தைவிடும்படி செய்தார். அதனால் தைத்யர் புண்ய கர்மாக்களை விட்டு பாபங்களைச் செய்து நரகம் சென்றார்கள். கலியில்தோன்றி இவர்கள் வர்ணாச்ரம தர்மத்தைக் கெடுப்பர். கல்கியாக அவதரித்து பகவான் தர்மத்தை நிலை நாட்டுவார்.

அஷ்டவஸு, 11 ருத்தரர், 12 ஆதித்யர் தேவ அஸுர யக்ஷ நாக நர கருட ஸர்ப்ப முதலிய ஸ்ருஷ்டி விரிவாகக் கூறப்பட்டது.

திக்ஷை பூஜாவிதி ஜபம் ஹோமம் குண்டவிதி மூல மந்திரம் முத்ரை ந்யாஸம் இவைகளைப் பொதுவாகக் கூறி ஒவ்வொரு தேவதைக்கும் தனித்தனியாக இவைகள் வர்ணிக்கப்பட்டன. ஆசார்ய அபிஷேகம் பத்ரம் மண்டலம் முதலியவைகளைக்கூறி ஸர்வரோகங்களையும் அகற்றக்கூடிய ஸ்தோத்ரத்தைக் கூறினர். **குசாமார்ஜந விதி**

என்ற அது 45 சுலோகங்கள் உள்ளது. விஷ்ணுவி னுடைய உடலிலுண்டான தர்ப்பத்தால் நமது உடலைத் தடவிக்கொண்டு இந்த சுலோகங்களைக் கூறினால் ஸகல நோய்களையும் அது துடைத்துவிடும்.

**ओं नमः पुरुषार्थाय पुरुषाय महात्मने ।**
**अरूप वहुरूपाय व्यापिने परमात्मने ॥**
**हरामुकस्य दुरितं सर्वञ्च कुशलं कुरु ।**
**सर्वरोगाश्च रक्षांसि क्षयं यान्तु विभीषणाः ॥**

ஓம் நம: புருஷார்த்[2]தாய புருஷாய மஹாத்மநே
அரூப ப[3]ஹுரூபாய வ்யாபிநே பரமாத்மநே ।
ஹராமுகஸ்ய து[3]ரிதம் ஸர்வஞ்ச குசலம் குரு
ஸர்வே ரோகாஸ்ச ரக்ஷாம்ஸி க்ஷயம் யாந்து விபீ[4]ஷணா: ॥

இப்படி ஸகல பாபங்களையும் ரோகங்களையும் துஷ்ட கிருஹங்களையும் அழித்து க்ஷேமத்தைத் தரும்படியாக பிரார்த்திக்கும் சுலோகங்களில் இரண்டை உதாஹரணை மாகக்காட்டினோம். அமுக என்ற விடத்தில் நோயாளி பெயரைக்கூறவேண்டும்.

## 40 ஸம்ஸ்காரங்கள்.

எந்தப் பொருளும் அது தோன்றிய வண்ணமே இருந் தால், அதனிடம் இயற்கையாக அமைந்த குற்றங்களால் அவை பிரகாசிப்பதில்லை. அதனிடமுள்ள மலத்தை அகற் றினால் பிரகாசிக்கும். அப்படியே ஆத்மாவினிடமிருந்து மாயையால் உண்டான ஜீவன் பெற்றோரது தாது ஸம்பந்தத்தால் உடலைப் பெறுகிறான். ஜீவனும் உடலும் தோஷமுள்ளதாக இருக்கின்றன. சுரங்கத்திலிருந்து எடுத்த ஸுவர்ணம், தீயிலிட்டு சுத்தம் செய்தால் தோஷ மகன்று நிஜரூபத்துடன் பிரகாசிக்கிறது.

அங்ஙனமே பற்பல பிறவிகளைப் பெற்று முடிவான மானிட உடல் எடுத்த நம்மிடமுள்ள குற்றங்களை அகற்ற ஸம்ஸ்காரம் என்ற பெயரால் சில கர்மாக்களைக்கூறு கிறது சாஸ்திரம். அதே 40 ஸம்ஸ்காரம் என்பது. [இது பற்றி விரிவாக தனிநூல் இப்பெயருடனேயே வெளியிட்டிருக்கிறோம். விலை ரூ 1—4—0].

கர்ப்பாதாநம் முதல் ஆத்ம குணம்வரை 40 கர்மாக் களைச் செவ்வனே செய்தால் ஆநந்தமயமான ஆத்ம ஸ்வரூபத்துடன் சேறலாம். இதே நமது பாரத தேசத் திற்கும் ஹிந்து மதத்திற்கும் சிறப்பான பெருமையை அளிக்கும் அம்சமாகும். பிறப்புமுதல் சுத்தமாவதற்காக கர்ப்பாதாநம். கருவில் சுத்தமாகிவளர பும்ஸவந ஸிமந்தம். கர்ப்பதோஷமகல ஜாதகர்மா. இப்படி நாம கரணம் அன்னபிராசநம் சௌளம் உபநயநம் அஷ்ட விரதங்கள் ஸ்மாவர்த்தநம் ஸ்நாநம் பாணிக்ரஹணம் 7 பாகம் யக்ஞம் 7 ஹவிர் யக்ஞம் 7 ஸோம ஸம்ஸ்தை ஆகியவைகள் விரிவாக இங்கு வர்ணிக்கப்பட்டன.

## ஆலய விக்ரஹ நிர்மாணம்.

எங்கும் ஸர்வ வியாபியாக உள்ள கடவுளருளைப் பெற, பசுவின் உடலிலெல்லா விடத்திலுமிருக்கும் பால் மடியின் மூலமாக வெளிவருவதுபோல் ஒரு மூர்த்தி பூஜை கூறப்பட்டது. அது தனியே சுத்தமாக இருக்க ஆலய மும் அவசியமாகும். மநதிலுள்ளே தியாநம் செய்ய முடி யாதவர்க்காக அர்ச்சா என்ற மூர்த்தி வடிவமாக இருக்கி ருர் பகவான். இம் மூர்த்தியைக் கண்ணுல் கண்டு வாயால்பாடி மநதால் நினைப்பவர் ரூபமற்ற குணமற்ற எங்குமுள்ள பரமனைப்பெறுவது ஸுலபம். நடக்கத்தெரி யாத குழந்தைகளுக்கு நடைவண்டி தருவது போலாம் தேவதா மூர்த்தியும் ஆலயமும். மூர்த்தியை ஆலயத்தில் அல்லது வீட்டில் நன்கு பூஜித்தவர்க்கு தனது உடலே தேவாலயமாகும். உடலின் தத்துவத்தைக் கொண்டே ஆலய நிர்மாணமும் கூறப்பட்டது. ஹிருதயம்—மூலஸ் தாநம், வாய்—வாசற்படி, தலை—கோபுரம்.

சிவன் விஷ்ணு ஸூர்யன் கணேசன் தேவீ முதலிய வற்குத் தனித்தனியாக விசாலமான ஆலயம் அமைக்க வேண்டும். ஆலயம் அமைப்பவர் அந்தந்த தேவரது உலகம் செல்வர். பல்லாண்டு அங்கு பேராநந்தம் பெறு வர். வைராக்ய மிருந்தால் ஆங்கிருந்தே முக்திபெறுவர். சுக ஆசையுள்ளவர் பூமியில் சக்ரவர்த்தியாகவோ அவ ருக்குச் சமமான செல்வம் உள்ளவராகவோ பிறப்பர். ஆலயம் அமைக்க சக்தி இல்லாதவர் ஆலய ஸேவை

செய்து நற்கதி பெறலாம். ஆலயத்திற் கேற்ற பூமி, ஆலய அமைப்பு, விமானுதிகள், மாடமாளிகை, கூட கோபுரம், மண்டபங்கள், மூர்த்திகளின் லக்ஷணம், அளவு அமைப்பு முதலியவைகள் விரிவாகக் கூறப்பட்டன. [சில ஆலயம் சிற்சில தேவரால் அர்ச்சிக்கப்பட்டது. அமைக்கப்பட்டதென ஐதிஹ்யமுண்டு. ஸூர்யன் பூஜை செய்ததாகக் கூறப்படும் கும்பகோணம் ஈரோடு பனேய வரம் முதலிய இடங்களில் குறிப்பிட்ட சில நாட்களில் மாத்திரம் ஸூர்யன் உதயமானவுடன் கோபுரத்திலிருந்து வெகுதூரத்தில் உள்ளே உள்ளதும் பல மண்டபங்களால் மறைக்கப்பட்டதுமான மூலஸ்தாந லிங்கத்தின் மீது ஸூர்ய கிரணம்படுகின்றது. ஸூர்யனுடைய கதியைக் கணக்குசெய்து அதற்கேற்றபடி ஆலயம் அமைத்து இப்படிச் செய்த சில்பிகளுக்கு ஆக்நேய புராணமே பிரமாண நூலாகும். தஞ்ஜை பிரஹதீஸ்வரர் மூலஸ்தாந விமானத்தின் நிழல் எப்பொழுதும் எந்தவிடத்திலும் விழாதபடி அமைக்கப்பட்டிருக்கிறது. வித்யாரண்யரால் சிருங்கேரியில் கட்டப்பட்ட ஆலயத்தில் மேஷம் ரிஷபம் என்ற அடையாள முள்ள 12 தூண்களில் பனிரண்டு மாஸங்களிலும் அந்தந்த மாதத்தில் அந்தந்த தூணில் காலையில் ஸூர்யகிரணம் விழும்படி அமைக்கப்பட்டிருக்கிறது. தெய்விகமான நம்பிக்கை இல்லாவர் கூட கண்ணெதிரே காணப்படும் இவைகளைக் கண்டு சில்ப சாஸ்த்ரத்தின் பெருமையைக் கொண்டாடாமலிருக்க முடியாது]

கோபுரம் மதல் விக்ரஹம் இவைகளுக்கேற்ற கற்களைத் தேர்ந்தெடுக்கும் முறை உலகம் கொண்டாடும் வகையில் அமைந்துளது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்ட ஆலயங்கள் அழிவின்றி இருக்கின்றன. விக்ரஹங்களின் அமைப்பைப் பற்றி கூறும் பொழுது இன்ன இன்ன அவயவங்கள் இவ்வளவு அங்குல முள்ளதாக இருக்கவேண்டும் என்கிருர். சிலவிடத்தில் உருவின் நகம் நரம்பு முதலியவைகள் நமது கண்களுக்கும் தெரியும்படி அமைந்திருக்கின்றன. சில்பசாஸ்திர மறிந்த சில்பி அழகிய உருவமமைத்து தேவதா ஸ்வரூபத்தைக் கண்முன்னே நிறுத்துகிருன். வேத மறிந்த வேதியன் அருள் சுறக்கும் தேவதா ஸான்னித்யத்தை அமைக்கிருன்.

பக்தியுள்ள பக்தன் இவ்விரண்டுகளாலும் நன்மை அடைகிறன். [எண்ணிறந்த அன்ய நாட்டினர் இவைகளைப் புகழ்கின்றனர்].

## ஸாளக்ராம லக்ஷணம்.

மனிதனது ஸாமர்த்யத்திஞல் சாஸ்திரத்தைக்கொண்டு அமைக்கப்பட்ட தேவ விக்ரஹங்கள் ஒருவாறு இருக்க இயற்கையாகவே தேவத்தன்மை அமைந்த சிலைகளின் பெருமை சொல்லிலடங்காது. கண்டகி நதியில் உருக்கி வாத்த லோஹம்போல் வழுவழுப்பாகவும் உள்ளே பல வகை சக்ரங்கள் அமைந்ததாகவும் சிறியதாகவும் பெரியதாகவும் ஸாளக்ராம சிலைகள் கிடைக்கும்.

கறுப்பாகவும் மேலும் கீழும் இரு சக்ரம் உள்ளே அமையப் பெற்றதுமான ஸாளக்ராமம் வாஸுதேவன். இதேபோல் சிவப்பு வர்ணமானது ஸங்கர்ஷணமூர்த்தி. சக்ரம் சிறியதாகவும் பல துவாரமுள்ளதும் கறுப்பானதும் சிறிது நீளமாகவும் உள்ளது பிரத்யும்ந மூர்த்தி. வர்த்துளமாகவும் மஞ்சள் வர்ணமாகவும் தாமரைபூ போன்ற இரண்டு மூன்று கோடுள்ளதுமாயிருப்பது அநிருத்த மூர்த்தி. கறுப்பாகவும் உயரமில்லாததும் தீர்க்கமான துவாரம் உள்ளதுமான சிலை நாராயணன். தாமரை போன்ற சக்ரமுள்ளதும் புள்ளி உள்ளதும் பின்புறத்தில் துவாரமுள்ளதாகவும் இருப்பது பரமேஷ்டி.

பெரிய சக்ர முள்ளதும் இடையில் கதாயுதம் போல் கோடுள்ளதும் கறுப்பாயு முள்ளது விஷ்ணு. பெரிய சக்ரம் ஐந்துபுள்ளிகள் கபில வர்ணமுள்ளது நரஸிம்மம். அங்குச ரேகை புள்ளி கறுப்புவர்ண முள்ளது ஹயக்ரீவர். ஒரு சக்ரம் உள்ளது ஸுதர்சநம். இரண்டுள்ளது லக்ஷ்மி நாராயணன். மூன்றுள்ளது திரிவிக்ரமனும் அச்யுதனுமாம். நான்குள்ளது ஜநார்த்தநன். ஐந்து வாஸுதேவன். ஆறு பிரத்யும்நன். ஏழு ஸங்கர்ஷணன். எட்டு புருஷோத்தமன். ஒன்பது நவவ்யூஹமூர்த்தி. பத்து தசாவதாரம். பதினென்று அநிருத்தன். பனிரண்டு துவாதசாத்மா அல்லது அநந்தன்.

இருபத்துநான்கு வகையான விஷ்ணு மூர்த்திகளின் ஸ்தோத்ரம், தேவீ விக்ரஹங்களின் லக்ஷணம், விநாயகர்

ஸுப்ரமண்யன் நான்முகமுள்ள ருத்ர சாமுண்டா, நந்தி, ஸூர்யன், வருணன், யோகிநி, பைரவர், வீரபத்ரர், எட்டு வகையான சிவலிங்கம், இவைகளின் லக்ஷணம் அமைக்க வேண்டியவகை முதலியன கூறப்பட்டன.

மூர்த்திகளுக்கு ஜலாதி வாஸம் தான்யாதிவாஸம். சுத்தி, கண் திறப்பது, கும்பாபிஷேகம், பிராண பிரதிஷ்டை, ஸ்நபநம், ஷோடச உபாசாரத்திற் கேற்ற வேத மந்த்ரங்கள், குடை, சாமரம் முதலிய எட்டு மங்கள வஸ்துக்கள், ஸகலீகரணம், நியாஸம், கர்ப்பகிருஹம், மூலஸ்தாந விக்ரஹத்தின் அடியில் நவரத்நங்களை வைத்தல், பெண் சிலை, ஆண் சிலை, நபும்ஸக சிலை, துவாரப்ரதிஷ்டை, துவாரபாலகர், துவஜஸ்தம்பம், ஒவ்வொரு தேவதா பிரதிஷ்டைக்கும் தனித்தனி மந்திரம், புஸ்தகத்தில் ஸுவர்ண மல்லது வெள்ளி மஷியால் ஐந்து சுலோகங்களை எழுதி பூஜித்தல், அதைத் தாநம்செய்தல், கோதாநம் பூதாநம் ஸரஸ்வதி தாநம் இவை மூன்றும் அதிதாநம். இவை இருபத்தோரு தலைமுறை நற்கதி அளிப்பன.

## கிணறு வெட்டுதல்.

பகவான் விஷ்ணு, ஜலமயமானவர். ஜலத்தில் படுத்திருப்பவர். தண்ணீர்ப்பந்தல் குளம் கிணறு முதலியவைகளால் தாஹமுள்ளவருக்கு நீரளிப்பது, பகவானையே தாநம் செய்வதாகும். வருண தேவதையின் உருவை அவைகளின் கரை மீது பிரதிஷ்டை செய்யவேண்டும். நீர் அருந்துபவர்களது தாஹம் அடங்குவதுபோல் இவைகளைத் தாநம் செய்பவரது தாபம் அகலும். தண்ணீர்ப்பந்தலமைப்பதைவிட கிணறு வெட்டுவதும் அதைவிட நடபாவி எனும் வாபீ அமைப்பதும் அதைவிடத் தடாகம் அமைப்பதும் அதிகமான புண்யத்தைத் தரும். பசுக்கள் நாம் வெட்டிய குளத்தில் இறங்கி நீர் குடித்தவுடன் அன்றுவரை நாம் செய்த ஸகல பாபங்களும் அகலும்.

## ஸபை அல்லது மண்டபம்.

நாலு வீதிகள் கூடுமிடத்தில் விசாலமான ஸபை அமைப்பது பெரும் புண்யம். அது வெய்யில் மழையில் கஷ்டப்படுவோர் தங்கவும், புராண காலக்ஷேபம் செய்யவும், பிரும்மோத்ஸவத்தில் ஸ்வாமிவந்து தங்கவும் பயன்

படவேண்டும். ஆலயம் மண்டபம் குளம் கிணறு உத்யானம் முதலியவைகளை ஒருவன் புதிதாக ஆரம்பிப்பதைவிட ஏற்கனவே அமைக்கப்பட்டவை அழியும் நிலைமையில் இருந்து அதைப் பழுதுபார்த்துப் புதிதாகும்படிச் செய்தால் புதிதாகச் செய்வதைவிட நூறுபங்கு அதிகப் பயனைத்தரும்.

கணேச பூஜை சூரிய பூஜை சிவ பூஜை முதலியவைகள் தனித்தனியாக வர்ணிக்கப்படுகிறது. முப்பத்திரண்டு லக்ஷணங்களுடன் உள்ள மூர்த்திகளையே பூஜிக்க வேண்டும். வைதிக கர்மங்களை அக்நியில் செய்வது போல ஆலய பூஜையில் நித்தியம் அக்நி ஹோமம் செய்யவேண்டும். வீட்டில் உள்ள பூஜைகளைச் செய்து பலனைநாடி விரதமும் செய்தால் அது பூர்த்தியாகின்றபோது உத்யாபநம் செய்து அக்நிபூஜை செய்து அந்தந்த தேவதைகளின் மூலமந்திரத்தைக் கூறி ஹோமம் செய்ய வேண்டும்.

## சண்டிகேச பிரதிஷ்டை.

ஒவ்வொரு சிவாலயத்திலும் அபிஷேக ஜலம் விழும் இடத்திற்கு (கோமுகி) எதிரில் சண்டிகேசரைப்பிரதிஷ்டை செய்யவேண்டும். சிவ நிர்மால்யமே இவருக்கு நிவேதநம். ஸதா சிவதியாநம் செய்துகொண்டிருப்பவர் இவர். பக்தர்களது பக்திக்கேற்ற வண்ணம் பலனைத் தருபவரும் இவரே. அவரது தியாநத்தைக் கலைக்காமல் மெதுவாகக் கையைத் தட்டி ஸேவா பலத்தைத் தாரும் எனக் கேட்க வேண்டும். இவரது பூஜைக்குரிய மந்திரங்கள் விரிவாக கூறப்பட்டன. கபிலா எனும் கோவின் பூஜை மூலமந்திரம் முதலியனவும் உள.

## பவித்ர ஆரோஹணம்.

பவித்ரோத்ஸவம் என பெரும்பாலும் விஷ்ணு ஆலயங்களிலும் சிற்சில சிவாலயங்களிலும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்திலும் இவ்வுத்ஸவம் அனுஷ்டிக்கப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டும் செய்யவேண்டியது. ஆதலால் இது நித்யமெனப்படும். ஆடி ஆவணி புரட்டாசி மாதங்களில் சதுர்தசி அல்லது அஷ்டமியில் ஆரம்பிக்க வேண்டும்.

எல்லா தேவதைகளுக்கும் செய்யவேண்டும். கிருதயுகத்தில் ஸுவர்ண நூலாலும் (கம்பி) திரேதா யுகத்தில் வெள்ளியாலும் துவாபரத்தில் தாம்பரத்தாலும் கலியுகத்தில் பஞ்சு நூலாலும் செய்ய வேண்டும். நூற்றெட்டு ஐம்பதுநாலு இருபத்தேழு இழைகளாவது இருக்கவேண்டும். கஸ்தூரீ கோரோசனை குங்குமம் மஞ்சள் சந்தநம் இவைகளைப் பூசி பத்துமுடிகள் போடவேண்டும்.

பிரகிருதி, பௌருஷீ, வீரா, அபரா, சிதா, ஜயா, விஜயா, ஷஷ்டீ, அஜிதா ஸதாசிவா, மநோன்மணீ என்ற சக்திகள் அந்த முடிகளில் வஸிப்பார்கள். பத்து கிரந்தி முடியுள்ள அந்த மாலையை விக்ரஹத்தின் மீது சாத்தி விதிப்படி வேதபாராயணம் பூஜை முதலியவைகளைச் செய்து முடிவில் பக்தர்கள் அதைத் தரித்துக்கொள்ள வேண்டும். இதற்கு விசேஷமான மந்திரங்கள் இங்குக் கூறப்படுகின்றன.

தீக்ஷை ஏகத்துவ தீக்ஷை நிர்வாண தீக்ஷை முதலியவை மிகமிக விஸ்தாரமாகக் காணப்படுகின்றன. ஆலயாதி பிரதிஷ்டைகளுக்கு உத்தராயணம் வஸந்த ரிது சிசிரருது சித்திரை வையாசி தை மாசி சுக்லபக்ஷம் கிருஷ்ணபக்ஷமானால் பஞ்சமி வரையில் சதுர்த்தி நவமீ ஷஷ்டி சதுர்த்தசி இவைகளைத் தவிர மற்ற திதிகளும் சிறந்த நாட்கள். தேவதா பிரதிஷ்டைக்கு அந்தந்த தேவதையின் மூலமந்திர ஜபமும் நான்கு வேதங்களையும் பாராயணம் செய்ய வேண்டும்.

சந்தநத்தால் திரிகோணம் பிந்து இவைகளை எழுதி அதில் தேவியைப் பூஜிக்கலாம். இதிலும் சித்திரத்திலும் ஜலம் மேலே படாமல் புஷ்பங்களாலும் தூபதீபாதிகளாலும் பூஜை செய்யவேண்டும். அபிஷேகம் ஸமர்ப்பயாமி என்று கூறி அபிஷேக காலத்தில் கூறவேண்டிய மந்திரங்களை ஜபிக்கவேண்டும். பிரதிஷ்டை செய்யும்பொழுது விக்ரஹம் அல்லது மரம் அல்லது துவஜமரம் முறிந்து விழுந்தால் யஜமாநனுக்கும் அரசனுக்கும் கஷ்டமுண்டாகும்.

ஏழு துவீபங்கள் அதன் அரசர்கள் ஆங்குள்ள வருஷங்கள் அந்தந்த இடத்தில் உள்ள தேவதைகள் மலைகள்

நதிகள் ஆங்கு வஸிப்பவரது ஆயுள்காலம் முதலியன மற்ற புராணங்களைப் போல் இங்கும் இருக்கின்றன.

### பிரயாக மகிமை.

கங்கை யமுனை என்ற இரு நதிகளும் கூடுமிடம் பூதேவியின் ஜகந மெனும் முக்ய பாகமாம். பிரும்மா யாகம் செய்த இடமது. அது வேதி எனப்படும். ஆங்குள்ள மண் நீர் காற்று இவைகளில் ஒன்று நம்மீது பட்டாலும் நமது பாபங்களெல்லா மகன்று நற்கதி உண்டாகும். இறக்கும் தருணத்தில் பிரயாகத்தில் இறப்போமா என்று நினைத்தால் போதும் எங்கு இறந்தாலும் பிரயாக ஸ்மரணத்தால் நற்கதி உண்டாகும். பிரயாகத்தில் வேதங்களும் தேவர்களும் யக்ஞங்களும் சரீரத்துடன் அமர்ந்திருக்கின்றன. இப்பொழுதும் கல்லுருவைக் காணலாம். அங்கு செய்யும் தானம் ஜபம் பூஜை தர்மம் முதலியவை அழியாத பலனைத் தரும். கங்காதுவார்ம் பிரயாகம் கங்கா ஸாகர ஸங்கமம் என்ற மூன்று இடங்களிலும் கங்கா ஸ்நாநம் கிடைப்பது துர்லபம்.

### வாராணஸீ.

வருணையும் அஸியும் கங்கையில் கூடுமிடம் வாராணஸீ எனப்படும். அங்கு மிக ரகஸ்யமான எட்டு க்ஷேத்திரங்களிருக்கின்றன. ஹரிச்சந்திரம், ஆம்ராதகேச்வரம், ஜப்யேச்வரம், ஸ்ரீபர்வதேச்வரம், மஹாலயம், பிருகு, கேதாரம், பூமி சண்டேச்வரம் என்ற எட்டும் காசியில் மிகச் சிறந்தவை. விசேஷ பலனைத் தருபவை. காசியில் இறப்பவருக்கு மறுபிறப்பு கிடையாது. விச்வநாதர் தாரக மந்திரத்தை உபதேசித்து அங்கு இறப்பவர்க்கு முக்தி தருகின்றார். இறந்தவர் எலும்பை கங்கையில் சேர்த்தால் இறந்தவர்க்கு ஸத்கதி உண்டு.

### கயையின் மகிமையும் வரலாறும்.

கயன் எனும் அஸுரன் பகவானை நாடி பல்லாண்டு தவம் செய்தான். விஷ்ணு பிரத்யக்ஷமாகி என்ன வரம் வேண்டுமென்று கேட்டார். உலகத்திலுள்ள பவித்ரமான எல்லாப் பொருள்களையும் விட நான் மிகப் பவித்ரமாக

இருக்கவேண்டும் என்று கேட்டான். அங்ஙனமே ஆகட்டுமென வரமளித்தார். அன்றுமுதல் இதை அறிந்து பூலோகத்திலுள்ளவர் கயாஸுரனைப் பார்த்தே ஸ்வர்க்கம் சென்றனர். ஸுலபமான இந்த வழி கிடைத்ததால் சிறிது கஷ்டத்துடன் செய்யக்கூடிய விரதம் பூஜை யக்ஞம் முதலியவைகளைக் கைவிட்டனர். தேவர்க்கு யக்ஞத்தால் கிடைக்கும் உணவு நின்றது. தேவர் அருளால் உண்டாகும் மழையும் ஒழிந்தது. வானவரும் மானவரும் வாடி பகவானை வேண்டினர். பிரும்மாவை, ஒரு யாகம் செய்யும்படியும், அதற்கு மிக பவித்ரமான கயாஸுரனுடைய உடலை யாசித்து அவன்மீது அக்நியை அமைத்து வேள்வியைச் செய்யும்படியும் கூறினார் பகவான்.

அங்ஙனமே அவர் வேள்வி செய்ய, கயாஸுரன் உஷ்ணம் தாளாமல் உடலை அசைக்கினான். தேவர்கள் மறுபடியும் விஷ்ணுவை வேண்டினர். தேவஸ்வரூபமான ஒரு தர்ம சிலையை அவன் மீது வைத்து கதாதரமூர்த்தியையும் அங்கு பிரதிஷ்டை செய்யச் சொன்னார். அப்படிச் செய்து யாகம் செய்யும்போது கயாஸுரன் பகவானைப் போற்றினான். அவர் உனக்கு வேண்டிய வரத்தைக்கேள் என்றார். என் மீது இந்த கயா க்ஷேத்திரத்தில் பித்ருக்களை நாடிப் பிண்டம் அளித்தால் அது அவர்களுக்கு அளவில்லா ஆநந்தம் அளிக்கவேண்டும் என்றான். இறந்தவர் எத்தகைய பாபியானாலும் கயாசிராத்தத்தால் பாபமகன்று நற்கதி பெறுவர். ஒவ்வொருவரும் பெற்றோரை நாடி கயைசென்று கயாசிராத்தம் செய்யவேண்டும்.

தர்மசிலை அதன்மீது கதாதரர் விக்ரஹம் இருந்தும் கயாஸுரன் தனது உடலை அசைக்கினான். தேவர் முறையிட அவனது அஸ்தியை யாசித்து அதனால் ஒரு கதாயுதம் செய்து ஆதி கதா மூர்த்தியை அந்த தர்ம சிலைமீது பிரதிஷ்டை செய்யும்படிக் கூறினார். அதனால் அது அசைவற்று நின்றது. யக்ஞம் முடிந்தது.

## தர்ம சிலையின் சரிதம்.

தர்மதேவரின் பத்நியான தர்மவதி என்பவளிடம் தர்மவிரதா என்று ஒரு பெண் தோன்றினாள். பிரும்மாவின் புத்ரரான மரீசி அவளை மணந்தார். ஒரு நாள் பதியினது

பாதத்தைப் பிடித்துக் கொண்டிருந்தாள் தர்மவிரதை. அச்சமயம் பதியின் தந்தையான சதுர்முகன் அங்கே வந்தார். பதியின் பாதத்தை விட்டுவிட்டு மாமனை வணங்கி உபசாரம் செய்தாள். தந்தைக்கு மரியாதை செய்தது நியாயமே ஆயினும் பதி பணிவிடையை விட்டதால் கோபங்கொண்ட மரீசி அவளைச் சிலையாகும்படிச் சபித்தார். தன்மீது யாதொரு குற்றமு மில்லாததால் மன்னித்து சாபத்தை அகற்றும்படி பதியை வணங்கிக் கேட்டாள். அவர் மறுக்கவே மஹாவிஷ்ணுவை வேண்டினுள். பதியினது கோபம் என்பது ஒரு வியாஜமேயாகும். உனது வாழ்வு முடிந்தது. நீ உலகிற்கு உபகாரமாக இருக்கவேண்டும் என்பது தெய்வ ஸங்கல்பமாகும். கயாஸுரன் உடல்மீது ஒரு யாகம் நடக்கின்றது. அவன் தனது உடலை அசைப்பதால் யாகம் பூர்த்தியாகவில்லை. உன்னைச் சிலையாக்கி பவித்ரமான அவன் உடல் மீது வைத்தால்தான் அசையா திருப்பான். ஆதலால் அந்த சாபத்தை அருளாகக் கருது என்ருர். ஆனுல் என் மீது ஸகல தேவர்களும் அமர்ந்திருக்கட்டும். உமது திருவடி என்மீதிருக்க அங்கே பித்ருக்களை நாடி பிண்டமளித்தால் அது அக்ஷய்யமான ஆநந்தத்தை அவர்களுக்கு அளிக்கட்டும் என்று தர்மவிரதை வேண்டினுள்.

ஆதலால் கயையில் விஷ்ணு பாதத்தில் இன்றும் பிண்டமளிக்கப்படுகிறது. கயையில் சிராத்தம் என்றைக்கும் செய்யலாம். திதி வார நக்ஷத்ரங்களைக் கவனிக்க வேண்டியதில்லை. பிரும்மக்ஞானம், கயா சிராத்தம், பசு சாலையில் மரணம், குருக்ஷேத்ரத்தில் வஸிப்பது இவை முக்தி ஸாதநங்கள். மூன்று பக்ஷம் கயையில் வஸித்தால் ஏழுதலைமுறை நமது முன்னோர் முக்திபெறுவர். அஷ்டகா சிராத்தம் நாந்தி சிராத்தம் கயா சிராத்தம் தாயின் சிராத்தம் இவைகளில் தாயைத் தனியாக வரித்து பூஜிக்கவேண்டும். மற்ற சிராத்தங்களில் பதியுடன் சேர்ந்தே தாயை ஆராதிக்க வேண்டும். ஒன்பது பிராம்மணர்களை வரித்து கயா சிராத்தம் செய்யவேண்டும். [இதைப்பற்றிய விவரங்களை ஸேது காசி ப்ரயாக கயாயாத்ரை என்ற நமது வெளியீட்டில் விரிவாகக் காணலாம்.] சிராத்தத்திற்கு அங்கமாகத் தர்ப்பணம் கூறப்பட்டுளது. பித்ருக்களுக்கு

வெள்ளி அல்லது தாம்ப்ரத்தாலாகிய பாத்ரமே பிரிய மானது. சுத்தமான இடத்தில் தர்ப்பணம் செய்யவேண்டும். நிறைய ஜலம் விட்டு தர்ப்பணம் செய்யவேண்டும். இதை விளக்க பழமொழிபோல் ஒரு சுலோகம் கூறப்படுகிறது. [ஒரு முனிவர் தாம்ப்ர பாத்திரத்தையும் தர்ப்பத்தையும் கொண்டு மாமரத்தினடியில் தர்ப்பணம் செய்தார். அதனுல் மாமரத்திற்கும் ஜலம் பாய்ச்சினுர். பித்ருக்களேயும் ஸந்தோஷப்படுத்தினுர். ஒரே வேலே இரு பயன்களேத் தந்தது.] அங்கு மாத்ரு பித்ரு பந்து பிண்டங்களேத் தருவதற் கேற்ற மந்திரங்கள் காணப்படுகின்றன. ஆங்கு செய்யும் ஒவ்வொரு புண்ணியமும் அநந்தமான பலனேத்தரும். அதனுல் மற்றவிடங்களில் சிராத்தம் செய்தாலும் கய கய கய என்று கூறப்படுகிறது.

தேவதாப்ய: பித்ருப்யச்ச-தாதாரோ நோபிவர்த்தந்தாம், ஸப்தவ்யாதா தசார்ணேஷு.—என்பது போன்ற பல மந்திரங்களும் நாந்தி சிராத்தம் ஏகோத்திஷ்டம் பார்வண சிராத்தம் ஷண்ணவதி சிராத்தம் முதலியவைகளும் மிக விரிவாக இருக்கின்றன.

ஜம்பூத்வீபம் பாரதவர்ஷம் பரதகண்டம் என்ற இடம் பூமியில் கர்மபூமி எனப்படும். போகம் மோக்ஷம் என்ற இரண்டையும் பெற இங்கு வர்ணுசிரம தர்மங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மற்ற துவீபங்களில் இவை இல்லே. நாலுலக்ஷம் சுலோக முள்ளது ஜோதிஷ சாஸ்திரம். அதன் ஸாரமிங்கு வர்ணிக்கப்படுகிறது. முக்யமாக விவாஹப் பொருத்தத்தை வர்ணிக்கிருர்.

## பகைவனே வசமாக்க.

பூர்ஜரம் எனும் மரப்பட்டையில் கோரோசனே குங்குமத்தால் இங்கு கூறும் மந்திரத்தை எழுதி சிலே அல்லது வஸ்திரத்தில் பகைவனின் உருவத்தை எழுதி இரண்டையும் தலேகீழாகப் புதைத்தால் எத்தகைய கொடியவனுயினும் பகைவன் நமக்கு அடிமையாவான். இம்மந்திரத்தை குருமுகமாகப் பெற்று அக்ஷரலக்ஷம் ஜபம் பாதி தர்ப்பணம் கால்பங்கு ஹோமம் அதில் பாதி பிராம்மண போஜநம் செய்தவரே இத்தகைய காரியத்தில் இறங்கலாம். ஆதலால் அஷ்ட பீஜாக்ஷரமுள்ள மந்திரத்தை

எழுதவில்லை. இதேபோல் தநம் தான்யம் முதலியவை விருத்தியாவதற் கேற்ற மந்திரங்களையும் கூறுகிறார். குரு உபதேசமில்லாதது பயனைத் தராது.

விஷ்ணுக்ராந்தி ஸர்பாக்ஷீ ஸஹதேவம் கோரோசனை இவைகளை ஆட்டுப்பாலைவிட்டு அறைத்து அதனால் திலகம் அணிந்தால் திலகத்தைப் பார்த்தவரெல்லாம் நமக்கு வசமாவர். இதில் ஸர்பாக்ஷீ ஸஹதேவம் என்பது விளங்கவில்லை.

கோரோசனை ரக்தசந்தநம் நிசா மநச்சிலா தாலகம் பெருங்காயம் வெள்ளைக்கடுகு மோஹிநீ கடுக்காய் காந்தா ஸஹதேவீ சிகா இவைகளை மாதுளை ரசத்தை விட்டு அறைத்து உலர்த்தி மாவாக்கி அதை நெற்றியில் திலகமாக அணிந்தால் தேவர்களே நமக்கு வசமாவார்கள். ஸாதாரண மனிதர்களைப்பற்றி கேட்கவேண்டாம்.

[இந்த ஓஷதிகளின் பெயரையும் ஸ்வரூபத்தையும் நன்கு தெரிந்தவர் மூலமாக இதைச் செய்து பரீக்ஷிப்பதில் ஆபத்தும் கஷ்டமுமில்லை.]

## அன்ன மாத்திரை.

நாயுருவி அரிசியையும் ஸர்பாக்ஷியையும் ஆட்டுப் பாலால் அறைத்து நிழலில் உலர்த்தி மிளகு அளவு மாத்திரைகளாக உருட்டி ஒரு மாத்திரை சாப்பிட்டால் ஒரு நாள் எல்லாம் பசி தாஹம் களைப்பு முதலியவைகள் இல்லாமலிருக்கும். இங்ஙனம் பற்பல கல்பங்கள் உள.

மந்திர பீடம் வித்யா பீடம் என்ற தலைப்பின்கீழ் மிக அபூர்வமான மந்திரங்களைக் கூறுகிறார்.

நவக்ரஹ மண்டலம் சக்ரம் மந்திரம் பூஜாவிதி அவர்களால் உண்டாகும் சுபாசுப பலன் பகைவரை அசைவற்று நிற்கும்படியும் இறக்கும்படியும் செய்ய சில மந்திரம் இவைகளைக் கூறுகிறார். பலவிடங்களிலிவைகளைப் பலவாறு வர்ணிக்கிறார்.

## பூகம்பம் கிரஹணம் எப்போது ?

இருபத்தேழு நக்ஷத்ரங்களை நான்கு மண்டலங்களாகப் பிரித்து அவைகள் மூலம் உலகிற்கு என்னென்ன

உண்டாகும் என சிவன் உமைக்குக் கூறுவதாக வர்ணிக்கிருர். ஜோதிஷர் ஆமோதிக்கத்தக்க அபூர்வ விஷயமிது.

கிருத்திகா மகம் பூசம் பூர்வபல்குநீ விசாகம் பரணீ பூர்வ பாத்ரபதா இவைகள் ஆக்நேய மண்டலம் எனப்படும். அச்சமயத்தில் வாயு ஸஞ்சாரம் செய்தால் சந்திர ஸூர்யர்களைச் சுற்றி வட்டம் உண்டாகும். பூகம்பம் சந்திர ஸூரிய கிரஹணம் இடி தூம கேது முதலியன தோன்றும். ரக்தமழை கல்மழை கண்நோய் அதிஸாரம் தீப்பற்றி எரிதல் முதலியனவும் தோன்றும். பசுக்களின் பால் குறையும். பயிர்கள் அழியும். சில தேசங்கள் நாசமாகும். ஹஸ்தம் சித்திரை மகம் ஸ்வாதீ மிருகசீர்ஷம் புநர்வஸு உத்தரபல்குநீ அசுவநீ ஆகியவைகள் வாயுமண்டல மெனப்படும். இவைகளுடன் வாயு சேரும் போது மநிதர் தர்மத்தை விடுவார்கள். எங்கும் ஒரே துக்கம். காமரூபம், கலிங்கம் முதலிய தேசங்கள் நாசமாகும். ஆயில்யம் மூலம் பூர்வாஷாடம் ரேவதி வருண நக்ஷத்திரம் உத்தரபாத்ரபதா இவைகள் வருணமண்டலம் எனப்படும். அச்சமயம் உலகம் மிக செழிப்பாக இருக்கும். நோயற்ற வாழ்வு பூமி விளைவு அரசருக்குள் சண்டை முதலியன உண்டாகும். ஜ்யேஷ்டா ரோஹிணீ அநுஷம் தநிஷ்டா உத்ராஷாடா அபிஜித் என்ற ஏழும் மாஹேந்திர மண்டலமாம். அச்சமயம் குடிகள் நோயில்லாமல் அரசர்களுக்குள் சண்டை அகன்று ஸமாதாநம் முதலியன தோன்றும். இங்ஙனம் வர்ஷங்களின் பலன் கிருஹங்கள் நக்ஷத்திரங்கள் இவைகளினுலுண்டாகும் பயன் முதலியன விரிவாக வர்ணிக்கப்படுகின்றன.

திதிகளைக் கொண்டு ஒருவகையான சக்ரத்தை அமைத்து அதில் அரசனது நக்ஷத்ர நாமாவைக்கொண்டு காதக சக்ரம், நரக சக்ரம் ஜயசக்ரம் என்பதைக் கண்டு பிடித்து ஜய சக்ரத்தில் கிளம்பினுல் ஜயமுண்டாகும். நரக சக்ரமானுல் ஸந்தியும் காதக சக்ரமானுல் தோல்வியும் ஏற்படும். இந்தெந்த காலத்தில் பிறப்பவன் இப்படி இப்படி இருப்பான். அவனது தந்தை எப்படி இருப்பார்? என்ற பலமும் தசாபலமும் கூறப்படுகிறது. இதைக் கொண்டே நாடி சாஸ்திரம் தோன்றியது. த்ரைலோக்ய விஜயவித்யா என்பதன் சக்ரம் பீஜாக்ஷரம் பூஜா

விதி பலன் முதலியவைகளைக் கூறுகிறார். மஹாமாரி வித்யையை வர்ணித்து ஒவ்வொரு மந்திரத்திற்கும் பல்லவ யோக ரோதக ஸம்புட விதர்ப்ப பிரதம என்ற ஆறுவகையான பிரயோகத்தைக் கூறுகிறார். உச்சாடநம், மாரணம் ஸ்தம்பநம், வச்யம், ஆகர்ஷணம் என்ற காரியங்களில் யந்திரத்தில் மந்திரத்தை எப்படி எழுதுவது? ஸ்வாஹா ஹூம். பட். வஷட். வௌஷட் இவைகளை எந்த விடத்தில் அமைப்பது? சத்ருவின் பெயரை எங்கே அமைப்பது என்பது போன்ற விஷயங்களை இங்குகாணலாம். ஜோதிஷம் மாந்திரிகம் இரண்டும் கலந்து கலந்தே காணப்படுகிறது. ஆதலால் இரண்டையும் சேர்த்தே கவனிக்க வேண்டும் எனத் தெரிகிறது.

பிரபவா முதல் அக்ஷய வரை அறுபது வர்ஷங்களுக்கும் பொதுவாக வர்ஷ பலனைக்கூறுகிறார். இதைக் கொண்டே பஞ்சாங்க பலன் கூறப்படுகிறது. இதில் வேறுவிசேஷ கதைகள் இல்லை. தத்துவமான விஷயங்கள் பலருக்குப்புரியாது. படிக்கவும் ருசியாக இராது. நமது நாட்டு வருஷங்களின் பெயரை பலர் அறிந்திரார். ஆதலால் அறுபது வருஷங்களின் பெயரையும் அதன் பலனையும் எழுதுவாம்.

1 பிரபவ : யாகம் பூஜை பக்தி விருத்தியாகும்.
2 விபவ : குடிகள் சுகமாக இருப்பார்கள்.
3 சுக்ல : பயிர்கள் விருத்தியாகும்.
4 பிரமோத (பிரமோதூத) ஸந்தோஷமுண்டாகும்.
5 பிரஜாபதி (பிரஜோத்பத்தி) பிரஜைகள் விருத்தி.
6 ஆங்கிரஸ : போக விருத்தி.
7 சிரீமுக : உலக விருத்தி.
8 பாவ (பவ): எண்ணம் விருத்தியாகும்.
9 யுவ : ஆண்மைத்தனம் விருத்தியாகும்.
10 தாது : (தாத்ரு) ஒஷதி விருத்தி.
11 ஈச்வர : ஆரோக்ய விருத்தி,
12 பகுதான்ய : ஸுபிக்ஷம் உண்டாகும்.
13 பிரமாதி : மழை மத்யமாக இருக்கும்.

14 விக்ரம : பயிர்கள் விருத்தி.
15 விருஷ: (விஷு) பலம் விருத்தியாகும்.
16 சித்ரபாநு: சித்திர விருத்தி.
17 ஸ்வர்பாநு (ஸுபாநு) க்ஷேமம் ஆரோக்யம்.
18 தாரண: நல்ல மழை.
19 பார்த்திவ: பயிர் விருத்தி.
20 வியய: (அவ்யய) அதிக மழை.
21 ஸர்வஜித்: உசிதமாக மழை.
22 ஸர்வதாரீ: ஸுபிக்ஷம்.
23 விரோதி: மழை இராது.
24 விக்ருத: (விக்ருதி) பயங்கரமானது.
25 கர: புருஷர் வீரராக இருப்பர்.
26 நந்தந: ஸந்தோஷம்.
27 விஜய: சத்ரு ஜயம்.
28 ஜய: ஸர்வ ஜயம்.
29 மன்மத: ரோகம் உண்டாகும்.
30 துர்முக: (துஷ்கர, துர்முகி) துர்முகிகளாக இருப்பார்கள்.
31 ஹேமலம்ப: (ஏவிளம்பி) செல்வங்குறையும்.
32 விளம்பி: (விளம்ப) ஸுபிக்ஷமாக இருக்கும்.
33 விகாரீ: சத்ருக்களுக்குக் கோபம் வளரும்.
34 சார்வரீ: (சார்வதர) விஜயம் உண்டாகும்.
35 பிலப: ஜல பிரவாஹமுண்டாகும்.
36 சுபகிருத்: சுபத்தைச்செய்வார்கள்.
37 சோபகிருத்: (ராக்ஷஸ) க்ரூரமாக இருக்கும்.
38 குரோதி: (ஆநந) தான்ய விருத்தி.
39 விசுவாவஸு: (பிங்களா) நல்லமழை.
40 பராபவ: (கால) செல்வச் செலவு.
41 பிலவங்க: (ஸித்தார்த்த) கார்யஸித்தி.
42 கீலக: (ரௌத்ர) உக்ரமாக இருப்பார்.
43 ஸௌம்ய: (துர்மதி) மத்யமான மழை.

| | | |
|---|---|---|
| 44 | ஸாதாரண (துந்துபி) | க்ஷேமமுண்டாகும். |
| 45 | விரோதிகிருத்: (விரோதிகிருத்த) | விரோதமுண்டாகும். |
| 46 | பரீதாபீ: (பரீதாவீ) | எங்கும் தாபமுண்டாகும். |
| 47 | பிரமாதிச: (பிரமாதி) | கடமையிலிருந்து தவருவர். |
| 48 | ஆநந்த: | ஆநந்தமுண்டாகும். |
| 49 | ராக்ஷஸ: | ஸத்வகுணம் குறையும். |
| 50 | நள: (அநல) | அக்நி பயமுண்டாகும். |
| 51 | பிங்கள: | க்ஷேமமுண்டாகும். |
| 52 | காளயுக்தி: (காளயுக்த) | பணச்செலவு. |
| 53 | ஸித்தார்த்தி: (ஸித்தார்த்தீ) | கார்யஸித்தி. |
| 54 | ரௌத்ர: (ரௌத்ரீ) | உக்ரமான குணம் விருத்தியாகும். |
| 55 | துர்மதி: | புத்தி சுத்தமாக இராது. |
| 56 | துந்துபி: | தான்ய விருத்தி. |
| 57 | ருதிரோத்காரி: | யுத்தம் தோன்றும். |
| 58 | ரக்தாக்ஷ: (ரக்தாக்ஷி) | யுத்தத்தால் ஜந நஷ்டம். |
| 59 | குரோதந: | ஜயம். |
| 60 | அக்ஷய: | தநம் க்ஷயமாகும். |

குறிப்பு: ( ) இந்த அடையாளத்தினுள் உள்ளது இப் புராணத்திலுள்ள மாறுதல். சிலது உலக வழக்கப்படி கூறுவது.

பஞ்சாங்கத்திற்கு அவசியமான திதி வார நக்ஷத்திர யோக கரணங்களைக் கூறுகிறார்.

## காயகல்பம்.

உடலில் தோன்றும் கிழத்தன்மை, தலைநரைத்தல் இந்திரியங்கள் தளருதல் முதலிய தோஷங்களை அகற்றி இளமையைத்தந்து பல்லாண்டு ஜீவிக்கும்படியான நிலையை அளிக்க முப்பத்திரண்டு பொருள்களால் ஒரு மருந்து கூறுகிறார். ஆயுர் வேதத்தில் பூர்ண அறிவும் அனுபவமுமுள்ளவர்களே அந்த பொருள்களை அறிவர். எவரேனும் ஒரு ஆயுர்வேதி இதைப்படித்து அத்தகைய

மருந்து செய்யாவிடினும் அம்முறையையேனும் உணர்ந்து ஸந்தோஷிக்கலாம். இது மற்றவர்களுக்குத் தெரியாவிடினும் அந்த வஸ்துக்களை உள்ளபடியே பெயர்களை எழுதுகிறோம்.

## ஷட்த்ரும்சத் பதம்.

முப்பத்தாறு ஓஷதி மருந்து. 1 கடுக்காய். 2 அக்ஷி, 3 நெல்லி, 4 மிளகு. 5 பிப்பலி, 6 சிபா, 7 வந்ஹி, 8 சுக்கு, 9 திப்பிலி 10 குடூசீ, 11 வச, 12 நிம்பக, 13 வாஸக, 14 சத மூலி, 15 ஸைந்தவம், 16 ஸிந்துவாரகம், 17 கண்டகாரீ, 18 கோக்ஷுரகா, 19 பில்வம், 20 பௌநர் நவம், 21 பலா, 22 ஏரண்டமுண்டீ, 23 ருசக, 24 பிருங்க, 25 க்ஷார, 26 பர்படகம், 27 தான்யாக, 28 ஜீரக, 29 சத புஷ்பீ, 30 ஜவாநிகா, 31 விடங்கம், 32 காதிரம், 33 க்ருதமால், 34 மஞ்சள், 35 வசா, 36 ஸித்தார்த்தம் இவைகளைச் சூர்ணமாக்கி தேனை விட்டறைத்து மாத்ரைகளாகச் செய்யலாம். லேஹ்யமாகவோ கஷாயமாகவோ செய்து உபயோகித்தால் ஸகல ரோகங்களையும் அது அகற்றும். கிழத்தன்மையை அகற்றி நீண்ட ஆயுளைத் தரும். இதையும் இவைகளாலாகிய தைலத்தையும் விடாமல் 6 மாதம் ஸேவித்து வந்தால் இதே மிருதஸஞ்ஜீவினியாகும். முன்னூறு வருஷம் ஜீவித்திருக்கலாம்.

## சக்தி தேவதை.

பிராம்மீ மாஹேச்வரீ கௌமாரீ வைஷ்ணவீ வாராஹி இந்திராணீ சாமுண்டா டாகிநீ ராகிணீ லாகிணீ முதலிய ஸ்ரீ சக்ரதேவதைகளின் மூலமந்திரம் பிரதிஷ்டை பூஜை ஹோமம் முதலியன வர்ணிக்கப் படுகின்றன. இங்கு காணப்படும் மாத்ருகா நியாஸங்கள் தேவீ பக்தர்களைப் பரவசப்படுத்தும்.

## பதிநான்கு மநுக்கள்.

இவர்களது ஆயுட்காலம், புத்திரர்கள், இவர்கள் ஏற்படுத்திய நகரம், அக்காலத்திய ஸப்தரிஷிகள், முதலியவை இத்தலைப்பில் விரிவாகக் கூறப்பட்டன. மன்வந்தரம் என்ற காலத்தை இவர்கள் ஆரம்பித்தனர். உலக சக்ரம் ஓட இவர்களும் அதிகார பதவி வஹிப்பவர். ஆதலால்

ஒவ்வொரு ஆண்டிலும் நாம் செய்யவேண்டிய ஷண்ண வதீ தொண்ணூற்று ஆறு சிராத்தங்களில் இந்த பதினான்கு மநுக்களின் திநத்திலும் தர்ப்பணம் செய்யும்படி சாஸ்திரம் கூறுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வாயம்புவமநு | 8 | ஸாவர்ணிமநு |
| 2 | ஸ்வாரோசிஷமநு | 9 | தக்ஷஸாவர்ணிமநு |
| 3 | உத்தமமநு | 10 | பிரும்மஸாவர்ணிமநு |
| 4 | தாமஸமநு | 11 | தர்மஸாவர்ணிமநு |
| 5 | ரைவதமநு | 12 | ருத்ரஸாவர்ணிமநு |
| 6 | சாக்ஷுஷமநு | 13 | ரௌச்யமநு |
| 7 | வைவஸ்தவமநு | 14 | பௌத்யமநு |

இது வைவஸ்தவ மந்வந்தர காலமாகும். இப் பதினான்கு மந்வந்தரம் பிரும்மாவிற்கு ஒருபகல் காலமாம்.

## வேதப் பிரிவும் புராண நிர்மாணமும்.

ஒவ்வொரு துவாபரயுகத்திலும் ஒவ்வொருவர் வியாஸர் என்ற அதிகாரப்பதவியை வஹித்து ஒன்ருக இருக்கும் வேதத்தை ரிக்வேதம் ஹோத்ருகாண்டம், யஜுர்வேதம் அத்வர்யுகாண்டம், ஸாமவேதம் உத்காத்ருகாண்டம், அதர்வவேதம் பிராயச்சித்தகாண்டம் என நான்காக வகுப்பர். அதேபோல் ஒன்ருக இருந்த புராணத்தைப் பதினெட்டாக வகுப்பார்கள். சிஷ்யர்கள் மூலம் வேதம் புராணம் முதலியவை பிரசுரம் செய்யப்படும். இந்த கலிக்கு முன் சென்ற துவாபர யுகத்தில் நாராயணனே வியாஸராகத் தோன்றி கல்விமார்க்கத்தை விளக்கினுர்.

நாலுவர்ணங்கள் நாலு ஆச்ரமங்கள் விவாஹம் கன்யாதாந மஹிமை, ஆந்ஹிக தர்மம் ஆசாரம் திரவ்ய சுத்தி முதலியன விரிவாக வர்ணிக்கப்படுகின்றன. நார்மடி பட்டு இவைகளை உடுத்தி அவிழ்த்தபின் வெய்யிலில் வைத்தால்தான் சுத்தி. முகந்தவிர பசுவின் எல்லா அங்கங்களும் சுத்தமானவை. முகம் அசுத்தமானது. குதிரையின் முகம் பெண்கள் முகம் கன்றின் முகம் பக்ஷிகளின் முகம் ஆகிய இவை சுத்தமானவைகள். பட்டை உடுத்திக்கொண்டு புஜித்தாலும் ஜல மலம் கழித்தாலும் பட்டு அசுத்தமாகும். நார்மடியை பில்வப்பழ ஜலத்திலும் வெண்பட்டை வெள்ளைக்கடுகு ஜலத்திலும் நினைத்து

உலத்தினுல் சுத்தமாகும். (துவாதசி அல்லது பௌர்ணமியில் பயத்தம்பருப்பு. ஜலத்தில் நினைத்து உலத்தினுல் தான் பட்டு சுத்தமாகும் என வேறிடத்தில் உளது.)

## ஆசௌசம்.

ஒரு மூலபுருஷனிடமிருந்து தோன்றிய புருஷஸந்ததி ஏழு தலைமுறைவரை தாயாதி எனப்படுவர். தாயமெனில் பங்கு. அதைப் பெறுகிறவர் என்று பொருள். (பங்காளி) அண்ணன் தம்பி மூலமாகப் பிறந்த ஸந்ததிகளும் தாயாதிகளே. இவர்களுக்குள் பிறப்பு இறப்பு தீட்டுகள் பிராமணர்களுக்குப் பத்துநாள், க்ஷத்திரியருக்குப் பனிரண்டுநாள், வைச்யருக்குப் பதினைந்துநாள் எனக் கூறப்படுகிறது. மூலபுருஷனது ரக்த ஸம்மந்தம் ஏழு தலைமுறைவரை பூர்ணமாக இருப்பதால் பத்துநாள் வரை பங்காளிகளும் அசுத்தமாவார்கள். அச்சமயம் ஸந்தியா வந்தனத்தைத் தவிர வேறெந்த கர்மாவையும் செய்யக்கூடாது. எப்போதும் விடக்கூடாத தந்தை தாய் சிராத்தத்தைக் கூட அச்சமயம் செய்யாமல் தீட்டு அகலும் நாளில் செய்யவேண்டும். ஏழு தலைமுறைக்குப்பின் ரக்தஸம்மந்தம் குறைவதால் மூன்றுநாள் தீட்டே கூறப்பட்டது. தீட்டுள்ளவனது அன்னத்தைப் புஜித்தால் அது மநதைக் கெடுத்து உடலையும் அசுத்தமாக்கும்.

## சில ரஸமான நீதிகள்.

இறந்தவனைப் பின் தொடர்ந்து செல்ல எவருக்கும் சக்தி இல்லை. அவன் செய்த புண்யம் பாபம் இரண்டுமே அவனைத் தொடர்ந்து செல்லும். ஒரு தர்மத்தை நாளைக்குச் செய்வோம் என்று நினையாதே. இன்றே செய்துவிடு. பகலில் செய்வோம் என்றெண்ணுதே. அதைக் காலையிலேயே செய்துவிடு. மிருத்யு, நீ அதைச் செய்துவிட்டாயா? இல்லையா? எனக் காத்திருக்கமாட்டார். ஆயிரம் அடி அடித்தாலும் காலம் வந்தாலொழிய இறக்கமாட்டாய். காலம் வந்துவிட்டால் தர்ப்பத்தின் நுனி பட்டால்போதும் இறந்துவிடுவாய்.

எலும்புகளைத் தூண்போல் நிறுத்தி மாம்ஸத்தையும் ரக்தத்தையும் மேலே பூசி தோலால் மூடப்பட்டிருக்கிறது

உனது உடல். ஜலமலம் நிறைந்தது. கிழத்தனம் சோகம் ரோகம் இவைகளுக்கு இருப்பிடமானது உடல். அதைக் கொண்டு பிறவா வரந்தேடு.

## பத்து லக்ஷண முள்ளது தர்மம்.

தைர்யம் பொறுமை மநதின் அடக்கம் திருடாமை சௌசம் இந்திரியங்களை அடக்குதல் வெட்கம் நல்ல படிப்பு ஸத்யம் கோபமில்லாமை என்ற பத்து வகை யான அங்கமிருந்தால்தான் தர்மம் பலனைத் தரும். இவை களில்லா தர்மம் உயிரில்லா உடல்போலாம்.

பதினெட்டு ஸ்மிருதிகள் அவைகளை இயற்றியவர், முப்பத்தேழு ஸமயங்களில் வேத மோதல் கூடாது, ஸன் யாஸி மனைவியை விரும்பினால் அவன் கதி, நவக்ரஹ ஹோமம் என்பவை கூறப்படுகின்றன.

## ஆபத்காலத்தில் பெண் தர்மம்.

கன்யாதாநம் செய்த பிறகு புருஷன், விவாஹ ஹோமம் முடிவதற்குள் காணாமல் மறைந்துவிட்டாலும் எதிர்பாராதபடி இறந்துவிட்டாலும் ஸன்யாஸம் செய்து கொண்டாலும், நபும்ஸகன் எனத் தெரிந்தாலும் பதிதன் எனத் தெரிந்தாலும் அவனை விட்டுவிட்டு அவனது ஸஹோ தரன் இருந்து எல்லாவகையில் உசிதமாக இருந்தால் அவனை மணந்து கொள்ளலாம். அப்படி அவர் கிடைக்கா விடில் அல்லது வயது முதலிய பொருத்தமில்லாவிடில் வேறு புருஷனை மணந்து கொள்ளலாம். விவாஹத்தில் கன்யாதாநம் என்பது முக்யமானாலும் இத்தகைய ஆபத் காலத்தில் மாத்ரம் வேறு பதியை மணந்துகொள்ளலாம்.

பலாத்காரமாக ஒருவர் தூக்கிச்சென்று ஸ்திரீயை பரவசப்படுத்தினால் அவளது மநம் சுத்தமாக இருந்தால் அவள் சுத்தமானவளே ஆவாள். ரிது என்பது அவளைச் சுத்திசெய்கின்றது. மணந்த புருஷனிருக்க மநதினால் ஒருவள் பரபுருஷனை விரும்பினால் அவள் சுத்தமானவ ளல்ல. எந்த கோத்திரத்தில் வந்து புகுந்தாளோ அந்த கோத்திர முனிவரின் ஸந்ததிக்குத் தீங்கில்லாமல் அன்னிய கோத்ர ஸம்பந்த மில்லாமல் காப்பது ஸ்திரீ புருஷர் தர்ம மாம். அப்படிச் சுத்தமாக இருந்தால்தான் புதல்வர்

செய்யும் சிராத்தம் முதலியவை குறிப்பிட்டவருக்குப் போய்ச் சேரும். பெண்கள் கற்பிழந்தால் புருஷனது கோத்ரம் கெட்டுவிடும்.

## பாபங்களும் பிராயச்சித்தமும்.

பாபம் இருவகைப்படும். ஒன்று தனக்குத் தீங்கைத் தருவது. மற்றொன்று தனது ஸந்ததிக்கும் பிறர்க்கும் தீங்கைத்தருவது. அறியாமல் ஒருவர் பாபத்தைச்செய்து விட்டு பிறகு இது பாபம் என்று தெரிந்தால் பெரியோரை அடுத்து இதற்கு என்ன பிராயச்சித்தம் ? என்று கேட்டு அதன்படிச் செய்து அந்த பாபத்தை அகற்றிக்கொள்ள வேண்டும். இல்லையேல் அந்த பாபம் இறந்தபின் மறு உலகில் நரகத்தையும் மறுபிறவியில் துன்பத்தையும் தரும். புத்தி மோஹத்தினால் பாபமென்று தெரிந்தும் ஒரு பாபத்தைச் செய்துவிட்டால் அதற்காக வருந்தி இனி அதைச் செய்யமாட்டேன் என்று தீர்மானித்து அதற்குரிய பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். அப்படி பிராயச்சித்தம் செய்துகொள்ளவில்லை என்று அறிந்தால் அரசன் அவருக்கு சிக்ஷை விதித்து பிராயச்சித்தம் செய்துகொள்ளும்படித் தூண்டவேண்டும். அது மற்றவருக்குப் பாடமாகும். அதனால் பாபச் செயல் குறையும்.

## சுத்தான்னம்.

அன்னம் உடலை வளர்ப்பதுடன் மநதையும் வளர்க்கின்றது. சுத்தமான உணவால் மநம் சுத்தமாக வளரும். மநதுதான் இன்பதுன்பங்களுக்கும் பந்தமோக்ஷத்திற்கும் காரணமாகும். ஆதலால் மநதைக் கெடுக்கும்படியான அசுத்த உணவை விலக்கவேண்டும். அன்னசுத்தி பலவகைப்படும். உண்ணும்பொருள், உணவளிப்பவர், உடன் உண்பவர், உடமைக்காரர், உண்பவர் உடல், உண்ணும் போது காண்பவர், உண்ண அழைப்பவர், உண்ணும் இடம், பாத்திரம், உணவு பாகம்செய்தல், உணவுக்கான தான்யம் கறிகாய் முதலிய பலவகைகளிலும் அன்னம் சுத்தமாக இருக்கவேண்டும். இல்லையேல் மநம் கெடும்.

## உடமைக்கார தோஷம்.

கோபம்கொண்டவர் மதம்பிடித்தவர் நோயாளி மஹா பாபி, தீட்டுக்காரர் தாஸி நபும்ஸகன் கிராம புரோஹிதன்

வைத்யத்தால் ஜீவிப்பவன் வட்டியால் பிழைப்பவன் குரூரமானவன் காநம் செய்பவன், கபடி, பரஸ்துதி ஆத்மஸ்துதி செய்பவன் திருடன் குண்டன் கோளன் கணவன் பிழைத்திருக்கும்போது அன்னியரால் உண்டானவன் குண்டன். பதி இறந்தபின் மற்றவரால் பிறந்தவன் கோளன். வேதத்தை விற்பவன் ஆட்டக்காரன். நன்றி கெட்டவன் வண்ணான் தச்சு முதலிய தொழில் செய்பவன் கபடஸன்யாஸி, வாணியன், பகைவன் ஆகிய இவர்களின் அன்னத்தைப் புஜிக்கலாகாது.

இவைகளில் ஒன்றைச்சாப்பிட நேர்ந்தால் மூன்று நாள் உபவாஸமிருந்து கிருச்ரமென்ற பிராயச்சித்தத்தை செய்துக் கொள்ளவேண்டும்.

## இயற்கை தோஷம்.

க்ஞாநக் கண்ணால் ஒவ்வொரு பொருளிலும் இயற்கையாக உள்ளதும் செயற்கையால் உண்டாவதுமான தோஷத்தையும் அறிந்தவர் முனிவர். உடலின் ஆரோக்யத்தையும் மநதின் சுத்தத்தையும் கெடுக்கக்கூடிய பொருள்களையும் உணர்ந்து அவைகளை புஜிக்காதே என சிலவற்றைத் தடுத்தனர். சரீர ஆரோக்யத்திற்குத் தேவையானால் மருந்துபோல் ஏற்றுக்கொள். பிறகுபிராயசித்தம் செய்துக் கொள் என்றும் கூறுகின்றனர். ஸுரை மாம் ஸம் வெங்காயம் உள்ளி எருமைப்பால் தயிற் சொரக் காய் கன்றுபோட்ட பத்து நாட்களுக்குள் பசும்பால் முள்ளங்கி கேழ்விரகு பிண்ணாக்கு முதலிய சில பொருள்கள் இயற்கையிலேயே தோஷமுள்ளவைகள். உண்பவரது மநதிலே தமோகுணத்தை உண்டுபண்ணி பலபாபங்களை செய்ய தூண்டுகின்றன. ஆதலால் ருசி யுள்ளது பலமளிப்பதென்றாலும் அவைகளை விடவேண்டும்.

## செயற்கை தோஷ முள்ளவை.

தான் இயற்கையில் நல்லதாயினும் சில வஸ்துக்களின் சேர்க்கையால் தோஷமுள்ள தாகின்றன சில பொருள்கள். பித்தளைப்பாத்திரத்தில் இளநீர் அருந்துவது புளியுடன் முருங்கக் காயைச் சேர்ப்பது பசு முகர்ந்த அன்னம் கேசம் உள்ள அன்னம் நாய் தூரஸ்த்ரீ சண்டாளர் முதலியவர் பார்த்த பொருள் எச்சில் அன்னம் பிறர்

உண்டமிகுதி ஒரு ஜாமத்திற்கு முன் சமயல் செய்தது பழையது புழு உள்ளது தேவனுக்கு நிவேதநம் செய்யாதது முதலியன உண்ணத்தக்கவை அல்ல.

## பங்க்தி தோஷம்.

உண்பது வயிற்றை நிறப்புவதற்காக மாத்திரமல்ல. நமது உள்ளே இருந்து பிராண அபாந வ்யாந உதாந ஸமாந என்ற ஐந்து வாயுக்களுடன் சேர்ந்து நாம் உண்ணும் உணவைப் பாகம்செய்து பகவான் நம்மைக் காக்கிறார். ஆதலால் உண்ணும்போது அவரைப் பூஜிக்கிறோம். அதே பிராண அக்நிஹோத்ரம் என அழைக்கப்படுகிறது. அச்சமயம் நமது பங்க்தியில் உட்காருபவரும் சுத்தராக இருக்கவேண்டும். அசுத்தருடன் சேர்ந்து புஜித்தால் அவரது பாபத்தில் நமக்கும் பங்கு ஏற்படும். பங்க்தியில் ஒருவர் முன்னதாக எழுந்து சென்றால் மிகுதியுள்ளோர் அவனது எச்சிலை உண்பது போலாகும். எவரிடத்தில் எந்த பாபமிருக்கிறது என நமக்குத் தெரியாது. ஆதலால் கூடுமானவரை ஏகாந்தமாக உண்பது நலம். ஸ்திரீ புருஷ ஸங்கம் ஆஹாரம் ஜல மலங் கழிப்பது இம் மூன்றும் ஏகாந்தமாக இருக்கவேண்டும். தகாதவர் அருகில் உட்கார்ந்தால் நாம் எழுந்துபோக முடியாவிடில் தூண் கூடம் தாவாரம் கோலம் நீர் முதலியவைகளால் வேறு பங்க்திபோல் செய்யலாம்.

பங்க்தியில் உட்கார நேர்ந்தால் அந்த தோஷத்தை அகற்றத் திருஸுபர்ணம் என்ற மந்திரத்தைப் படிக்க வேண்டும். அது நம்மிடம் பாபம் வராமல் தடுக்கும்.

## பஞ்சமஹாபாதகங்களும் ஸம உபபாதகங்களும்.

பிராம்மணனைக் கொல்வது, ஸுரையைப் பருகுவது, ஸுவர்ணத்தைத் திருடுவது, குரு ஸ்த்ரீ ஸங்கமம் இந் நால்வருடனும் சேர்ந்திருத்தல் இவைகளே பஞ்சமஹா பாதகங்கள் எனப்படும். பாதக என்றால் இந்த பிறவியிலிருந்து தாழ்ந்த பிறப்பெடுக்கும்படி கீழே தள்ளுவது என்று பொருள். மநிதரைக் கருதியே சாஸ்திரங்கள் தோன்றின. அதைப் பின்பற்றாதவர் விலங்காவது

நிச்சயம். அத்தகைய பிறவிகளில் விழாவண்ணம் தடுப்பது தான் தர்மம். இந்த இந்த பாபங்களால் இந்த இந்த பிறவி கிடைக்கிறது என்று சாஸ்திரம் கூறுகிறது.

பஞ்சமகா பாதகங்களுக்கு ஸமமான பாபங்களைக் கூறி அவை ஸமபாதகங்கள் என்றும் அதற்குக் கொஞ்சம் குறைவானவை உபபாதகங்கள் என்றும் விராத்ய தோஷம், ஜாதி ப்ரம்சகரமான பாபம், ஸங்கலீகரணம், மலிநீகரணம், அபாத்ரீகரணம் முதலிய பாபங்களைக்கூறி அவைகளுக்கேற்ற பிராயச்சித்தங்களையும் விவரிக்கிறார் இங்கு.

ஸ்ரீ ருத்ரம் புருஷஸூக்தம் இவைகளை நித்யம் ஜபம் செய்து வந்தால் சிலபாபங்கள் அகலும். ஸகல பாபங்களையும் அகற்ற பதிமூன்று சுலோக வடிவமான விஷ்ணு ஸ்துதியைக் கூறி " ஹிருஷீகேச புண்டரீகாக்ஷ மாதவ" என்ற மூன்று நாமாக்கள் அதிலும் முக்யமென வர்ணிக்கிறார். பிராயச்சித்தம் என்பது உபவாஸ வடிவமாகவும் பாராயண ரூபமாகவும் ஹோம ரூபமாகவும் தானரூபமாகவும் பிராணாயாமரூபமாகவும் கூறப்படுகிறது.

## உபவாஸப் பொருள்.

உபாவிருத்தஸ்ய பாபேப்ய:யஸ் துவாஸோ குணைஸ்ஸஹ,
உபவாஸ: ஸவிக்ஞேய: ஸர்வ போகவிவர்ஜித: ||

பாபங்களையும் போகங்களையும் விட்டு குணத்துடன் வஸிப்பது உபவாஸம் எனப்படும். உப - இறைவனருகே, வாஸ-வஸித்தல் என்னும் பொருளுண்டு.

## பஞ்ச கவ்யம்.

உள்ளும் புறமும் உள்ள பாபத்தை நீக்க வல்லது பஞ்சகவ்யம். அதை விதிப்படிக் கலந்து பகவானுக்கு அபிஷேகம் செய்வது சிறந்த ஸந்தோஷகரமான அபிஷேகமாம். ஒரு மண்டலம் காலையில் பஞ்சகவ்யம் அருந்தினல் ஸகல பாபங்களும் அகலும். காக்காவலிப்பு மயக்கம் முதலிய நோய்களும் நீங்கும். மிகப் பவித்ரமானது பஞ்சகவ்யம். பால் தயிர் நெய் கோமயம் பசுஞ்சாணி என்ற பசுவின் ஐந்துபொருள்கள் சேர்ந்தது பஞ்சகவ்யம் எனப்படும்.

ஒரு பலம் கோமூத்ரம், கட்டவிரலில் பாதி பசுஞ் சாணி, ஏழு பலம் பசும்பால், இரண்டு பலம் தயிர், ஒரு பலம் பசும் நெய், ஒரு பலம் தர்ப்ப ஜலம் இவைகளைத் தனித்தனி பாத்திரத்தில்வைத்து காயத்ரீயால் கோமூத்ரம், கந்தத்வாராம் என்ற மந்திரத்தால் கோமயம், ஆப்யாயஸ்வ என்பதால் பால், ததிக்ராவிண்ணோ என்பதால் தயிர், தேஜோஸி என நெய், தேவஸ்ய என்பதால் தர்ப்ப ஜலம், இவைகளைச் சேர்த்தால் அது பிரும்ம கூர்ச்சம் எனப்படும். ஆபோஹிஷ்டா என ஜபித்து அகமர்ஷண ஸூக்தத்தால் இவைகளைக் கலக்கவேண்டும். இப்படிக் கலந்து சாப்பிடும் பஞ்சகவ்யம் தீ கட்டையைக் கொளுத்துவதுபோல் நோயையும் பாபத்தையும் எரித்துவிடும்.

## விருதபங்கம் செய்யாதவை எட்டு.

உபவாஸத்துடன் கூட சில விருதங்களைச் செய்யும் பொழுது உடலுக்கு அதிக கஷ்டம் ஏற்படும் போலிருந்தால், தீர்த்தம் குடிக்கலாம். அதிலும் களை நீங்காவிடில் கந்தமூலங்களை உப்பு புளிப்பு இல்லாமல் உட்கொள்ளலாம். நெய், பால், கஞ்சிவடிக்காத அன்னம், மருந்து இவைகளை உட்கொள்ளலாம். பிராம்மணர் அகப்படாமல் சிராத்தம் நின்றுவிடுவதானால் பிராம்மணார்த்தம் சாப்பிடலாம். குரு, நீ சாப்பிடு என்று கூறினால் உண்ணலாம். இவை விரத பலனைக் கெடுக்காமல் பூர்ண பலனைத் தரும். இங்கு பிரதமை முதல் பௌர்ணமி அமாவாஸ்யை வரையில் உள்ள ஒவ்வொரு திதியிலும் உண்டாகும் விரதங்களும் அந்தந்த தேவதைகளுக்குப் பிரியமான புஷ்பம் பழம் பக்ஷ்யம் விருதபலன் முதலியவைகளும் விரிவாக இருக்கின்றன. எல்லா புஷ்பங்களையும் விட பாவ-மநஸ்-புஷ்பம் சிறந்ததென வர்ணிக்கிறார்.

## மனோபாவ புஷ்பம்.

அஹிம்ஸை இந்திரியங்களை அடக்குதல் தயை சாந்தி சமம் தபஸ் தியாகம் ஸத்யம் இவை மநதில் உண்டாகும் வாடாத புஷ்பங்கள். பகவானுக்கு மிகப் பிரியமானவை. நம்மிடமே உள்ளவை. இவைகளால் உண்டாகும் ஸந்தோஷம் வேறு எதனாலும் உண்டாகாது.

## தாநம்.

நாம் நியாயமாகத் தேடிய பொருளை நல்ல பாத்திரத்தில் அளிப்பது தாநம் எனப்படும். தாநத்தினுல் தான் ஸ்வர்க்கத்திலும் மறுபிறவியிலும் போகம் கிடைக்கும். நமது வாழ்க்கைக்கும் இன்பத்திற்கும் வேண்டிய பொருள்களை எல்லாம் தாநம் செய்யவேண்டும். தாநத்தால் நமது பாபம் அகலும். கீர்த்தி உண்டாகும். செல்வம் வளரும். பயனே இல்லை என்ருலும் தாநம் செய்வது சிறந்தது. நல்ல வஸ்துக்களை நல்ல பாத்திரத்தில் நல்ல எண்ணத்துடன் நல்லகாலத்தில் கொடு. பாத்ரம் என்பது மரத் தோணிபோலாகும். அபாத்ரம் கருங்கல்லாம். கல்லில் ஏறி கடலைக் கடப்பதெப்படி?

## பாத்ரம் எது?

வேதமறிந்தவன், ஏழை, குடும்பி, அனுஷ்டாநம் செய்பவர், ஆசாரத்துடன் உள்ளவர், எனக்குக் கொடு என்று கேளாதவர், தாநம்வாங்கி அதனுல் உண்டாகும் பாபத்தை அகற்றிக்கொள்ள அறிந்தவர், தாநம் வாங்கிய பொருளை நல்லவழியில்பயன்பெறச்செய்பவர் இவர்களே ஸத்பாத்ரமாவர். ஏழை கூன் குருடு செவிடு நொண்டி நோயாளி அநாதை முதலியவர்களுக்கு உதவவேண்டும். ஒரு கர்மாவிற்கு அங்கமாகக் கூறிய தாநத்தை இவர்களுக்கு அளிக்கக்கூடாது. பித்ரு காரியத்தில் செய்யும் தாநங்களைப் பங்காளிக்குக் கொடுக்கலாகாது. தேவகார்யத்தில் செய்வதை எல்லோருக்கும் அளிக்கலாம். தாய் தந்தை ஸஹோதரி ஸஹோதரன் பெண் ஆகியவர்க்கு அன்பினுல் தாநம் செய்யலாம். அது கர்மாங்கமாகாது.

## எப்படி தாநம் செய்வது?

ஒருவருக்கும் தெரியாமல் ஸத்பாத்ரம் இருப்பிடத்தைத் தேடிச் சென்று பயபக்தியுடன் அடக்கத்துடன் அதிகம் கொடுக்கவில்லையே என்று வெட்கத்துடன் தாநம் செய்யவேண்டும். பிரதிபலனை எதிர்பாராமல் ஸந்தோஷமாக மறைத்து தாநம் செய்யவேண்டும். வெறுப்பு கோபம் ஆத்மஸ்துதி முதலிய துர்க்குணங்களை விட்டுத் தாநம் செய்யவேண்டும். எந்த பொருளை அளித்தாலும்

தாம்பூல தக்ஷிணையுடன் தரவேண்டும். கிழக்குமுகமாக இருந்து வடக்குமுகமாக இருப்பவருக்குத் தரவேண்டும்.

## பத்து மஹா தாநங்கள்,

ஸுவர்ணம் அச்வம் எள்ளு யானை வேலைக்காரி தேர் பூமி வீடு கன்யகை கபிலதேநு இவை மஹாதாநங்கள். அன்னதாநம் வித்யாதாநம் என்ற இரண்டும் மஹாதாநத்திலும் சிறந்த தாநங்கள். அன்னதாநம் பிராணதாநம் போலும் வித்யாதாநம் ஜீவதாநம் போலுமாம். சில விரதங்களுக்கும் சிராத்தங்களுக்கும் அங்கமாகக் கூறப்பட்ட தசதாநங்கள் வேறு. கோதாநத்திற்கு ஸமமான தாநம் வேறில்லை. மூத்தகன்று இளங்கன்றாக இருக்கும் பொழுது அவைகளை ஸுவர்ணத்தால் அலங்கரித்து கழுத்தில் பட்டைக்கட்டி கறக்கும் பாத்திரம் தொட்டி ஓராண்டிற்காவது அதற்கு வேண்டிய தீனி முதலியவைகளுடன், தாநம் வாங்குபவருக்கு வஸ்த்ர மளித்து ஆஹாரமளித்து பசுவின் வாலை உருவி தாநம் செய்யவேண்டும்.

## நமது சரீர தத்துவமும் நாடிகளும்.

மநித உடலின் அமைப்பு மிக விசித்ரமானது; தெய்வீக ஸம்மந்தம் நிரைந்தது. ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு தேவதை அதிஷ்டான தேவதையாக விளங்குகிறது. நாபிக்கு அடியிலுள்ள கிழங்குபோன்ற மூலாதாரத்திலிருந்து முளைபோல் எழுபத்திரண்டு ஆயிரம் நாடிகள் இருக்கின்றன. இடா பிங்களா ஸுஷும்நா காந்தாரீ ஹஸ்தி ஜிஹ்வா பிருதா யசா அலம்புஷா குஹூ சங்கிநீ என்ற பத்து நாடிகள் மிக முக்யமானவை. பிராண அபாந வியாந உதாந ஸமாந நாக கூர்ம கிருகர தேவதத்த தநஞ்ஜய என்ற பத்து வாயுக்களுக்கும் ஜீவனுக்கும் ஸஞ்சார இடமானவை. ரேசக பூரக கும்பக என்ற பிராணயாமத்தால் நாடிகள் சுத்தமாகும். ஆயுள் வளரும். ஆரோக்யம் உண்டாகும். நமது நாஸிவழியாக மூச்சுக்காற்று உள்ளும் புறமும் நடமாடிக்கொண்டிருக்கிறது. ஒரு திநத்திற்கு ஸாதாரணமாக இருபத்தோராயிரத்தறுநூறு மூச்சு விடுகிறோம். இந்த மூச்சுக் கணக்கைக் கொண்டே கலியில் நூறாண்டு ஆயுஸ் என கூறப்படுகிறது. பிராணயாமத்தால் மூச்சு விடாமல் அடக்கி ஆயுளைப் பெரியோர்

விருத்தி செய்தனர். சுவாஸம் உள்ளே செல்வது சிறிது நேரம் தங்குவது வெளியில் வருவது இம் மூன்றும் மும்மூர்த்தி ஸ்வரூபங்களாம். இதற்கு அஜபா காயத்ரீ என்று பெயர். இதன் தத்துவத்தை அறிந்து ஒவ்வொரு மூச்சிலும் மும் மூர்த்திகளைத் தியாநம் செய்வோருக்கு மறு பிறவி கிடையாது.

ஹிருதயத்தில் பிரும்மா கழுத்தில் விஷ்ணு கன்னங்களுக்கிடையே ருத்ரன் நெற்றியில் மஹேச்வரன், பிராணத்தின் அக்ரத்தில் சிவம், அதற்குமேல் பராபரம், எனப்படும். முதல் ஐந்தும் ஸகலமாம். பின்னுள்ளது நிஷ்கலமாம். ப்ராஸாத என்ற நாதத்தை அறிந்து மேலே கிளப்பி ஹம்ஸ ஹம்ஸ என ஜபம் செய்தால் ஆறுமாதங்களில் அணிமா முதலிய எட்டு ஸித்திகள் உண்டாகும்.

## காயத்ரீ ஜப மஹிமை.

பிரணவம் வியாஹ்ருதி காயத்ரீ என்ற மூன்றும் சேர்ந்தே காயத்ரியாம். மந்திர ஸாரமானது. ஓங்காரம். ஸகல வஸ்துக்களுக்கும் முதலானது. அதே சப்தபிரும்மம். சாஸ்திரங்களின் ஸாரமானது வேதம். வேதஸாரமானது காயத்ரீ. அதன் ஸாரமானது வியாஹ்ருதி. அதன் ஸாரம் பிரணவம். ஆதலால் பிரணவம் வியாஹ்ருதி காயத்ரீ என்ற மூன்றும் சேர்ந்தே காயத்ரீ மஹா மந்திரமாம். இதே ஸாவித்ரீ ஸரஸ்வதீ எனப்படும். இதைவிடச்சிறந்த மந்திரம் இல்லை. மஹா பாபங்களைப் போக்குவது. காயத்ரியைக் கூறி திலஹோமம் செய்தால் முன் பிறவியில் செய்த பாபங்களெல்லாம் அகலும்.

அதை ஜபிப்பவரைக் காப்பதால் காயத்ரீ. ஸவிதா என்ற பிரும்ம ஸ்வரூபத்தைப் பிரகாசப் படுத்துவதால் ஸாவித்ரீ. சொல்வடிவமாக இருப்பதால் ஸரஸ்வதீ எனப்படுகிறது. இங்கு காயத்ரியின் பத அர்த்தத்தைப் புராணமே கூறுகிறது. சுலோக வடிவமான வியாக்யானம் எனலாம்.

## ராஜ பட்டாபிஷேகம்.

குடிகளை ஆளுவது என்பது அரசனது ஸ்வதர்மம். ஸ்வதர்மத்தைச் செய்ய உபநயந தீக்ஷை செய்வதுபோல

அரசன் உலகை ஆள்வதற்குமுன் வேதவிதிப்படி ராஜ்ய பட்டாபிஷேகம் செய்துகொள்ள வேண்டும். [வர்ணாச்ரம தர்மமில்லாத இங்கிலாந்தில் கூட மகுடாபிஷேகத்திற்கு பிஷப் வந்து சில சடங்குகளைச் செய்கிறார். வர்ணாச்ரம தர்மம் தோன்றிய புண்ணிய பாரத நாட்டிலே ஜாதியை அழிக்கும் தொண்டில் ஈடுபடுத்துகிறார் கலிமகாராஜன்.] அபிஷேகத்திற்குரிய உபவாஸம் முதலிய நியமம் வஸ்த்துக்கள் ஹோமம் பாராயணம் யார் யார் அபிஷேகம் செய்வது, அதேபோல் மந்திரிகளுக்கும் ஸேநாபதிக்கும் ஏற்ற அபிஷேகங்கள், அவர்களுக்கு வேண்டிய யோக்யதை, அவர்களது கடமை, அரசன் மஹாஜநங்களைக் கூட்டித் தனது ஆக்ஷி நல்லாக்ஷியாக இருக்கும்படிச் செய்ய வேண்டுவது, ராஜ தர்மம் அர்த்த சாஸ்திரம் திக் விஜயம் ஸாம தாந பேத தண்டம், பகைவரை ஜயித்து அங்கே அவரைப் பிரதிஷ்டை செய்வது, நீதி வழங்குவது, குற்றவாளியைச் சிக்ஷிப்பது, தநத்தை விருத்தி செய்வது, நான்கு வர்ணம் நான்கு ஆச்ரமம் முதலிய தர்மங்களை அநுஷ்டிக்கும்படிச்செய்வது, பெண்களை ஸ்வதர்மத்தைக் கைகொள்ளும்படிச் செய்வது முதலியவைகளை வர்ணிக்கிறார்.

## கனவின் பலன்.

தூக்கம் விழிப்பு இவ்விரண்டுகளின் நடுநிலையே கனவெனப்படும். நல்ல தூக்கத்தில் மநம் ஜீவனிடம் ஒடுங்கும். விழித்திருக்கும்போது மநம் ஐம்புலன்களுடன் சேர்ந்து விஷயங்களில் ஸஞ்சாரம் செய்யும். நல்ல தூக்கத்தில் ஸ்வப்நம் தோன்றாது. மநம் மாத்ரம், தான் அநுபவித்த விஷயங்களை ஸ்மரிப்பது கனவாம். அது நமக்கு ஸ்வாதீனமில்லை. சில ஸமயம் பித்தத்தினால் கனவு உண்டாகும். சில ஸமயம் வரக்கூடிய நன்மை தீமைகளைக் காட்டத் தெய்வச் செயலால் கனவு தோன்றும். அத்தகைய கனவிற்கே பலன் உண்டு. நோயால் உண்டாவது அல்லது ஒன்றை நினைத்துக்கொண்டே உறங்கி அதனால் அன்று தோன்றும் கனவும், முன் யாமத்தில் காணும் கனவும் பயனற்றவை. கெட்ட கனவுகளைக் கண்டால் மறுபடி உறங்கி காலையிலதைப் பசுவின் காதில் கூற வேண்டும். நல்ல கனவு கண்டபின் உறங்கக் கூடாது.

நமது உடலில் மரம் செடி முளைப்பது, தலைமீது வெண் கலப் பாத்ரம் விழுந்து உடைவது, மொட்டை அடித்துக் கொள்வது, வஸ்திரமில்லாம லிருப்பது. எண்ணெய் தேய்த்துக்கொள்வது, சேற்றைப் பூசிக்கொள்வது, மேல் இருந்து விழுவது, விவாஹம், பாட்டு, வீணை, ஊஞ்சல், பாம்பு இறப்பது, சிவப்பு புஷ்பம் தரிப்பது, கழுதை, பன்றி, நாய், எருமை இவைகள் மீது ஏறுவது, பக்ஷி மாம்ஸம், எள்ளுண்டை, எண்ணெய் இவைகளைச்சாப்பிடு வது, தாய்வயிற்றில் புகுவது, இந்திரவில் சந்திர ஸூர் யர் கொள்ளிக்கட்டை விழுவது, தேவர் பிராம்மணர் குரு இவர்களது கோபம், நாட்டியம் சிறிப்பு நீரில் முழுகுவது, கோமயம் சேறு மை இவைகளால் ஸ்நாநம், கன்னிகை களின் ஆலிங்கநம், புருஷ சிருங்காரம், வாந்தி பேதி, தேற்கே பிரயாணம், நோய், வீடு விழுவது, பெருக்குவது, பேய் குரங்கு இவைகளுடன் விளையாடுவது, காஷாய மணிதல், எண்ணெய் குடிப்பது முதலியவை துஸ்வப்நங் களாகும். மறுநாள் ஸ்நாநம் செய்து திலஹோமம், சிவ விஷ்ணு பூஜை, ஸ்துதிபாடம், ஸூக்தபாடம் இவைகளைச் செய்தால் துஸ்வப்ந பலன் தோன்ருது.

முதல் யாமத்தில் கண்ட ஸ்வப்ந பலன் ஓராண்டிலும் இரண்டாவது ஆறு மாதத்திலும் மூன்ருவது யாமம் மூன்று மாதத்திலும் நான்காவது யாமம் பதினைந்து நாளி லும் அருணோதயம் பத்து நாட்களிலும் பலனைத் தரும். ஒரே நாளில் இரு ஸ்வப்நம் கண்டால் பின் கண்டதே பய னைத் தரும்.

### நற்கனவு.

மலை மாடி யானை காளை இவைகள் மீது ஏறுவது, வெள்ளை புஷ்பம் வஸ்த்ரம் சந்தநம் நாபியில் மரம் செடி முளைப்பது, அநேக கைகள், தலைகள் முளைப்பது, தலை மயிர் நரைத்தல், சந்திர ஸூர்ய நக்ஷத்ரங்களையும் இந்த்ர வில்லையும் தொடுவது, பூமியில் மேகம், சத்ரு அடிபடு வது, வாதம் சண்டை சூதாட்ட மிவைகளில் ஜயிப்பது, பச்சைமாம்ஸம் பாயஸ மிவைகளை உண்பது. ஸுரை ரக்தம் இவைகளைப் பருகுவது, அவைகளால் ஸ்நாநம்,

பசு எருமை ஸிம்ஹம் யானை இவைகளை வாயால் ஊட்டுவது, தேவ பிராம்மண குரு பிரஸாதம், பசுவின் கொம்பினால் ஜலாபிஷேகம், சந்திரமண்டல ஜலத்தா லபிஷேகம், மரணம், தலை வெட்டுபடுவது, வீட்டில் தீ பற்றி எரிவது, கொடை சாமரம் கிரீடம் வீணை ராஜா யானை குதிரை காளை பசு நெய் அசுத்த வஸ்து இவைகளைப் பூசிக்கொள்வது, தகாதவரிடம் சிருங்காரம், வெளுத்த வஸ்திரம், பழுத்த மரம், நிர்மலமான ஆகாசம் இவைகளைக் கனவில் கண்டால் குடும்பம் விருத்தியாகும்.

## சுப அசுப சகுனங்கள்.

அரசனது நித்திய கடமை ராஜ நீதி ஸ்திரீ புருஷ லக்ஷணம் ஆயுதலக்ஷணம் ரத்நபரீக்ஷை அரசன் உபயோகிக்கத்தக்க புஷ்பம் யந்திரத்தால் பாணம் அடிப்பது கையால் விடுவது அஸ்த்ரம் விட்டபின் அதுவெடிப்பது கையால் யுத்தம் இப்படிப் பலவகை யுத்தம் ஆயுதங்களை அமைக்கும் வகை யந்திரங்களை நிர்மாணம் செய்வது ராஜ சாஸ்திரத்தை விட தர்மசாஸ்திரமே சிறந்தது. தர்ம சாஸ்திர ஸஹாயத்தால் ராஜ சாஸ்திரத்தை அநுஸரித்தல். குற்றவாளியைக் கண்டுபிடிக்கும் வகை, பங்காளிகளுக்குப் பங்கிடுவது, கதி இல்லாதவர் ஏழை மாணவர் முதலியவர்களை அரசன் ரக்ஷிக்கவேண்டும். குற்றவாளிக் கேற்ற சிக்ஷை, நான்கு வேத லக்ஷணம், ஸ்திரீ புருஷர்களை வசமாக்க மந்திரம், அபமிருத்யுவை அகற்ற சாந்தி, உத்பாத சாந்தி, பலவகை ஸ்நாநங்களால் பற்பல பலன்களைப் பெறுதல், இந்திர துவஜ பூஜை, விஷ்ணு பஞ்ஜரம் வேத சாகைகள், பதினெண் புராணங்களின் சுலோகக் கணக்கு, புராணகதை முடிந்தபின் புராண தாநம், ஸூரிய சந்திர வம்சம், யாதவ வம்சம், சோழ பாண்டிய வம்சம் முதலியவைகளை வர்ணித்து மறுபடி ஆயுர்வேத விதியைக் கூறினர். தேள் பாம்பு முதலிய விஷங்களுக்கு அரிய மருந்து, நோய்களுக்கு மருந்துடன் மந்திர ஜபம் தாநம் ஹோமம் முதலியவை, ரோக லக்ஷணம், ஆஹாரம் தூக்கம் சிற்றின்பம் இம் மூன்றும் அளவுடனிருந்தால் நோய் வராது. ஹிதமானதை மிதமாகப் பசித்தபின் உண்பது, விருக்ஷ வைத்யம், காயத்ரீ அஷ்டாக்ஷரி முதலியவைகளால் நோயகலும். மிருத ஸஞ்ஜீவிநி

மந்திரம், மருந்து. ரணசிகித்ஸை, யானைவைத்யம், குதிரை வைத்யம், யானை ஏற்றம், குதிரை ஏற்றம், யானை குதிரை லக்ஷணம், அவைகளுக்கு நோய் வராமல் சாந்தி.

## மந்திரம்.

கோ சிகித்ஸை, சாணி கோமயம் இவைகளின் பெருமை, கோ வைத்யம், அவைகளுக் கேற்ற தைலம், **மந்திர சாஸ்திரம்**, இருபது எழுத்துகளுக்கு மேலுள்ள மந்திரங்கள், மாலா மந்திரம், பத்து எழுத்துகளுக்குமேல் உள்ளதும் அதற்குக் கீழ்ப்பட்டதும், பீஜ மந்திரம், இவை இளமையில் பயன் தருபவை. மாலா மந்திரம் கிழத் தன்மையில் பலனைத் தரும். ஐந்தெழுத்துக்கு மேல்பட்டவை எப்போதும் ஸித்திதருபவை. ஸ்வாஹா என்று முடியும் மந்திரம் ஸ்திரீ மந்திரம். நம: என்பதை முடிவில் பெற்றவை நபும்ஸக மந்திரங்கள். மற்றவை, புருஷ மந்திரங்கள். வச்யம் முதலிய காரியங்களுக்கு ஸ்திரீ நபும்ஸக மந்திரங்கள் சிறந்தவை. பட் என்பதை முடிவில் உடையது, ஆக்நேய ஸௌம்ய மந்திரமாம்.

குரு பணிவிடை செய்து நன் நாளில் அவர் உபதேசித்த மந்திரமே பலனைத் தரும். தற்செயலாக காதில் விழுந்த மந்திரம், மற்றவருக்கு உபதேசிக்கும்பொழுது கேட்டது, புஸ்தகத்தில் பார்த்துத் தானே ஜபிப்பது ஆகிய இவை பலனைத் தரா. கிருஷ்ணாஷ்டமீ கிருஷ்ண சதுர்த்தசீ சந்திர ஸூர்ய கிரஹணம், இந்த காலங்களில் பர்ணசாலை மடம் கோயில் நதிக்கரை ஸ்வாமி ஸன்னதி முதலிய இடங்களில் அமர்ந்து ஏகாந்தமாக ஜபம் செய்தால் சீக்ரம் ஸித்தி உண்டாகும். ஸித்தியை நாடுபவர் கஞ்சி பால் முதலியவைகளையே உட்கொண்டு மற்ற உணவை விடவேண்டும். பிறர் காதுபட ஜபிப்பதைவிட மெதுவாக ஜபிப்பது பத்துபங்கும் நாக்குமாத்ரம் அசைவது நூறு பங்கும், மனதால் ஜபிப்பது ஆயிரம் பங்கும் பலனைத் தரும். மந்திரம் தேவதை குரு மூன்றையும் ஒன்றாக எண்ணவேண்டும். அந்தந்த தேவதா மந்திரத்திற்கு உரிய பீஜ அக்ஷரங்களை நமது உடலில் வைத்து தேவமயமாகச் செய்யவேண்டும். இதே அங்கந்யாஸ கரந்யாஸம் எனப்படும். ஆசாரம் நியாஸம் தியானம் ஆஹாரம் இடம் முதலியவைகளால் சீக்கிரத்தில் மந்திர ஸித்தி ஏற்படும்.

## ஸர்ப்பங்களைப் பற்றிய அபூர்வ விஷயம்.

சேஷன் வாஸுகி தக்ஷன் கார்கோடகன் அப்ஜன் மஹாம்புஜன் சங்கபாலன் குலிகன் என்பவர் ஸர்ப்பங்களில் மிகச்சிறந்தவர்கள். முதலிருவர் இருவராகபிராமண க்ஷத்ரிய வைச்ய சூத்ர வகுப்பைச்சார்ந்தவர். இவர்களது வம்சத்தில் ஐநூறு வகுப்புகள் தான்றின. சிலவைகளுக்கு பலதலைகளுண்டு. சில ஸர்ப்பங்களே படமெடுக்கும். அதில் சக்ரம் கலப்பை குடை ஸ்வஸ்திகம் அங்குசம் முதலிய அடையாளங்கள் இருக்கும். பற்பல வகையான உடலமைப்பு ஸ்வபாவம் வர்ணம் குணம் உள்ளவை. கோநச என்ற வகுப்பில் பதினாறு வகை. ராஜீவா என்ற ஜாதியில் பதிமூன்று. வியந்தரா என்பதில் இருபத்தோறு பிரிவுகள் உண்டு.

ஸர்ப்பங்களுக்குக் கர்ப்பாதாந காலம் ஆடி ஆவணி புரட்டாசி என்ற மூன்று மாதங்களே. இந்த காலத்தில் அல்லாமல் வேறு காலத்தில் பிறக்கும் பாம்புகள் வியந்தரா என்ற வகுப்பைச் சாரும். நாலாவது மாஸத்தில் பாம்பு இருநூற்று நாற்பது முட்டைகள் இடும். இவைகளில் ஒரு ஸ்திரீ ஒரு புருஷன் ஒரு நபும்ஸகன் இவர்களை மாத்ரம் விட்டு விட்டு மற்றெல்லாவற்றையும் தானே புஜித்து விடும். ஏழாவது நாளில் பாம்புக் குட்டி கண்ணைத் திறக்கும். ஒரு மாஸத்தில் கருப்பாகும். பனிரண்டாவது நாள் ஸூர்யனைப் பார்த்தவுடன் 32 பல்முளைக்கும். இருபதாவது நாளில் அவைகளில் நான்கு விஷப்பல்களாகும். கராளீ மகரீ காலராத்ரீ யமதூதீ என அவைகளின் பெயர். ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பாம்பு தோல் உரிக்கும். நூற்று இருபது வருஷம் ஜீவித்திருக்கும். சிலவை அறுபத்திரண்டாண்டுகளே பிழைத்திருக்கும். மந்திரத்திற்கும் ஸத்தியத்திற்கும் சில ஸர்ப்பங்கள் கட்டுபடும். கண்ணும் காதும் பாம்பிற்கு ஒன்றேயாகும். நாக்கு இரண்டாகும்.

"ஓம் நமோ பகவதே நீல கண்டாய" என்பதை ஜபித்தால் விஷம் இறங்கும். மந்திரஜபம் கருடதியாநம் மருந்து இவைகளால் விஷ வைத்யம் செய்ய வேண்டும். கடித்த இடத்தை கத்தியால் நறுக்கி ரக்தம் பெருகும்படி செய்வதும் தீயினல் சுடுவதும் ரக்தம் ஓடாமல் அவ்விடத்தைக்

கட்டுவதும் முதல் வைத்யமாம். இங்கு எந்தெந்த திநத்தில் எந்தெந்த காலத்தில் எந்தெந்த பற்கள்பட்டால் எந்தெந்த மாதிரி துன்பம் எந்த பாம்பிற்கு எந்தபல் விஷமில்லாதது எது முகர்ந்தால் உடனே மரணம்? என்பனவும் கருட மஹா மந்திரமும் பஞ்சாங்க ருத்ரத்தால் வைத்யம் சில மருந்துகள் வாந்தி எடுக்கும்படி செய்தல் முதலியனவும் காணப்படுகின்றன.

குழந்தைகளுக்கு பாலாரிஷ்டமகல இதை ஜபிக்க வேண்டும். அல்லது எழுதி தொட்டிலில் கட்டவேண்டும்.

[ ஓம் நமோ பகவதி சாமுண்டே முஞ்ச முஞ்சபால்ம் பாலி காம்வா பலிம் கிருஷ்ண கிருஷ்ண ஜய ஜய வஸ வஸ—

பிரும்மா விஷ்ணு: சிவ: ஸ்கந்த: கௌரீ லக்ஷ்மீ: கணுதய: ரக்ஷந்து கிரஹதாஹார்த்தம் முஞ்சந்து ச குமாரகம் ]

ருது ஸம்பந்தமான பெண்நோய் கர்ப்பபை சுத்தமாகவும் மலடுகள் கூட பிரஸவிக்கவும் மயிர் வளரவும் சொட்டை நீங்கவும் அற்புதமான மருந்து கூறப்படுகிறது. ஐம்பத்தைந்து க்ஷேத்ரங்களில் ஐம்பத்தைந்து விஷ்ணு உருவங்கள், மூன்று உலகையும் மோஹிக்கும்படி செய்யும் மந்திரம் யந்திரம், காவ்ய நாடக கத்ய லக்ஷணம், அலங்காரம், பனிரண்டுவகை நர்த்தநம், அபிநயம், நவரஸங்கள் ஒரே எழுத்தால் சுலோகம், கௌமார வியாகரணம் சப்தம் கிரியா ஸமாஸம் நிகண்டு முதலியவை இங்கிருக்கின்றன.

## நமது உடலமைப்பு.

முற்பிறவியில் செய்த கர்ம பலனை இங்கு அனுபவிக்கவும் பிறப்பு இறப்புகளை அகற்றவும் ஐந்து பூதங்களாலாகிய உடல் நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அதில் நாடி ரக்தம் எலும்பு மண்டை ஓடு சிறு நாடிகள் ரோமங்கள் மேதஸ் எண்ணெய் இரும்பு ஸத்து கந்தகம் முதலியவைகள் எவ்வளவோ இருக்கின்றன? அவை குறையாமல் இருந்தால்தான் சரீர யந்திரம் ஓடும். ஸத்துக்களை உணவுடன்சேர்த்து உண்ணவேண்டும். கபத்தின் ஓட்டத்தினல் ஹிருதயம் தாமரை மலர்போலிருக்கிறது. அது கீழ்முகமாயிருக்கிறது. அதன் இடையிலுள்ள சந்தில் மநதுடன் ஜீவனிருக்கிறது. அதன் வாமபாகத்தில்

ப்லீஹா, வலதில் யக்ருத் இருக்கின்றது. முந்நூற்று எண்பது எலும்புகள் ஸூக்ஷ்மப்பல் 32 ஸ்தூலம் முப்பத்திரண்டாக அறுபத்து நான்குபற்கள். முப்பதுலக்ஷம் நரம்புகள் ஐம்பத்து ஆறு ஆயிரம் எடை (பௌண்ட்) ரஸங்கள் இந்த வழியாகச் செல்கின்றன. எழுபத்திரண்டு கோடி ரோமங்கள் உடலில் உள. ஆயுஸ் முடியும் போது ஜீவன் உடலை விடும். அச்சமயம் எங்கெந்த தாதுக்கள் எப்படி மாறுகின்றன? என்பவைகளை மிக ஆச்சரியமாக வர்ணிக்கிருர். (ஆராச்சிக்காரர்களுக்கு எல்லா வகையிலும் ஆக்நேயம் ஒரு வழிகாட்டி. விசேஷமாக வைத்யம் உடலமைப்பு முதலிய வைகளில் விக்ஞானிகளுக்கு வேண்டிய விஷயங்கள் இருக்கின்றன. சிலது தெரியாததாலும் பெரும் பாலோருக்கு இதில் ருசிஇராதென்றும் அதிகமாக விவரிக்க வில்லை.)

## யம நியமாதி

விரிவாக இருக்கிறது "பிரணவோதநு" என்பது போன்ற உபநிஷத்துகளும் "சுசௌதேசே" என்பது. போன்ற கீதா சுலோகங்களும் நிறைந்திருக்கின்றன தர்க்கரீதியில் அநுமாந பிரமாணத்தால் ஆத்மா உடலல்ல என வேதாந்த தத்துவத்தை விளக்குகிருர்.

தேஹ ஆத்மா நப[4]வதி[3] திருச்யத்வாச்ச, க[4]டாதி[3]வத் |
ப்ரஸுப்தே மரணே தேஹாத் ஆத்மான்யோ க்ஞ யதே த்[4]ருவம் ||

உடல் ஆத்மா அல்ல. ஏன்? கண்ணுக்குத் தெரிவதால் தெரிவது எதுவோ அது ஆத்மா அல்ல. எதைப்போல்? பானையைப்போல். உடல் உறங்கும் போதும் மரித்த போதும் ஆத்மா வேறு இருக்கிருன் என அறிகிரும்.

## கீதா ஸாரம்.

எழுநூறு சுலோகங்கொண்ட பகவத்கீதையிலிருந்து ஸாரமான ஐம்பத்தெட்டு சுலோகங்களைப் பொருக்கி எடுத்து கீதா ஸாரமாகக் கூறுகிருர். [அதைத் தனிப் புத்தகமாக அச்சிட்டு அளிக்க எந்த தார்மிகரேனும் முன் வந்து எழுபத்தைந்து ரூபாய் உதவினல் ஆயிரம் காபி பொருளுடன் வெளியிடலாம். நித்யம் ஒருமுறை அதைப் பாராயணம் செய்யலாம்.]

### யம கீதா.

இங்கு ஒரே அத்யாயம் முப்பத்தேழு சுலோகத்தில் ஷி கீதை கூறப்படுகிறது. மிக ரஸமானது. பல சுலோகங்கள் கீதையிலுள்ளதே எனினும் அபூர்வமாக பல காணப்படுகின்றன.

நாஸ்தி விஷ்ணு ஸமம் தியேயம்-தபோந அநசநா த்பரம்.
நாஸ்தி ஆரோக்ய ஸமம் தன்யம்-நாஸ்திகங்காஸமாஸரித் ||
நஸோஸ்தி பாந்தவ: கச்சித்-விஷ்ணும்முக்த்வா ஜகத்குரும்:

விஷ்ணுபோல் தியாநத்திற் கேற்றவர் வேறில்லை. உபவாஸம்போல் வேறு தவமில்லை. ஆரோக்கியத்திற் கீடான செல்வம் வேறில்லை. கங்கைபோல் வேறு நதி இல்லை. விஷ்ணுவைத் தவிற வேறு பந்துவில்லை.

**नास्ति विष्णु समं ध्येयं तपो नानशनात्परं।**
**नास्ति आरोग्यसमं धन्यं नास्ति गंगासमासरित्**
**नसोस्ति बान्धवः कश्चित् विष्णुं मुक्त्वा जनार्दनम् ॥**

ஸ: பிரும்மலோகம் ஆப்நோதி குலாநாம் சதம் உத்[4]தரேத்:
ஆக்நேய சுலோக பாடேந-பாபபங்காத் விமுச் யதே.

ஆக்நேய புராணத்தில் ஒரு சுலோகம் படித்தாலும் கேட்டாலும் பாபச் சேற்றிலிருந்து விடுபட்டு தனது குலத்தைச் சார்ந்த நூறுபேரைக் கரை ஏற்றி தானும் பிரும்மலோகம் செல்வான்.

**ஆக்நேய புராணம் முற்றிற்று.**

---

[துலா காவேரீ மஹிமை ஆக்நேய புராணத்திலிருப்பதாகக் கூறப்படுகிறது. 30 அத்தியாயத்தில் தனிப் புத்தகமாக இருக்கிறது. அதைப் பலர் தமிழில் வெளியிட்டார்கள். ஆனல் காபி எவரிடமுமில்லை. அதை இவை முடிந்தபின் கவனிப்போம். மூல ஆக்நேயத்தில் துலா புராணமில்லை.]

# 11. ஸ்ரீ பிரும்ம வைவர்த்த புராணம்.




ஸ்ரீ ராதா கிருஷ்ணன்.

மாம்பலம் குருகுல வெளியீடு.

# பிரும்ம வைவர்த்த புராண மூலக்ரந்த அநுக்ர மணிகா.

—:o:—

1 சௌநகர் சூதபுராணிகரைக் கேட்பது.

2 பிரும்ம ஸ்வரூபம்.

3 சிருஷ்டி. கிருஷ்ணனிடமிருந்து நாராயணன் முதலியவர் தோன்றுதல்.

4 சாவித்ரி முதலியவர், பிரும்மாண்டம், மஹாவிராட் இவர்கள் உண்டாதல்.

5 கால அளவு. ராஸ மண்டலம். ராதை பிறப்பு. ராதா கிருஷ்ணர்களிடமிருந்து கோபர் கோபிகை கோ இவை உண்டாதல். சிவன் முதலியவர்க்கு வாகன மளித்தல். குஹ்யகர் முதலியவர் உண்டாதல்.

6 சங்கரருக்கு கிருஷ்ணன் வரமளித்தல். சிவநாமப் பொருள். ஸிருஷ்டி செய்ய பிரும்மாவிற்கு உத்தர வளித்தல்.

7 பூமி முதலிய ஸிருஷ்டி.

8 வேத சாஸ்திரம் முதலியவை உண்டாதல். ஸ்வாயம்புவமனு. புலஸ்த்யர் நாரதருக்குச் சாபமளித்தல்.

9 கச்யபர் முதலியவர் உண்டாதல். பூபியினிடம் மங்கள கிரஹ முண்டாதல். கச்யப வம்சம், சந்திரனுக்கு தக்ஷ சாபம். சிவனைச் சரணமடைந்த சந்திரனுக்கு விஷ்ணு வரம்.

10 ஜாதி நிர்ணயம். கிருதாசியும் விச்வகர்மாவும் ஒருவரை ஒருவர் சபித்தல்.

11 அச்வினி சாப விமோசனம். விஷ்ணு, பிராமண மஹிமை.

12 நாரதர் உபபர்ஹணனாக ஆதல்.

## பிரகிருதி கண்டம்.

39–40 பூமி தான பலன். பகீரதன் கங்கை கொண்டு வருதல். ஸ்தோத்திரம் பூஜை.

41 கங்கைக்கு விஷ்ணுபதி எனப் பெயர். ராதை கிருஷ்ணனை மிரட்டுதல். கங்கையை விழுங்கும் பொழுது கிருஷ்ணன் சரணத்தில் லயித்தல். பிரும்மா வேண்ட கங்கை வெளிவருதல்.

42 கங்கை நாராயணனை மணத்தல்.

43 துளசி சரிதம். நற்குலத்தில் உதித்தல்.

44 வேதவதி சரிதம். சுருக்கமான ராமாயணம்.

45 துளசீ பெண்ணுகி பதிரிகாச்ரமத்தில் தவம் செய்தல். பிரும்மா வரமளித்தல்.

46 துளஸியிடம் சங்கசூடன் வருதல். விவாஹம். பதவியிழந்த தேவர் விஷ்ணுவிடம் முறை இடல். விஷ்ணு சிவனுக்கு சூலமளித்தல்.

47 சிவன் சங்கசூடனுக்குத் தூதனுப்பல். துளசி சங்கசூட க்ரீடை.

48 சங்கசூடன் சண்டைக்கு வருதல். வீரவாதம்.

49 தேவாசுர ஸேனை யுத்தம். ஸ்கந்தன் தோல்வி. காளி சங்கசூட யுத்தம்.

50 விஷ்ணு கிழப்பிராம்மணனுக வந்து சங்கசூடன் கவசத்தை யாசித்தல். சங்கசூடனைக் கொல்லுதல். அவனிடமிருந்து சங்கமுண்டாதல்.

51 சங்கசூட வேடம் தரித்து விஷ்ணு துளசியிடம் ரமித்தல். துளசி அளித்த சாபம். வரமளித்தல். துளசி பத்ரத்தின் பெருமை. ஸாளக்ராம ஸ்வரூபம்.

52 துளசியின் நாமாஷ்டகம். துளசீ பூஜை.

53 பராசரர் அச்வபதிக்கு சாவித்திரியின் த்யானம், பூஜை, பிரும்மா செய்த ஸ்தோத்திரம் இவைகளை உபதேசித்தல்.

54 சாவித்ரி சத்யவான் மணம். சத்யவான் மரணம். யமன் கர்மாவே மரண காரணம் என கூறுதல்.

55 சாவித்ரி யம ஸம்வாதம்.

56–57 யமன் சாவித்ரிக்கு வரமளித்தல். நற்கர்மபலனைக் கூறுதல்.

58–61 சாவித்ரி யமஸ்துதி. நரக குண்டம். பாபத்திற்கேற்ற நரகம்.

62–63 கிருஷ்ண ஸேவை. லிங்க தேஹம். நரககுண்ட லக்ஷணம்.

64 கிருஷ்ண மகிமை. சத்யவான் பிழைத்தல். சாவித்ரி என்ற சொல்லின் பொருள்.

65–66 லக்ஷ்மி ஸ்வரூபம். லக்ஷ்மி பூஜை. துர்வாஸர் இந்திரனைச் சபித்தல். அவரிடம் க்ஞான உபதேசம் பெறல்.

67 ப்ருஹஸ்பதியிடம் இந்திரன் ஞானஉபதேசம் பெறல்.

68 இந்திரன் பிரம்மாதிகளுடன் நாராயணனை வணங்கி லக்ஷ்மி இருப்பிடம் அடைதல். பார்க்கடலை கடைதல்.

69 தேவர் லக்ஷ்மியைப் பூஜித்தல். மந்திரம், த்யானம், ஜபம்.

70 ஸ்வாஹாதேவி. 71 ஸ்வதாதேவி.

72 தக்ஷிணுதேவி சரிதம். ஸ்துதி.

73 ஷஷ்டிதேவி சரிதம். பிரியவிரதன் பூஜைசெய்தல்.

74 மங்கள சண்டி சரிதம். பூஜை, த்யானம், மந்திரம்.

75 மனஸாதேவீ சரிதம். அவளது 12 நாமாவும் பொருளும்.

76 ஜரத்காரு அஸ்தீகர் ஸர்ப்பயாகத்தை நிறுத்துதல்.

77–78 சுரபி சரிதம். ஸ்துதி. சிவன் ராதா சப்தத்தின் பொருளையும் சரிதத்தையும் கூறுதல்.

79 விரஜையோடு விளையாடும்பொழுது ராதை வருதல். கிருஷ்ணன் மறைதல். விரஜை நதியாவது. சுதாமாவின் வாதம்.

80 பிரும்மா ஸுயக்ஞனைச் சபித்தல்.

81–82 அதிதியிடம் அன்பு செலுத்தும் வ்யாஜமாக அவரைப் பின்தொடர்ந்த ரிஷிகள் அரசனுக்கு உபதேசித்தல்.

83 அரசனல் வேண்டப்பட்ட சுதபஸ் என்பவர் உபதேசித்தல்.

84 கிருஷ்ண ஸ்வரூபம். கால அளவு. பிராம்மண பாத ஜலம். தபஸினால் சுயக்ஞருக்கு ராதா கிருஷ்ண தரிசனம்.

85–86 ராதையைப் பூஜிக்கும் வகை. ராதையின் கவசம்.

87 துர்க்காதேவியின் சரிதம். 16 நாமாக்களின் பொருள்.

88 தேவீ மாஹாத்மியம். சுரத வம்சம். தாரை. சந்திரன். சுக்ரர் உபதேசம்.

89 கிருஷ்ணன் உத்தரவால் இந்திரன் போருக்குக் கிளம்புதல். நர்மதைக் கரையில் தங்குதல். ப்ருஹஸ்பதி கைலாசம் செல்லுதல்.

90 சிவ பிருஹஸ்பதி ஸம்வாதம். பிரும்மா சுக்ரனுடன் தூதனுகச் செல்லுதல்.

91 பிரும்மாவின் வேண்டுகோளுக்கிணங்கி தாரகையை அளித்தல். புதன் பிறப்பு. சுரத வைச்ய சரிதம்.

92–93–94 சுரத மேதஸ் ஸம்வாதம். சமாதி பிருகிருதியைத் தரிசித்து முக்திபெறல். சுரதன் செய்த பிருகிருதி பூஜை.

95–96 பிருகிருதி பூஜை பலன். துர்கா ஸ்துதி கவசம்.

## கணேச கண்டம்.

97–98 சிவ பார்வதி ஸங்க பங்கம். சிவனிடம் பார்வதி வருந்தல்.

99 பார்வதிக்கு சிவன் புண்ய விருதம் விஷ்ணு மந்திரம் அளித்தில்

100–101–102 புண்யகவிருத விதி. ம்ருத்தன் கதை. விருத உத்ஸவம்.

103 கிருஷ்ணன் கூறியபடி பார்வதி சிவனைத் தக்ஷிணையாக அளித்தல். சிவனைத் திரும்பிப்பெற கிருஷ்ண ஸ்தோத்ரம்.

104 பார்வதி கிருஷ்ணனிடம் வரம் பெறல். சிவனை அடைந்து கணேசனை உண்டுபண்ணுதல்.

105 சிவனும் பார்வதியும் கணேசனைத் தரிசித்தல்.

106 கணேசனுக்கு மங்களா சரணம் செய்தல்.

107 பார்வதி சனைச்சர ஸம்வாதம்.

134–135 பத்ரகாளி கவசம். புஷ்கராக்ஷ பரசுராம யுத்தம்.
136–137 மஹாலக்ஷ்மி கவசம். துர்கா கவசம்.
138 கார்த்தவீர்யனிடமிருந்து கவசத்தைக் கபடமாகக் கவருதல். கார்த்தவீர்யன் பரலோகம் செல்லுதல்.
139–140 பரசுராமர் கைலாசம் செல்லுதல். கணேச பரசு ராமர் யுத்தம்.
141 கணேசர் தந்தம் முறிதல்.
142 பார்வதி பரசுராமனை விரட்டுதல். விஷ்ணு உபதேசம்
143 பரசுராமர் தேவியைத் துதித்தல்.
144 பரசுராமர் விநயக பூஜை செய்தல். துளசியும் கணேசரும் ஒருவருக்கொருவர் சாபமளித்தல்.

## ஸ்ரீ கிருஷ்ண ஜன்ம கண்டம்.

145 நாரதருக்கு நாராயணர் விஷ்ணு மஹிமையைக் கூறுதல்.
146 கிருஷ்ணன் விரஜையோடு விளையாடுதல். ராதை யின் பயத்தால் கிருஷ்ணன் மறைதல். விரஜை நதியாதல்.
147 கிருஷ்ணனுக்கு ராதை சாபமளித்தல். ராதையும் ஸ்ரீதாமாவும் ஒருவருக்கொருவர் சாபமளித்தல்.
148 பூதேவி பாரத்தைக் குறைக்க பிரும்மாவுடன் கோலோகம் செல்லுதல்.
149–150 தேவர் கிருஷ்ணனைத் துதித்தல். கிருஷ்ணரும் தேவரும்.
151 வசுதேவ தேவகிகளின் மணமும் முன்பிறவியும். கம்ஸன் 6 குழந்தைகளைக் கொல்லுதல். கிருஷ்ண பலராம யோக மாயை தோன்றுதல்.
152 ஜன்மாஷ்டமி விரதம்.
153 நந்தன் உத்ஸவம் கொண்டாடுதல். பூதனை த்ருணவர்தன், சகடன்.
154 கர்காசார்யர் கிருஷ்ணனுக்கு நாமகரணம் செய்தல்.
155 யமள அர்ஜ்ஜுநம் முறித்தல். சாபமகலுதல்.
156 ராதாகிருஷ்ண விவாஹம். ராதா ஸ்தோத்திரம்.

157 பகன்கேசி ப்ரலம்பன் வதம். வசுதேவர் முதலியவர்க்கு சிவசாபம். பிருந்தாவனம் செல்லுதல்.

158 கலாவதியுடன் விருஷபானு மணம் புரிதல். பிருந்தாவனம் என்பதன் பொருள். ராதை முதலிய 16 பெயர்களின் பொருள். நாராயண கவசம். ராதா ஸ்தோத்திரம்.

159 யக்ஞ பத்னி சரிதம். கிருஷ்ண ஸ்துதி. அக்னி எல்லாவற்றையும் பக்ஷித்தல்.

160 காளீய சரிதம். நாகபத்னி ஸ்தோத்திரம். காட்டுத் தீயை விழுங்குதல். கோப கோபீ ஸ்தோத்திரம்.

161 பிரும்மா கன்றுகளையும் கோபர்களையும் தூக்கிச் செல்லுதல். கிருஷ்ண ஸ்தோத்திரம்.

162 இந்திர யாகத்தை நிறுத்துதல். கோவர்த்தனத்தைத் தரித்தல். இந்திரனும் நந்தனும் கிருஷ்ணனைத் துதித்தல்.

163 தேனுகாசுர வதம். அவன் செய்த ஸ்தோத்திரம்.

164 திலோத்தமரையும் பலிபுத்ரரையும் பிரும்மா சபித்தல்.

165 தூர்வாஸர் மணம். மனைவியை விட்டுப் பிரிதல்.

166 ஔர்வருடைய சாபத்தால் தூர்வாஸர் அவமானம் அடைதல். அவர் செய்த கிருஷ்ண ஸ்தோத்திரம்.

167 ஏகாதசி விரதம்.

168 கோபிகா வஸ்த்ர அபகரணம். ராதை கிருஷ்ணனைத் துதித்தல். கௌரி விரதம். விரத கதை. பார்வதி ஸ்தோத்திரம். பார்வதி வரமளித்தல்.

169 ராஸ லீலை.

170 அஷ்டாவக்ரர் விடுபடுதல். அவர் கிருஷ்ணனைத் துதித்தல்.

171 அஷ்டாவக்ரர் சரிதம். அஸிதர் சிவ ஸ்தோத்திரம் செய்தல். ரம்பை தேவலரை அஷ்டாவக்ரர் ஆகுதல்.

172 பிரும்ம மோஹினி சங்கம். மோஹினி செய்த காம ஸ்தோத்திரம். பிரும்ம மோஹினீ சம்வாதம். கிருஷ்ண ஸ்துதி.

173 மோஹினி பிரும்மாவிற்கு சாபம். பிரும்ம கர்வ பங்கம்.

174 கங்கையின் பிறவி. பிரகிருதி என்று பெயர்வந்த காரணம். அதன் மகிமை.

175 கங்கா ஸ்நாநம். பலன். ரதியும் காமனும் உண்டாதல். காமபாணத்தால் பிரும்மாவின் மனம் கலங்குதல். அவருக்கு ரிஷிகளும் நாராயணரும் உபதேசித்தல்.

176 சிவ கர்வபங்கம். சிவனது ஐச்வர்யம்.

177 பார்வதி சாபத்தால் சிவ நைவேத்யம் உண்ணத் தகாததாக ஆனது. சிவன் பார்வதியைத் துதித்தல்.

178 ஸதீதேவி உடலை விட்டுப் பார்வதி ஆனது. சிவன் மலையுடன் சேர்ந்தது.

179 பார்வதியும் பர்வதமும் சிவனைத் தர்சித்தல். மன்மதனை எரித்தல்.

180 பார்வதி தவம். பிராம்மணச் சிறுவனாகி சிவன் பார்வதியிடம் செல்லல். சிவன் பிக்ஷு வேஷம் தரித்து ஹிமவானிடம் செல்லுதல். தேவர் ஆலோசனை. சிவன் ஹிமாலயத்தினிடம் சென்று சிவனைக் குறைத்துக் கூறல். ஸப்த ரிஷிகள் ஹிமவானிடம் செல்லுதல். வசிஷ்டர் அனரண்ய சரிதம் கூறல்.

181 லக்ஷ்மி தர்ம ஸம்வாதம். சதி தேஹத்தை விட்டது.

182 சிவன் விரஹம்.

183 மஹாதேவ யாத்ரை. சிவஸ்தோத்திரம்.

184 சிவ விவாஹ வர்ணநம். 185 சிவகௌரி விலாசம்.

186 இந்திர. சூர்ய. அக்னி. தூர்வாச. தன்வந்திரி. கர்வ பங்கம்.

187 மனஸா விஜயம். ராதையின் துக்கம். ராதை என்பதன் பொருள். ராதாகிருஷ்ண லீலை.

188 கிருஷ்ண சரிதம். கிருஷ்ண பிரபாவம்.

189 மஹா விஷ்ணு முதலியவர் கர்வபங்கம். லக்ஷ்மி ஸ்தோத்ரதிம்.

190 கிருஷ்ணன் பிரிவால் வருந்தும் ராதையுடன் பிரும்மா வைகுண்டம் செல்லுதல்.

240 கிருஷ்ணனோடு கூட அருந்ததி முதலியவர் பேசுதல் தம்பதிகள் துவாரகை வருதல்.

241 நந்தன் கதளீவநம் செல்லுதல். ராதை யசோதை பேச்சு.

242 யசோதைக்கு ராதை உபதேசம் செய்தல். ராம கிருஷ்ண பெயர்களின் பொருள்.

243 ருக்மிணியிடம் மன்மதன் பிறத்தல். சம்பரனைக் கொல்லுதல். ரதியும் மன்மதனும் துவாரகை வருதல். கிருஷ்ணன் பதினாறாயிரம் ஸ்திரீகளை மணப்பது. அவர்களிடம் குழந்தை பிறத்தல். தூர் வாஸருக்கு கிருஷ்ணன் கன்யாதானம் செய்தல்,

244 கைலாசம் சென்ற தூர்வாஸர் பார்வதி சொல்லிய படி துவாரகை சென்றது. கிருஷ்ணன் அஸ்தினா புரம் செல்லுதல். ஜராஸந்த சால்வவதம், சிசுபால தந்தவக்த்ர வதம். குருபாண்டவ சண்டை. பூபாரம் அகலுதல். இறந்த குழந்தைகளைத் தாய்க்கு அளித் தல். பாரிஜாதஹரணம். புண்யகவ்ரதம்.

245 உஷா அனிருத்தர் விவாஹம். சித்ரரேகை அனி ருத்தனைக்கொண்டு வருதல். இருவர்க்கும்விவாஹம்.

246 பாணன் அனிருத்தனைச் சிறையிடுதல்; பாணாசுரன் அனிருத்தனோடு பேசுதல்.

247 பாணனுக்கு திரௌபதி ஐந்துபதிகளை மணந்த காரணம் கூறுதல். சம்பரன் ரதியைத் தூக்கிச் சென்றது. அனிருத்தனோடு போர் புரிந்தது. அனி ருத்தனைக் கொண்டு வந்தது.

248 சிவன் அனிருத்தன் பெருமையைக் கூறுதல்.

249 தூதன் மூலமாக கிருஷ்ணன் வந்ததை அறிதல், பாணனுக்கு சிவ உபதேசம். பாண அனிருத்த சம்வாதம்.

250 கணேசனுக்கு மஹாவீரன் அனிருத்தன் பராக்ரமத் தைக் கூறுதல்.

251 சிவனும் பார்வதியும் என்ன செய்வதென யோசித் தல்.

252 பாண சபையில் பலராமன் சிவன் பலிஸம்வாதம். பலி கிருஷ்ணனைத் துதித்தல். அவர் அபயமளித்தல்.

253 யாதவ அசுர யுத்தம். வைஷ்ணவ ஜ்வரம். கிருஷ்ணனிடம் பாணன் தோல்வி.

254–255 சிருகாலராஜன் விடுபடுதல். சியமந்தக சரிதம்.

256 சித்தாச்ரமத்தில் கணேசன் ராதையைப் பூஜித்தல். ராதையை நாடி கணேசன் சொல். ராதைக்கு பார்வதி வரம். பார்வதியின் தோழிகள் ராதைக்கு அலங்காரம் செய்தல். தேவர்கள் ஆச்சர்யமடைந்து ஸ்தோத்ரம் செய்தல்.

257 சிவனிடம் வசுதேவர் ஞானம் பெறுதல். ராஜசூய யக்ஞம்.

258 ராதாகிருஷ்ணர் சேருதல். ராதை கிருஷ்ணனைத் துதித்தல். ராதையின் வினய விக்ஞாபனம். வேதாந்தோபதேசம்.

259 ராதா கிருஷ்ண லீலை. யசோதையின் ஆனந்தம்.

260 நந்தனுக்குக் கிருஷ்ணன் கலிதர்மம் கூறுதல். கோகுலவாஸிகளுடன் ராதை கோலோகம் செல்லுதல்.

261 பாண்டீரத்தில் உள்ள பிரும்மாதி தேவர்கள் கிருஷ்ணனைத் துதித்தல். யதுகுலம் அழிதல். பாண்டவர் ஸ்வர்க்கம் செல்லல். கங்கைக்கு வரம் அளித்தல். கோலோகம் செல்லல்.

262 நாரதர் பதரிகாசிரமத்திலிருந்து பிரும்மலோகம் செல்லுதல். ஸ்ருஞ்ஜயன் பெண்ணை மணந்து கிரீடை. ஸநத்குமாரர் உபதேசித்தபடி தவம் செய்தல். சிவன் உபதேசம். நாரத மோக்ஷம்.

263 அக்னி ஸுவர்ணம் இவைகளின் உற்பத்தி.

264 நான்கு கண்டங்களின் சுருக்கம்.

265 மஹாபுராண உபபுராண லக்ஷணம். சுலோகக் கணக்கு. உபபுராணங்களின் பெயர். பிரும்ம வைவர்த்தம் என்பதன் பொருள் அதன் மஹிமை சிரவண பலன்.

முற்றிற்று.

---

# பிரும்ம வைவர்த்த புராண அவதாரிகை.

புராணங்களில் பல பிரசாரத்திலில்லாததால் அவற்றில் கூறப்படும் விஷயங்களைப்போல் அவைகளின் பெயரும் கூட அடிக்கடி கேட்கக்கிடைப்பதில்லை. ஆதலின் இதை பிரும்ம கைவர்த்த மென்றே பல தற்காலத்திய நூல்களும் பல பெரியாரும் கூறுகின்றனர். பிரம்மத்தை விவரித்துக் கூறுவதால் இப்பெயர் இதற்குண்டானதென இப் புராணமே கூறுகிறது. இதில் **பிரும்ம கண்டம், பிரகிருதி கண்டம், கணேச கண்டம், ஸ்ரீ கிருஷ்ண ஜன்ம கண்டம்** என நான்கு பிரிவுகளும், அவைகளில் 275 அத்யாயங்களுமிருக்கின்றன. ஒவ்வொரு தேவதைகளையும் உபாஸிக்க வேண்டிய முறையில் மூல மந்த்ரம், கவசம், ஸ்துதி இவைகள் விரிவாகக் காணப்படுகின்றன. பல அபூர்வ கதைகளும் தர்மங்களுமிதில் நிறைந்திருக்கின்றன. கடைசி கண்டத்தில் பாகவதத்திலுள்ள கதை கூறப்பட்டாலும் ஆங்கில்லாத பலரது பூர்வ ஜன்ம சரிதம் ரஸமாக வர்ணிக்கப்படுகிறது. முக்யமாக ராதா விவாஹம், ராதைக்கு வந்த சாபம், ராதா ஸங்கம், ராதா சாபவிமோசநம் முதலியவைகள் மிக விஸ்தாரமாய் இருக்கின்றன. பஜனை செய்வோர் நடத்தும் ஸ்ரீ ராதா விவாஹத்திற்கு இந்த புராணமே பிரமாணமாகும். பாரத பாகவதாதி நூல்களில் காணப்படும் ஸ்ரீ கிருஷ்ண சரிதத்திற்கும் இங்கிருப்பதற்கும் பல மாறுபாடுகள் இருக்கின்றன. உதாஹரணமாக;—யசோதையின் வீட்டிலிருந்து வஸுதேவன் கொண்டுவந்த பெண் குழந்தையைக் கம்ஸன் வெட்டும் போது உன்னைக் கொல்பவன் வேறிடத்தில் வளர்கிறுன் என்று கூறி அது ஆகாயத்தில் அஷ்ட புஜங்களுடன் சென்றதென்பது மற்ற நூல் கூறும் சரிதம். இங்கு பெண் குழந்தையைக் கொல்ல வேண்டாமென்று பெற்ருேர் வேண்டியபடி கம்ஸன் அதைக் கொல்லாமல் விட, **ஏகாநம்சா** என்று பெயரிட்டு வளர்த்து அதைத் தூர்வாஸருக்கு வஸுதேவன் மணம் செய்து கொடுத்தான் என்று காணப்படுகிறது. இதுபோல் பல ருசியான சரிதங்களைக் காணலாம்.

ஆஸ்திகரடிபணியும்,

**ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.**



# 11. ஸ்ரீ பிரும்ம வைவர்த்த புராணம்.

## பிரும்ம கண்டம்.

சௌநகாதிகள் ஸ்ரீ ராதா கிருஷ்ணனது சரிதத்தையும் தர்மங்களேயும் கூறும்படி வேண்டினர். சூதர் குருவையும் பகவானையும் வணங்கி பிரும்மத்தின் விவரத்தைக் கூறும் பிரும்ம வைவர்த்த புராணத்தை ஆரம்பித்தார். இதைக் கோலோக வாஸியான ஸ்ரீ கிருஷ்ணன் பிரும்மாவுக்கும், அவர் தர்மருக்கும், தர்மர் நாராயணருக்கும், அவர் நாரதருக்கும், நாரதர் வியாஸருக்கும் உபதேசித்தார். வியாஸாசார்யர் எனக்கு இதை உபதேசித்தார்.

### ஜகத் ஸிருஷ்டி.

கோலோகமென்பது எல்லா உலகங்களுக்கும் மேல் இருப்பது. துன்பமே இல்லாது இன்பம் நிறைந்த இடம், எக்காலத்தும் அழிவில்லாதது. மூன்றுகோடி யோஜனை தூரம் விசாலமாக உள்ளது. ஸ்ரீ ராதா கிருஷ்ணனது இருப்பிடம் அதுவே. கோடி ஸூர்யனைப்போல் பிரகாசமுள்ளது. அதன் கீழ் ஐம்பதுகோடி யோஜனை தூரத்தில் தெற்கே வைகுண்டமும் வடக்கே கைலாஸமுமுளது. இவை கோடி யோஜனை தூரம் விசால முள்ளவை. ப்ரளய காலத்தில் இவ்விரண்டும் கோலோகத்தில் லயமாகும். கோலோகத்திற்கு ஸிருஷ்டியுமில்லை; லயமுமில்லை. ஆங்குள்ள ராஸ மண்டலத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் உருவில்லாமல் தன்னிடத்தில் ஒடுங்கிக் கிடக்கும் உலகைப் படைக்கக் கருதினர். அவர் வலது புறத்திலிருந்து ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களும் மூர்த்தியுடன் தோன்றின. பின்னர் மஹத் அஹங்காரம் பஞ்ச தந்மாத்ரைகள் நாராயணன் முதலியவைகள் உண்டாயின. இடது புறத்திலிருந்து ஐந்து முகங்களுடன் சங்கரன் உதித்தார்.

ஸ்ரீ கிருஷ்ணனது தொந்திக் கமலத்திலிருந்து சதுர்முகன் தோன்றினன். முறையே லக்ஷ்மீ துர்க்கை ஸரஸ்வதிகள் மும்மூர்த்திகளது இடது புறத்திலிருந்துத் தோன்றினர். மூவரும் பகவானைப் பணிந்து துதித்து, ஸிருஷ்டி ஸ்திதி லயம் எனும் வேலைகளை முறையே செய்து வந்தனர்.

ஸ்ரீ கிருஷ்ணரது மார்பிலிருந்து தர்மமும் அஹிம்ஸையும், மனதிலிருந்து மன்மதனும் ரதியும் உண்டானார்கள். பகவான் கடலில் படுத்துறங்கும்போது அவர் காதுமலத்திலிருந்து மதுகைடபர் எனும் இரு அரக்கர் தோன்றி பிரும்மாவை ஹிம்ஸித்தனர். விராட் அவர்களைக் கொன்றார். அவர்களது மேதஸ்ஸால் மேதினீ என்ற பூமி உண்டானது. இங்ஙனம் ஜகத்தைப் படைத்தபின் பகவான் ராஸ மண்டலத்தில் திவ்யாஸநத்திலமர்ந்தார். அவரது இடது பாகத்திலிருந்து ஓர் திவ்ய வடிவம் வாய்ந்த கன்யகை தோன்றி, வேகமாக ஓடி மலரெடுத்து வந்து பகவானது பாதாரவிந்தங்களில் சாற்றினாள் ராஸமண்டலத்தில் ஜநித்ததற்கறிகுறியாக, ரா, என்றும், தாவநம்செய்து ஓடி மலரெடுத்ததற்கு அடையாளமாக - தா - என்றும், ஆக ராதா என்று அம்பிகைக்குப் பெயருண்டானது. அன்னை பகவானைத் துதித்து ஸிம்மாஸனத்தில் உட்கார்ந்தாள். பின்னர் அவர்களிடமிருந்து கோடிக்கணக்கான கோபர்களும் கோபிகைகளும் கோக்களும் உண்டானார்கள். கோக்களில் சிவனுக்கு வாஹநமாக ஓர் காளையை அளித்தார். கால் நகங்களிலிருந்து பிறந்த ஹம்ஸங்களி லொன்றை பிரும்மனுக்குக் கொடுத்தார். இடது காதிலிருந்து உண்டான வெண் குதிரையிலொன்றைத் தர்மனுக்கு வாஹநமாகக் கொடுத்தார். யோக சக்தியால் நவரத்நமிழைத்த ஐந்து ரதங்களைப் படைத்து ஒன்றை ராதைக்கும், மற்றொன்றை நாராயணனுக்கு மளித்தார். பகவானது குஹ்யஸ்தலத்திலிருந்து பிறந்தவர் குஹ்யகராவர்.

ஸ்ரீ கிருஷ்ணன் மஹேசனை அழைத்துப் பார்வதியை மணக்கும்படிக் கூறினார். அவர் சம்சாரத்தி லமர்ந்தோர் விஷயஸுகத்தி லீடுபட்டுப் பரமனை மறப்பர். ஆதலால் தங்களது பாதாரவிந்த பக்தியையின்றி வேறொன்றும் வேண்டேனென்றார். பகவான், ஸதியான பத்நியுடன் வாழ்வோர் ஸம்ஸார வாழ்க்கைக் கஞ்சவேண்டாம். நீ கூறியபடி

என்னிடம் பக்தி உண்டாகும்படி ஓர் மந்திரத்தை அளிக்கிறேன். நீ எல்லோராலும் பூஜிக்கத்தக்க உத்தமளுவாய் என்று திவ்ய மந்திரத்தை உபதேசித்தார். துர்க்கையை அழைத்து நீ கோலோகத்திலேயே வசித்திரு. தக்ஷனுக்கு நீ பெண்ணுகப் பிறந்த பின் உன்னைச் சிவன் மணப்பனென்ருர். அங்ஙனமே ஸகல தேவர்களும் பகவத் பக்தியையே வேண்ட அவரவருக்கேற்றபடி பகவான் பல மந்திரங்களை உபதேசித் தருளினர். பகவான் அவரவர்க்கும் தகுதியான மனைவியை அளித்து பிரும்மாவைப் படைக்கும்படிக் கூறினர். அவர் ஸாவித்ரியினிடம் வேத சாஸ்த்திரம் முதலியவைகளைப் படைத்தார். பிரும்மனது பின் புறத்திலிருந்து அதர்மம் முதலியன தோன்றின. அவரது அவயவங்களிலிருந்து எண்ணிறந்த மஹர்ஷிகள் உதித்தனர். கழுத்திலிருந்து நாரதரிஷி தோன்றினர். பிரும்மா, உலகைப் படைக்கும்படிக் கூறினர். நாரதர் அதை ஏற்காது மகனுக்குத் தந்தை கூறும் உபதேசம் இதுதானே என்ருர். தன் சொல்லை மதிக்காத மகனிடம் கோபமுண்டாயிற்று. ஸம்ஸாரத்தை வெறுத்த நாரதனை லக்ஷமாண்டுகள் கந்தர்வனுக இருந்து ஐம்பது பெண்களுடன் கூடிச் சிற்றின்பத்தை அனுபவித்துப் பின்னர் சூத்ரனுகப் பிற எனச் சபித்தார். நாரதர் பன்றியாய்ப் பிறப்பினும் பகவானது பாதாரவிந்தம் மறக்காதிருந்தால் போதும் என்று கூறி காரணமின்றித் தன்னைச் சபித்ததால் மூன்று கல்பம்வரை எவரும் சதுர்முகனைப் பூஜியார். ஆலயமு மிராதென்று சபித்தார். மற்ற மைந்தர்கள் உலகைப் படைத்தனர். வாமநவடிவங்கொண்ட பகவானைக்கண்டு பூதேவி மோஹித்தாள். அவளைப் பகவான் ஆலிங்கனம் செய்து சென்ருர். அவள் தன்னிடம் விஷ்ணு அம்சமிருக்கக் கண்டாள். அதைப் பவழங்கள் உற்பத்தியாகுமிடத்தில் வைக்க, ஆங்கிருந்து மங்களம் என்ற குழந்தை பிறந்தது. அது நவக்ரஹத்தில் ஒன்ருகி அங்காரகனுக ஆனது.

**பற்பல ஜாதி ஸிருஷ்டி :** நான்கு வர்ணத்தையும் நான்முகன் படைத்து அவர்களுக்குரிய கடமைகளையுமியற்றினன். ஒரு ஸமயம் க்ருதாசீ என்ற அப்ஸர ஸ்திரீ காமனிடம் காமனைகொண்டு சென்ருள். விச்வகர்மன் அவளை

விரும்ப, அவளதை மறுத்ததால் அவனியில் சூத்ரப் பெண்ணுகும்படிச் சபித்தார். கிருதாசியும் அவரை அந் தணனுகப் பிறக்கும்படிச் சபித்தாள். இருவரும் பூமியில் பிறந்து பூர்வ ஸங்கல்பத்தால் ஒன்று கூடினர். மாலை தொடுப்பவன், கர்மகாரன், சங்கவேலை செய்பவன், கைக் கோளன், குயவன், ஸூத்ரகாரன், ஸுவர்ணகாரன், சித்ர காரன் முதலிய புதல்வர்களைப் பெற்றனர். மற்றுமநேக ஜாதிகள் நான்கு வர்ணத்தாரிட மிருந்தும் ஜநித்தன. அச்விநீதேவர் ஓர் பிராம்மண ஸ்த்ரீயினிடம் காமனை கொண்டு பலாத்காரம் செய்ய உடனே ஓர் குழந்தை பிறந் தது. அவள் தன் கற்பழிந்ததால் கோதாவரி நதியாக மாறினுள். அக் குழந்தை கணக்க ஜாதிக்குக் கர்த்தா வானது. அவள் பதியான ஸுதபர் லக்ஷமாண்டுகள் தவம் புரிய கிருஷ்ணன் எதிரிற்தோன்றி ஒன்றும் பேசாது மறைந்தார். இதைக்கண்டு வியந்து நிற்கும் பிராம் மணரை நோக்கி அசரீரியான வாக்கு நீர் மனைவி யில்லா திருத்தலால் பகவான் உனக்குத் தர்சநமளித்தும் நீ கோரிய தொண்டெனும் வரமளிக்க வில்லை. பத்நியுடன் தவம் செய்து வரம்பெறு என்றது. இதைக்கேட்டு அவர் பித்ருக் களது மாநஸிக கன்யகையை மணம் புரிய அவளிடம் கல்யாணமித்ரன் என்ரோர் குழந்தை பிறந்தது. இவனை நினைப்போர் இடியினுலுண்டாகும் பயத்தை அடையார். ஸுதபஸ் தனது பத்நியின் கற்பை அழித்த அச்விநீதேவர் கள் ரோகிகளாவார்கள். யாகத்தில் பாகம்பெருரென்றும் சபித்தார். அச்வினிகளது தந்தையான ஸூர்யதேவன் ஸுதபஸ்ஸிடம் வந்து அவரைத் துதித்தார். தேவ! பிரா மணரிடம் வேதம் சரண்புகுந்தது. மனிதரில் பிராம் மணரே உயர்ந்தவர் என்று ஆதித்யன் கூறிய மொழி களைக்கேட்டு அவர் ஆநந்தமடைந்தார். அச்விநிகளது நோய் அகலும்படி ஆசீர்வதித்தார். சிலகாலம் சென்ற பின் அவர்களுக்கு யக்ஞபாகம் கிடைக்குமென்ருர்.

## உபபர்ஹணன்.

கந்தர்வ ராஜனெருவன் புத்ரபாக்ய மின்றி வருந்தி னன். தனது குருவான வஸிஷ்டரைச் சரண் புகுந்தான். அவர் சிவ கவசமெனும் மகாமந்திரத்தை உபதேசித்தார். புஷ்கர க்ஷேத்திரம் சென்று அவன் பல்லாண்டு தவம்

புரிந்தான். கைலாசநாதன் அவன் எதிரே தோன்றி வேண்டியதைக் கேள் என்று கூற பக்தியையும் பக்தனை புத்ரனையும் வேண்டினான். அங்ஙனமே அருள் புரிந்தார். கந்தர்வ ராஜனுக்குக் குழந்தை பிறந்தது. அதற்கு உபபர்ஹணன் என்று நாமம் சூட்டினான். பிரும்ம சாபத்தால் நாரதரே அந்த சிசுவாகத் தோன்றியவர். இயற்கையிலேயே அழகான நாரதர் காளைப் பருவத்தை அடைந்து மன்மதனைப்போல் விளங்கினார். கண்டகீ தீரத்தில் திரியும் அவரைக்கண்ட கந்தர்வ பத்நிகள் காமவலையில் சிக்கினர். மறுபிறவியில் இவரையே பதியாகப் பெறவேண்டுமெனக் கோரி உடலை விட்டனர். அங்ஙனமே சித்ரரதன் என்ற கந்தர்வனுக்கு ஐம்பது பெண்களாகப் பிறந்தனர். உபபர்ஹணனை மணந்து மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தனர். கந்தர்வ ஜாதிக்கேற்ற கானம் ஆடல் முதலிய சிருங்கார சேஷ்டைகளால் காலத்தை ஆநந்தமாகக் கழித்தனர். மூன்று லக்ஷமாண்டுகள் மூன்று நாள் போல் அவர்களுக்குத் தோன்றின.

ஒரு ஸமயம் அவன் பிரும்ம லோகஞ் சென்றான். ரம்பையின் அழகு உபபர்ஹணனது உள்ளத்தைக்கொள்ளை கொண்டது. மநதினால் அம்மாதரசியைக் கட்டி மகிழ்ந்தான். இதைக்கண்டு பிரும்மா சினங்கொண்டார். சூத்ர ஜாதியில் பிறப்பாய் என்று சபித்தார். உடனே அவனுக்குத் தனது முன் பிறவி நினைவுக்கு வந்தது. தன்னிருப்பிடம் வந்தான். யோககலையால் இவ்வுடலை விட்டான். ஐம்பது மனைவிகளும், தன் கணவனது வேள்வியில் விருந்துண்ட வானவர்கள், பதியை உடனே தந்தருள வேண்டும். இல்லையேல் சாபத்தால் அவர் துன்புறுவர் என்றார்கள். ஒவ்வொரு தேவராகப் பெயரிட்டழைத்தாள் மூத்தவள். அவளது கற்பின் கனல் தேவரை நடுங்கச்செய்தது. தேவர்கள் திருமாலைச் சரணமடைந்தனர். க்ஷணத்தில் அபயமளித்தோம்! அஞ்சாது செல்லுங்கள்!! என்றோர் அசரீரியான வாக்கைக் கேட்டுத் திரும்பினர். அக்கற்பரசியின் முன்னே நின்றனர். தன்னெதிரில் தோன்றிய வானவரடி பணிந்து தன் கணவனைத் தரும்படி மூத்தவளான மாலாவதி வேண்டினாள். இதற்கு யாது விடை கூறுவதென்றறியாது தேவர் விழித்தனர்.

இதனிடையில் மிக ஸுந்தர புருஷனொருவன் அங்கு வந்தான். அவனைக் கண்டவுடன் எல்லோரும் எழுந்து நின்றனர். வந்தவர் வானவரை நோக்கி எக்காரணம் பற்றி நீங்களிங்கு வந்தீர்கள்? என வினவினர். அவர் யாரென்றறியாது தேவர் விழிக்க, கற்புரசி அவரடி பணிந்து வருக! வருக! திருமாலே! வருக! என்றாள். புருஷோத்தமனே அவன் என அமரர் அறிந்தனர். இறந்த பதியை எழுப்பித்தரும்படி மாலாவதி பகவானை வேண்டினாள். அவர், ஒருவனுக்குப் பிறப்பு இறப்பு தாழ்மை மேன்மை முதலியவைகள் எங்ஙனம் உண்டாகிறதென விரிவாகக் கூறி நோயால் இறந்தவரை மருந்தால் பிழைப்பிப்பேன். யோகத்தினால் உயிர் துறந்தவரை மந்திர மஹிமையால் எழுப்புவேன். உன் கணவன் எப்படி இறந்தான்? கூறு! அவனை யான் பிழைப்பிக்கிறேன் என்றார்? தன் கணவன் பிழைத்தபின் தேவருடன் பேசுவதும் உசிதமில்லை எனக்கருதி இப்போதே தர்மங்களைக் கேட்போமென மாலாவதி எண்ணினாள். மாநிடர் இறப்பதற்குக் காரணமான காலன் யமன் மிருத்யு கன்யகை முதலியவர்களை அழைத்துத் தனக்குக் காண்பிக்கும்படி வேண்டினாள். அங்ஙனமே அச்யுதனும் அவர்களை அழைத்தார். கருமை நிறமும் கோர ரூபமும் ஆறு கைகளும் அறுபத்தி நான்கு பிள்ளைகளுமுள்ள மிருத்தியு கன்யகை, காலனருகே நின்றாள். பயங்கர சரீரமும் ஆறு முகமும் பனிரண்டு கைகளும் இருபத்திநான்கு கண்களும் ஆறு கால்களும் சிவந்த துணியும் கையில் ஜபமாலையும் எதிரில் உடலுடன் நிற்கும் வியாதிகளும் உள்ள காலனைக் கண்டாள். இவர் தர்மத்தின் அம்சத்தினால் உண்டானவர். கால் பெருத்து உடல் கறுத்து பாபிக்குப் பயங்கரமாயும் புண்ய சீலருக்கு அழகாயுமுள்ள யமதர்மராஜன் அவர்கள் அருகே நின்றான்.

மாலாவதி தருமராஜனை நோக்கி அகாலத்தில் என் பதியை ஏன் கொண்டு சென்றாய்? என்று வினவினாள். ஈசனாணை யின்றி எவருக்கும் அகாலத்தில் மரணம் நேராது. ஒவ்வொருவரும் ஜநிப்பதற்குக்காரணமாயுள்ள கர்ப்பாதான காலத்திலே மிருத்தியு கன்யகை உள்ளே புகுந்து விடுகிறாள். அவள் எவரை அழைத்துச் செல்லும்படிக் கூறுகிறாளோ அவரையே யான் கொண்டு

செல்வேனென்று யமன் கூறினன். இதைக்கேட்டு மாலாவதி மிருத்யு கன்யகையை நோக்கி நீ இங்ஙனம் செய்வது நீதியோ? என்ருள். மிருத்யுகன்யகை, அம்மா! யான் என் செய்வேன்? காலன் எவரைக் கொல்லும்படி ஆணையிடுகிருரோ? அவரையே நானும் என் புத்ரரான வியாதியும் கொல்கிருேம். அந்த காலரைக் கேள்! என்ருள். அவரை வினவ, காலன், எல்லாம் வல்ல ஈசன் ஆணையால் நாங்கள் கொண்டு செல்கிருேம். அவனைச் சரணமடை என்ருர்.

**ஆரோக்ய வழி:** மாலாவதி, மஹா விஷ்ணுவை வணங்கி என் பதி இறந்ததற்கு நீங்களே காரணம். ஏன் அவரைக் கொன்றீர்? என்ருள். பகவான், ஒருவன் நீண்டநாள் இருக்கவும் பிணியின்றி வாழவும் வழிகளைக் கூறினர். ஆயுள் சரீரம் நோய் சிகித்ஸை நோயைத் தடுக்கும் வழி முதலியவைகளைக் கூறுவது ஆயுர் வேதம். தந்வந்தரி முதலிய பதினறு மஹர்ஷிகள் வைத்திய நூலை விருத்தி செய்தனர். நோய்களில் முக்கியமானது ஜ்வரம். அது மூன்று தலைகளும் மூன்று கால்களும் ஆறு கைகளும் ஒன்பது கண்களுமுள்ள ஒரு தேவதை. அதே ஸகல நோய்களுக்கும் காரணம். அதன் தந்தை அஜீர்ணமாம். பாண்டு காமாலை குஷ்டம் ப்லீஹா சூலம் அதிஸாரம் க்ரஹணி காசம் மூத்ரக்ருச்ரம் குல்மம் ரக்கசோஷம் மேஹம் கலகண்டகம் ஸந்நிபாதம் விஷூசி ஜரை முதலிய அறுபத்து நான்கு வியாதிகள் உள.

அடிக்கடி கண்களை அலம்புதல், சரீரப் பயிற்சி, உள்ளங்கால் காது தலை முதலிய விடங்களில் அடிக்கடி எண்ணெய் தேய்த்தல், ப்ராத ஸ்நாநம், வெய்யில் காலத்தில் நல்ல காற்றை ஸேவித்தல், மழை காலத்தில் வெந்நீர் ஸ்நாநம், உஷ்ணமான உணவை உட்கொள்ளுதல், இளம் பெண்களை ரமித்தல், பாலந்நம் உண்பது, நெய்யை அதிகமாகச் சேர்ப்பது, பசித்தபின் புசித்தல், தாம்பூல ஸேவை முதலிய உபாயங்களைக் கைக்கொண்டால், மூப்பும் அதனல் உண்டாகும் துன்பங்களும் வாரா. பழைய அந்நம், வயதான ஸ்த்ரீ போகம், இளம் வெய்யில், இரவில் தயிர், பாபிகள் அந்நம் முதலியவைகள் பல ரோகங்களையும் உண்டுபண்ணும். பாபமும் பிணியும் அந்யோன்ய

அன்பு கொண்டவைகள். பாபம் செய்பவரை நோய் ஒரு நாளும் விடுவதில்லை.

ஸ்வதர்மத்தை விடாதவன், குரு தேவ அதிதி பூஜை செய்பவன், விருதம் உபவாசம் தீர்த்த யாத்ரைகளை அநுஷ்டிப்பவன் ஆகியவர்களைக் கண்டு நோய் பயந்து ஓடும். பசியில்லாதபோது உண்பதும், நன்கு பசித்தும் உண்ணுமலிருப்பதும், ஜ்வரத்தை உண்டுபண்ணும். உணவிற்குப்பின் நீண்ட நடை, ஓட்டம், வெய்யிலில் செல்லுதல், ஸ்திரீ ஸங்கம், கோபம், எருமைத்தயிர் முதலியவைகள் வாயுரோகத்தை உண்டுபண்ணும் என்று பிராம்மணாகவந்த பகவான் கூறினர். மாலாவதி, ஐயனே! என் கணவன் ஒரு நோயாலும் இறக்கவில்லை. யோகத்தினல் தனது பிராணனை நீத்தார். அவரை விரைவில் எழுப்பும் என்றாள்.

அச்யுதன் அமரரருகே சென்று இவனை எழுப்புக! இல்லையேல் மாலாவதி சபிப்பாள் என்றார். பிரும்மா. "தனது புதல்வனே சாபத்தினல் இங்ஙனம் கந்தர்வனானன். மறு பிறப்பில் சூத்ரனாவான். அதன் பின் நாரதன் ஆவான். இப்பிறவியிலே சில ஆண்டுகள் அவன் ஜீவிக்கலாம் என்றார். மாதவன் நீங்களே இவனை எழுப்பக் கூடுமாயின் ச்வேதத்விபம் சென்று பகவானை வேண்டியதேன்? விரைவில் இவனை எழுப்புங்கள்! என்றார். பிரும்மா தீர்த்தத்தை அவன்மேல் தளித்து மநதை அளித்தார். சிவன் அறிவையும் யமன் தர்மத்தையும் அளித்தார்கள். அப்போதும் அச்சவம் எழுந்தபாடில்லை. மாதவன் ஜீவனை அளித்தார். அப்பொழுதும் அது புரண்டதேயன்றி எழுந்திருக்கவில்லை. பிரும்மா எங்களால் இவ்வளவுதான் இயலும்; இதற்குமேல் பரமனைப் போற்று என்றார். அங்ஙனமே பகவானைத்துதித்து பிராம்மணவேடம் பூண்ட பரமனை வணங்கினள். கந்தர்வன் உறங்கி எழுந்தவன் போல் எழுந்தான்.

வீணையை மீட்டி எதிரிலுள்ள விஷ்ணுவைத் துதித்தான். அமரர், அந்தணர் அச்யுதனே என அறிந்தனர். அவர் திருவடி பணிந்து அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டினர். பகவான் உடனே மறைந்தார். மாலாவதி

மட்டில்லா மகிழ்ச்சி கொண்டாள். உபபர்ஹணன் முன் போலவே ராஜ்யத்தை ஆண்டுவந்தான். வஸிஷ்டர் அவனுக்கு த்வாதசாக்ஷரியையும் சிவகவசத்தையும் உபதேசித்தார். பல்லாண்டு கழிந்தபின் அவன் இவ்வுடலைவிட்டு சூத்ர ஜன்மமெடுத்தான். மாலாவதியும் புஷ்கர க்ஷேத்ரத்தில் அக்நிகுண்டத்தில் உடலைவிட்டு ஸ்ருஞ்ஜய ராஜன் மகளாகப் பிறந்தாள். அப்பிறவியிலும் உபபர்ஹணனே தனக்குப் பதியாக வேண்டுமெனத் தவம் புரிந்தாள்.

## நாரதரது தாஸ ஜன்மம்.

கான்யகுப்ஜ தேசத்திலே த்ருமிலகன் என்றோர் இடையனிருந்தான். அவன் மனைவிக்குக் கலாவதி என்று பெயர். அவள் கணவன் சொற்படி ஓர் அந்தணன் வீட்டிலே வேலை செய்து வந்தாள். சிலகாலம் சென்றபின் ஓர் குழந்தையைப் பெற்றாள். இக் குழந்தை பக்தியிலீடுபட்டது. இது பிறப்பதற்கு முன் மழையில்லாதிருந்து குழந்தை பிறந்தபொழுது மழை பொழிந்தது. ஆதலால் நாரம்-ஜலத்தை, த-கொடுத்தவன். குழந்தையாக இருக்கும் போதே நாரம்-ஞாநத்தை த-கொடுத்தான் என்றும் அவனுக்கு நாரதர் என்று பெயரிடப்பட்டது. அவன் விஷ்ணு பக்தியிலும் ஸாதுக்களை ஸேவிப்பதிலுமே ஆசை கொண்டான். ஒரு ஸமயம் இவனிருந்த வீட்டிற்கு ஐந்து தவஸிகள் வந்தனர். அவர்களுக்கு அவ்வீட்டு அந்தணன் மதுபர்க்கமளித்துப் பூஜை செய்தான். அவர்கள் தின்று மிகுந்த உணவிலே நாரதன் பேரவா கொண்டான். தாயின் உத்திரவுப்படி அவர்களுக்குப் பணிவிடைசெய்து வந்தான். அவர் விநயத்தையும் பக்தியையும் கண்டு விருந்தினர் வியந்தனர். அச் சிறுவனுக்கு ஸ்ரீ ராதா கிருஷ்ணனது மஹா மந்திரத்தை ஒருவர் உபதேசித்தார். ஓரிரவு நாரதரது தாய் அரவந்தீண்டி இறந்தாள். அதை நினைத்து அவர் வருந்தும்போது ரிஷிகள் வந்து தத்வோபதேசம் செய்தனர். நாரதர் சோகமகன்று தெளிந்த மநத்துடன் அச்வத்த மரத்தின் கீழ் அமர்ந்து ஸ்ரீ கிருஷ்ண மந்திரத்தை ஜபித்துவந்தார். ஆயிரமாண்டுகள் சென்றன. ஸ்ரீ ராதா தேவியுடன் ராஸமண்டலத்திலுள்ள கிருஷ்ணன் அழகான சிசுவாக அவர்முன் தோன்றினார். ஆநந்தக்கடலில் அறை

க்ஷணம் அமிழ்ந்து எழுந்தார். வாக்கிற்கும் மநதிற்கும் எட்டாத ஜ்யோதி அது. மெய்மறந்து ஆநந்தப் பரவச மானார். கண்ணைத் திறந்தார். கண்ணன் காணவில்லை! ஐயோ! "இஃதென்ன விந்தை? யான் செய்த பாவ மென்னே? கண்முன்னிருந்த கண்ணன் எங்கு சென்றான்? என்று கண்ணீர் விட்டுக் கதறினன். உடனே ஆகாயத்தில் ஓர் குறல் தோன்றிற்று. நாரத! அஞ்சாதே! இவ்வுடலைவிட்டு வேறோர் சீரத்தைப் பெறப்போகிறாய்! அச்சமயம் கண்ணனைக் காண்பாய்! என்றது.

இதைக் கேட்ட நாரதர் விரைவில் இவ்வுடலை விட்டு தன் தந்தையுடன் ஐக்யமானார். மறுபடியும் திவ்ய சீரத்துடன் நாரதராகத் தோன்றி பக்தியிலீடுபட்டார். பிரும்மா முன்போலவே மனைவியை மணந்து ஸந்ததியை விருத்தி செய் என்றார். நாரதர், தந்தையே! இதற்கு யான் கீழ்படியாததால் கந்தர்வனாகவும் தாஸனாகவும் பிறந்தேன். பல துன்பங்களைப் பெற்றேன். இனியும் எனக்குத் துன்பம் வேண்டாம். பெண்களோடு வஸிப்பது மோக்ஷத்தை அளிக்குமோ? துக்கத்தையும் பந்தத்தையு மல்லவா அளிக்கும். விவாஹம் வேண்டாம்! என்னை நிர்ப்பந்தம் செய்யவேண்டாம். ஸ்த்ரீகளுக்குப் புருஷனைவிட எண் மடங்கு காமம் அதிகம். ஆஹாரம் இரண்டு மடங்கும், நிஷ்டூரமா யிருத்தல் நான்கு மடங்கும், கோபம் ஆறு பங்கும் அதிகம். யான் மனைவியை வேண்டேன்! என்னை மன்னித்து விடுங்கள்! கிருஷ்ண பக்தியை எனக்களியுங்கள்! என்று தந்தையின் காலில் விழுந்தார். சதுர்முகன் மைந்தனது மந உறுதியைக் கண்டு மகிழ்ந்தார். ஆயினும் இல்லறத்தில் அவர் அதிக ஆசை கொண்டவர். ஆதலின் புதல்வனை நோக்கி. நீ கைலாசம் சென்று பரமசிவனிடம் மந்திரோபதேசம் பெற்று, அவர் கூறியபடி நட என்றார். நாரதரும் கைலையங்கிரிக்குச் சென்று எண்ணிறந்த சிவ கணங்களுக் கிடையே விருஷபவாஹனனைக் கண்டார். சுற்றி வலம்வந்து வணங்கிப் போற்றினார். இவரது பரிபாகத்தைக்கண்டு ஈசனும் இறுகத் தழுவி ஆசீர்வதித்தார். வந்த வேலை யாதென வினவினார். நாரதர், உபதேசம் பெற வந்ததாக உரைத்தார். உனது சந்தேஹம் யாது? என ஈசன் வினவ, ஆந்ஹிக தர்மத்தைக் கூறும்படி நாரதர் வேண்டினார். சிவன் அதைக் கூறினார்.

## ஆந்ஹிக தர்மம்.

பிராம்ம முஹூர்த்தத்தில் எழுந்து பிரம்மாந்திரத்தில் குருவை நினைத்துப் பின்னர் இஷ்டதேவதையை த்யாநம் செய். குரு பூஜை இல்லாது செய்யும் கர்மா நிஷ்பலமாகும். ஊருக்கு வெகு தூரத்தில்; நதி தேவாலயம் உழுதபூமி விளையாடுமிடம் தர்ப்பைக்காடு புற்று முதலிய சுத்தமான இடங்களை விலக்கி மற்ற இடங்களில் ஜல மலங்களைக் கழி. அச்சமயம், கையைத் தட்டி பூதேவியை விலக்கி தலையைத் துணியால் மூடிக்கொண்டு பூநூலைக் காதில் சுற்றி மௌநியாயிரு. பகலில் வடக்கு முகமாகவும் இரவில் தெற்கு முகமாகவும் உட்காரு. லிங்கத்தில் ஓர் முறையும், குதத்தில் மூன்று முறையும், இரண்டு கைகளுக்கும் ஏழுமுறையும், கால்களில் ஆறுமுறையும் மண் இட்டு சுத்தம் செய். இதே போல் இரண்டு பங்கு விதவைகளுக்கும் நான்கு மடங்கு ஸன்யாஸிக்கும் பிரும்மசாரிக்கும் சௌசம் அதிகமாகும். புற்றுமண், எலிவளைமண், மணல், ஜலத்திலுள்ள மண் முதலியவைகள் சௌசத்திற்குக் கூடாது. பதினாறு முறை வாய்க் கொப்பளித்து, பாலுள்ள மரத்திலிருந்து பற்குச்சியை எடுத்துக்கொள்ள வேண்டும். ஸ்நாநம் செய்து மடி வஸ்த்ரங்களை உடுத்திக் கால் அலம்பி ஆசமநம் செய்து நெற்றிக் கணிந்து ஸந்த்யையை அநுஷ்டி. அக்நிஹோத்ரம் அல்லது ஔபாஸந ஹோமம் செய்து தந்தை தாய் குரு பிராம்மணர் முதலியவர்களை நமஸ்கரி. ஜீவநத்திற்காக வேண்டிய வேலைகளைக் கவனித்துவிட்டு மாத்யாந்ஹிக ஸ்நாநத்தை ஸாவகாசமாகச் செய். ஸங்கல்பம் செய்துகொண்டு அகமர்ஷண மந்திரங்களைக் கூறி தேவரிஷி பித்ரு யக்ஷ்ம தர்ப்பணங்களைச் செய். சிகோதகம் விடு. மாத்யாந்ஹிகத்தைச் செய்து பிரும்ம யக்ஞம் செய். பஞ்சாயதந பூஜை செய்து வைச்வதேவம் செய். ஸாளக்ராம பூஜைக்கு ஈடாக வேறெந்த புண்யமுமில்லை. அதிதியை எதிர்நோக்கிப் பசு கறக்கும் நேரம் வாசற்படியில் நில். அதிதி கர்பிணி முதலியவர்கள் புஜித்தபின் நீ புஜி.

ஹோமம் செய்த மிகுதியே உத்தம அன்னம். விஷ்ணுவுக்கு நிவேதநம் செய்யாத பொருள் புஜிக்கத் தகாதது. ஏகாதசியன்று புஜிப்போர் மூன்று லோகத்தவரது

பாபத்தையும் உண்பவராவர். கோகுலாஷ்டமி, ஸ்ரீ ராம நவமி, சிவராத்ரி ஆகிய இப்புண்ய திநங்களிலும் உபவாஸ மிருக்கவேண்டும். ஏகாதசி முதலிய விருத திநங்களில் கிருஹஸ்தனும், விதவை ஸன்யாஸி பிரும்மசாரி இவர்கள் என்றைக்கும் தாம்பூலம் தரிக்கலாகாது. தாம்பிர பாத்ரத்தால் பாலைக் குடிக்கலாகாது. பாலுடன் உப்பைச் சேர்த்தால் அது கோ மாம்ஸம்போலாகும். இளநீரை வெண்கலப் பாத்ரத்தில் வைத்தால் அது கள்ளிற்குச் சமம். கருப்பஞ்சாற்றை தாம்பிர பாத்ரத்திலுல் உட்கொள்ளக் கூடாது. ஒருவர் குடித்த மிகுதியைக் குடிக்கலாகாது. காலை ஸ்நாநம் ச்ராத்தம் விரத திநம் ஆகிய காலங்களில் கடுகு எண்ணை சிறந்தது. ஞாயிற்றுக் கிழமையில் எண்ணை தேய்த்துக்கொள்ளுதல், ஸ்த்ரீ ஸங்கமம் கூடாது. இரவில் தயிறும் பகலில் பாலும் உட்கொள்ளக் கூடாது. ஸந்த்யாகாலத்தில் படுக்கக்கூடாது. க்ஷௌரம் ஸ்த்ரீஸங்கம் இவைகளைச் செய்து ஸ்நாநம் செய்யாமல் தேவ பித்ரு தர்ப்பணம் செய்தால் அது ரக்த தர்ப்பணம் போலாகும்.

## பிரும்ம ஸ்வரூபம்.

பிரும்மம் என்ற சொல்லே அது எங்கும் நிறைந்த பொருள் என்று சொல்கிறது. அது எல்லாவற்றிற்கும் காரணமான பொருள். என்றுமழியாமல் சுடராய் ஆநந்தமாய் உள்ளது. அது நாமரூபமற்றது. ஸர்வ ஜநங்களது உள்ளக்கோயிலிலும் ஸாக்ஷியாக வஸிப்பது. வாக்குக்கும் மநதிற்கும் எட்டாதது. ஊனக்கண் கொண்டு அதைக் காண்பதரிது. உலகிற்கு மேலாகி, உலகெல்லாம் ஊடுருவிப் பாய்ந்திருப்பது. பிரும்மலோகம் கைலாஸம் வைகுண்டம் முதலிய லோகங்களுக்குமேல் கோலோகமொன்றுளது. அது என்று மழியாதது. கோடி ஸூர்யனைப்போல் ஒளிவீசுமிடம். உஷ்ணம் முதலியவைகள் இல்லாத இடமது. ஆங்கு அதி விசாலமான ராஸமண்டபத்தில் நவரத்நமயமான ஸிம்மாஸநத்திலே ஒரு தம்பதி அமர்ந்துளது. அவரே உலகிற்கு ஆதிதந்தை தாய். அவர்களையே ஸ்ரீ ராதா கிருஷ்ண ரென்றும் பரப்ரும்மமென்றும் பக்தர்கள் கூறுவார்கள். அவர்களைச் சுற்றி கோடிக்கணக்கான காமதேனுக்களும் கோப கோபிகளும்

சூழ்ந்திருக்கின்றனர். நித்ய ஸூரிகளும் பலகோடி ஹரி ஹரப்ரும்மாக்களும் குழந்தைவடிவமான கண்ணனை உபாஸிக்கின்றனர். அவர் ஸர்வ அவயவங்களிலும் அத்புதமான ஆபரணங்களைத் தரித்திருக்கிறார். கோடி சந்த்ரன் போல் சாந்தமான ஒளியுள்ளவர். அவரே ச்வேதத்வீபத்தில் பந்நகசாயியாகவும் இருப்பவர் என்று சிவன் உபதேசித்தார். நாரதர் அவரை வணங்கி விடைபெற்று பதரிகாச்ரமம் சென்று நாராயண ரிஷியை வணங்கினார். அவர் நாரதருக்குத் திவ்யாஸந மளித்து ஆசீர்வதித்தார். நாரதர் மாயா ஸ்வரூபத்தைப்பற்றிக் கூறும்படி வினவினார். அவர், பரப்ரும்மத்தின் இச்சையையே பிரகிருதி அல்லது மாயை என்பார்கள். அது கோலோகத்தில் ராதை என்றும் வைகுண்டத்தில் லக்ஷ்மி என்றும் கைலாஸத்தில் துர்க்கை என்றும் ஸத்யலோகத்தில் ஸரஸ்வதி என்றும் அழைக்கப்படும். அதே உலகிலுள்ள பெண்கள் வடிவமாக மாறுகிறது. ஆதலால் நற்குலத்துதித்த கன்யகையை நீ மணந்துகொள். அவளை ஆடை ஆபரணங்களால் ஸந்தோஷப்படுத்து. அவளுள்ளம் குளிர்ந்தால் மாயை மகிழ்ந்து உன்னை விடுவள். புருஷனைத் தர்சித்து மோக்ஷமடைவாய் என்றார்.

**பிரும்மகண்டம் முற்றிற்று.**

## 2. பிரகிருதி கண்டம்.

### பிரகிருதி ஸ்வரூப பேதம்.

ப்ர என்றால் சிறந்ததென பொருள். க்ருதி எனில் ஸிருஷ்டி என்பதாம். ஆதலால் பிரகிருதி எனில் சிறந்த ஸிருஷ்டி என்று பொருள். உலகைப் படைக்கக் காரணமாக இருந்ததால் இதை பிரகிருதி என்பர். இவள் ஸ்ரீ கிருஷ்ணனது இடது புறத்தில் தோன்றி நிற்பவள். இவளை ராதை என்று பக்தர்கள் பூஜிக்கின்றனர். இவளது அம்சமே பெண்களாகவும் திதிகளாகவும் நக்ஷத்திரங்களாகவும், மும்மூர்த்திகள், ஸப்த ரிஷிகள், அஷ்டதிக் பாலகர்கள், அஷ்ட வஸுக்கள், பதினொரு ருத்ரர், த்வாத சாதித்யர் முதலிய முப்பத்து முக்கோடி தேவர்களது மனைவிகளாகவும் ஜனித்தது. பிறந்தபோது

மங்களையாகவும் போரில் சண்டிகையாகவும் இருந்ததால் மங்கள சண்டிகை என்ற பெயருடனும் ஓர்சக்தி தோன்றினாள். அக்நிக்கு ஸ்வாஹா தேவி, வாயுவுக்கு ஸ்வஸ்தி, பித்ருக்களுக்கு ஸ்வதா, கணபதிக்கு புஷ்டி, அநந்தருக்கு துஷ்டி, யமனுக்கு க்ஷமை, ஸத்தியத்திற்கு முக்தி, புண்யனுக்கு பிரதிஷ்டை, அதர்மனுக்கு மித்யை, ஞானத்திற்கு புத்தி மேதை ஸ்மிருதி, லோபனுக்கு பசிதாஹம், வைராக்யத்திற்கு சிரத்தை பக்தி, விருஷபாநுவுக்குக் கலாவதி என்ற மனைவிகளாகத் தோன்றியவர்களும் ராதையின் அம்சமானவர்களே. ராதையை ஸ்ரீ கிருஷ்ணன் கார்த்திகை மாத பௌர்ணமியில் பூஜித்தார்.

**அண்ட ஸிருஷ்டியும் கவசமும்:—** கிருஷ் எனில் பக்தி என்றும், ந—எனில் தொண்டு என்றும் பொருள். ஆதலால் பக்தியையும் தொண்டையுமளிக்கும் பகவான் கிருஷ்ணனானார். பகவான் அம்பிகையுடன் ஓர் பிருஹ்மனது ஆயுட் காலம் வரை ராஸக்ரீடை செய்து வந்தார். தேவி சிரமத்தினால் பெரு மூச்சுவிட அது வாயுவானது. அவள் வேர்வையே ஜலமானது. ஓர் ஸ்வர்ணமயமான அண்டத்தைப் பெற்றாள். அது குழந்தையாக இல்லாததால் தேவி அதை ஜலத்தில் எறிந்தாள். இதைக்கண்ட கிருஷ்ணன் ஸ்ரீராதைக்க்கும் அவள் அம்சத்தாலுண்டான தேவப்பெண்களுக்கும் பிள்ளை பிறவாதென சபித்தார். ராதைக்கு மற்றோர் ரத்நாஸநமளித்து பகவான் அதில் அவளை அமர்த்தினார். ஸ்வர்ண அண்டம் பல்லாண்டு சென்றபின் இரண்டாக வெடித்தது. அதனிடையிலிருந்து, விராட் எனும் ஓர் குழந்தை தோன்றிற்று. அதற்கு ஸ்ரீ கிருஷ்ண மந்திரத்தை உபதேசித்துச் சென்றார். அவரிடமுண்டான மும் மூர்த்திகளும் உலகைப் படைத்துப் பரிபாலித்து லயபடுத்தி வருகின்றனர்.

## ஸரஸ்வதி.

ஸ்ரீ ராதையினது நாவிலிருந்து ஓர் பெண் பிறந்தாள். அவள் வெண்மை நிறம் வாய்ந்தவள். அவள் பெயர் ஸரஸ்வதி. அவள் தன்னை மணந்து கொள்ளும்படி கிருஷ்ணனை வேண்டினாள். பகவான் அவளை வைகுண்டம் சென்று விஷ்ணுவை மணந்துக் கொண்டு லக்ஷ்மியுடன்

கூடி வாழும்படி உத்தரவிட்டார். அந்த ஸரஸ்வதியை மாக மாஸ சுக்ல பஞ்சமியிலும் வித்யாரம்ப காலத்திலும் பூஜிப்பர் என பகவான் ஆசீர்வதித்தார். ஸரஸ்வதிதேவி யினது மந்திரத்தையும் கவசத்தையும் நாராயணர் வால்மீகிக்கும் ஸூர்யன் யாக்ஞவல்க்யருக்கும் உபதேசித் தார்கள். யாக்ஞ வல்க்யர் தனது குரு சாபத்தால் கற்ற வித்யைகளை இழந்தார். பின்னர் அவர் ஸூர்யனை அடுத்து ஸரஸ்வதி மந்த்ர கவசங்களைப் பெற்று ஸரஸ்வதியைத் துதித்தார். வாக்தேவி கவியாகும்படி ஆசிர்வதித்தாள். ஸரஸ்வதி கங்கை லக்ஷ்மி முதலியவர் விஷ்ணுபத்தினி களாகி கலஹம் செய்தகதை தேவீபாகவதத்தில் வருகிறது.

## துளஸீ சரிதம்.

குசத்வஜனது மனைவியான மாதவி நூறுண்டு கணவனை விட்டுப் பிரியாமல் ரமித்தாள். ரஜஸ்வலையான தைக் கண்டு கணவனை விட்டுப் பிரிந்தாள். பின்னர் நூறுண்டு கர்ப்பத்தைச் சுமந்தாள். ஓர் சுப லக்னத்தில் லக்ஷ்மீதேவியின் அம்சமான ஓர்கன்யகையைப் பெற்ருள். அது மிக அழகாகவும் குணவதியாகவும் இருந்தது. அதற்குத் துளஸீ என பெயரிட்டனர். பிறந்தவுடன் பலர் தடுத்தும் கேளாமல் நாரணனையே நான் பதியாக பெற வேண்டுமென் லக்ஷமாண்டு தவம் புரிந்தாள். சதுர்முகன் அவள் எதிரிலே தோன்றினர். துளஸீ! உனது விருப்பை யானறிவேன். நீ ராதா தேவியின் அம்சத்தால் ஜனித்த ஓர் கோபிகை. கிருஷ்ணனது சக்தியால் தோன்றிய ஸுதாமா எனும் கோபன் உன்னைக் கோலோகத்தில் விரும்பினன். ராதை அவனை ராக்ஷஸனுகும்படிச்சபித்தாள். அவன் சங்கசூடன் எனும் அரக்கனுக அவனியில் அவதரித்திருக்கிருன். அவனை நீ மணந்து மறுபிறப்பில் மாதவனை மணளனுக அடைவாய். நாரணனது செயலால் பிருந்தாவநத்தில் துளஸீவிருக்ஷமாவாய். அச்யுதனுக்கு மிக பிரியமானது துளஸீ தளமேயாகும் என்றுகூறி, ஸ்ரீ ராதா மந்திரத்தை உபதேசித்து மறைந்தார். துளஸீ அங்ஙனமே அவனை மணம்செய்து காம ஸுகத்தை அனுபவித்தாள். ஒரு மன்வந்த்ர காலம் வரை சங்க சூடன் அஸுர சக்ர வர்த்தியாக இருந்து எவருக்கும் கிட்டாத போகங்களை அனுபவித்தான். ஸகல தேவர்களும் தத்தம் செல்வத்தை

இவனிடம் அளித்து தொண்டுபுரிந்தனர். தேவர்கள் ஒன்று கூடி பிரும்மாவிடஞ் சென்று தங்களது துன்பத்தை அகற்றும்படி வேண்டினர். அவர் அமரருடன் வைகுண்டம் சென்று சக்ரபாணியை சரணமடைந்தார். அவர் சிவனை அழைத்துச் சூலத்தை அளித்து சங்கசூடனை இதனுல் கொல்லவேண்டும் என்ருர். நீரும் அவன் கவசமகன்ற போது அவன் மனைவி கற்பையிழந்த பின்னரே அவனை வெல்ல முடியும் என்ருர். எனது கட்டளைப்படி சிவன் அவனுடன் போரிடுவார். நானும் அவன் மனைவியின் கற்பை அழிப்பேன். அதுவரை அமரர் பொறுத்திருக்க வேண்டும் என்றும் கூறினுர். அங்ஙனமே அவனைச் சிவன் கொன்ருர்.

## லக்ஷ்மியின் அவதாரம்.

. ஸ்ரீராதாதேவியின் அம்சத்தால் தோன்றியவள் லக்ஷ்மீ தேவி. அவளது அம்சத்தால் தநலக்ஷ்மி தான்யலக்ஷ்மி மோக்ஷலக்ஷ்மி என பலர் தோன்றினர். ஸ்வதர்மத்தை விடாதவரையில் ஒவ்வொருவரிடமும் ஸ்வர்க்கலக்ஷ்மீ தேவி வசிப்பாள். ஸ்வதர்மத்தைவிட்டபொழுது வைகுண்டம்சென்று விடுவாள். ஒரு ஸமயம் ஸ்வர்க்கத்தில் அஷ்ட லக்ஷ்மிகளும் தாண்டவமாட தேவேந்திரன் மூன்று லோக ஆக்ஷியையும் நடத்தி வந்தான். ரம்பையுடன் கூடி மதுபானம் செய்து இந்திரன் அரண்யத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். அங்கு வைகுண்டத்திலிருந்து கைலாஸஞ் செல்லும் தூர் வாஸர் சிஷ்யகோஷ்டியுடன் வந்தார். ஸ்வர்காதிபதி அவரை வணங்கித் துதித்தான். தூர்வாஸர் தனக்கு மஹா விஷ்ணு அளித்த பாரிஜாதபுஷ்பத்தை அவனுக்களித்தார். அவனதை வெள்ளையானையின் தலையில் வைக்க அது அந்த புஷ்ப மஹிமையால் விஷ்ணுவைப் போன்ற உடல் பெற்று இந்திரனையும் அப் புஷ்பத்தையும் கீழேத் தள்ளி விட்டு வநம் சென்றது. இதைக்கண்ட தூர்வாஸர் இந்த்ர! பெரியாரளித்தது, புஷ்பம், பகவத் ப்ரஸாதம் என்ற ஒவ் வொரு காரணத்தைக் கொண்டும், இதை நீ மரியாதை யுடன் பெற்று கண்ணில் ஒத்திக்கொண்டு தலையில் வைத் துக்கொள்ள வேண்டும். நீ ஒன்றையும் மதிக்காமல் யானைமீது வைத்தாய். கர்வத்தால் நீ இங்ஙனம் செய் தாய். ஆதலின் லக்ஷ்மீ உன்னைவிட்டு அகலுவாள் என்று

சபித்தார். அன்றியும் இப் புஷ்பத்தைத் தலையால் வஹித்த பிராணியின் தலை விநாயகருக்குத் தலையாகும். சகல தேவர்களாலும் அது பூஜிக்கப்படும் என்றார். இந்திரனது கர்வம் அகன்றது. தனக்கு ஞானோபதேசம் செய்யும்படி அவரை வேண்டினன்.

## துர்வாஸர் உபதேசம்.

புண்ய பாப மிரண்டையும் செய்தவர் மாநிலத்தில் மாந்தராவர். விதிவழுவாது இல்லற தர்மத்தைச் செய்துவரின் அது துறவறத்தில் கொண்டுவிடும். துறவிகள் உலகைப் பொய்யாக எண்ணி மெய்ப்பொருளை நாடுவர். அப்பொருள் கோலோகத்தே ராதா கிருஷ்ணனாக அமர்ந்துளது. காமனையின்றிக் கர்மத்தைச் செய்வோரும் கிருஷ்ண பக்தியினால் கோலோகம் செல்வர். ஆங்கு சென்றோர் மறுபடி பாரினில் பிறவார். விரத உபவாஸங்களும் கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷமடைதலும் பக்தரது லக்ஷணம். காமக்ரோதங்களைக் களைந்து குடும்பத்தை விட்டு தண்ட கமண்டலு காஷாயங்களைத் தரிப்பவர் ஸந்யாஸியாவர். அவர் பிக்ஷைக்காகமட்டும் ஊரில் நுழைந்து மற்றகாலங்களில் மடத்திலிருந்து பகவத்யாநம் செய்யவேண்டும். மரத்தினால் செய்யப்பட்ட பெண்ணுருவத்தைக் கூட ஸன்யாஸி கண்ணால் பார்க்கலாகாது.

சோணித மதிகமானால் தாயின் உருவும், சுக்ல மதிகமானால் குழந்தை தந்தையின் உருவையும் பெறும். இரட்டைப்பட்ட நாட்களில் கருதரித்தால் ஆணாகவும், ஒத்தைபட்ட திநமானால் பெண்ணாகவும் பிறக்கும். ஞாயர், செவ்வாய், வியாழன்களில் கருவுண்டானால் ஆணும், மற்ற வாரங்களில் பெண்ணு முண்டாகும். முதல் யாமத்தில் உண்டாகும் சிசு அற்பாயுளாகும். இரண்டாவது மூன்றாவது யாமங்களில் ஜநிப்பது நடுத்தர வயதுள்ளதாகும். நாலாவது யாமத்திலுண்டாவது நீண்ட ஆயுளைப் பெறும். கரு கைகாலுடன் பக்ஷிகூண்டிலிருப்பதுபோல் கர்ப்பபையில் ஸஞ்சாரம் செய்ய இடமில்லாது வருந்தும். ஜீவனது பாபத்தால் பிறப்புமிறப்பும் அடிக்கடி ஜீவனை வாட்டுகிறது. அதை வெல்ல ஞாநமல்லது பக்தி எனும் ஒரே வழிதானுளது என்று துர்வாஸர் கூறினர். அவர் கூறிய

வண்ணம் அமரரும் அரக்கரும் ஒன்றுகூடி பாற்கடலைக் கடைந்தனர். பற்பல பொருள்கள் தோன்றின. முடிவில் லக்ஷ்மீதேவியும் அங்கிருந்து தோன்றி வனமாலையைக் கொண்டு பங்கசாயியை வரித்தாள். தேவர்கள் பிரும்மாவைப் புரோஹிதராகக் கொண்டு லக்ஷ்மியை விதிப்படி அளித்து பூஜித்தனர். முன்போலவே ஸ்வர்க்கத்தை அன்னையின் அருள் அலங்கரித்தது. இழந்த பதத்தை இந்திரன் முதலியோர் திரும்பப் பெற்றனர்.

## ஸ்வாஹா ஸ்வதா தக்ஷிணைகள்.

தேவர்கள் பிறந்தவுடன் பசி பசி என்று கதறினர். பிரும்மா யக்ஞ ரூபமான நாராயணமூர்த்தியைச் சரணமடைய அவரிடமுள்ள பிரகிருதியின் அம்சத்தால் ஒளி வடிவமான ஓர் கன்யகைத் தோன்றினள். அவள் பெயர் ஸ்வாஹா. பகவான் எதிரே தோன்ற அவரழகைக்கண்டு ஸ்வாஹாதேவி பரவசமானுள். வாராஹ கல்பத்தில் நக்நஜித் என்ற அரசன் புத்ரியாகப் பிறப்பாய். நாக்நஜிதி எனும் உன்னை யான் மணப்பேன். இச் சமயம் என தம்சமான அக்நியை மணந்துகொள் என்றூர். ஸ்வாஹா தேவி அக்நிக்கு பதியாகி கார்ஹ பத்யம், தக்ஷிணுக்நி, ஆஹவநீயம் என்ற மக்களைப் பெற்றுள். ஸ்வாஹா என்று கூருது ஹோமம் செய்தல் பயனற்றதாம். அக்நியில் செய்யும் ஆஹுதியே அமரருக்கு ஆஹாரம். பித்ருகணங்கள் ஏழுவகைப் படுவர். நால்வர் சரீரத்துடன் கூடியவர். மூவர் தேஜோமயமானவர். அவர்களும் ஆஹாரத்தை நாடியபோது, சதுர்முகன் மனதினுல் ஓர் கன்னிகையைப் படைத்தான். அவளே ஸ்வதா தேவியாவாள். அவளைப் பித்ருக்களுக்கு அளித்தார். பித்ருக்களை நாடி ச்ராத்தம் தர்ப்பணம் முதலியவைகளைச் செய்யும்போது ஸ்வதா என்று கூறவேண்டும். அவள் முற்பிறவியில் ஓர் கோபி ஆவாள். கிருஷ்ணனேடு அவள் ரமிப்பதைக்கண்ட ராதை அவளைச்சபித்தாள். தக்ஷிணை என்பவளுமங்ஙனமே ராதையால் சபிக்கப்பட்ட கோபிகை. அவள் லக்ஷ்மீ தேவியின் உடலில் புகுந்தாள். ஆதலின் யக்ஞம் செய்யும் முநிவர் அதன் பயனை பெருது வருந்தினர். பிரும்மனிடம் வந்து விக்ஞாபனம் செய்துக் கொண்டனர். அவர் நாரயணனைத் துதிக்க, அவர் தக்ஷிணை எனும் கன்னிகையை அவரிடம்

அளித்தார். சதுர்முகன் தக்ஷிணையை யக்ஞமூர்த்திக்களிக்க அவளிடம் பலன் என்ற புத்ரன் பிறந்தான். அதனால் யாகம் புரிவோர் பயனைப் பெற்றனர். தக்ஷிணையில்லாத யாகம் பயனை அளிக்காது. யக்ஞம் முடிந்த தத்க்ஷணத்திலேயே தக்ஷிணை அளிக்கவேண்டும். தக்ஷிணையளிக்காதவர் பிராம்மண தனத்தைத் திருடிய பாபத்தைப் பெறுவர்.

**தேவஸேனை:** பிரகிருதியின் அவதாரம் ஷஷ்டி அல்லது தேவஸேனை. பிரியவிருதன் என்பவன் புத்ரபாக்யமில்லாததால் புத்ர காமேஷ்டி செய்தான். கச்யபமுநி சருவை பத்னிமாலினிக் களித்தார், அவர்களுக்கோர் புத்ரன் பிறந்தான். ஆனந்த மடைந்தனர். சிறிதுநேரம் சென்றபின் அக்குழவி இறந்தது. தந்தை தாய் கதறினர். சுடுகாட்டிற்குச் சென்று மடிமீது மைந்தனை வைத்து மன்னன் கதறினான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஓர் விமானம் வந்தது. அதனுள்ளே மங்கை ஒருவளிருந்தாள். அரசன் அன்னையே! நீ யார்? என வினவினான். அவள் தான் தேவஸேனை எனும் பிரும்மனது மானஸிக மகளென்றும் தன்னைத் தந்தை சுப்ரமணியனுக்களித்தாரென்றும், தான் தேவர்களுக்கு ஜயமளித்ததாகவும் தன்னை ஷஷ்டி என்று உரைப்பார்களென்றும் கூறினாள். தனது சக்தியால் புத்ரனில்லாதவர் புதல்வனைப் பெறக் கூடுமென்றும் அற்பாயுளுள்ளோர் நீண்ட ஆயுளைப் பெறலாமென்றும் அவள் கூறி இறந்த குழந்தையை எழுப்பினாள். மன்னன் மகிழ்ச்சி கொண்டு ஷஷ்டியை வணங்கினான். சுக்லபக்ஷ ஷஷ்டியில் தன்னைப் பூஜிக்கும்படி கூறி மறைந்தாளவள்.

## மனஸா தேவி சரிதம்.

கச்யபரது மனதிலிருந்து மநஸா தேவி என ஓர் கன்னிகை உண்டானாள். இவள் மூன்று யுகம் முகுந்தனை நாடித் தவம் புரிந்தாள். உடல் கிழவிஉடல் போல் வாடி இருந்தது. கிருஷ்ணன் அவளெதிரிலே தோன்றி ஜரத்காரு என்று அழைத்தார். இவள் ஜரத்காரு எனும் முநிவருக்கு மனைவி. முனி படுத்துறங்கும்போது ஸந்த்யாகாலம் நேர்ந்தது. ஸந்த்யாவந்தனம் செய்ய அவள்புருஷனை எழுப்பினாள். அவர் உறங்குபவனை எழுப்புதல் முறையோ? என்றார். ஸூர்யன் அஸ்தமனமானான். ஆதலின் எழுப்பினேன்

அடியாளைப் பொருத்தருள வேண்டுமென வேண்டினள். கோபம் ஸூர்யனிடம் சென்றது. அவனைச் சபிக்க ஆரம்பித்தார். ஸந்த்யையுடன் ஓடிவந்து ஸூர்யன், முனிவரே! இறைவன் ஆணைப்படி அஸ்தமனமானேன். அச்சமயம் உமது மனைவி எழுப்பினள். சாந்தமன்றோ பெரியாருக்குப் பூஷணமென்றார். ரிஷியின் சினமகன்றது. பானுவுக்கு விடை கொடுத்தனுப்பினர். நித்ரா பங்கம் செய்த மனைவியை விட்டுத் தவம் செய்யச்சென்றார். மனஸாதேவி மனதினால் மும் மூர்த்திகளையும் வேண்டி ஓர் ஸந்ததி தந்தருளுமென்றாள். ஜரத்காரு மூவர்கூறியபடி ஜரத்காருவின் நாபியைத் தொட்டு குழந்தை உண்டாகுமென்றார். பரமசிவம் அவளை கைலாசத்திற்கு அழைத்துச்சென்றார். சிவனது உபதேசத்தை கருவிலிருந்துக் கேட்ட அஸ்தீகரென்ற சிசு ஞானியாக பிறந்தது. ஸகலகலைகளையும் சிவனிடமே பயின்றது. ஜனமேஜயன் ஸர்ப்ப யாகத்திலே அஸ்தீகர் ஸர்ப்பங்களைக் காத்தார். இந்திரன் மநஸா தேவியை மூலமந்திர ஸ்துதி கவசங்களால் பூஜித்து நன்மை பெற்றான்.

**ஸுரபி:** கோலோகத்தில் ஒரு ஸமயம் ராதையுடன் பகவான் பிருந்தாவனஞ் சென்று விளையாடிக் கொண்டிருந்தார். அவருக்குக் களைப்பு ஏற்பட்டதால் பாலைப்பருகக் கருதினர். அவரிச்சையால் கன்றுடன் கூடிய ஸுரபி தோன்றினள். அவளது பால் அமிருதத்தை விட ருசியாயிருந்தது. தேவனும் தேவியும் வேண்டிய அளவு அருந்தி பின்னும் பாலைக்கறந்தனர். பகவானது ஸங்கல்பத்தால் அந்த பாத்ரம் உடைந்தது. பால்சிந்திய அவ்விடத்தே அதிவிசாலமான பால் தடாகமுண்டானது. இந்திரன் ஓர் ஸமயம் எங்கும் பால் கிடைக்காது வருந்தினான். பிரும்மா கூறியபடி ஸுரபியைப் பூஜித்தான். உலகெலாம் முன்னைவிட பன்மடங்கு ருசியான பால் பெருகிற்று.

## ஸ்ரீ ராதையின் அவதாரம்.

ஸ்ரீ ராதை, விரஜையுடன் பகவான் விளையாடியதைக் கண்டு அவரைக் கடிந்துப் பேசினள். பார்ஷதனை ஸுதாமா தேவியைக் கண்டித்தான். ராதை அவனை ராக்ஷஸனாகும்படிச் சபிக்க, அவனும் தேவியைப் பூமியில் பிறந்து சிலகாலம் பகவானை விட்டு பிரிந்திரு எனச் சபித்தான்.

ஆதலால் வராஹகல்பத்தில் கோகுலத்தில் விருஷபாநுவுக்கும் கலாவதிக்கும் பெண்ணுக ராதை அவதரித்தாள். இவள் தாயின் கருவிலிருந்து பிறந்தவளல்ல. கலாவதி வாயுவையே பெற்ருள். ராதை அங்கு அத்புதவடிவத்துடன் அவதரித்தாள். பன்னிரண்டாண்டு சென்றபின் தேவி தனது நிழலைப் பெண்ணுக்கித் தந்தையினிடம் விட்டுத் தான் பகவானிருப்பிடம் சென்ருள். இதற்குள் வஸுதேவனுக்குப் புதல்வனுக அவதரித்த பகவான் தனது மாமனை கம்ஸனிடம்பயந்து கோகுலம் வந்தார். ராதையும் கிருஷ்ணனும் ஒருவரையொருவர் எதிர்பார்த்திருந்தனர். சாயாமயமான ராதையை யசோதையின் ஸஹோதரனை ராயாணனுக்கு அளித்தார். ராயாணன் பிருந்தாவனத்திலே ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் பிரும்மாவைக் கொண்டு விவாஹம் செய்வித்தார். ஸுதாமனது சாபத்தால் தேவியும், தேவனும் சொல்லொணுத் துன்பமடைந்தனர். நூருண்டு சென்றபின் தீர்த்தயாத்ரை என்ற வியாஜமாக தேவி வெளியிற் கிளம்பி மறுபடி பகவானை அடைந்தாள். இருவரும் கோலோகம் சென்றனர். கலாவதியும் விருஷபாநுவும் தேவகி வஸுதேவர்களும், யசோதை நந்தரும் கோலோகஞ் சென்றனர்.

## ஸுயக்ஞன்.

உத்கலன் என்ற ராஜன் ஆயிரம் ராஜஸூய யாகம் செய்தான். சதுர்முகன் இவ்வரசனை ஸுயக்ஞன் என்றழைத்தார். ஓர் அந்தணன் ராஜ சபையில் நுழைந்தார். அவர் இளைத்த உடலில் மெலிந்த உடையை அணிந்திருந்தார். அரசன் மரியாதையுடன் வரவேற்காது உட்கார்ந்த விடத்திலிருந்தே அஞ்ஜலி செய்து வாருமென்றழைந்தான். ஸபையோரும் எழுந்து அவரைக் கௌரவிக்கவில்லை. வந்தவர் அரசனை நீ விரைவில் ராஜ்யத்தை இழப்பாய் எனச் சபித்தார். எழுந்திராத முனிவர்களை நோக்கினுர். உடனே ஸகல முனிவரும் எழுந்து பணிந்து குற்றத்தை மன்னிக்க வேண்டுமென பிரார்த்தித்தனர். அவர் சினமகன்றது. ஸுயக்ஞன் முனிவரைவணங்கி பாபபுண்யங்களைக் கூறும்படி வேண்டினுன். மஹர்ஷிகள் நன்றிகெட்டவனைவிடக் கொடிய பாபி இல்லை. ஈசனளித்த அவயவங்களையும் பொருளையுங் கொண்டு

ஈசனுக்குப் பூசை புரியாதவனும் இறைவனம்சம் நிறைந்த ஏனைய ஜீவராசிகளுக்குப் பரோபகாரம் செய்யாதவனும் கிருதக்னனுவான். பல நரகயாதனைகளை அனுபவித்துப் பின்னர் பசு பக்ஷி ஜன்மங்களைப் பெறுவான் என்று கூறினூர். சாபமளித்த அதிதியை வணங்கினுன் அரசன். வனம் சென்று சாபத்தை அனுபவித்து முன்போல் பாரினை ஆள் என்று கூறி முனிவர் சென்றனர். ஸுயக்ஞன் தனது புரோஹிதரான வஸிஷ்டர் சொற்படி விருந்தினரை அர்ச்சித்துத் தாங்கள் யார்? தங்கள் குரு யார்? எங்கு வந்தீர் என வினவினுன்?

வேந்தே! கச்யபரது வம்சத்தில் பிறந்தவன் யான். விரூபனது புதல்வனுன ஸுதபஸ். என் குரு மஹாதேவன். இந்திர பதவியும் துச்சம் எனக்கு. பகவானை நினைத்து விருப்பு வெறுப்பின்றி ஸஞ்சரிக்கிறேன். நீ முறை தவருது செய்த தர்மம் என்னை இங்கு அழைத்தது. எக்காரியத்தையும் நாடியவனல்லன் என்ருரவர். ஸுயக்ஞன், பகவன்! தீர்த்தமும் தேவரும் காலம் சென்றபின்னர் சுத்தமாக்குகின்றனர். ஸாதுக்களோ தர்சநத்திலுலேயே பாவநமாக்குகின்றனர். பிறவிக்கடலைக் கடந்து செல்லும் உபாயத்தை உபதேசிக்க வேண்டும் என வேண்டினுன். முனிவரும் விரிவாக பல தர்மங்களைக் கூறி முடிவில் கிருஷ்ண பக்தியே சிறந்த உபாயம். அதை விரும்பிஞல் ஓராண்டு ஸாதுக்களை அர்ச்சி. அதனிடையே சாபம் நோயாக வந்து துன்புறுத்தும் என்று கூறி மறைந்தார். மன்னனும் ஸாதுக்களை ஓராண்டு பூஜித்தான். ஸுதபஸ் மறுபடியும் அரசனருகே வந்தார். அவனது பக்தியைக் கண்டு ராதா மந்த்ரத்தை உபதேசித்தார். மன்னனும் புஷ்கரஞ் சென்று தவம் செய்தான். பதினுயிரமாண்டு கழிந்தபின் ராதாதேவி அரசனைக் கோலோக மழைத்துச் சென்ருள். ஸுயக்ஞன் கிருஷ்ணனுக்குத் தொண்டு புரிந்து பேரானந்தமடைந்தான். ராதையைக் கார்த்திகை பௌர்ணமியில் பூஜிப்போர் பரமபதமடைவர். துளஸியுடன் பகவான் ரமித்திருப்பதை ராதை கண்டாள். கோபங்கொண்டு தனது சக்தியைச் சுருக்கிக்கொண்டாள். ஸகல தேவரும் முனிவரும் சக்தியை யிழந்து வருந்தினர். கிருஷ்ணனைச் சரணமடைந்தனர். பகவான் ராதையைத்

துதிக்க தேவி ப்ரஸந்நமாளுள். எல்லோரும் இழந்த சக்தியைப்பெற்று மகிழ்ந்தனர். ராதாதேவியின் பற்பல அவதாரங்களுக்கும் தனித்தனி மூலமந்த்ரம் ஸ்துதி கவசம் முதலியவைகளைப் பார்வதிக்கு சிவன் விரிவாகக் கூறினுர்.

## கணேச கண்டம்.

### கணேசாவதாரம்.

ஆதி தம்பதிகள் பல்லாயிரமாண்டு இணை பிரியாது ஏகாந்தத்தி லீடுபட்டனர். வாயிலில் நின்று அமரர் அவர்களைப்போற்றினர். தேவர் உள்ளே வருவதைக் கண்டு உமாதேவி எழுந்து விரைவாகச் சென்ருள். கைலாஸ நாதன் தேவியின் சோகத்தை அகற்றி ஸுபுண்யகமெனும் விருதத்தை உபதேசித்தார். அதில் மாசி மாதம் சுக்ல த்ரயோதசியன்று ஆரம்பித்து ஓராண்டு அனுஷ்டித்து கிருஷ்ணனைப் பூஜிக்க வேண்டும். அந்த விருதத்தைத் தேவி ஆரம்பித்தாள். இந்த விருதத்தினுல் ராதாகிருஷ்ணன் பரம ஸந்தோஷ மடைந்து கணேசன் என ஓர் குழந்தை பிறக்கும் எனக் கூறினுர். விரதம் பூர்ணமாயிற்று. குரு உன் கணவனையே தக்ஷிணையாக அளி என்ருர். தர்ம தேவதையும் ஏனைய முனிவர்களும் தக்ஷிணை அளிக்காத விருதம் பயனற்றது. ஆதலின் ஸநத்குமாரர் கோரியவண்ணம் சிவனையே தக்ஷிணையாக அளிக்கவேண்டுமென்று தேவியிடம் விக்ஞாபநம் செய்துகொண்டனர். யார் என்ன கூறியும் பார்வதி பரமசிவத்தைத் தாநமாக அளிக்க மனங்கொள்ளவில்லை. இதனிடையே ஆகாயத்தினின்று வைகுண்டநாதன் வந்தார். ஸ்ரீ கிருஷ்ணனது உடலிலிருந்தே பரமசிவனும் கோக்களும் தோன்றின. அந்த கோக்களைத் தக்ஷிணையாகத் தந்தால் சிவனைத் தந்ததுபோலாம் என்ருர். அம்பிகை ஆயிரம் பசுக்களை அளித்தாள். ஸநத்குமாரர் அதை ஏற்காது சிவனே வேண்டுமென்ருர். வேறுவகை இல்லாது வானவர் விரும்பியபடி தேவி தன் பதியைத் தாநமாகத்தந்தாள். மஹரிஷி அதைப்பெற்று மாதேவனைத் தன்னருகே அழைத்துச் சென்ருர்.

சிவை சிவனையே நினைத்து வருந்தினுள். கோபாலன் ஆங்கு எழுந்தருளினுன். கோபால கிருஷ்ணனது தர்சநம்

தனக்குக் கிடைக்கவேண்டு மென்றே ஸநத்குமாரர் சிவ தக்ஷிணையை வற்புறுத்தியதாகக் கூறி உமையினிடம் அவள் பதியை அளித்தார். ஸ்ரீ கிருஷ்ணன் உமது படுக்கையில் விநாயகராக வீற்றிருக்கிருர் பாரும் என்று ஓர் அதிதியைப்போல் கூறி மறைந்தார். அன்னை தனக்குப் புத்ரபாக்கியம் உண்டானதையும் பெரிதாகக் கருதவில்லை. அதைவிட அதிதி பூஜையைச் சிறப்பாக எண்ணிஞள். வந்த விருந்தினர் ஏன் மறைந்தார்? எங்கு சென்ருர்? அவரைத்தேடி அன்னமளித்தாலல்லது இல்லமேகுவதில்லை என்ருள். அச்சமயத்தில் ஆகாயவாணி ஒன்று தோன்றிற்று. அம்பிகே! நீ ஏன் அதிதியை நினைந்து வருந்துகிருய்? விருந்தாளியாக வந்தவனும், உனது அருமைக் குழந்தையாக அவதரித்தவனும், கோலோக நாதனே ஆவான்! என்றது. விரைந்தோடி பார்வதி விநாயகமூர்த்தியைக் கண்டாள். கணவனை அழைத்தாள். இருவருங்கூடி குழந்தைக்கு ஜாதகர்மம் முதலியவைகளை நடத்தினர். மாதவன் முதலான விண்ணவரும் முனிவரும் சிவனைக் கொண்டாடிக் குழந்தையை ஆசீர்வதித்தனர். சிலர் காணிக்கைகளை அளித்துப் போற்றி வணங்கினர்.

## விநாயகர் கஜமுகனுனது.

பரமனுக்குண்டான புத்ர பாக்யத்தைக்கேட்டுப் பதினுன்கு உலகிலுள்ளோரும் ஆங்கு வந்தனர். சூர்ய புத்ரனுன சனைச்சரனும் ஆங்கு வந்தான். அவன் தலை குனிந்த வண்ணமே அம்பிகையை நமஸ்கரித்தான். நிமிர்ந்து பாராத காரணம் யாதெனத் தேவி வினவினுள். அன்னையே! யான் கோலோக நாயகனை நினைத்துத் தவம் புரிந்தேன். ருதுஸ்நானம் செய்த என் மனைவி என்னை எதிர்பார்த்துக்கொண்டு பலநாள் காத்திருந்தாள். யான் கண் திறக்கவில்லை. ருது காலஞ்சென்றமையால் அவள் கோபங்கொண்டு, கண்ணுல் நான் யாரை நோக்கினுலும் அவர் தலை அறுந்து விழும் எனச் சபித்தாள். தங்களுக்கும் புதல்வனுக்கும் ஆபத்து வரலாகாதென யான் நிமிர்ந்து பாராது தங்களை வணங்கினேன் என்ருன். தேவி குதூஹலத்தால், நீ எங்களை நிமிர்ந்து பார்! என்ன ஆகிறது பார்ப்போம்? என்ருள். சனைச்சரனும் தெய்வச்

செயலாக விநாயகர் முகத்தை மட்டும் கடைக்கண்ணால் நோக்கினன். உடனே விநாயகர் தலை அறுந்து கோலோகஞ்சென்று பகவானுடன் ஐக்யமானது. தலையில்லாத தநயனைக்கண்டு தேவி மூர்ச்சையுற்றாள். புருஷோத்தமன் புஷ்பபத்ரா நதீதீரஞ் சென்று அயர்ந்து உறங்கும் யானையின் சிரஸைச் சக்கரத்தினலறுத்து அம்பிகையின் மடியிலுள்ள விநாயகருக்கு அதைவைத்து அவரை எழுப்பினர். மாறுதலையாயினும் மைந்தன் பிழைத்ததைக் கண்டு அன்னை ஆறுதலை அடைந்தாள்.

ஸௌர்ய புத்ரனிடம் தேவிக்கு கோபமுண்டாயிற்று. அங்க ஹீநனவாய் என அவனைச் சபித்தாள். இதைக் கண்டு ரவியும் அவர் தந்தை கச்யபரும் கடுங்கோபங் கொண்டனர். பார்க்கமாட்டேன் என்ற என் புதல்வனைப் பார்வதியே தங்களைப் பார்க்கும்படி கூறினள். அவள் புத்ரனும் அங்கபங்கமடைவான் என்று சூர்யன் உரைத்தான். பிரும்மா இவர்களைச் சமாதானம் செய்து அன்னையைப் பணிந்து துதித்தார். பார்வதி சனைச்சரனை ஓர் க்ரஹராஜனகவும் சிரஜீவியாகவும் செய்து தன் சாபத்தால் கால் கொஞ்சம் நொண்டியாக இருக்கும்படிக் கூறினள். ஸௌர்ய சாபத்தால் விநாயகரும் தொந்திபெருத்திருந்தார்.

## கார்த்திகேய சரிதம்.

பார்வதி மகாவிஷ்ணுவை நோக்கி என் கருவில் தங்காமல் அவனியில் சிந்திய சிவ சக்தி எங்கு சென்றது என்றாள். மாதவன் தேவரை நோக்கி, அது எங்கே என்றார். தர்மதேவர் அது பூமியில் வந்ததைக் கண்டதாகவும் பூமி அக்நியிடமளித்ததாகவும், அவர் சரவணத்தில் விட்டதாகவும், வாயு அங்கு ஓர் அத்புதமான குழந்தையைக் கண்டதாகவும் கூறினர். ஸௌர்யன், அஸ்தமனமாகும்வரை சிசுவைச் சரவணத்தில் கண்டதாகக்கூறினர். சந்த்ரன் இரவில் கிருத்திகாகணங்கள் அதை எடுத்துச் சென்றதாகச் சொன்னன். பரம சிவனது ஆணையின்படி நந்திகேசன், கிருத்திகைகளின் கிருகத்திற்குச் சென்றார். ஸேனபதியான சரவணபவன் நீ யார்? எங்குவந்தனை? என வினவினர். நந்தி வந்த வேலையை விரித்துரைக்க கார்த்திகேயன் கைலாசஞ்சென்றார். ஸகல தேவர்களும் அவரை தேவஸேனைக்குத் தலைவனுக்கிப் போற்றினர்.

## சிவனுக்குக் கச்யப சாபம்.

மாலீ ஸுமாலீ என இரு ராக்ஷஸர்கள் சிவபக்தியில் சிறந்தவர்கள். ஒரு ஸமயம் ஸூர்யனை இவர்கள் அவமதித்தனர். அதனால் கோபங்கொண்ட பாநு இவர்களுக்குக் குஷ்டநோய் வரும்படிச் சாபமளித்தார். இவர்கள் பரமசிவனிடஞ்சென்று முறையிட்டனர். சூர்யனிடம் கோபங்கொண்ட சிவன் சூலத்தினால் ஸூர்யன் மார்பில் குத்தினார். அதனாலவன் மூர்ச்சையாகி விழுந்தான். அவன் தந்தை கச்யபர் என் புத்ரன் மார்பு பிளந்ததுபோல் உன் புத்ரனது தலை பிளக்கும் எனச்சாபமளித்தார். அதனால் தான் விநாயகர் தலை அறுந்து யானைமுகம் பெற்றார். ஸூர்யனைச் சம்பு எழுப்பினார். கச்யபரும் ஸூர்ய கவசத்தைப் பாராயணம் செய்து மாலீ ஸுமாலீகள் ஆரோக்யத்தைப் பெறுவர் என்றார்.

## கார்த்தவீர்யன்.

தத்தாத்ரேயரை வணங்கிப் பூஜித்துப் பல வரங்களைப்பெற்ற கார்த்தவீர்யன் மிக்க நீதியுடன் பூமியை ஆண்டு வந்தான். ஒரு ஸமயம் ஜமதக்னி அரசனை காமதேனுவின் உதவியால் ஒர் ஒப்பற்ற விருந்தளித்தார் விருந்தினராக வந்த வேந்தன் இப்பசுவைத் தனக்களிக்கும்படித் தவசியை வேண்டினான். தபோ பலத்தினால் தனக்குக் கிடைத்த தேனுவைத் தான் பிறர்க்களிக்க இயலாதென்றார். அரசன் பசுவைப் பலாத்காரமாக இழுத்துவரச் சொன்னான். இதைக்கண்டு முனிவர் வருந்த தேநு நூறு கோடி வீரர்களைத் தன்னுடலிலிருந்து தோற்றி வைத்தது. ராஜ ஸேனைக்கும் தேநு ஸேனைக்கும் கடும்போர் நிகழ்ந்தது. அடிபட்டு மூர்ச்சையாகிக் கிழே விழுந்தானரசன். கருணாமூர்த்தியான ஜமதக்நி அவனுக்கு உபசாரம் செய்து தேற்றி அன்னமளித்தார் நடந்ததை மறந்து நகரம் செல்லென்றார். அரசன் முனிவரைப் போருக்கழைத்தான். தேனு பற்பல அஸ்த்ர சாஸ்த்ரங்களை முனிவருக்களித்தது. மன்னனும் முனிவரும் மிக்க பயங்கரமாக சண்டையிட்டனர். இதைக்கண்டு தேவருமஞ்சினர். ஸத்ய லோகத்திலிருந்து சதுர்முகன் தோன்றி போரை நிறுத்த மன்னன் மறுபடியும் ஆச்ரமத்திற்கு வந்தான். திவ்யாஸ்த்ரங்களைக் கொண்டு தவஸியைத் தாக்கினான். மஹர்ஷியும் மன்னனைத் தாக்கினர்.

அரசன் தத்தாத்ரேயர் அளித்த சக்தி எனும் அஸ்த்ரத்தால் முநிவரைக்கொன்ருன். தேனு திராத் துயரமடைந்து புஷ்கரத்தில் பிருகுவுடன் தவம் செய்யும் பரசுராமரிடம் இதை அறிவித்துக் கோலோகம் சென்றது. தந்தையின் மரணத்தைக்கேட்டுப் பரசுராமன் திடுக்கிட்டு அந்த கர்வங்கொண்ட க்ஷத்ரிய ஜாதியையே இருபத்தோரு தலைமுறை நாசம் செய்வேன் என பிரதிக்ஞை செய்தான். பிருகு ஜமதக்நிக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் செய்யும்படிக் கூறினர். ரேணுகை பர்த்தாவுடன் உடன்கட்டை ஏறினுள். வைகுண்டத்திலிருந்து விமாநம் வந்து ஜமதக்நியையும் ரேணுகையையும் ஏற்றிச்சென்றது.

பரசுராமர் பிரும்மலோகஞ்சென்ருர். தான் செய்த பிரதிக்ஞை நிறைவேற ஸஹாயம் செய்ய பிரம்மனை வேண்டினர். ஸதாசிவனிடமிருந்து ஸ்ரீ கிருஷ்ண கவசம் பெற்ருல் உன் விருப்பம் நிறைவேறும் என்ருரவர். பரசுராமன் கைலையங்கிரிக்குச்சென்ருன். சிவனை நமஸ்கரித்து போற்றினர். சிவனுமவனை ஆசிர்வதித்து திரைலோக்ய விஜயமெனும் ஸ்ரீ ராதாகிருஷ்ண கவசத்தையும், ஸ்தோத்திரத்தையும் அளித்தார். அதைக்கொண்டு பகவானை ஆராதித்தார். கிருஷ்ணன் அவரெதிரில் தோன்றி க்ஷத்ரியர்களை நீ ஜயிப்பாய்! எனக் கூறி மறைந்தார். ஈசன் கருணையால் அவனுக்கு ரதமும் ஆயுதங்களும் உண்டாயின. பரசுராமன் போர்க் கோலத்துடன் பாரினைச் சுற்றினர். தன்னுடன் போருக்கு வரும்படிக் கார்த்தவீர்யனுக்கு தூது அனுப்பினர். அரசனும் போருக்குக் கிளம்பினன். மனைவி மனோரமை அரசன் எதிரிலே பகவானை நினைத்துக்கொண்டு பிராணனை விட்டாள். மன்னன் அரிய மஹிஷியை நினைத்துக் கதறி அவள் சோகத்தால் உயிரை விடுவதா? யுத்தத்திற்குப் போவதா? என கலங்கி நின்ருன்.

ஓர் அசரீரியான வாக்கு, அரசே! உன் பத்நீ உத்தம லோகஞ் சென்ருள். நீயும் போரில் முன் நின்று வைகுண்டஞ் செல்வாயாக! என்றது. அரசன் மனைவிக்கு ஈமக்கடன்களை முடித்துவிட்டுப் பரசுராமருடன் போருக்குக் கிளம்பினன். பரசுராமரைப் பணிந்தான். அவர் நீ வீர

சொர்க்கம் செல்வாய் ! என ஆசீர்வதித்து யுத்தம் செய்தார். கார்த்தவீர்யனுக்குச் சஹாயமாக மத்ஸ்யராஜன் யுத்தம் செய்தான். அவர் சிவன் தந்த சூலத்தால் மத்ஸ்யனைக் கொல்ல ஆரம்பித்தார். அவனணிந்துள்ள சிவ கவச மிருக்கும்வரை அவனை எந்த அஸ்த்ரமும் கொல்லாதென ஓர் அசரீரி கூறிற்று. அதைக் கேட்ட பரசுராமர் ஓர் ஸன்யாஸி வேடம் பூண்டு மத்ஸ்யனை அணுகிக் கவசத்தை யாசித்து வாங்கிச் சென்றார். அப்பொழுதும் அரசனைக் கொல்ல முடியவில்லை. முனிவர் கோபங்கொண்டு பாசுபதாஸ்த்ரத்தை எடுத்தார். அதன் உக்ர தேஜஸால் பதினான்கு லோகமும் பற்றி எரிவதுபோலிருந்தது. உடனே விஷ்ணு ஓர் கிழ பிராமண வடிவந்தாங்கி அவர் எதிரே தோன்றி அந்த அஸ்த்ரத்தை நிறுத்தும்படிக் கூறினர், மஹாலக்ஷ்மி கவசம் மன்னனிட மிருப்பதால் அதைத் தான் வாங்கிச் சென்றபின் அவனைச் சுலபமாக வெல்லலா மென்றார்.

ஏழு நாள் கடும்போர் செய்து முடிவில் பிரும்மாஸ்த்ரத்தால் அவனைக் கொன்று வெற்றிபெற்றார். கார்த்தவீர்யன் இரண்டு லக்ஷம் அக்ஷௌஹிணீ ஸேனையுடன் யுத்தத்திற்கு வந்தான். சிவனளித்த அஸ்த்ரங்களால் அவ்வளவு ஸேனையையும் அழித்தார். மன்னனுக்கும் முனிவருக்கும் கடும்போர் நிகழ்ந்தது. தத்தாத்ரேயரளித்த சரத்தால் முனிவரை அரசன் தாக்கினன். பரசுராமன் பிணம்போல் பூமியில் விழுந்தார். ஸகல தேவர்களும் ஹாஹா ! என்று கதறினர். உடனே சிவன் அங்குவந்து பக்தனை எழுப்பினர். தத்தரும் தன் சீடனைக் காக்க ரணக்களத்திற்கு வந்தார். சிவன் பிராம்மண வேடம்பூண்டு தத்தர் தந்த கவசத்தை அரசனிடமிருந்து வாங்கிச் சென்றார். கார்த்தவீர்யன் தான் தோல்வி யடைவது நிச்சயமென் றெண்ணி கிருஷ்ணனைத் துதித்தான். பாசுபதத்தால் பரசுராமன் பார்த்திவனைக் கொன்றார். இங்ஙனமே இருபத்தோரு தலைமுறை க்ஷத்ரியர்களை நாசம் செய்தார். பிரும்மா அவரிடம் வந்து உனது சபதம் நிறைவேறிற்று. இனி வீணாக க்ஷத்ரியர்களைக் கொல்லாதே. சிவனே உன் குரு ஆவர். ஸாமான்ய குருவையே தைவமாகக்கருதவேண்டும். நீ உன் குரு சொற்படி சாந்தி பெற்று ஞானத்தைத் தேடு எனக் கூறிச் சென்றார்.

## பரசுராம கணேச யுத்தம்.

பரசுராமன் போரைவிட்டுக் கைலாஸம் சென்றார். பக்தி பரவசமானார். கைலாஸ நாதனிடஞ் சென்றார். வாசற்படியிலிருந்த விநாயகர், இவரைச் சற்று நில். உத்தரவுபெற்று வருகிறேன் என்றார். குரு அருளால் கார்த்த வீர்யனை வென்றேன். இருபத்தோரு முறை க்ஷத்ரியர்களைக் கொன்றேன். இவ்வத்புத செயலை என் குருநாதனுக்கறிவித்து அவரை வணங்கி வருகிறேன். வழியை மறிக்காதே! என முனிவருரைத்தார். ராம! ஏகாந்தத்திலுள்ள தம்பதிகளைப் பார்ப்பதும், ரஸபங்கம் செய்வதும் பாபம்! இப் பாபத்தைச் செய்வோர் ஏழு தலைமுறை மனைவியை விட்டுப் பிரிவர். பரஸ்த்ரீகளைக் காமக் கண்ணால் காண்போர் குருடராவர். ஆதலின் உள்ளே செல்லாதே! சற்று நில்! என்று கணபதி கூறினார். உலக மனைத்திற்கும் தந்தை தாயான ஸ்ரீ பார்வதீபரமேச்வரர்கள் எங்கு இருக்கின்றனர்? எங்கு இல்லை? பாலருந்தும் குழந்தை போன்ற என்னைப் பார்த்தோ என் அன்னை வெட்கம் கொள்ளுவள்? கணபதி! நீ கூறுவது மிக விந்தை! என்று கூறிக்கொண்டே ராமர் உள்ளே செல்ல ஆரம்பித்தார். உடலெடுத்த ஒவ்வொருவருக்கும் மானம் வெட்கம் முதலியன உண்டல்லவா? என்று கூறி விநாயகர் ராமரைத் தடுத்தார். கோபங்கொண்ட முனிவர், பரசுவால் கணநாதனைத் தாக்கினார். இதுதான் குருபக்தியோ? குருவைப்போல் அவன் மகனையுங் கருதவேண்டுவது முறையன்றோ? என்று சுப்ரமண்யன் கூறுவதை அவர் காதில் ஏற்கவில்லை. கீழே விழுந்த விநாயகர் மறுபடியும் எழுந்து முனிவரைக் கொஞ்ச நேரம் காத்திரு என்றார். இதை எள்ளளவும் மதியாது மறுமுறையும் முனி பரசுவை ஏவினார். விநாயகர் மிகப் பெரிய உரு எடுத்துத் துதிக்கையால் ராமனைத் தூக்கிக் கோலோகத்தில் கொண்டு தள்ளினார். அங்கு அவர் ஸ்ரீ கிருஷ்ணனைத் தர்சித்துத் தனது பாபங்களை நீக்கிக்கொண்டார். அங்கிருந்தும் மற்றோர் முறை பதினான்கு உலகங்களையும்சுற்றி ராமனைக் கணபதி பாரினில் தள்ளினார். முனிவர் மூர்ச்சை தெளிந் தெழுந்தார். தனது நிலையை நினைந்து வருந்தினார். கோலோக தர்சனத்தால் மகிழ்ந்தார். சிவனைப் பணிந்து பரசுவை விநாயகரின்

மேல் விட்டார். அவரும் தந்தைக்குக் கௌரவமளிக்க இடது தந்தத்தை அதற்குப் பலியாகக் கொடுத்தார்.

அச்சமயம் ஸகல உலகும் நடுங்கிற்று. எங்கும் ஹா! ஹா! என்ற சப்தம் எழும்பியது. உமை நாதனுடன் எழுந்து வெளியில் வந்தாள். ரத்தப் பெருக்குடன் ஒரு தந்தமில்லா திருக்கும் கணபதியைக் கண்டு பயந்து குஹனை நோக்கி என்ன விபரீதம்? யார்செய்த தீங்கென வினவினுள். அவர் நடந்ததைக் கூறினுர். பரசுராமன் சம்புவின் சரணத்தில் பணிந்தார். அவனைக் கண்டு அன்னைக்கு அடங்காச் சின முண்டாயிற்று. பரசுராம! நற்குலத்தில் பிறந்தாய்! சிவன் தந்த பரசுவைக் கொண்டே குரு புத்ரனை அடித்தாய்! இஃதுதான் குருதக்ஷிணையோ? என்று கூறி பரசுராமனைக் கொல்ல ஆரம்பித்தாள். யாது செய்வதென் றறியாமல் சிவனும் திகைத்து நின்ருர். திடீரென ஓர் அற்புத வடிவம் வாய்ந்த அந்தணச் சிறுவன் அங்கு தோன்றினுன். மஹேசன் தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்? என்ருர். தான் ச்வேதத்வீபத்திலிருந்து ராமனைக் காக்க வந்ததாகவும் கிருஷ்ண பக்தனுனலும் குருத்ரோஹியை மாத்ரம் தன்னுல் காக்க முடியாதென்றும் உரைத்தார். உமையே! உன் மகனைப் போன்றவன் பரசுராமன். அவனுல் விநாயகனது தந்தத்தை அகற்ற இயலாது. கணேசனுக்கு ஏகதந்தன் என வேதத்தில் அனுதியாகப் பெயர் வழங்குகிறது. ஆதலால் இங்ஙனம் நேர்ந்தது என்று கூறினுர். பரசுராமனைப் பார்த்து, நீ செய்தது பெருந்தவறு. அம்பிகை கோபம் கொண்டால் உன்னைக் காக்க எவராலும் இயலாது! என்று கூறி மறைந்தார். அவர் மாதவன் என்றுணர்ந்து பரசுராமன் அன்னையினடி பணிந்து தவறை மன்னித் தருளும்படி வேண்டினுன். தேவியின் கோபமகன்றது. பரசுராமன் விநாயகரை வணங்கிச் சிவனைப் பூஜித்துப் பூமிக்குச் சென்ருன்.

## கணேச துளஸீ விரதம்.

பிரும்ம கல்பத்தில் துளஸீதேவி கிருஷ்ணனைப் பதியாகக் கோரி ஒவ்வொரு தீர்த்தமாகச் சென்ருள். கங்கா தீரத்தில் கண்மூடித் தவம்புரியும் கணேசரைக் கண்டாள். அவர் கிருஷ்ணனுடைய அம்சமாதலால் அவரது அழகைக் கண்டு துளஸீ மோஹித்தாள். தன்னை மணக்கும்படி

வேண்டினுள். விநாயகர் எதிரிலுள்ள துளஸியை நீ யார்? என்றார். அவள் தான் தர்மாத்மனது பெண்ணுன துளஸீ என்றும் தன்னை மணக்க வேண்டுமென்றும் பிரார்த்தித்தாள். விவாஹ மென்பது பந்தத்தை அளிக்கும். அதை விட்டு மோக்ஷ தர்மத்திலீடுபட்டேன். விவாஹம் வேண்டேன் என்றார். இதைக் கேட்டுக் கோபங்கொண்ட துளஸீ உமக்குத் துஷ்டையான ஸ்த்ரீ மனைவியாக வருவாள் என்று சபித்தாள். கணேசர் அவளைப்பார்த்து நீ நிஷ்காரணமாக என்னைச் சபித்ததால் ராக்ஷஸனுக்கு மனைவியாகி செடியாகவும் ஆவாய் என்றார். துளஸீ அவரைப் பணிந்து துதிக்க அவர் அந்த ராக்ஷஸனும் ஓர் இடையனுயிருப்பான். பின்னர் நீ பரமனையே பதியாக அடைவாய். செடியாயினும் பகவானுக்குப் பிரியமாவாய். நான் உன்னை விரும்பாததால் துளஸியைக் கொண்டு என்னை எவரும் பூஜிக்கலாகாது என்றார்.

கணேச கண்டம் முற்றிற்று.

---

# ஸ்ரீ கிருஷ்ண ஜன்ம கண்டம்.

## ஸ்ரீ கிருஷ்ணுவதார அவதாரிகை.

---

### கோலோகம்.

பூ தேவி தனது பாரத்தை அகற்றித் தன்னை ரக்ஷிக்கும்படிப் பிரும்மாவினிடஞ் சென்று வேண்டினுள். சதுர்முகன் ஸகல தேவர்களையும் பூமியுடன் அழைத்துக் கொண்டு கோலோகம் சென்றார்.

கோலோகமென்பது பகவானது மாயையால் படைக்கப்பட்ட அழகிய பல பட்டணம் நிறைந்த இடம். அங்கு பிறப்புஇறப்பும் சோக மோஹமும்கிடையாது. விலையில்லாத மாணிக்க மரகதங்களால் அங்கு வீடுகளமைக்கப்பட்டிருக்கின்றன. கேட்டதை அளிக்கும் கல்ப விருக்ஷம் நிறைந்த இடம். கோடி யோஜனை தூரம் விசாலமான இடம். ரத்ந மண்டபம் அமைந்த இடம். அழகிய கோபிகைகளும் கோபர்களும் சூழ்ந்த இடம். எக்காலத்தும் எல்லா புஷ்பமும் பூக்குமிடம். பல்லாயிரமாண்டு தவம்

செய்யும் பக்தர்கள் அடையத்தக்க இடம். காமக்ரோதம் உள்ளோர் கண்ணாலும் காணமுடியாத இடம். ஸ்வதர்மா சாரத்தைக் கைவிடாதவர் செல்லுமிடம். கோடிக் கணக்கான கோக்கள் மேயுமிடம். பல்லாயிரம் பார்ஷதர்கள் சூழ்ந்த இடம். அதன்கீழே நவரத்நகசிதமான ராஸமண்டபம் உள்ளது. அதனிடையே ஓர் அழகிய ஆலமரமுளது. ஆங்கு தனித்தனியாக ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் ஸ்ரீ ராதைக்கும் ஆச்ரமங்கள் உண்டு. ஆங்கு பல்கோடிப் பிறவியில் செய்த புண்யத்தால் சிலர் பகவானுக்குத் தொண்டு செய்யும் பாக்யத்தைப் பெற்றிருக்கின்றனர். கங்கை முதலிய புண்ய நதிகளெல்லாம் தேவதா சரீரம் பெற்றுப் பகவானைத் தொழுகிறார்கள்.

அங்கு தேவர்களைக் காவலாளி உள்ளே அனுப்பினான். பதினாறு வாயிற்படிகளைக் கடந்தனர். ஆங்கு பாடும் பக்தி நிறைந்த பாட்டுகளைக்கேட்டுப் பரவசமானார்கள். ரத்ந ஸிம்மாஸநத்திலே ராதாதேவியுடன் தேஜோ ராசியாக விளங்கும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தர்சித்தார்கள். அவரது புன்னகையும் அருள்சுரக்கும் கடைக் கண்ணும் தேவர்களை ஆநந்தக் கடலில் அமிழ்த்தியது. எல்லோரும் பரமனைப் பணிந்து துதித்தனர். பகவான் அமரருக்கு நல்வரவு கூறிக் குசலங் கேட்டார். அவர்களை - அஞ்சாது இருப்பிடம் செல்லுங்கள் ! ராதை கோகுலத்தில் கோபஸ்த்ரீயாகப் பிறக்கப் போகிறாள். இங்குள்ள கோபர்களும் கோபிகைகளும் அவனியில் அவதரிக்கப் போகின்றனர். யானுமவதரித்துப் பூமியின் குறையை அகற்றுகிறேன் என்றார்.

இதனிடையே வைகுண்ட வாஸியான ஸ்ரீமந் நாராயணமூர்த்தி கிருஷ்ணனைப் பணிந்து கிருஷ்ண விக்ரஹத்தில் லயமாகிவிட்டார். விண்ணவரனைவரும் வியந்துநின்றனர். மற்றொரு விஷ்ணுவும் வந்து கிருஷ்ணனிடம் லயமானார். அங்ஙனமே நரநாராயணர்களும் லயமானார்கள். கிருஷ்ணனது அம்சத்தால் ஜனித்த ஸங்கர்ஷணன் ப்ரத்யும்நன் முதலியவர்களும் லயமானார்கள். பின்னர் ஒவ்வொருவராக எழுந்து வந்து பகவானைப் பணிந்து நின்றனர். பகவான் ராதையை விருஷபாநு கிருஹத்திலும், லக்ஷ்மியைப் பீஷ்மகன் மனையிலும் பார்வதியை நந்தன் இல்லத்திலும்,

ஸுப்ரமண்யனை ஜாம்பவதியினிடமும், மற்ற தேவர்களைக் கோப கிருஹத்திலும் அவதரிக்கும்படி கட்டளை யிட்டார்.

காமன் ருக்கிணீ புதல்வனாகவும், ரதி சம்பரனது கிருஹத்தில் மாயாவதியாகவும், பிரும்மா அநிருத்தனாக வும், ஸரஸ்வதி உஷையாகவும், பூமி ஸத்யபாமையாக வும், துர்க்கையின் அம்சம் ஜாம்பவதியாகவும் பிறக்கட்டு மென்றார். தர்மன் வாயு இந்த்ரன் அச்விநீ தேவர் ஆகிய வர்கள் பாண்டவர்களாக வரட்டும். ஸூர்ய வம்சத்தால் கர்ணனாகவும் கலி துர்யோதநனாகவும் வருவர். சிவாம்சத் தால் அச்வத்தாமாவும், சந்த்ராம்சத்தால் அபிமன்யுவும் உண்டாகட்டும். கச்யபரும் அதிதியும் வஸுதேவ தேவகி களாகவும், வஸுவும் அவர் பத்நியும் நந்த யசோதை களாவும் அவதரிக்கட்டும் என்று பகவான் கட்டளை இட்டார்.

## ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்.

கச்யபர் வஸுதேவராக பிறந்தவுடன் ஆகாயத்தில் துந்துபி வாத்யம் முழங்கிற்று. ஆதலின் அவருக்கு ஆநக துந்துபி எனக் காரணப் பெயர் வழங்கிற்று. அவர் தேவகி எனும் பெண்ணை மணந்தார். வஸுதேவருடன் தேவகி புகுந்த வீடு செல்லும்போது அவள் ஸஹோதர னை கம்ஸன் அவர்களைத் தேரில் அமர்த்தித் தானே ஸாரத்யம் செய்தான். தேவகியின் எட்டாவது குழந்தை உன்னைக் கொல்லப்போகிறதெனக் கம்ஸனை நோக்கி ஓர் ஆகாசவாணி கூறிற்று. உடனே அவன் தேவகியைக் கொல்ல முயன்றான். வஸுதேவன் அவளுக்குப் பிறக்கும் புதல்வர்களை அவனிடம் அளிப்பதாகக் கூறித் தேவகியை மீட்டான். சொன்னபடியே பிறந்தவுடன் ஆறு குழந்தை களையும் வஸுதேவன் கம்ஸனிட மளித்தான். கொஞ்ச மும் கருணையில்லாமல் சிசுக்களை அவன் கொன்றான். ஏழாங் கருவைப் பகவானது மாயை வஸுதேவனது மற் றோர் மனைவியான ரோஹிணியினிடம் கொண்டு வைத் தது. அங்கு பலராமன் ஜனித்தான்.

தேவகி எட்டாவது கர்ப்பமானபோது பத்துமாதம் வரை வாயுவினால் கர்ப்பம் வளர்ந்து பூர்ணமானது. தேவர்கள் தேவகியினருகே வந்து துதித்தனர். கிருஷ்ண

பக்ஷம் அஷ்டமியில் ரோஹிணீ நக்ஷத்திரத்தில் ஜயந்தி யோகத்தில் தேவகியின் வயிற்றிலிருந்து காற்று வெளிக் கிளம்பியது. அவளது ஹிருதய கமலத்திலிருந்து பகவான் இரண்டு கைகளுடன் வேணுவைக் கையிலேந்தித் தோன்றினார். தன்னை மறந்து தேவகியும் வஸுதேவரும் துதித்தனர். பகவான் அவர்கள் கோரியபடி தானே புத்ரனைதாக உரைத்தார். உடனே சிசுவானார். கம்ஸனுக்குப் பல அபசகுநங்களும் துஸ்வப்நமும் உண்டாயின. காவலாளிகள் கண்ணனது மாயையால் படுத்துறங்கினர். வஸுதேவன் ஸ்ரீ பகவானை யசோதையின் அருகே விட்டுவிட்டு ஆங்குள்ள கன்னிகையைக் கொண்டு வந்தான். இப்பெண் குழந்தை உரக்க அழுதது. காவலாளிகள் விழித்தெழுந்து குழந்தையைக் கம்ஸனிடம் தந்தனர். கம்ஸன் அச்சிசுவைக் கொல்ல ஆரம்பித்தான். அச்சமயம், கம்ஸ! உனது சத்ரு வேறிடத்திலிருக்கிறான் என்று ஓர் அசரீரி வாக்குத் தோன்றிற்று. அவன் அக் குழந்தையைக் கொல்லாமல் பெற்றோரிட மளித்தான். அவர்கள் ஜாதகர்மம் முதலியவைகளைச் செய்து ஏகாநம்சா என்று பெயரிட்டு ருக்மிணீ கல்யாண காலத்தில் அவளைத் தூர்வாஸருக் களித்தனர்.

## ஜன்மாஷ்டமீ விருதம்.

கிருஷ்ணனவதரித்த திநம் அஷ்டமீ ஆதலின் அன்று உபவாஸமிருந்து பகவானை முக்யமாகவும், வஸுதேவன், தேவகி, ரோஹிணி, பலதேவர், அச்வத்தாமா, பலீ, ஹநுமான், விபீஷணன், கிருபர், பரசுராமர், வியாஸர், மார்க்கண்டேயர் முதலியவர்களைக் கலசத்தில் ஆவாஹநம் செய்தும் கோபிகைகள் ராதை, கணேசன், கார்த்திகேயன் முதலியவர்களையும் பூஜிக்கவேண்டும். இங்ஙனம் விருதமநுஷ்டிப்பவரது ஏழு ஜன்மங்களில் செய்தபாபமகலும். பிரும்மஹத்தி முதலிய ஸகலபாபங்களையும் அகற்றி வைகுண்டத்தை அளிக்கவல்லதிது. அந்த அஷ்டமியில் அன்னமுண்போர் ஸகல பாபங்களையும் செய்தவராவர். பின்னர் ஏழு பிறவிகளில் துஷ்ட மிருகமாகப் பிறப்பர்.

## நந்தனது முற்பிறவி.

நந்தன் முற்பிறவியில் அஷ்ட வஸுக்களில் த்ரோணனென்ற வஸு. அவன் மனைவி தாரா. த்ரோணர் மனைவி

யுடன் கந்தமாதன மலைச்சாரலில் கௌதமாச்ரமத்திற் கருகே கிருஷ்ணனைத் தர்சிக்கத் தவம் செய்தார். பதிறுயிர மாண்டுகள் கடுந்தவம் புரிந்தும் கண்ணனைக் காணுது வருந்தினர். அக்நியில் விழக் கருதினர். மறு பிறப்பிலே கோகுலத்திலே கண்ணன் உங்கள் குழந்தையாக வருவான் என்று ஓர் அசரீரியான வாக்கு தோன்றிற்று. அந்த வஸு நந்தனுகப் பிறந்து கிருஷ்ண லீலையை அனுபவித்தார்.

ஒரு ஸமயம் அதிதி, தன்னிடம் வந்து ஒரு தநயனை அளிக்கும்படி கச்யபருக்குத் தூதனை அனுப்பினுள். அச்சமயம் அவர் கத்ருவுடனிருந்ததால் இதைக் கவனிக்கவில்லை. அதிதி சினங்கொண்டு, கத்ருவை மானிடப் பெண்ணுகும்படிச் சபித்தாள். கத்ரு அதிதியையும் மாநிலத்தில் பிறக்கும்படிச் சபித்தாள். கச்யபர் கத்ருவை ஸமாதாநப்படுத்தி நானும் மனிதனுகப் பிறந்து உங்களிருவரையும் மணந்து ஸ்ரீ விஷ்ணுவைப் புதல்வனுகப் பெற்றுக் களிப்பேன் என்ருர். அதிதி கோரியபடி இந்திரன் எனும் அரிய புத்ரனை அருள்புரிந்தார். கச்யபர் வாஸுதேவனுகத் தோன்றி தேவகியான அதிதியையும் ரோஹிணியான கத்ருவையும் மணந்தார். கம்ஸனிடம்பயந்து ரோஹிணியை நந்தனிடமனுப்பினுர். தேவகியின் ஏழாவது கர்ப்பம் ரோஹிணியிடம் சென்று ஏற்கனவே பலராமனுகப் பிறந்திருந்தது.

யசோதை நள்ளிரவில் பகவானது மாயையால் தனக்குப் பெண் பிறந்ததை அறியவில்லை. கண்ணன் குழந்தை போல் அழ ஆரம்பித்ததும் விழித்து கண்ணனைக் கண்டனர். எல்லோரும் பேரானந்த மடைந்தனர். இச் சுப செய்தி கேட்ட நந்தன் மட்டில்லா மகிழ்ச்சிபெற்று பிராம்மணரை அழைத்து அபரிமிதமாகத் தாநம் செய்தான். ரோஹிணியும் தன் குழந்தையையுமங்கு கொண்டுவிட்டு இருவரையும் அன்புடன் வளர்த்துவந்தாள்.

## பூதனையின் முற்பிறப்பும் மோக்ஷமும்.

கம்ஸன் தன் சத்ரு யார்? எங்கிருக்கிருன்? என்று சிந்தித்துக்கொண்டிருந்தான். அசரீரிவாக்கு கிருஷ்ணனது பிறப்பை நடந்தபடி கூறிற்று. உடனே அவன் பூதனையை

அழைத்தான் நீ **கோபிகை** ரூபங்கொண்டு கோகுலத்தில் வளரும் கிருஷ்ணனுக்குப் பாலுடன் விஷத்தை அளித்து அவனைக்கொன்று வா என்றான். அவளும் அங்ஙனமே பாலளிக்கும்போது, பகவான் பாலுடன் அவள் உயிரையும் பருகினார். உடனே விமானம் வந்து பூதனையை அழைத்துச் சென்றது. பூதனை, முற்பிறவியில் பலிசக்ரவர்த்தியின் புத்ரி ரத்நாவளி. வாமனராக வந்த பகவானைப் பார்த்து இக் குழந்தையை மடிமீது வைத்துப் பாலளிக்கும் பாக்யம் எனக்குக் கிட்டுமோ? என வேண்டினாள். இப் பிறவியில் அதைப் பூர்த்தி செய்து பக்திக் கேற்றபடி வைகுண்டத்தையும் அளித்தார்.

## திருணாவர்த்தன் முற்பிறவியும் மோக்ஷமும்.

பாண்டியதேசத்திலே ஸஹஸ்ராக்ஷன் என்றோர் அரசனிருந்தான். யோகசக்தியால் பல உருவம் எடுக்கும் சக்தி பெற்றவனவன், உத்யானத்தில் அவ்வரசன் ஆயிரம் உருவெடுத்து ஆயிரம் பெண்களுடன் கூடி சிற்றின்பத்தை அனுபவித்தான். அங்கு தற்செயலாக லக்ஷம் சிஷ்யர்களுடன் தூர்வாஸமுனி வழிவசமாக வந்தார். அரசன் அலக்ஷியமாக இருந்துவிட்டான். அவன் இடுப்பில் வஸ்த்ரமு மில்லை. முனிவர் அவனை அரக்கனாகும்படிச் சபித்தார். அரசன் தனது குற்றத்தை க்ஷமிக்கும்படி வேண்டினான். ஸ்ரீ கிருஷ்ணனது சரணசேவையால் மோக்ஷமடைவாய் என்றருள் புரிந்து சென்றார். பகவானால் கொல்லப்பட்டு அவனுங் கோலோகஞ் சென்றான். ஒரு ஸமயம் சகடனைக் கொன்றார். குல குருவான கர்க்காசார்யர் பகவானுக்கு ஜாதகர்மம் செய்து கிருஷ்ணன் என்று நாமகரணம் செய்தார். அச்சமயம் யசோதையின் தந்தையான விருஷபானு, பத்மாவதி எனும் தன் மனைவியுடனங்கு வந்து பேரனுக்குப் பல சீர்களைச் செய்தார். குபேரன் ஒரு முகூர்த்தகாலம் ஸ்வர்ண வர்ஷம் வர்ஷித்தான்.

## நளகூபர ரம்பா மோக்ஷம்.

குபேரனது புதல்வனான நளகூபரன் நந்தவனத்தில் ரம்பையுடன் கூடி ரமித்துவந்தான். அருகில் வந்த தேவலக முனிவரை வரவேற்கவில்லை. அவரெதிரில் வஸ்த்ரமும்

இல்லாமல் நிற்குமிவர்களைத் தேவலகர் சபித்தார். நளகூபரன் யசோதையின் தோட்டத்திலுள்ள மரமானான். பகவானது ஸ்பர்சத்தால் அவன் சாபமகன்றது. ரம்பையை மாநுஷியாகும்படிச் சபித்தார். அவள் ஸுசந்த்ரகன் எனும் ராஜனுக்குப் பெண்ணாகப் பிறந்து ஜனமேஜய அரசனை மணந்தாள். அச்வமேதாதி யாகங்களைச்செய்து ஸுவர்க்கம் சென்றாள்.

## ஸ்ரீ ராதா விவாஹம்.

நந்தன் தனது செல்வக் குமாரனுடன் பிருந்தாவனஞ் சென்றார். அது ஸமயம் கிருஷ்ணன் தன் பிரிவைத் தாளாமல் தவிக்கும் ராதைக்கு அருள்புரியக் கருதினார். இருள் சூழ்ந்த கானகத்தே மழையும் காற்றும் இடியும் மின்னலும் பயத்தை உண்டுபண்ணிற்று. ஆஹா! என்செய்வேன்? எங்ஙனம் குழந்தையை மழையில் அடிபடாமல் காப்பேன்? எனச் சிந்தித்தான். சிசு மிகப்பயந்ததுபோல கண்ணைமூடி அப்பா! அப்பா! என அலறி அழ, இருளுடன் நந்தனது அக்ஞானத்தையும் அகற்ற ராதாதேவி வந்தாள். நந்தன் மெய்மறந்து அவளடி பணிந்து அன்னையே! உன்னை இன்னாரென இப்போதே அறிந்தேன்! உமக்குரிய உலகநாதனை உம்மிட மளித்தேன். உங்களது பாதகமலம் என் உள்ளத்தை விட்டகலாமலிருக்க வரந்தந்தருள்வாய் என வேண்டினான். அன்னை அவனை ஆசீர்வதித்து அச்யுதனை இடுப்பிலே வைத்துச் சென்றாள்.

அங்கு ஓர் அற்புதமான மண்டபம் தோன்றிற்று. தம்பதிகளது சிருங்காரத்திற்கேற்க பல அரிய பொருள்கள் நிறைந்திருந்தன. ராதையின் இடுப்பிலிருந்த குழந்தை மன்மதனைக் காணப்பட்டான். அவரைக்கண்டு ராதை தலை குனிந்து நாணி நின்றாள். பகவான் அவளருகே சென்று தேவி! உனது விருப்பத்தின்படி பாரினிலும் உனக்குப் பர்த்தாவாக வந்தேன் என்று கூறி அவளை ஆலிங்கனம் செய்துகொண்டார். பிரும்மா விதிப்படி அக்நியை வளர்த்து ஸ்ரீ ராதா கிருஷ்ணர்களுக்கு விவாஹம் செய்வித்தார். தேவ துந்துபி முழங்க கந்தர்வர் கானம் செய்ய அப்ஸரஸுகள் ஆட பாணிக்ரஹண மஹோத்ஸவத்தை முடித்துப் பத்மாஸனன் விடைபெற்றுச்சென்றான்.

ராதை ரத்நக்கட்டிலில் பகவானை உட்கார வைத்துப் பக்தியுடன் சிறிதுநேரம் பாடினாள். சிறிது நேரம் பணிந்து போற்றினாள். சாமரமெடுத்து வீசினாள். விசிறிகொண்டு விசிறினாள். கண்ணாடியைக் கண்ணன் கண்முன் வைத்துத் தானுமதனருகே சற்று நின்றாள். முரளியை அளித்து முகுந்தனைப் பாடும்படிக் கேட்டாள். வாஸனைத் தாம்பூலத்தை மடித்துக் கொடுத்தாள். அவர் நெற்றியில் கஸ்தூரி பொட்டிட்டு மகிழ்ந்தாள். ஆபரணங்களைச் சூட்டினாள். தலையை வாரிப் பூச் சூட்டினாள். முன்னே நின்று முன்னழகைப் பார்த்தாள். பின்னேவந்து பின்னழகைப் பார்த்தாள். இறுகக் கட்டி முத்தமிட்டாள். இரவெல்லாம் அலங்கரித்து அவரழகைப் பார்த்துப் பார்த்து நின்றாள். பொழுது விடிந்தது. பகவான் சிறுகுழந்தையாகி அம்மா! அம்மா! என்றழுதான். ஆஹா இ.:தென்ன கொடுமை? என்னை விட்டு இங்ஙனம் குழந்தையாகி விட்டாரே! என் செய்வேன்? என ராதை மூர்ச்சித்தாள். பின்னர் எழுந்து சிசுவினருகே வந்து கண்ணீர் வடித்தாள். ராதே! ராஸ மண்டபத்தில் ராத்திரி காலத்திலே ஒவ்வொரு நாளும் அவரைக் காண்பாய். பகலில் அவர் பாலகனுவார் என ஓர் அசரீரி கூறிற்று. அச் சிசுவை யசோதையிடம் ஒப்புவித்தாள்.

## பக கேசி பிரலம்பரது முற்பிறப்பும் முக்தியும்.

கிருஷ்ணன் கோபர்களுடன் மாடுமேய்த்துக்கொண்டு மதுவனஞ்சென்றான். ஆங்கு ஓர் பயங்கரமான கொக்கு தனது நீண்ட அலகுகளை நீட்டி கிருஷ்ணனை விழுங்கிற்று. எல்லோரும் கிருஷ்ணா! கிருஷ்ணா! என்றுகதறினர். தேவர் அக்கொடிய கொக்கைக் கொல்ல தத்தம் அஸ்த்ரங்களைப் பிரயோகித்தனர். அது இறக்கவில்லை. இந்த்ரனது வஜ்ராயுதம் அதன் ஓர் இறக்கையையே கொளுத்திற்று. கிருஷ்ணன், தனது தேஜஸ்ஸால் கொக்கை எரித்து வெளியில் வந்தார். எல்லோரு மிதைக் கண்டு வியந்தனர். **ப்ரலம்பாஸுரன்** மாடுவேடம் பூண்டும், **கேசி** குதிரை ரூபமெடுத்தும் பகவானைக் கொல்லவந்து பகவானல் கொல்லப்பட்டனர். இவர்கள் இறந்தவுடன் திவ்ய தேஹம் பெற்றுக் கோலோகஞ் சென்றனர்

கந்தவஹன் என்ற கர்தர்வனுக்கு நான்கு புதல்வர் உண்டாயினர். மூத்தவனை வஸுதேவன் துறவியாகி பரமபத மெய்தினன். ஸுஹோத்ரன், ஸுபார்ச்வன், ஸுதர்சகன் என்ற மூவரும் பக்தியிலீடுபட்டனர். அன்றன்றும் அவர்கள் மலரெடுத்துத் திருமாலை அர்ச்சிப்பர். ஒரு நாள் சித்ர ஸரோவரமெனும் தீர்த்தத்திலிறங்கிப் புஷ்பம் பறித்தனர். ஆங்குள்ள காவலாளிகள் இவர்களைப் பிடித்துக்கொண்டுபோய் பரமசிவத்தி னெதிரே நிறுத்தினர். இவர்கள் தாங்கள் யார் ? எதற்காக புஷ்பம் எடுத்தனர்? என்பதைக் கூறி, ஹரியும் ஹரனும் ஒன்றே என்று அம் மலரால் அரனை அர்ச்சித்தனர். மாதேவ னுரைத்தார் : பக்தர்காள் ! பார்வதி தேவி த்ரைமாஸிக விருத மொன்றைச் செய்கிறாள். அதன் பொருட்டு மலரை எவரும் எடுக்காவண்ணம் இதைப் பறிப்போர் அரக்க ராவார் எனச் சாபமிட்டேன். அன்றன்றும் ஆயிரம் மலர் அச்யுதனுக்கு அளிப்பது நமது வழக்கம். நீங்கள் இன்று எனக்கே அர்ப்பணம் செய்தீர்கள். இதைக்கண்டு யான் களித்தாலும் என் சாபம் உங்களை விடாது. மூவரும் அரக்கர்களாகி ஆயர்பாடியில் கண்ணனுக்கு விரோதம் செய்து இறந்து கோலோகஞ் செல்லுங்கள் என்றார்.

## திரைமாஸிக விருதம்.

சித்திரை மாதத்தில் ஆரம்பித்து ஆடியில் முடிக்க வேண்டிய விருதமிது. இதைப் பெண்மக்களே அனுஷ்டிக்க வேண்டும். இதனால் புருஷன் நீண்ட ஆயுளையும் ஸகல பாக்கியத்தையும் பெறுவான். இதில் ராதா கிருஷ்ணனே தெய்வம். அன்றன்று விதிப்படி பூஜைசெய்து பூர்த்தியாகும் நாளில் ஒன்பதாயிரம் தாமரை மலரால் அர்ச்சிக்க வேண்டும். ஒன்பதாயிரம் பிராம்மணர்களுக்கு அன்னமளிக்கவேண்டும். இதைப் பார்வதீதேவி நடத்தினாள். ஸநத் குமாரர் புரோஹிதராகவும், குபேரன் தக்ஷிணை அளிப்பவனாகவும், தனலக்ஷ்மி தனத்தை அளிப்பவளாகவும், அக்நி சமையல்காரனாகவும் இருந்து இதை நடத்தி வைத்தார்கள். கோகுலத்தில் ராக்ஷஸர்கள் குழந்தைக்குத் தீங்கு செய்வதைக்கண்டு பயந்து பரிவாரத்துடன் பிருந்தாவனம்சென்றான் நந்தன். பகவான் விச்வகர்மனை அழைத்து

விசித்ரமாக வீடுகளை அமைத்து நவநிதிகளும் அங்கு தங்கும்படிச் செய்தார்.

## கலாவதி.

பித்ரு தேவர்களுக்குக் கலாவதி, ரத்நமாலா, மேநகா என மூன்று கன்னிகைகள் இருந்தனர். அவர்களில் ரத்ந மாலை ஜநகனை மணந்து ஸீதா தேவியைப் பெண்ணாக அடைந்தாள். மேநகை ஹிமாலயத்தை மணந்து பார்வதியைப் பெற்றாள். மநுவம்சத்தில் பிறந்த ஸுசந்தரனுக்கு கலாவதி மாலையிட்டாள். ஆயிரமாண்டு ராஜ்ய ஸுகத்தை அனுபவித்த பின்னர் விந்திய மலையில் ஆயிரமாண்டு தவம் புரிந்தான். மனைவி அரசனுக்குத்தொண்டுபுரிந்தாள். கலாவதி, ரத்தம் சுண்டி மாம்ஸங்குறைந்து, எலும்பும் தோலுமாய் நிற்கும் கணவனைக் கண்டு கதறி அழுதாள். சதுர்முகன் வந்து வேண்டிய வரத்தை அளிப்பதாக கூறினார். கமலாஸநனை கண்ட வேந்தன் வேறு வரங்கோராமல் மோக்ஷத்தையே வேண்டினான். கலாவதி "ஐயா! பெண்களுக்குத் தெய்வம் பதியன்றோ? என்னைவிட்டு அவருக்கு நீர் எதையளித்தாலும் அது அநீதியாகும். அவருக்கு மட்டில் நீர் மோக்ஷமளித்தால் உம்மைச்சபித்து உமக்கு ஸ்த்ரீ வத பாபத்தையு மளிப்பேன்" என்றாள். சதுர்முகன் அரசனைப் பார்த்து, இப்பிறவியில் ஸ்ரீ ஜகன்மாதாவான ராதையினிடம் பக்தி உனக்கில்லாததால் மோக்ஷமளிக்க முடியாதென்றும் மறுபிறப்பில் ஸ்ரீராதையே உனக்குப் பெண்ணாகப் பிறப்பாளென்றும் அப்போது முக்திகிடைக்குமென்றும் கூறி மறைந்தார். மறுபிறப்பில் ஸுசந்த்ரன் கோகுலத்தில் விருஷபாநு என்ற பெயருடன் பிறந்தான்.

பலந்தநன் எனும் பார்த்திவன் ஓர் வேள்விசெய்ய அக்நிகுண்டத்திலிருந்து கலாவதி பெண்ணாகத் தோன்றினாள். அச்சிசுவைப் பலந்தநன் தன் மனைவியிடமளித்தான். தெய்வப் பிறப்பாகப் பிறந்த அக்குழந்தைக்குக் கலாவதி என பெயர் வை என்று அசரீரியான வாக்கு தோன்றியது. அங்ஙனமே பெயரிட்டு அருமையாகப் பெற்றோரதை வளர்த்து வந்தனர், வயது வந்ததும் நந்தன் இவளை விருஷபாநுவுச்கு அளிக்கும்படிச் செய்தான். இவ்விருவர்களுக்குப் பெண்ணாக ராதாதேவி அவதரித்தாள்.

## பிருந்தாவன சரிதம்.

கேதாரன் என்ற சக்ரவர்த்தி ஏழு த்வீபங்களையும் ஆண்டு வந்தான். அவனது பக்தியைக் கண்டு லக்ஷ்மீ தேவி தான் அவனுக்குப் பெண்ணாகப் பிறந்தாள். அந்த சக்ரவர்த்தி புத்ரனிடம் ராஜ்யத்தை அளித்துத் தபோவனஞ் சென்றான். ஜைகீஷவ்யரென்ற முனிவரைச் சரணமடைந்து அவர் கூறியபடி தவஞ்செய்தான். அவனது உடலைக்காக்க அச்யுதன் ஸுதர்சநத்தை அனுப்பினார். அது அவனைச் சுற்றிச் சுழன்றுக்கொண்டேயிருந்தது. பல நாட்சென்ற பின் அவன் உடலைவிட்டு கோலோகம் சென்றான் அவன் தவம் புரிந்த இடம் கேதாரமென்றும் அதனருகே ஓடிய நதி கேதார தீர்த்தமென்றும் பெயர் பெற்றது. அவனது மகள் பெயர் பிருந்தை. அவள் தன் அரண்மனைக்கு வந்த தூர்வாஸரை உபசரித்தாள். முனிவர் பெண்ணே! வேண்டிய வரத்தைக் கேள் என்றார். அவள் ஐயனே! யானொன்றும் வேண்டேன். என்றாள். மஹர்ஷி ஹரிமந்த்ரத்தை உபதேசித்துச் சென்றார். பிருந்தையும் மஹாமந்திரத்தைக் கூறி அறுபதினாயிரமாண்டு தவம் செய்தாள். பகவான் அவளெதிரில் தோன்றினார். அவர் உருவைக் கண்டு மயங்கி பிருந்தை தன்னை மணந்துக் கொள்ளும்படி வேண்டினாள். கிருஷ்ணனும் அங்ஙனமே அருள்புரிந்து அவளுடன் கோலோகஞ் சென்றார். பிருந்தை தவம்புரிந்து பகவானைப் பதியாக அடைந்த இடம் பிருந்தாவனம் எனப்படுகிறது. அன்றியும் துளஸி தூர்வாஸரது சாபத்தால் சங்காஸுரனுக்கு மனைவியாகி இவ்வுடலை விட்டுப் பகவானைப் பதியாக அடைந்த இடமும் இதுவே. ஆதலால் அது பிருந்தாவனமென அழைக்கப்படுகிறது. மேலும் ஸ்ரீ ராதா தேவிக்கு முக்கியமான பதினாறு நாமாக்களில் பிருந்தை என்பதொன்று. ராதை பகவானுடன் ராஸமண்டபத்தில் அங்கு கிரீடை செய்வதால் பிருந்தாவனம் என பெயர் வழங்கிற்று.

## யக்ஞபத்நிகளின் முன் சரிதம்.

இடச்சிறுவர் கண்ணனைப் பசிக்கு அன்னமளிக்கும்படி வேண்டினர். மாதவன் அவர்களை நோக்கி அருகிலுள்ள யாகசாலைக்குச் சென்று தான் கேட்பதாக அங்கு

அன்னங் கேட்கும்படியும், மாயையால் தன்னை அறியாத தீக்ஷிதர்கள் அன்னம் அளிக்காவிடில் அவர்கள் பத்நிகளைக் கேட்கும்படியும், கூறினர். பகவான் யாகபத்நிகளளித்த அன்னத்தை ஏற்று எல்லோருக்கு மளித்து அங்கு வந்த திவ்ய விமாநத்தின் மீதேற்றி அவர்களைக் கோலோகத்திற் கனுப்பினர். யாகம் நிறைவேறுவதற்கு அவர்கள் நிழலையே பெண்களாகப் படைத்து பகவான் அவைகளை யாகசாலைக்கு அனுப்பினர்.

யாக பத்நிகள் முற்பிறவியில் ஸப்தரிஷிகளின் மனைவிகளா யிருந்தனர். இவர்களது அழகைக் கண்டு அக்நி தனது ஜ்வாலையால் இவர்களைத் தீண்டினன். ஆங்கிரஸ முனிவர் அக்நியை அசுத்தமான பொருள்களையும் பக்ஷிக்கும்படிச் சபித்தார். பெண்களைப் பாரினில் பிராம்மண ஸ்த்ரீகளாகத்தோன்றும்படிச் சபித்தார். அவர்களது பிரார்த்தனைக் கிணங்கி முநிவர் ஸ்ரீகிருஷ்ணனுக்கு அன்னமளித்து கோலோகம் செல்லும்படியும் ஓரம்சத்தால் மறுபடியும் தங்களுக்கு மனைவிகளாக வரும்படியும் அருள் புரிந்தார்.

பகவான் சக்ரன் பூஜையை நிறுத்தி கோவர்த்தந பூஜை செய்யும்படி ஏற்பாடுசெய்தார். இந்திரன் கோபங் கொண்டான். ஸப்த மேகங்களுடனும் பிருந்தாவனம் வந்தான். உடனே இடி மின்னல் பெரும் மழை! காற்றடித்து மரங்களையும் குடிசைகளையும் நாசம் செய்தது. பகவான் இடதுகையால் கோவர்த்தன மலையைத்தூக்கி எல்லோரும் அங்கு தங்கும்படிச் செய்தார். இந்திரன் வஜ்ராயுதத்தை எடுக்க ஆயுதமும் அவன் கையும் மேகங்களும் அசைவற்று நின்றன. இந்திரன் கிருஷ்ணன் மஹிமையை உணர்ந்து துதித்தான். பசு கோபர் முதலிய எல்லாம் கிருஷ்ண மயமாகவே இந்திரன் கண்ணுக்குத் தோன்றின. இவ்வத்புதச் செயலைக் கண்டு நந்தனும் பகவானைத் துதித்தான். இந்திரன் அஹங்காரத்தை விட்டு விடைபெற்று வானுலகஞ் சென்ருன்.

## கந்தளீ தூர்வாஸர் விவாஹம்.

முன் கல்பத்தில் பிரும்மாவினது துடையிலிருந்து பிறந்து ஔர்வ முனிவர் அங்கு வந்தார். அவருடைய முழங்காலிலிருந்து ஓர் கன்னிகை பிறந்தாள். அவள்

பெயர் கந்தளீ. அவளுக்கு மணம்செய்து வைக்க வேண்டு மென்பது அவரது ஆசை. கந்தளீ தூர்வாஸரது தவத்தை யும் குலத்தையும் கேட்டு அவரை விட்டு மற்றவரை மணப்பதில்லை என நிர்மானித்தாள். ஆதலின் அவரையு மழைத்து; தனது மகளான கந்தளீ கடுமையாக பேசிக் கலஹம் செய்யும் துர்குண முடையவள். பல குணங்க ளிடையே இந்த ஓர் தோஷமிருப்பதால் அதைப் பொருட் படுத்தாமல் அவளை ஏற்று அருள்புரிய வேண்டுமென்றூர்.

அவர் விதிப்படி கந்தளியை மணந்தார். சிலநாட் சென்றபின் கந்தளீ கடுஞ்சொல் சொல்லிக் கலஹம் செய் தாள். ஸ்திரீ மோஹத்தால் மிகக்கோபியான தூர்வாஸ ரும் அதைப் பொறுத்திருந்தார். ஒருநாள் அளவுகடந்து அவள் கடுஞ்சொற்களால் முனிவரைத் தாக்கினுள். அவர் கடுங் கோபங்கொண்டு கந்தளியைச் சாம்பலாகும்படி சபித்தார்.

கந்தளியின் பூத உடல் அழிந்தது. ஸூக்ஷ்ம உடலு டன் அவள் ஆஹாயத்தே நின்று முனிவரை வணங்கிக் கூறினுள் நாத! தமோகுணம் மேலிட்டபோது கோபம் அஹங்காரம் முதலிய துர்குணங்கள் உண்டாகின்றன. கோபமுள்ளவன் கடுஞ்சொற்கூறுவது இயற்கையன்ரே? பிரிய மனைவியான என்னைக் கைவிட்டால் எனக்கு வேறு யார் கதி? என்றுரைத்துப் பேசாதிருந்தாள். முனிவர் அதைக் கேட்டுச் சோகத்தால் மூர்ச்சையடைந்தார். சிறிது நேரம் சென்றபின் எழுந்து அதையேநினைந்து வருந்தினுர், நாராயணன் ஓர் பிரும்மசாரி வேடம் பூண்டுவந்து தத்துவ ஞானத்தைப் புகட்டினுர். கந்தளி, கந்தளி எனும் மான் ஜாதியாக உலகில் பிறந்தாள். தூர்வாஸரும் தவம்செய்ய ஆரம்பித்தார். இதனிடையில் பெண்ணைப் பார்க்க வந்த ஔர்வர், பெண் சாம்பலானதை அறிந்து மூர்ச்சை அடை தார். தூர்வாஸர் சைத்யோபசாரஞ்செய்து அவரை எழுப்பினுர். தூர்வாஸரே! உம்மை அவள் நிந்தித்தாள் அப்பெண்ணை என்னிடம் அனுப்புவது முறையின்றி அவளை நீர் சபித்தது என்ன நியாயம்? சிறு குற்றத்திற் காகப் பெருஞ்சாபமளித்த நீர் ஓரரசனிடம் அவமானமடை வீர் என்று கூறி ஔர்வர் சென்றூர். அம்பரீஷனிடம் அவர் அவமானமடைந்தார்.

## கோபீ வஸ்த்ராபஹரண விசேஷம்.

கோபிகைகள் தங்களுக்குத் தலைவியாய் தங்களுடன் ஜலக்ரீடை செய்யும் ஸ்ரீராதையினிடம் சென்று முறையிட்டனர். அவள் எல்லோரும் கரைமீதேறி மானபங்கமில்லாமல் வஸ்த்ரத்தை அளிக்கும்படிக் கேளுங்கள் என்ருள். அங்ஙனமே பெண்கள் கேட்கப் பகவான் அஞ்ஜலி செய்து கொண்டு கேட்டால் கொடுப்பேன். உங்கள் தலைவிக்கும் கௌரிக்கும் பயப்படமாட்டேன் என்ருர். இந்த சொல்லைக் கேட்ட ராதை ஜலத்தில் பத்மாஸநம் போட்டு உட்கார்ந்து பகவானை த்யாநம் செய்து துதித்தாள். உடனே பக்தபராதிநனை கிருஷ்ணன் வஸ்த்ரம் முதலியவைகளைத் தந்து ஆநந்தத்தை அளித்துச் சென்ருன்.

## ராஸக் க்ரீடை.

ராதை முதலிய கோபிகைகள் விருதம்முடிந்து மூன்று மாதம் சென்ற பின் சித்திரை மாத சுக்ல த்ரயோதசியன்று இரவு பூர்ண சந்த்ரோதய மானபொழுது பகவான் பிருந்தா வனத்திலே ராஸ மண்டபத்திலே வேணு கானம் செய்தார். அது கோபிகைகளைப் பரவசமாக்கிற்று. வேலையையும் வீட்டையும் உறவினரையும் மறந்து ராஸ மண்டபத்திற்கு வந்து சேர்ந்தனர். கோலோகத்திலிருந்து வந்த கோடிக்கணக்கான கோபிகைகள் அங்கு வந்து சூழ்ந்தனர். பிரதானமாயுள்ள ராதை பகவானுடன் பலவகை க்ரீடைகளைச் செய்தாள். விளையாட்டாக ராதை பகவானது பீதாம்பரத்தை களைந்து வனமாலையை எடுத்து வேணுவைப் பிடுங்கி அவரை ஜலத்தில் தள்ளிஞள். பகவான் ராதையையும் ஜலத்திற் கிழுத்துச் சென்ருர். பகவான் கரை ஏறியபொழுது பீதாம்பரம் முதலிய எல்லாம் அவரிடம் காணப்பட்டன. ராதையின் உடலில் வஸ்த்ரமில்லாதிருந்ததால் வெட்கமடைந்து பகவானை வஸ்த்ரமளிக்கும்படி வேண்டிஞள். இங்ஙனம் கோடிக்கணக்கான கோபிகைகளுடன் தனித்தனி வீட்டில் தனித்தனியான உருவமெடுத்த பகவான் எண்ணிறந்த லீலைகளைச் செய்தார். பனிரண்டு வகை பிரகிருதி ஸுரதத்தையும் நான்குவகை விபரீதஸுரதத்தையுமளித்தார். ராதேசனைத் தர்சிக்க வானத்தில் மும்மூர்த்திகளும் மற்றுமுள்ளோரும்

கூடினர். பக்திரஸம் ததும்பிய அக்கிரீடைக்காக ஸநகாதி முனிவரும் வந்தனர். இங்ஙனம் ஒரு மாதம் பகவான் பிரும்மாநந்தமெனும் ராஸக்ரீடையை அதற்கென அவதரித்து வந்த கோபிகைகளுக் களித்தார்.

இப்பேராநந்தத்தைப் பெற்ற பெண்மக்கள் பகவான் தமது அழகிலீடுபட்டார் என்றெண்ணிக் கர்வம் கொண்டனர். பகவான் திடீரென ராதையுடன் மறைந்து விட்டார். கிருஷ்ணனும் ராதையும் வனத்திலும் மலைக் குகையிலும் விளையாடிக்கொண்டிருந்தனர். அங்கு ஓர் முனிவர் வந்து பகவானைப் பணிந்துத் துதித்தார். அவரது உடல் எட்டுக் கோணலாயிருக்க ராதை அதைக் கண்டு நகைத்தாள். பகவான் பரிஹாஸம் செய்யாதே என்று கூறி, அவர் சரிதத்தைக் கூறினார்.

## அஷ்டா வக்ரர் சரிதம்.

அஸிதரது புத்ரரான தேவலரது அழகையும் யோக்யதையையும் கண்ட ஸுயக்ஞராஜன் ரத்நமாலாவதி எனும் தன் பெண்ணை அவருக்கு அளித்து மணம் செய்து வைத்தார். பலகாலம் தர்மத்திலீடுபட்ட முனிவர் ஒருநாள் ஸம்ஸாரத்தில் வெறுப்புகொண்டு மனைவியினிடமும் கூருமல் வெளிக்கிளம்பினர். பர்த்தாவைக் காணுத அந்த பதிவிருதை அன்னபானுதிகளை ஏற்காது கணவனையே நினைந்து உயிரை விட்டாள். தேவலர் கந்தமாதந மலைக்குச் சென்று கண் மூடி ஆயிரமாண்டு கடுந் தவம் செய்தார். தற்செயலாக அங்கு வந்த ரம்பை தன்னை மணக்கும்படி வேண்டினுள். முனிவர் சிற்றின்பத்திலுள்ள தீமையை விளக்கி நல்லுபதேசம் செய்தார். அது அவள் செவியில் ஏறவில்லை. என்னையாவது என் சாபத்தையாவது நீர் ஏற்க வேண்டுமென ரம்பை கூற சாபத்தையே ஏற்பதாக கூறினர். ஆதலால் சினங்கொண்ட ரம்பை அவர் உடல் எட்டுக்கோணலுள்ள தாகுமென சாபமளித்தாள். அதனல் அவர் அஷ்டாவக்ரரானுர் என்று கூறி கிருஷ்ணன் அவரைத் தன்மார்போடு அணைத்துக் கொண்டார். மஹர்ஷியின் மார்பிலிருந்து விபூதி சிந்திற்று. அவர் உடலிலுள்ள மாம்ஸம் முதலியவை தபோக்னியால் நீற்று பஸ்மமாக ஆயிற்று. அவர் பகவானது எதிரில்

தனது பிராணனை விட்டார். ஸர்வேச்வரனும் அவருக்கு ஈமக் கடன்களைச் செய்து கோலோக மனுப்பினார்.

## பிரும்மனுக்கு மோஹினீ சாபம்.

ரைவத மன்வந்திரத்தில் ஸுசந்த்ரன் என்னும் அரசன் மலயத்ரோணியில் தவம் செய்தான். சதுர்முகன் அரசன் கோரியபடி விஷ்ணு பக்தியையே வரமாக அளித்தார். நடுவழியில் அவரது அழகைக்கண்டு மோஹினி மோஹங் கொண்டாள். பிரும்மா ஹரியை மனதால் நினைத்துக் காமத்திற்கு இடமளிக்காமல் ஸத்ய லோகஞ் சென்றார். மூர்ச்சையுற்றிருக்கும் மோஹினியை தற்செயலாக அங்கு வந்த ரம்பை தட்டி எழுப்பி நடந்த விஷயத்தை விசாரித்து நீ அஞ்சாதே அத்புத கானத்தோடு மன்மதனைச் சரணமடைந்து அவரெதிரே நர்த்தனம் செய். உடனே உனக்கு வச்யமாவார் என்று கூறி ரம்பை சென்றாள். மோஹினியுமங்ஙனமே ஆட, அவர் முன்போல் காமத்தை அடக்கி நர்த்தனத்தைக் கொண்டாடி தக்க ஸன்மானம் செய்தார். அதை ஏற்காது தன்னை மணக்கும்படி அவள் வேண்ட, பிரும்மா இந்திரனிடம் செல்லும்படி கூறினார். அவளதைப் பொருட்படுத்தாது காமன் ஸஹாயத்தால் அவரை வச்யபடுத்த முயன்றாள். காமன் கணை அவர் மேல் விழ பிரும்மா உனது கர்வம் சிவனிடம் பங்கமடையுமெனச் சாபமளித்து மோஹினிக்கு தத்வோபதேசம் செய்தார். அவள்அவரைப் பலாத்காரமாக ஆலிங்கனம் செய்துகொள்ள முயற்சித்தாள். அச்சமயத்தில் அத்ரி புலஸ்த்யர் முதலிய முனிவர்கள் அங்கு வந்தனர். உடனே மோஹினி வெட்கமடைந்து அவரை விட்டு விலகி நின்றாள்.

மஹர்ஷிகள் ஏகாந்தத்தில் இருக்கும் இவர்களைக் கண்டு வியந்தனர். பிரும்மா, இவள் இங்கு நர்த்தனம் செய்து அதனால்களைத்துத் தந்தையினிடம் பெண் நிற்பது போலிங்கு நிற்கிறாள். வேறொன்றுமில்லை என்றார். இதை கேட்ட மோஹினிக்கு அடங்காக் கோபமுண்டாயிற்று. பிரும்மனைப் பார்த்து மோஹினி, உமக்கு எங்கும் எக்காலத்திலும் பூஜை நடக்காது. விரைவில் உமக்குக் கர்வ பங்கமுண்டாகும் என்றாள். அன்று முதல் பிரும்மனுக்கு

எங்கும் பூஜை கிடையாது. பிரும்மா வைகுண்டஞ் சென்ருர். நாராயணன் அவரை ஸமாதானப்படுத்திக் கொண்டிருந்தார். அச்சமயம் வாசற்காப்பான் மற்ருேர் பிரும்மா வந்திருப்பதாகக் கூறினன். பகவான் அவருடன் பேசிக் கொண்டிருக்கும் பொழுது மற்ருேர் பிரும்மா வந்தார். அவர் நூறு முகத்துடன் காணப்பட்டார். அவருடன் பகவான் உரையாடும் போது ஆயிரம் முகங்கொண்ட மற்ருேர் பிரும்மா வந்தார். இங்ஙனம் பற்பல பிரும்மாக்களைக் கண்டவுடன் இவர் திகைத்து நின்ருர். தான் ஸத்ய லோகாதிபதி என்றும் மோஹினியை ஜயித்தவர் என்றும் கர்வங்கொண்டிருந்தார். இவர்களைப் பார்த்தவுடன் தன்னை விடச் சிறந்தபலர் உளர் என்ற எண்ணம் உண்டானது. தன்னைச் சிக்ஷிக்கவே பகவான் இங்குபல பிரும்மாக்களை வருவித்தார் எனஎண்ணினர். வெட்கத்துடன் தலைகுனிந்து நின்ருர். அச்சமயம் கைலாசநாதன் ஆங்கு எழுந்தருளி மிக இனிமையாகப் பாடினர். அதைக் கேட்டு எல்லோரும் ஜலமாக உருகினர்கள். அந்த ஜலமே கங்காப்ரவாஹமானது. அதில் ஸ்நாநம் செய்துகர்வத்தினலுதித்த பாபத்தை அகற்றி ஸத்யலோகம் போகும்படி விஷ்ணு பிரும்மனுக்கு உத்தரவிட்டார்.

## சிவ கர்வபங்கம்.

ராதே! பரமசிவன் எனது அம்சமே ஆவார். அவர் எல்லோருக்கும் எல்லா வரத்தையுமளிக்கும் சக்தி தனக்கிருப்பதை எண்ணிக் கர்வங்கொண்டார். அச்சமயம் விருகாஸுரன், தவம் செய்ய அவனெதிரில் தோன்றி அவன் வரங்கேளாதது கண்டு வருந்தினர். பின் என் மாயையால் அவன் கோரியபடி யார்தலையில் கையை வைத்தாலும் அவர் இறக்க வேண்டுமென்ற வரத்தை அளித்து விட்டார். அஸுரன் சிவன் தலையிலேயே கை வைக்க ஆரம்பித்தான். தனது பக்தனைக் கொல்ல மனம் இல்லாமல் பரமசிவன் பயந்ததுபோல் ஓடினர். அவரது ஆத்மஸ்வரூபமான என்னைக் கிருஷ்ணு என்றழைத்தார். நான் மாயையால் அஸுரன் புத்தியை மயக்கி அவன் தன் தலைமீதே கையை வைக்கும்படி செய்து அவனைக் கொன்றேன். அப்போது சிவனது கர்வம் அகன்றது.

## சிவ மஹிமை.

ஆநந்த ரூபியான அரனைச் சுமக்க என்னைத் தவிர வேறெவருக்கும் சக்தியில்லை. ஆதலால் நான் அவருக்கு விருஷபவாஹநமானேன். எனது மனமே பிரும்மா. எனது அறிவே மஹேசன். எனது ஸந்தோஷமே விநாயகர். ஆயினுமிவர்கள் எனது இச்சையினால் தனித் தனியாக உருவெடுத்து உலககார்யத்தைக் கவனிக்கின்றனர். உலகில் சிவனைவிடப் பிரியமான பொருள் எனக்கில்லை. அவருக்கும் என்னைவிட இன்பமான பொருள் கிடையாது. ஒருசமயம் என்னைத் தர்சிக்க சிவன் கோலோகத்திற்கு வந்தார். அச்சமயம் அழகு வாய்ந்த எனது ரூபத்தை இரண்டு கண்களால் பார்ப்பது போதாதென அவர் வருந்தினர். உடனே ஞானக்கண்ணான மூன்றும் கண்ணை அளித்தேன். ஐந்து முகங்களை அளித்தேன். ஒவ்வொரு முகத்திலும் அவருக்கு மூன்று கண்களுண்டு. யோகீச்வரர் அவர். ஆதலால் பீதாம்பரத்தை விடுத்துத் திகம்பரராகவும் யானைத்தோல் புலித்தோல்களை உடுப்பவராகவும் தோற்றுகிறார். கருடனிடம் பயந்த ஸர்ப்பங்களை ஆபரணமாக அணிந்திருக்கிறார். பாரிஜாத மலரை விட்டு ஊமத்தம் பூவையும் பில்வ பத்ரத்தையும் ஏற்கிறார். அரண்மனையைவிட்டு ச்மசாநத்தில் வஸிக்கிறார். அவரது ஆயுளையும் மஹிமையையும் நானே அறியேன். ஒரு நாள் நானளித்த பிரஸாதத்தை அவர் பார்வதிக்களிக்காமல் தானே புஜித்தார். கோபங் கொண்ட உமை சிவனுக்கு நிவேதநம் செய்ததை எவரும் பக்ஷிக்க கூடாதெனச் சபித்தாள். கோபத்துடன் தேவி பகவானது கழுத்தைப் பார்க்க அது கறுத்தது. ஆதலின் அவர் நீலகண்டரானார். அவரை விதிப்படி பூஜிப்போர் மோக்ஷம் அடைவர்.

## ஸதீ கர்வபங்கம்.

பரமசிவனது சக்தியே ஸதி. அவள் தக்ஷனுக்கு மகளாகத் தோன்றி, தக்ஷன் சிவனை அழைக்காமல் செய்த யாகத்திற்குச் சிவன் விருப்பத்திற்கு மாறாகச் சென்றாள். தக்ஷன் அவளை அங்கு வரவேற்காததால் அவள் வருந்தி கர்வத்தையும் உடலையும் விட்டாள்.

## பார்வதீ பரிணயம்.

பரமசிவனையே பதியாகப் பெற பார்வதி கடுந்தவம் செய்தாள். சிவன் கருணை புரியாததால் அக்னிபிரவேசம் செய்ய முயற்சித்தாள். அச்சமயம் அழகு வாய்ந்த வாமனுன ஓர் அந்தணச் சிறுவன் தோன்றினன். தேவி அவ்விருந்தினரைப் பூஜித்து அவரெதிரில் அக்னியில் நுழைந்தாள். தேவியின் தவ வலிமையாலும் பரமசிவனருளாலும் அவ்வக்னி சீதமாய் விட்டது. வாமனர் தேவியின் தவத்தைக் கொண்டாடி அமங்களவேஷமுள்ள சிவனையே அவள் பதியாகக் கோருவதைக் கண்டித்தார். பார்வதி சிவத்தின் தத்துவத்தை விளக்கி அவரை யன்றி வேரெவரையும் மணப்பதில்லை என்று கூறினுள். உமையே! விரைவில் உன்னுள்ளங் கைகூடும். வீட்டிற்குச் செல். அதற்கு வேண்டிய உதவி யான் செய்கிறேனென்று கூறி வாமனர் மறைந்தார். பார்வதி வீட்டிற்குச் செல்ல அங்கு ஓர் பிச்சைக்காரன் வந்து பல வாத்யங்களை வாசித்துக்கொண்டிருந்தான்.

அதைக் கேட்டவுடன் எல்லோரும் மயங்கி விழுந்தனர். தேவி அவரைக் கையில் மாலையை ஏந்திவந்த பரமசிவனுகப் பார்த்தாள். உடனே தன்னை மணந்துக் கொள்ளும்படிக் கேட்டாள். பாட்டினுல் ஸந்தோஷமடைந்த மேனகை ரத்நங்களை அளிக்கவந்தாள். அவர் அதை விரும்பாமல் அவளது கன்யா ரத்நத்தை வேண்டினர். சிவன் மனைவியை இப்பாமரன் கேட்பதோ? சேடீ! இவனைத் தூரே இழுத்துத்தள்! என்றுள் மேனகை. அவரிடம் எவரும் அணுகமுடியவில்லை. அவர் ஹிமாலயத்தின் கண்ணில் மஹா விஷ்ணுவாகவும் பரமசிவனுகவும் இந்திரனுகவும் அஷ்டதிக் பாலர்களாகவும் காணப்பட்டார். இஃதுடன் நில்லாது விஷ்ணுவுக்குச் சாத்திய மாலையும் பக்ஷ்யங்களும் இவரிடம் காணப்பட்டன. இவ்வாச்சரியத்தைக் கண்ட ஹிமாலயன் அவர் சிவனே என்றுணர்ந்து கன்னிகையை அளிக்கச் சித்தமாயிருந்தான். ஆனுல் உடனே மாயை அவனைச்சூழ்ந்து கொண்டது. கன்னிகை தவிர மற்றெல்லாவற்றையும் தருவதாகக் கூறினன். பிக்ஷுகனே பெண்ணைத் தவிர வேறெதுவும் வேண்டாமென்று மறைந்தார். உடனே ஹிமவானும் மேனகையும் அவர் சிவனென்று

உணர்ந்தார்கள். தங்களது அஞ்ஞானத்தை நினைந்து வருந்தினார்கள். தேவர்கள் ஒன்று கூடி யோசித்தனர். உத்தம பாத்ரமான பரமசிவத்திற்குக் கன்னிகாதானம் செய்யும் ஹிமவான் மோக்ஷமடைவான். அவனால் தான் பூமி சரியாமல் நிற்கிறது. அவன் விரும்பாமல் பார்வதியின் நிற்பந்தத்திற்காகக் கன்னிகாதானம் செய்யும்படி ஏற்பாடு செய்வோம் என்று தீர்மானித்தனர். பிருஹஸ்பதியை, தேவகார்யத்தை நாடி ஹிமாலயத்தினிடஞ் சென்று சிவ பக்தி குறையும்படி செய்யுங்கள் என்றனர். அவர் சிவாபசாரத்தினால் வரும் தீமைகளைக்கூறி முடியாதென மறுத்தார். பின்னர் பிரும்மாவை வேண்ட அவரும் அதை அப்படியே மறுத்தார். எல்லோரும் சிவனிடஞ் சென்று அவரையே இவ்வுதவியைச் செய்யும்படி வேண்டினார்கள். தேவர்கள் வேண்டியபடி பரமசிவன் ஒரு பிரும்மசாரி வேடம் பூண்டு பர்வதராஜ! நீ உனது அழகிய மகளைச் சிவனுக்கு அளிக்கக் கேட்டு நல்லுபதேசஞ் செய்ய வந்தேன். சிவனுக்குத் தந்தை தாயுண்டோ? அவனுக்கு வயது எவ்வளவு? அறிவாயா? உன் மகள் எங்கே வஸிக்க வேண்டும் தெரியுமா? ஆண்டியாய்த் திரியும் ஒருவனுக்கா கன்னிகாதானம் செய்யப் போகிறாய்? பாத்ரத்தையும் கோத்ரத்தையுமறியாமல் ஒருவனுக்குப் பெண்ணை அளித்தல் பாபமன்றோ? பார்வதியைத் தவிர ஏனைய பந்துக்களைக்கேள்! உன் மனைவியைக் கலந்து யோசித்துச் செய்! அநியாயமாக ஒரு பெண்ணை கெடுக்காதே! என்று கூறி, மறைந்தார். இதைக்கேட்டிருந்த மேனகை நாதா! விருந்தினர் விளம்பியது உண்மை. அழகும் தனமும் வாய்ந்த தேவருக்குத்தான் பெண்ணைக் கொடுக்க வேண்டும். சிவனைப் பூஜிப்போம்! பெண்ணைத் தரலாகாது. அவருக்களித்தால் உயிரை விடுவேனென்றாள்.

அருந்ததியுடன் ஸப்த ரிஷிகளுமங்கு சிவனுக்கு உமையைக் கேட்க வந்தனர். ஹிமவானும் பரம ஏழையும் மிக பயங்கர வேஷமுமுள்ள ருத்ரனுக்குப் பெண்ணை அளிக்க மறுத்தான். வஸிஷ்டர் பரமசிவத்தின் பெருமையைக்கூறி அவரை விட ஸத்பாத்ரம் உலகிலில்லை என்றார். அவருக்குப் பெண்ணை யளித்தால் அநரண்யனைப்போல் நீயும் நற்கதி பெறுவாய் என்றார்.

## அநரண்யன் சரிதம்.

அநரண்யனெனும் தார்மிகன் பல யாகங்களைச் செய்தான். இந்திர பதவியையும் துச்சமாக நினைத்தான். அவன் ஐம்பது பெண்களை மணந்து கொண்டான். நூறு புதல்வர்களும் ஓர் கன்னிகையும் அவனுக்கு உண்டானார்கள். பத்மா எனும் கன்னிகை பத்மையைப் போலவே இருந்தாள். பத்மைக்கேற்ற பதியைத் தந்தை தேடிக் கொண்டிருந்தான்.

அச்சமயம் பிப்பலாதர் எனும் மஹரிஷி அரசனது அரண்மனைக்கு வந்தார். அரசன் அவர் எதைக் கேட்டாலும் தருவதாக வாக்களித்தான். அவர் அரசனது பெண்ணைக் கேட்டவுடன் பத்மையை அளிக்க மனமில்லாமல் வருந்தினன். மஹர்ஷி கோபங்கொண்டு உன்னைச் சபிக்கட்டுமா? பெண்ணை தருகிறயா? என்றார். வேறு வகையில்லாமல் அரசன் கன்னிகையை முனிவருக்களித்து ஸம்சாரத்தில் வெறுப்பு கொண்டு வனஞ் சென்றான். பத்மை தனது பர்த்தாவைத் தெய்வமாகக்கருதி பூஜித்து வந்தாள். ஒரு நாள் தர்மதேவர் அவளது கற்பைப் பரிசோதிக்கக் கருதி ராஜவடிவத்துடன் எதிரில் வந்தார். கிழ முனிவரை விட்டுத் தன்னை மணக்கும்படி கூறினர். பத்மை தன்னை தாயாகக்கருதி விலகும்படி அவரைக் கூறினள். அவர் பிடிவாதம் செய்யவே நீ க்ஷமித்துப்போவாய் எனச் சபித்தாள். தர்மர் தனது நோக்கத்தைக்கூறி அவளது பதியை மன்மதனைப்போல் செய்தார். சாபத்தை அகற்றும்படி வேண்டினர். கற்பரசிகளது சொல் பொய்த்துப் போகாது. நீர் கிருதயுகத்தில் நான்கு பாதங்களுடனும், திரேதையில் மூன்று பாதங்களுடனும் த்வாபரத்தில் இரண்டு பாதங்களுடனும் கலியில் ஒரே பாதத்துடனுமிருப்பீர். தேவாலயம் நக்ஷத்ரம் புஷ்போத்யாநம் ஸ்வதர்மத்தைகைவிடாதவர் கற்பரசி ஆகிய இவ்விடங்களில் நீர் பூர்ணமாக வஸிக்கலாம், என்று கூறி பத்மை சென்றாள். இதைக்கூறி வஸிஷ்டர் ஹிமாலயத்தை நீ பரமசிவத்துக்கு கன்னிகாதானம் செய்துவிடு இல்லையேல் நஷ்டமடைவாய் என்று கூறினர். இதைக் கேட்டபின் ஹிமாலயத்திற்கும் அவன் மனைவிக்கும் மயக்கம் நீங்கியது.

விவாஹத்திற்காக விச்வகர்மாவைக் கொண்டு விசித்ரமான மண்டபம் ஒன்றை ஹிமாலயன் நிர்மாணம் செய்தான். நேராக பரமசிவனிடம் சென்று பெண்ணை மணந்துகொள்ள வேண்டுமென பிரார்த்தித்தான். சங்கரனும் விவாஹத்திற்கேற்ற வேஷந்தரித்து தனது கணங்களுடன் அஷ்டா தச வாத்யங்கள் முழங்க திவ்யவிமானத்தின் மீதேறி பவனி வந்தார்.

## இந்திர கர்வபங்கம்.

மூவுலகிற்கும் தான் அதிபதி. கல்பகவிருக்ஷம் காமதேனு சிந்தாமணி முதலிய எண்ணிறந்த செல்வம்! தேவர்களும் ஸப்தரிஷிகளும் தன்னைப் பூஜிக்கின்றனர்! என்றும் இந்திரனுக்குக் கர்வம் உண்டாயிற்று. ஸுரகுருவான பிருஹஸ்பதி அங்கே வந்தார். குரு என்பவர் ஸாக்ஷாத் கடவுளே ஆவர். இந்திரன் கர்வத்தால் அவரை அழைக்கவில்லை. வரவேற்கவில்லை. பிருஹஸ்பதி விரைவாகத் திரும்பித் தபோவனஞ் சென்றார். தனது ஆசான் ஸபைக்கு வராத காரணம் என்னென்று உணர்ந்தான், வருந்தினன். குருவின் மனைவி நீ செய்த பாபத்தால் குரு தர்சநம் உனக்குக் கிட்டாது. விரைவில் ராஜ்யத்தையும் இழப்பாய் என்றாள். இந்திரன் பிராயச்சித்தம் செய்து கொள்ள கங்கைக்குச் சென்றான்.

அங்கு கௌதமரது உருவத்தைத் தரித்து அஹல்யையுடன் சயநத்திலிருந்தான். கௌதமர் திடீரென வந்து தன் மனைவியின் கற்பைக் கெடுத்த அவனது உடலெல்லாம் பெண் குறிகளாகுமென்றும் ஸூர்யனது அருளால் கண்களாக மாறும் என்றும் சபித்தார். அஹல்யை கல்லாக இருந்து ஸ்ரீ ராம பாத தூளியால் சுத்தமாகி நிஜரூபத்தை அடைவாள் என்றும் சபித்தார். இந்திரன் பிரும்மாவினிடம் சென்று அவரைச் சரணமடைந்தான். குரு இராததால் இவனை அஸுரர்கள் பீடிப்பதைக் கண்ட பிரும்மா விச்வரூபன் என்பவனை குருவாகக் கொள்ளும்படி கூறி அனுப்பினர். அங்ஙனமே அவரை ஆசார்யனாக ஏற்று இந்திரன் ராஜ்யபாரம் செய்து வந்தான். விச்வரூபன் தைத்யர்களிடமன்பு கொண்டு, யாகத்தில் அவர்களுக்கும் ஹோமம் செய்தான். இந்திரன் கோபத்தினால் அவரைக்

கொன்ருன். பிரும்மஹத்தி பயங்கரமான ராக்ஷஸியாகி அவனைத் துரத்தியது. மானஸஸரஸ்ஸில் நாமரைத் தண்டுக்குள் புகுந்தான். பிரும்மஹத்தி அவனுக்காக அங்கு காத்திருந்தது. இதனிடையில் நஹுஷன் இந்திரனாகி வந்து இந்திராணியைப் பெண்டாடக் கருதினன். அவள் குருவைச் சரணமடைந்தாள். பிருஹஸ்பதி சிஷ்யனது கர்வம் அகன்றதெனக் கருதி மானஸஸரஸ் சென்று அவனை அழைத்தார். ஆவலுடன் இந்திரன் வந்து குருவைப் பன்முறை பணிந்து அபசாரத்தை க்ஷமிக்கும்படி வேண்டினன். பிருஹஸ்பதி அவனை ஆசீர்வதித்து மூவுலகையும் முறைதவருமல் ஆளும்படி கூறினர். இந்திரன் தன் பின்புறத்தில் கத்தியுடன் நிற்கும் பிரும்மஹத்தியை அகற்றும்படி வேண்டினன். ஸம்ஸார விஜயமெனும் ராதா கவசத்தால் அதை ஜயி என்று ஆகாசவாணி கூறிற்று. அங்ஙனமே அவர் அதை நாசம் செய்து இந்திரனுடன் அமராவதிக்கு வந்தார். த்வஷ்டாவை அழைத்து அழகிய அரண்மனையைப் படைக்கும்படி இந்திரன் கூறினன். நூருண்டு சிரமப்பட்டு மிக்க அத்புதமான அரண்மனையை அவர் படைத்தார். இந்திரன் அதைச்சுற்றிப் பார்த்துவிட்டு இன்னும் அழகாகப் படை என்ருன். தனதுபூர்ண ஸாமர்த்தியத்தையும் கொண்டுப்படைத்தும் இந்திரன் துன்புறுத்துவதை த்வஷ்டா விஷ்ணுவினிடம் விக்ஞாபனம் செய்துக் கொண்டார்.

விஷ்ணு ஓர் சிறுபிரும்மசாரி வேடம்பூண்டு இந்திரனிடம் வந்து ஆஹா! மிக்க அழகாக இருக்கிறது இந்த அரண்மனை. எந்த இந்திரனும் இந்த மாதிரி அரண்மனையில் வஸித்ததில்லை என்று கூறினர். ஐயா உமக்கு எத்தனை இந்திரர்களைத் தெரியும்? என்று கேட்டார் இந்திரன். நான் பார்த்த இந்திரர்களுக்குக் கணக்கேது? என்றுகூறி வரிசையாகச்செல்லும் எறும்புகளைப் பார்த்து நகைத்தார். இந்திரன் ஐயா! தாங்கள் எறும்புகளைக்கண்டு நகைக்கும் காரணம் யாது என்ருன். இந்திரா! இவர்களெல்லாம் உன்னைப்போல் இந்திர பதவிபெற்றுத் தம் கருமத்தால் எறும்பாகிச் செல்கிருர்கள். அவர்களது கதியையும் நிலையில்லா வாழ்வையும் நினைத்து சிறித்தேன் என்ருர். இதனிடையில் தலையில் ஓர் பாயை

விரித்துக்கொண்டு மார்பில் வண்டி சக்ரம்போல் ரோம மமைந்த ஓர் மஹர்ஷிவர அவரை இவ்விருவரும் வர வேற்று, தாங்கள் யார்? தங்கள் பெயரென்ன? மார்பில் ரோமம் சக்ரம்போலிருக்கக் காரணம் என்ன? என்று கேட்டனர். வந்தவர், தான் ஓர் அற்பாயுளுள்ள முனிவரென்றும், தனக்கு ரோமசர் எனப்பெயரென்றும் தனக்கு நீண்ட ஆயுளில்லாததால் வீடு வாசல் எதற்கென அவைகளை விரும்பாமல் ஊர் சுற்றுவதாகவும், வெய்யில் மழைகளுக்குப் பயந்து தலையில் ஓர் பாயைப் போர்த்திருப்பதாகவும், ஓர் பிரும்மாவின் பாதி ஆயுளளவுதான் தனது ஜீவித காலமென்றும், ஓர் இந்திரன் இறந்தவுடன் தன் மார்பிலுள்ள ரோமத்தில் ஒன்றைத் தான் எடுத்து விடுவதாகவும், ஆதலால் எவ்வளவு ரோமம் இல்லையோ அவ்வளவு இந்திரர்கள் இறந்ததாகவும், எவ்வளவு ரோமம் உளதோ அவ்வளவு இந்திரர் ஜனித்து மாளப் போகின்றனர் என்றும் கூறினர். இந்திரன் திடுக்கிட்டு இவ்வளவு காலம் ஜீவிக்கும் ரோமசர் தன்னை அல்பாயுள் என்று கருதும் போது தனது ஆயுள் ஓர் க்ஷணத்திற்கு ஒப்பானதென்றெண்ணி தான் வாழ அரண்மனை கட்டச் சொன்னதை எண்ணி வெட்கமடைந்தான். உடனே அவனெதிரில் வந்த இருவரும் மறைந்தனர். இந்திரன் தன் வாழ்க்கையில் வெறுப்புகொண்டு ஜயந்தனிடம் ராஜ்யத்தை அளித்துத் தவம் செய்யக் கிளம்பினன். பிருஹஸ்பதி நல்ல நீதிகளைப் புகட்டி அகங்காரமில்லாமல் ராஜ்யத்தை ஆளும்படிச்செய்தார்.

## ஸூர்ய கர்வபங்கம்.

மாலீ ஸுமாலீ என்ற ஸஹோதரர்கள் சிவனை நாடித் தவம் செய்து ஸூர்யனைப்போல் தேஜஸைப் பெற்றனர். அவர்கள் இரவு நேரங்களில் வெளிக்கிளம்பி இரவைப் பகலாகச்செய்தனர். அதனல் கோபங்கொண்ட ஸூர்யன் அவர்களைக் கொன்ருன். தனக்குச் சமமான ஒளி எவருக்கு மில்லை. இருக்கவுங் கூடாதென்ற கர்வத்தால் தானே அவர்களைச் சிக்ஷித்தான். ருத்திரனுக்குக் கடுஞ்சினமுண்டாயிற்று. ஸூர்யனை ருத்ரன் துரத்த அவன் பிரும்மாவைச் சரணமடைந்தான். பிரும்மா சிவனைச்

சரண்புகுந்து போற்ற அவர் கோபம் அகன்றது. ஸூர்யனும் சிவனது திருவடியில் விழுந்து தன் கர்வத்தை விட்டு மன்னிக்கும்படி வேண்டினன். சிவன் ஸூர்யனை மன்னித்து இறந்த பக்தர்களையும் எழுப்பிச் சென்றார்.

## அக்னியின் கர்வபங்கம்.

பிருகு மஹர்ஷி அக்னி சாலையில் பதுங்கி இருந்த தன் பத்னியை ஓர் அரக்கனுக்குக் காட்டிக்கொடுத்தார் என்ற காரணத்திற்காக அவரைப் பிணம் முதலிய அசுத்த பதார்த்தங்களையும் புஜிக்கும்படிச் சபித்தார். அதனல் கோபங்கொண்ட அக்னி தனது ஜ்வாலை ஸ்வர்க்க லோகம் வரை போகும்படி ஜ்வலித்தார். மூவுலகும் நடுங்கி விஷ்ணுவைச் சரணமடைந்தது. அவர் அக்னி எதிரில் வாமனராக வந்து, உன்னைச் சபித்த பிருகு முனிவருக்கு சாபமளி. அதைவிட்டு மூவுலகையும் கொளுத்துவது என்ன நீதி? உனக்கு சக்தியிருந்தால் இதைக் கொளுத்து பார்ப்போம், என்று ஓர் உலர்ந்த தர்ப்பத்தை அவனிடமளித்தார். அவனதைக் கொளுத்த பலத்த முயற்சி செய்தும் அது விணுயிற்று. உடனே எதிரிலிருந்தவரும் மறைந்தார். அக்னி பகவானே தனக்குக் கர்வபங்கம் செய்ய வந்தார் எனக் கருதி கர்வத்தை விட்டான்.

## தன்வந்தரியின் கர்வபங்கம்.

தேவரும் அஸுரரும் பாற்கடலைக் கடைந்தபோது அமிருத கலசத்தைக் கையிலேந்தி வந்தார் தந்வந்தரி. இவர் கருடனை அடுத்து விஷ மந்த்ரத்தைப் பெற்றார். பரமசிவனிடம் பல கலைகளைப் பயின்றார். ஒருஸமயம் இவர் ஆயிரம் சிஷ்யர்களுடன் கைலாஸம் செல்லக் கிளம்பினர். நடு வழியில் லக்ஷம் பாம்புகளுடன் தக்ஷகன் வீற்றிருந்தார். தக்ஷகன் தந்வந்தரி சிஷ்யர்களைச் சீறிக்கடித்தார். தம்பீ என்ற சிஷ்யர் இறந்தவர்களை எழுப்பித் தக்ஷகனை மூர்ச்சையாகும்படிச் செய்து அவன் தலையிலுள்ள நாகமணியை எடுத்துச் சென்றார். இதைக் கண்டு பயந்து நாகங்கள் அரசனை வாஸுகியினிடம் முறையிட்டன. அவர் துரோணன் காலீயன் கார்கோடன் புண்டரீகன் தநஞ்ஜயன் என்ற

பெரியஜந்து சேனதிபதிகளை அனுப்பினன். இவர்கள் விஷ ஜ்வாலையைக் கக்கிக் கொண்டு பெரு மூச்சினலேயே தன்வந்தரி சிஷ்யரனைவரையும் மூர்ச்சையாகும்படிச் செய்தார்கள். தன்வந்தரி தனது குருவான கருடனைப் பணிந்து அவரது மந்திரத்தால் தனது சிஷ்யர்களை எழுப்பிவிட்டு அவ்வைவர்களையும் அசைவற்றுக் கிடக்கும்படிச் செய்தார். சென்றவர் திரும்பாத காரணத்தை க்ஞானக் கண்ணல் அறிந்த வாஸுகி மநஸா தேவியை நினைத்தான். உடனே அவள் எதிரிற்றோன்றி ஸர்ப்பர்களை எழுப்பி அழைத்து வருகிறேன். அஞ்ச வேண்டாம் என்று தன்வந்தரியிடஞ் சென்றாள். தனது திருஷ்டியினலேயே இறந்த ஸர்ப்பங்களை எழுப்பி தன்வந்தரியின் சீடர்களை மூர்ச்சிக்கும்படிச் செய்தாள்.

அவர் மந்திர சக்தியால் சீடர்களை எழுப்ப முயற்சித்தார். அது வீணனதை எண்ணி அவர் வருந்தும்போது மநஸா ஓர் தாமரைமலரை தன்வந்தரிமேல் போட்டாள். அது அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு தந்வந்தரியிடம் வர அவரதை மூச்சுக்காற்றால் எரித்துச் சாம்பலாக்கினர். தேவி கடுகை ஜபித்தனுப்ப அதையுமவர் சாம்பலாக்கினர். அவள் சக்தி எனும் ஆயுதத்தைப் பிரயோகிக்க தன்வந்தரி அதைச் சூலாயுதத்தால் அழித்தார். அவள் ஸர்ப்பாஸ்திரத்தால் முநிவரைக்கட்ட அவர் தன் குருவை நினைத்தார். உடனே தனது சீடனைக் காக்க கருடனங்கு விரைவாக வந்து பாம்புகளைப் புசித்தார். சிவன் தந்த பஸ்மாஸ்திரத்தைத் தேவி எறிய, கருடன் தன் சிறகாலதை அழித்து விட்டார். சிவனளித்த சூலத்தை மனஸாதேவி கையிலெடுத்தவுடன் பிரும்மாவும் பரமசிவனும் அங்கு வந்து இருவரையும் ஸமாதாநப் படுத்தினர்கள். மனஸா தேவியும் தன்வந்தரியும் அவ்விருவர்களையும் பணிந்து போற்றினர்கள். பிரும்மா தன்வந்தரியை நீர் ஸகல கலைகளிலும் பேறறிவு பெற்றவர் என்றாலும் ஞான வடிவமான உமாதேவியினது அவதாரமாகத் தோன்றிய மநஸா தேவிக்கு ஸமமாக மாட்டீர். அவளடி பணிந்து அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டிக்கொள் என்றார். இதைக் கேட்டு தன்வந்தரி தன் கர்வத்தைவிட்டு மனஸா தேவியைப் பணிந்து போற்றிச் சென்றார்.

தானே உலகைக் காப்பவன் என்று கர்வங்கொண்ட விஷ்ணுவை சிக்ஷிக்க கிருஷ்ணன் பைரவ வேடம் பூண்டு அவர் உடலை மாத்திரம் அழித்தார். கர்வம் அகன்றபின் உடலைத் தந்தார். இக்கதைகளைக் கிருஷ்ணனிடம் கேட்ட ராதா தேவிக்கும் கொஞ்சம் கர்வம் இருந்தது. தனது அழகிலீடுபட்டே பகவான் மற்ற கோபிகைகளை விட்டு விட்டுத் தன்னிடம் ஆசைகொண்டு தன்னோடு வந்தார் என்று கருதினாள். அச்யுதனைப் பார்த்து நாத! நான் இனி நடந்து வர முடியாது. என்னைத் தாங்கள் தூக்கிச் செல்ல வேண்டும் என்றாள். பகவான் உடனே மாயையால் மறைந்து விட்டார். ராதை அவரைத் தேடி அலைய அதற்குள் கோபிகைகளும் பகவானைத் தேடிக் கொண்டே அங்கு வந்தனர். தங்களை விட்டுப் பிரிந்தது போல் ராதையையும் விட்டுப்பிரிந்தார்பகவான்என்றறிந்த கோபிகைகள் ராதையுடன் சேர்ந்து ஒவ்வோர் வனமாகப் பகவானைத் தேடினர். கோபிகைகள் அவரது அழகை வர்ணித்தனர். குணகணங்களைப் பாட்டாக்கிப் பாடினர். கிருஷ்ண வேடந்தரித்து அவனது லீலைகளை அனுஷ்டித்தனர். இங்ஙனம் தாயைவிட்ட கன்றுபோல் தன்னை விட்டுக் கோபிகைகள் கஷ்டப்படுவதைக் கண்டு கருணை மூர்த்தியான கண்ணன் விரைவாக அவர்கள் எதிரில் தோன்றி, துன்பத்தை அகற்றினார். கிருஷ்ணன் மதுரை வந்ததுமுதல் வைகுண்டம் செல்வதுவரை பாகவதம் போலவே உளது. பலருக்கும் பகவானே கர்வபங்கம் செய்தார் என்பதைக் கேட்ட நாரதர் விஷ்ணு முதலிய எல்லோரது கர்வ பங்கத்தையும் கூறும்படி வேண்டினார்.

## விஷ்ணு கர்வ பங்கம்.

நாராயணமூர்த்தி தான் அந்தந்த காலத்திற்கனுகுணமான அவதாரம் செய்து அரக்கரை அழிப்பதையும் எண்ணித் தன்னைவிடச் சிறந்தவரில்லை என்று கர்வங் கொண்டார். இதை அகற்ற கிருஷ்ணன் ராமராக விஷ்ணு அவதரித்த பொழுது தான் மஹாவிஷ்ணு என்பதை மறக்கச் செய்தார். ஸீதையை விட்டுப் பிரிந்த காலத்தில் அவர் மனிதனைப்போல் கதறினார். வைகுண்டத்தில் எவருக்கும் கிட்டாத துவாரபாலக வேலை

தங்களுக்குக் கிட்டியதென **ஜய விஜயர்கள்** கர்வங்கொண்டனர். ஸநகாதிகள் பகவத் தரிசநத்திற்காக உள்ளே செல்லும்போது அவர்களைத் தடுத்து ராக்ஷஸர்களாகும்படி அவர்கள் சாபம் பெற்றனர்.

## விதவா தர்மம்.

கணவனை இழந்த ஸதீ ஸன்யாஸாச்ரம தர்மத்தைக் கொள்ள வேண்டும். ஒரே வேளை உப்பு புளி காரங்களை சேர்க்காமல் ஹவிஸ்ஸைப் புசிக்க வேண்டும். எதிலும் ஆசை வைக்கலாகாது. அழகிய வஸ்த்ரம் ஆபரணம் புஷ்பம் கந்தம் தைலம் முதலியவைகளை ஏற்கக்கூடாது. எப்போதும் நாராயண ஸ்மரணையும் பகவத்ஸேவையும் பகவந்நாம உச்சாரணமும் செய்ய வேண்டும். ஏகாதசி ஸ்ரீ கிருஷ்ணஷ்டமீ ஸ்ரீராமநவமி சிவராத்ரி முதலிய திநங்களில் பகவானை உபாஸிக்க வேண்டும். இந்த திநங்களில் வறுத்த பதார்த்தங்களை உபயோகிக்கக்கூடாது. தாம்பூலந் தரித்தால் கோமாம்ஸத்தைப் புஜித்த பாபம் வரும். சிவந்த சிறு கடலை எலும்பிச்சம்பழம் சுரைக்காய் கத்திரிக்காய் ஆகிய இவைகளைப் புசிக்கலாகாது. கட்டில் மெத்தையில் விதவைப்படுத்தால் அவள் பதிநரகத்தில் விழுவான். கண்ணுடி பரபுருஷனுடன் யாத்ரை ஆட்டம் பாட்டு உத்ஸவம் வாஹநம் முதலியவைகளை விலக்க வேண்டும். எப்பொழுதும் தர்மத்தையே கேட்க வேண்டும். குரு ஸேவை செய்து அவர் மூலமாக நல்ல உபதேசங்களைப் பெற வேண்டும்.

## கேதார கன்யா சரிதம்.

உத்தாநபாதனது குமாரன் துருவன். அவனுக்கு வத்ஸநரார்ணன் என்ஞேர் புத்ரன் பிறந்தான். அவனது குமாரன் கேதாரன். அவன் மிக்க விஷ்ணு பக்தன். திநந்தோறும் அபரிமிதமாக தாநம் செய்து வந்தான். பற்பல யாகங்களைச் செய்தான். இவனது புண்யத்தைக் கண்டு லக்ஷ்மீ இவன் யாககுண்டத்திலிருந்து குழந்தையாகத் தோன்றிஞள். அன்புடன் அதைக் கையில் எடுத்தான். உடனே அப்பெண் அரசே! யான் கமலாதேவியின் அம்சத்திஞல் பிறந்தவள் என்று கூறி குழந்தைகளைப் போல் அழுதது. மன்னன் அதற்கு பிருந்தை என நாமம்சூட்டி

அன்புடன் வளர்த்து வந்தான். வயது வத்ததும் பிருந்தை புருஷோத்தமனையே பதியாகப் பெற தவம் புரிந்தாள். பிரும்மா அவளெதிரே தோன்றி சிலகாலம் சென்றபின் உனது உள்ளம் கைகூடுமென்றார். பிருந்தையின் மன உறுதியைப் பரீக்ஷிக்கக் கருதி தர்மனை அவளிடம் அனுப்பினார். அவர் அந்தண வேடம் பூண்டு பிருந்தை அளித்த பூஜையைப் பெற்று முக்கரணங்களுக்கும் எட்டாத பரமனைப் பதியாக அடைவது துர்லபம். என்னை மணந்து ஆனந்தத்தை அடைவாயாக என்று கூறினார்.

பிருந்தை மிகச் சினங்கொண்டு, அந்தணா! மற்றவர் மனைவியை மாதாவைப்போல் எண்ணுவது உம் கடமை. எல்லோருள்ளத்திலும் பகவான் அந்தர்யாமியாக வஸிப்பதை நீ அறியாயா? புத்தியில் துர்க்கையும் மனதில் பிரும்மாவும் இந்திரியங்களில் தேவரும், தங்கி நாம் செய்யும் புண்ய பாபங்களைக் கவனிக்கின்றனர். இந்த துரெண்ணத்தை விட்டுத் தூரே செல் என்று பிருந்தை கூறியும் பலாத்காரமாக அவள் கையைத்தொட ஆரம்பித்தார். அவள் நீ க்ஷயித்துப்போவாய் என்று சபித்தாள். தர்மத்திற்கு நாசம் என்றவுடன் ஸகல தேவர்களும் பயந்து பிருந்தையிடம் வந்து அவளை வணங்கி சாபத்தை அகற்றும்படி வேண்டினார்கள்.

பிருந்தை தர்மத்தை எழுப்பினாள். பதி மிக்க இளைத்திருப்பதைக் கண்ட அவர் மனைவியான மூர்த்தி, விஷ்ணு பாதத்தில் விழுந்து அவர் தீர்க்காயுளாக இருக்கும்படி வேண்டினாள். பகவான் மூர்த்தியை உனது ஆயுளை பதிக்களித்து அவன் அவனியில் நீண்ட நாள் ஜீவித்திருக்கும்படிச் செய். நீ கோலோகம் செல்வாய். ராதாதேவி நிழலிலிருந்து நீ மற்றோர் ராதையாக ஜனிப்பாய். உன்னை நாராயணனுக்கு அளித்து ராதை கிருஷ்ணனிடம் செல்வாள். பின்னர் நீயும் ராஸ மண்டபத்தில் பேரின்பம் பெறுவாய் என்றார். அவளும் அங்ஙனமே அவதரித்து ஆநந்தமடைந்தாள். பிருந்தை மும்முறை தர்மனை நோக்கி க்ஷயித்துப்போ என்று சபித்தாள். கற்பரசி சொல் வீணாகாததாலும் திரேதா யுகத்தில் தர்மத்தின் ஓர் பாதமும் துவாபரத்தில் இரண்டு பாதமும் கலியில் மூன்று பாதமும் அழியும் என்று கூறினாள். தர்மன்

தனது தர்மபத்னியின் ஆயுளைக்கொண்டு மூன்று பாதங்கள் அழிந்த போதிலும் தீர்க்காயுளாக ஜீவித்திருக்கிறான்.

**கலியில்** பத்தாயிரமாண்டுவரைப் பகவான் பூமியில் தங்கியிருப்பார். பின்னர் தேவதா ஸான்னித்யமிராது. ஐயாயிரமாண்டு வரை கங்காதி புண்ய தீர்த்தங்கள் தரணியில் தங்கி இருந்து பின்னர் கோலோகஞ்சென்று விடும். இரண்டாயிரத்தைநூறு வருஷம் வரை கிராம தேவதைகளும் வேத மந்திர பலமுமிருக்கும்.

## ஸ்ரீ ருக்மிணீ கல்யாணம்.

கர்க்காசார்யர் வந்து விதிப்படி பகவானுக்கு உபநயநம் செய்து வைத்தார். அச்சமயம் பிரும்மா பரமசிவன் இந்திரன் முதலிய ஸகலதேவர்களும் தன் பத்னிகளுடன் வந்து தர்சித்துப் பகவானுக்குக் காணிக்கை கொடுத்து வாழ்த்திச் சென்றனர். விதிப்படி கிருஷ்ணனும் ஸாந்தீபினி எனும் முனிவரைக் குருவாகக்கொண்டு ஸகல கலைகளையும் கற்றுணர்ந்தார். குருவின் மனைவி விரும்பியபடி இறந்த குரு புத்ரனை எழுப்பி அதையே குருதக்ஷிணையாகக் கொடுத்து வீட்டிற்கு வந்தார். விச்வகர்மனை அழைத்து த்வாரகை எனும் நகரைப் படைக்கும்படி பகவான் உத்தரவிட்டார். அவன் எப்படி நிர்மாணிப்பதென யோசித்துக்கொண்டிருக்கும்போது பகவான் தனது ஸங்கல்பத்தினால் மிக அற்புதமாக துவாரகாபுரியை நிர்மாணம் செய்தார். ஸகல தேவ ஸம்பத்துகளுமங்கு காணப்பட்டன.

விதர்ப்பதேசத்தில் விஷ்ணுவின் அம்சத்தால் பீஷ்மகர் என்றோரரசன் ஜனித்தான். அவனுக்கு ருக்மிணீ என்ற அழகிற் சிறந்த கன்யாரத்நமுதித்தாள். பீஷ்மகராஜன் மந்திரிகளையும் புரோஹிதர்களையும் அழைத்து ருக்மிணிக் கேற்ற கணவன் யார் என வினவினான். சதாநந்த மஹர்ஷி துவாரகையில் வஸிக்கும் ஸ்ரீகிருஷ்ணனே எல்லா வகையிலும் இவளுக்கேற்ற பதி அவருக்கு ருக்மிணியை மணம்செய்து வைப்பது உசிதம் என்றார். இதைக்கேட்டு ஸந்தோஷமடைந்த பீஷ்மகன் நல்லவரங்கூறிய முனிவருக்கு ஸந்மாநம் செய்தான். ருக்மி எனும் அரசனது

முதல் புதல்வன், தந்தையே! இப்பிச்சைக்காரன் சொல்லைக் கேட்டு நீ, ஸந்தோஷப்படுவது நியாயமா? கிருஷ்ணன் வைச்யகுலத்திலே பிறந்து இடையர்தொழில் செய்பவன். அவனுக்கா அரச கன்னியை அளிப்பது? அவன் திருட்டு குணமும் பரஸ்திரீகளைக் கெடுக்கும் வழக்கமும் உள்ளவன். ஜராஸந்தனிடம் பயந்து ஸமுத்திரத்தின் நடுவே நகரம் அமைத்து ஜீவிக்கிறான். தூர்வாஸரது சிஷ்யன் யான். இந்திரனையும் வெல்லும் சக்தி எனக்குளது. எனக்கு ஸமமானவன் சிசுபாலன். அவனுக்கே ருக்மிணியைத் தருவது என்று ஸகல அரசர்களுக்கும் பத்ரிகை அனுப்புங்கள். என அவன் கூறினான். இதைக்கேட்டு துக்கமடைந்த பீஷ்மகராஜன் உக்ரசேந மஹாராஜனுக்கு ஓர் பத்ரிகை எழுதி அதில் தனது மகளை கிருஷ்ணன் வந்து மணந்துகொள்ளும்படி விக்ஞாபித்துக் கொண்டிருந்தான். மற்ற மன்னர்களுக்கு மகன் கூறியபடி ருக்மிணியைச் சிசுபாலனுக்கு அளிப்பதாகப் பத்ரிகை அனுப்பினான்.

உக்ரஸேநன் தன் பேரனது கல்யாணத்தைக்கேட்டு ஆனந்தமடைந்தார். ஊரெல்லாம் அலங்கரிக்கச் சொன்னார். அஷ்டாதசவாத்யங்களும் முழங்கின. தற்செயலாகக் கருத்மான் என்ற அரசன், கன்னிகை ரேவதியுடன் அங்கு வந்தான். வஸுதேவர் விதிப்படி பலராமருக்கும் ரேவதிக்கும் விவாஹத்தைச் செய்து வைத்தார். கிருஷ்ணன் தனது பரிவாரத்துடன் விதர்ப்பதேசம் கிளம்பினார். அங்கு விண்ணவரனைவரும் வந்தனர். அஸுராம்சம் வாய்ந்த சிசுபாலன் தந்தவக்த்ரன் ருக்மி முதலியவர்கள் பொறாமை கொண்டனர். கிருஷ்ணனை நிந்தித்தனர். பலராமன் கோபங்கொண்டு அவர்களைக்கொல்ல ஆரம்பித்தார். அசரீரியானவாக்கு கிருஷ்ணனே கொல்வான் இவர்களை நீ கொல்லாதே என்றது.

இதனிடையில் சதாநந்தர் கல்யாண வேஷத்துடன் பகவானை அழைத்து வந்தார். பீஷ்மகன் அவரை அன்புடன் வரவேற்று அர்ச்சித்தார். மங்கள வேஷத்துடன் மகளைச் சபைக்கு அழைத்து வந்தார். ஸகல தேவகணங்களுமங்கு வந்தன. பீஷ்மகராஜன் விதிப்படி வரனைப் பூஜித்துக் கன்னிகாதானம் செய்தார். பார்வதி சாவித்ரீ ரதி ஸரஸ்வதி முதலிய ஸகல தேவ ஸ்த்ரீகளும்

தம்பதிகளை வாழ்த்திப் போற்றினர். யசோதையும் நந்தனும் பகவானை விட்டுப்பிரிய மனமில்லாமல் வருந்தினர். பகவான் அவர்களுக்கு மனதைச் சுத்தப்படுத்துதல், நாடிகளைச் சோதித்தல், குண்டலினீ சக்தியுடன் கூடிய ஈசனைச் சிந்தித்தல், மூலாதாரம் ஸ்வாதிஷ்டாநம் மணிபூரகம் அநாஹதம் விசுத்தி ஆக்ஞை எனும் ஷட்சக்ரங்களை அர்ச்சித்தல் ஆகிய யோக ஞாநத்தையும் ஆத்ம விஷயமான ஞாநத்தையும் பக்தியையும் உபதேசித்தார்.

## பிரத்யும்ந சரிதம்.

முன்னர் முக்கண்ணனால் எரிக்கப்பட்ட காமனே ருக்மிணி கர்ப்பத்தில் குழந்தையாக வந்தான். அவனது மனைவியான ரதிதேவி மாயாவதி என்ற பெயருடன் சம்பராஸுரனது வீட்டில் வந்து காத்துக்கொண்டிருந்தாள். ப்ரத்யும்நனை காமனைச் சம்பரன் ஏழாம் நாளே ஒருவருமறியாமல் தூக்கிச்சென்றான். மாயாவதியினிடம் அரக்கன் அக்குழந்தையை அளித்தான். அஸுரன் இவர்கள் ஏகாந்தமாக விளையாடுவதைக் கண்டு கோபங்கொண்டான். ப்ரத்யும்நனுடன் சம்பரன் போர் செய்தான். வாயு ரகஸ்யமாக வந்து ப்ரத்யும்நன் காதில் துர்க்கையைப் போற்றும்படி கூறினர். அங்ஙனமே துர்க்கையைத் துதித்து அவளிடமிருந்து சூலாயுதத்தைப் பெற்று சம்பரனைக்கொன்றான். மாயாவதியுடன் ருக்மிணியின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். மற்ற எழு மனைவிகளுக்கும் நரகாஸுரனிடமிருந்து வந்த பதினாறுயிரம் ஸ்திரீகளுக்கும் ஒவ்வொருவருக்கும் பத்து பிள்ளைகளும் ஓர் பெண்ணுமாகப் பிறந்தன.

## தூர்வாஸ விவாஹம்.

பரமசிவத்தின் அம்சத்தினால் அவதரித்த தூர்வாஸ மஹர்ஷி ஆயிரம் சிஷ்யர்களுடன் துவாரகை வந்தார். உக்ரஸேநர் அவரைப் பூஜித்தார். வஸுதேவர் யசோதையினிடமிருந்து கொண்டுவந்த ஏகாநம்சா என்ற கன்னிகையைத் தூர்வாஸருக்களித்து விதிப்படி விவாஹம் செய்து வைத்தார். தூர்வாஸர் வஸுதேவர் விரும்பியபடி சிலகாலம் அவர் வீட்டிலேயே தங்கி மனைவியுடன்

இல்லறத்தை நடத்தினார். பகவானிடம் விடைபெற்றுக் கைலாஸஞ்சென்றார். சிவனை வணங்கி தனக்கு வைராக்கியமுண்டானதால் மனைவியை விட்டு விட்டுத் தவம் செய்ய விடையளிக்கும்படி வேண்டினார். பார்வதி தேவி குழந்தை இல்லாத பத்னியை விட்டு நீர் தபோவனஞ் செல்வது தர்மமல்ல. கற்பக விருக்ஷம் போன்ற கிருஷ்ணன் அங்கிருக்க அவரை விட்டுத் தவஞ்செய்ய நீர் வேறெங்கு செல்ல வேண்டும்? அவரைவிட வேறு தெய்வமுண்டோ? துவாரகை சென்று இல்லறத்தால் இறைவனை ஆராதித்து இஹபர சுகம் பெறுவீர் என்றாள். அவரும் இல்லறத்திலீடுபட்டார். உஷா பரிணயம் பாகவதம்போலவே இருக்கிறது.

## ராதையின் கணேச பூஜை.

ராதாதேவி தற்செயலாக ஸித்தாச்ரமம் சென்றாள். அங்கு விக்னேச்வரர் ஆலயமொன்றுண்டு. அன்றன்றும் அகில தேவர்களுமங்கு வந்து அவரை அர்ச்சித்துச் செல்வது வழக்கம். அதை அறியாத ராதை வாஸுதேவன் திரும்பத் தன்னையடைந்து பேரானந்தத்தை அளிக்கமாட்டாரா? என்று கணேசனைப் பூஜித்தாள். கங்கா ஜலத்தைக்கொண்டு விநாயகருக்கு அபிஷேகம் முதலிய ஆராதனைகளை விதிவழுவாது நடத்தினாள். இதனிடையில் வழக்கப்படி பிரும்மாதி தேவர்களும் ஸ்ரீ கிருஷ்ணனும் விக்னேசரைப் பூஜிக்க வந்தனர். காவலாளி ராதையை யாரென்றறியாமல் தேவர்களிடம் வந்து யாரோ ஒரு ஸ்திரீ எவ்வளவு தடுத்தும் கேளாமல் தாங்களர்ச்சிக்கும் இந்த விக்னேச்வர மூர்த்திக்குப் பூஜை செய்து இதை அசுத்தப்படுத்தி விட்டாள் என்று முறையிட்டான். தேவர்கள் அவனை அகற்றி தேவியைப் போற்றி அருகிலுள்ள கிருஷ்ணனை அடையும்படி வேண்டினர். அப்போதும் அவள் அறியாமலிருக்கவே கிருஷ்ணன் தனது மாயா பலத்தால் தேவிகூட ஏமாந்ததைக்கூறி, தானே அவளருகிற் சென்று அவளைத் தொட்டார். உடனே அவளது சாபமும் அக்ஞானமுமகன்றது. ராதை பகவானைப்பணிந்து போற்றி அவருடன் த்வாரகை சென்றாள்.

## கிருஷ்ணன் நந்தன் வீடு செல்லுதல்.

பகவானுடன் கூடி ராதா தேவி துவாரகையில் பிரும்மாநந்தத்தை அனுபவித்து வந்தாள். அவரது திவ்ய சரிதங்களைக்கூறி ஆநந்த பரவசமானுள். அதைக்கண்ட கோபிகள் ராதை வியோகத்தால் இறந்தாள்! இறந்தாள்! எனக் கதறினுர்கள். கிருஷ்ணன் கரத்தால் ராதையைத் தொட்டு எழுப்பி அவளுக்குத் தத்வோபதேசஞ் செய்தார். புருஷரில் தனக்குச் சிவனைவிட பிரியமானவரும் ஸ்திரீயில் உன்னைவிட பிரியமானவரும் வேறெவருமில்லை என்றுர். தேவியினது பிரார்த்தனைக் கிணங்கி பகவான் கோகுலத்திற்கு வந்தார். அவர் வருவதைக்கேட்டு யசோதையும் நந்தனும் மற்ற கோப கோபிகைகளும் எதிர்கொண்டு அழைத்தனர். யசோதை கன்றைக்கண்ட பசுபோல் பால் பெறுக பகவானைக் கட்டித் தழுவினுள். அவளது ஆவலைக்கண்ட கண்ணன் குழந்தை உருவெடுத்து யசோதை மடியில் படுத்துப் பாலருந்தினுர். ராதையும் மற்ற கோபிகைகளும் இரவில் ராஸமண்டபஞ் சென்று ராஸக்ரீடையை அநுபவித்தார்கள். பிறகு ஒருநாள் ஒரு யோஜனை விஸ்தாரமுள்ள திவ்ய விமாநமொன்று அங்கு வர ராதை முதலிய ஸகல கோபிகைகளையும் பகவான் அதிலேற்றி கோலோகத்திற்கு அனுப்பினுர்.

## கிருஷ்ணன் கோலோகஞ் செல்லுதல்.

பிருந்தாவநத்தில் தன்னந்தனியேநிற்கும் கிருஷ்ணனை ஸகல தேவர்களும் பணிந்து தாங்கள் அவதாரம் செய்த கார்யம் பூர்த்தியாய் விட்டதால் கோலோகத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். பகவான் கோலோகஞ் செல்லக்கருதிய உடன் துவாரகை ஜலத்தில் மூழ்கிற்று. பலராமனது தேஜஸ் சேஷனிடமும், ருக்மிணி லக்ஷ்மியினிடமும், ஸத்யபாமை பூமியிலும், ஜாம்பவதி பார்வதியினிடமும், ஸாம்பன் ஸ்கந்தனிடமும், வஸுதேவர் கச்யபரிடமும், தேவகி அதிதியினிடமும், லயமானுர்கள். பகவான் கதம்ப மரத்தின் கீழே வேடனுலடிக்கப்பட்ட கிருஷ்ண விக்ரஹத்தில் தனது சக்தியைப் பிரவேசிக்கும்படிச் செய்தார். அவ்வுடலிலிருந்து நாலு கைகளுடன் சங்கு சக்ர கதா பாணியாகக் கிளம்பி ஸர்வேச்வரன் வைகுண்டஞ் சென்றுர்.

இக்கதைகளைக்கூறி நாராயண ரிஷி ஸுவர்ணக்ரீவை எனும் ஸ்ருஞ்ஜயரது கன்னிகையை மணந்து பகவானைப் பூஜிக்கும்படி நாரதரைக் கூறினார். நாரதர் பிரும்மாவினிடஞ் சென்றார் அங்கு ஸ்ருஞ்ஜயன் தனது மகளை நாரதர் ஏற்று இல்லற தர்மத்தை நடத்தும்படி ஆசீர்வதிக்க பிரும்மனை வேண்டினார். விதிப்படி விவாஹம் முடிந்த பின் ஒரு ஸமயம் ஸநத்குமாரர் நாரதரிடம் வந்து அவரது பக்தியைக்கண்டு ஸந்தோஷித்து கிருஷ்ண மந்திரத்தை உபதேசித்தார். நாரதர் மனைவியை விட்டு வைராக்யங் கொண்டு வெளிக்கிளம்பி கிருஷ்ண மந்திரத்தால் ஸித்தி பெற்றார்.

## அக்னி உத்பத்தி.

சுவேதத்வீபத்திலுள்ள மஹா விஷ்ணுவைத் தர்சிக்க பிரும்மா முதலிய தேவர்கள் அங்கு சென்றனர். அச் சமயம் விஷ்ணு சரீரத்திலிருந்து மிக்க அழகான பெண்கள் தோன்றி நர்த்தனம்செய்தனர். அதைக்கண்டவுடன் பிரும்மா ஆசைகொண்டார். அதனால் அவரது சக்தி பாற்கடலில் விழுந்தது. உடனே அது ஓர் திவ்ய புருஷனைத்தோன்றி பிரும்மாவின் மடிமீது உட்கார்ந்தது. வருணன் அது தனது புதல்வனென்று கூற மஹாவிஷ்ணு பீஜ சக்தியால் பிரும்மனது புதல்வனே இவன் என்று கூறி அவனுக்குக் கொளுத்தும்படியான சக்தியை அளித்தார். அவனுக்கு எல்லா தேவர்களுக்கும் ஹவிஸ்ஸைக் கொண்டு கொடுக்கும் வேலையையும் தந்தார்.

## புராண ச்ரவண விதியும் பலனும்.

இப்புராணத்தை பக்தி ச்ரத்தையுடன் நன்றாகக் கற்றறிந்த பெரியோர் மூலமாகக்கேட்க வேண்டும். அவைகளில் பிரும்ம ஸ்வரூபத்தை நன்றாக விவரிக்கும் பிரும்ம வைவர்த்த புராணத்தைக் கேட்பது மிகவும் மேலானது. இதை நியமத்துடன்கேட்பவர் எத்தகைய மலடாயினும் ஸத்புத்ரனைப் பெறுவர். ரோகம் ஆபத்து ஏழ்மை சோகம் முதலிய துன்பங்கள் இப்புராண ச்ரவணத்தினால் அகலும். கோதாந பலனுண்டாகும்.

**பிரும்ம வைவர்த்த புராணம் முற்றிற்று.**

---

# 12. ஸ்ரீ லிங்க புராணம் (11).



சிவலிங்கம்.

மாம்பலம் குருகுல வெளியீடு.

# ஸ்ரீ லிங்கபுராண மூலக்ரந்த அநுக்ர மணிகா.

24 சிவனது யோகாவதாரம். சிஷ்யர். எந்தெந்த யுகத்தில் யார் யார் வியாஸராக அவதாரம் என்பது ?

25 லிங்கார்ச்சந விதி, ஸ்நாந விதி, இவைகளை சிவன் விளக்குதல்.

26 இருவகை ஸ்நாநம். ஸந்த்யை. பஞ்ச மஹாயக்ஞம்.

27–28 லிங்கார்ச்சநம். ஹிருதயத்தில் சிவபூஜை. தத்துவக் கணக்கு.

29 தாருகா வநம். ஸுதர்சந சரிதம். கிரம ஸன்யாஸம்.

30 சிவ பூஜையால் சுவேதன் காலனை ஜயித்தது.

31 பிரும்மா விதித்தபடி முநிவர் சிவ பூஜை செய்து சிவ தர்சநம்.

32 தாருகாவநத்தில் முநிவர் சிவனைத் தர்சித்து துதித்தல்.

33 சைவர் மஹிமையும் சிவஸ்துதி பெருமையும்.

34 சிவன் பஸ்மஸ்நாந மஹிமை, யோகி பெருமை கூறல்.

35 ததிசிக்ஷுபர்களது வாதம். வஜ்ரத்தால் ததீசி மரணம். சுக்ரர் அவரை மிருதஸஞ்ஜீவிநியால் எழுப்பல். சிவனருளால் முநிவர் வஜ்ர சரீரம் பெறல். அவர் க்ஷுபனை அவமதித்தல்.

36 க்ஷுபன் விஷ்ணுவைப் பூஜித்தல். ஸ்துதி. விஷ்ணு ததீசியுடன் யுத்தம். தேவருடன் விஷ்ணுவின் தோல்வி. அவர்களுக்கு முநிவரளித்த சாபம்.

37 நந்தி விஷ்ணு பிரும்ம கலஹம். சிவன் வரமளித்தல்.

38 சிவ பெருமை. நரநாராயணர் அதிதி கர்ப்பத்தில் தோன்றல்.

39 நான்கு யுகங்களிலும் தர்ம நிலை. வேதத்தை வகுத்தது. பதினெண் புராணங்கள்.

40 கலியுக நிலை. கலி முடிவில் கல்கி அவதாரம். கிருத யுக ஆரம்பம். கல்பம். மன்வந்தரம்.

41 சிவன் யோகமாயை மூலம் விஷ்ணு பிரும்மர்களைப் படைத்தல். சிவனது எட்டு நாமாக்களைக் கூறித் துதித்து பிரும்மா வரம் பெறல்.

42 சிலாதர் சிவனை நாடித் தவம். நந்தி உண்டாதல்.

43 நந்தி சிவனை ஆராதித்தல். ஸர்வலோக அதிபனுக்க யோசனை.

44 நந்திக்குக் கணத் தலைவனாக அபிஷேகம். விவாஹம்.

45 சிவன் விராட்ஸ்வரூபி. பாதாளாதி ஏழு லோகம்.

46 பூலோகம். ஏழு கடல். ஜம்பூத்வீபாதி. ஏழுத்வீபம். த்வீபாதிபதிகள். பிரிய விரதன். ஆக்நீத்ரன்.

47 ஒன்பது வர்ஷங்கள். ஆக்நீத்ர வம்சம் பரதன் வரை.

48 பூமியிலுள்ள மேரு அளவு. எட்டு திக் பாலர்களின் நகரம். மும்மூர்த்திகளின் விமாநம்.

49 வர்ஷ பர்வதங்கள். வநங்கள். அங்குள்ளவர்.

50 பூமியிலுள்ள மலைகளில் இந்திராதிகள் வாஸம்

51 தேவகூடத்தில் கைலாஸம். குபேரன் வீடு. மந்தாகினீ அருகே நந்தாதீரத்தில் நான்கு சிவ வாஸ ஸ்தலம்.

52 சுப கங்கை. ஒன்பது வர்ஷங்களில் உள்ள வர்ணம் ஜாதி.

53 பிலக்ஷத்வீபம். மேல் லோகங்கள். நரகம். யக்ஷர்.

54 ஸூர்யன் கதி. துருவகதி. மேகம். மழை உண்டாதல்.

55 சிவரூபியான ஸூர்யன். பனிரண்டு மாஸங்களில் தனித்தனி ரிஷி நாகர் யக்ஷர் கந்தர்வர் தேவர் முதலியவர்.

56 சந்திரனது சிறந்த ரதம். கிருஷ்ணபக்ஷத்தில் தேவர் அமிருத கலை பருகுதல். ஸூர்யனது ஸுஷும்ந கிரணத்தால் கலை வளருதல்.

57 அங்காரக புத ரதம். மண்டலம். கதி முதலியன.

58 சிவன் ஆணைப்படி பிரும்மா கிரஹங்களுக்கு அபிஷேகம் செய்தது.

59 பூமி சுசி மின்னல் ஆகிய மூன்றுவகை அக்நி. மாகம் முதலிய மாதங்களில் ஸூர்யகிரணங்களின் வேலை. எந்தெந்த கிரணம் என்னென்ன செய்கிறது ?

60 ஐந்து கிரஹங்களின் நிலை. ஸூர்யனது ஏழு கிரணங்களின் மஹிமை. ஸூர்ய மஹிமை.

61 கிரஹங்களின் அபிமாநி தேவர்கள்.

62 உத்தானபாதரின் புத்ரன் துருவன் தவம்செய்து துருவ பதத்தை அடைதல்.

63 தக்ஷனிடம் உண்டானவர்களில் வஸிஷ்டர் வரையில் உள்ளவர் சரிதம்.

64 தம்பிகளுடன் காட்டிற்குச் சென்ற சக்தி எனும் வசிஷ்ட புத்திரரை ருதிர அசுரன் பக்ஷித்தல். வஸிஷ்டர் சோகம். அஸுரர்களைத் தஹித்துக்கொண்டு பராசரர் தோன்றுதல்.

65 சந்திர சூர்ய வம்சம். திருதன்வாவிற்கு பிரும்ம புத்ரரான தண்டி, சிவஸஹஸ்ர நாமம் கூறல்.

66 சந்திரவம்சத்தில் யயாதி வரையிலும் சூர்யவம்சத் திருதன்வா வரையிலும் வம்ச பரம்பரை.

67 யயாதியின் சரித விஸ்தாரம். அறிவையும் சுகத்தையும் அளிக்கும் காதையை அரசன் கூறுதல்.

68 யயாதியின் மூத்த புதல்வனை யதுவின் வம்சத்தில் கிருஷ்ணன் அவதரிப்பதால் ஸாத்வதரின் வம்ச வர்ணனை.

69 யது வம்சத்தில் கிருஷ்ணசந்திரன் அவதரித்தல்.

70 சிவனிடமிருந்து உலகம் உண்டான கதை.

71 வித்யுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்ற மூன்று அசுரர் ப்ரம்ம வரத்தினுல் சுவர்ண வெள்ளி இரும்பு பட்டணமாதல். ஆங்குள்ளோர் மூவுலகையும் பீடித்தல். அவர்களை அழிக்க தேவர் முயற்சி.

72 தேவர்கள் கூறியபடி அரிய தேர் முதலியவைகளை அமைத்துச் சிவன் த்ரிபுரர்களை அழித்தல்.

73 தேவர்களுக்கு ப்ரும்மா லிங்கார்சன பலனைக் கூறுதல்.

74 விச்வகர்மா இந்திரநீலம் முதலியவைகளால் லிங்கம் அமைத்தல். லிங்க ப்ரதிஷ்டையின் பலன்.

75 சிவன் நிர்குணமாயினும் உலக நன்மைக்காக உமயவளுடன் யோகிகளின் மூலாதாரம் முதலிய ஷட்சக்ரங்களில் வஸித்தல்.

76 விளையாட்டாக அவதாரம் செய்த மூர்த்திகளை பிரதிஷ்டை செய்வதால் உண்டாகிய பலன்.

77 மண் முதல் வைரம் முதலிவைகளால் சிவாலயம் அமைப்பதன் பயன். சிவ ஆலயத்தின் அளவு.

78 சிவாலயத்தை மெழுகுவது, பூஜை முதலியவைகளுக்கு வஸ்த்ரத்தால் வடிக்கட்டிய ஜலத்தையே உபயோகிக்க வேண்டும். சிவபக்தி அஹிம்ஸை இவைகளின் மஹிமை.

79 அசுத்தம் கோபம் முதலியவைகளோடு செய்யும் பூஜையின் பலன். சிவாலயத்தில் தீபம் ஏற்றுதல் சிவ தர்சனம் இவைகளின் பலன்.

80 தேவர் கைலாஸத்தில் சிவ ஸன்னதிக்குச் செல்லுதல். சிவன் கூறிய பசு பாச மோசனம்.

81 பசு பாசாதிகளை அகற்ற லிங்கபூஜா விதி.

82 ஸர்வ பாபங்களும் அகலவும் புண்யம் உண்டாகவும் பிரும்மா செய்த சிவஸ்தோத்ரம்.

83 ஒவ்வொரு அஷ்டமி முதலியவைகளிலும் ஒரே வேளை உண்ணல்.

84 விரதங்களில் மிகஉயர்ந்தது உமாமஹேச்வர விரதம்.

85 சிவ மஹாபஞ்சாக்ஷரீ மந்திரம். ரிஷி சந்தஸ் தேவதை.

86 சர்வ துக்கங்களையும் நீக்க சிவத்யான யக்ஞம். சிவஞ் ஞான மஹிமை.

87 சிவன் அருளால் ஸனகர் முதலிய முனிவர் மாயை அகன்று ஸித்தரானார்கள்.

88 பாசுபத யோகிக்கு அணிமாதி ஸித்திகள். மூன்று குணத்தோடு கூடிய ஸம்ஸாரம். முடிவில் ப்ராணாக்னியில் எல்லாவற்றையும் ஹோமம் செய்தல்.

89 பரலோகத்தை அளிக்கும் ஸதாசாரம். சௌசம் முதலியன. த்ரவ்ய சுத்தி. ஸ்த்ரீ தர்மம்.

90 துறவிகளின் தோஷம் அகல சிவன் கூறிய பிராயச்சித்தம்.

91 இறப்பதற்குமுன் அறிகுறிகள். யோகத்தில் பிரணவ மஹிமை. சிவ உபாஸனம்.

92 காசியின் பெருமை. விச்வேச்வர பூஜா விதி.

93 ஹிரண்யாக்ஷன் புதல்வனான அந்தகாசுரனைச் சிவன் சிக்ஷித்தல். சிவன் அருளால் கணங்களுக்குத் தலைவனானான்.

94 வராஹாவதாரம் செய்து ஹிரண்யனைக் கொன்று பூமியைக் கொண்டு வருதல்.

95 ஹிரண்ய கசுபுவைக் கொன்று அட்டஹாஸம் செய்த நரசிம்மரை சிக்ஷிக்க சிவன் சரபாவதாரம் செய்தல்.

96 நரசிம்ம சரப ஸம்வாதம். நரசிம்மன் தோல்வி. சிவனைத் துதித்தல்.

97 ஜாலந்தரனைக் கொல்லுவதற்கு ஸுதர்சன சக்ரம் செய்து சிவன் அவனுடன் யுத்தம் செய்தல்.

98 தேவர்களைக் காக்க விஷ்ணு சிவநாம ஸ்தோத்ரம் கூறுதல். தன் கண்ணைக் கொடுத்த விஷ்ணுவிற்கு ஸுதர்சன மளித்தல்.

99 சிவனுடைய இடது புரத்திலிருந்து தோன்றி தேவீ தக்ஷ புத்ரியாகவும் பார்வதியாகவும் ஆனது.

100 தக்ஷ யக்ஞத்தை அழித்து அதைப் பூர்த்தி செய்தல்.

101 தேவி இமய மலைக்கும் மேனைக்கும் பெண்ணாகி சிவனைப்பெற தவம் செய்தல். மன்மதன் தவத்தைக் கலைத்து எரிதல்.

102 சிவன் குழந்தை வடிவம்கொண்டு தேவர்களை அசைவில்லாமல் செய்தது. சிவ கௌரி விவாஹம்.

103 சிவ விவாஹ வர்ணனம். இருவரும் காசியில் வசித்தல்,

104 விக்னேச அவதாரத்தைக் கோரி தேவர்கள் கூறிய சிவஸ்தவ ராஜம்.

105 பார்வதி பரமேச்வரனிடமிருந்து கணேசர் தோன்றி சிவனிடம் வரம் பெறல்.

106 தாருக அசுரனைக் கொல்ல காளியினிட மிருந்து க்ஷேத்திரபாலர்கள் தோன்றுதல். சிவதாண்டவம்.

107 பாலுக்காக தவம் செய்யும் உபமன்யுவைப் பரீக்ஷிக்கச் சிவன் இந்திர உருவுடன் வருதல். சிவநிந்தை செய்யும் இந்திரனைக் கொளுத்த ஆரம்பித்த உபமன்யுவுக்கு சிவன் வரமளித்தல்.

108 கிருஷ்ணன் உபமன்யுவினிடம் சிவதீக்ஷை பெறுதல். பாசுபத க்ஞானம்.

109 சிவப்ரியனான விஷ்ணுவிற்கு கானம்செய்வது இன்ப மளிக்கும். பகவத் குணத்தைக் கானம் செய்யும் கௌசிக பிராம்மண சரிதம்.

110 நாரதர் தும்புருவுடன் கானத்தில் சமமாதல். பகவத் குண கான மஹிமை.

111 கிருஷ்ணன் அருளால் நாரதர் கானபந்து ஸத்ய பாமை ஜாம்பவதி ஆகியவர்களிடம் வெகுகாலம் கானம் கற்றல்.

112 வைஷ்ணவ லக்ஷணம், பெருமை. சிவ பக்தர் சிறந்தவர்.

113 அம்பரீஷ சரிதத்தில் விஷ்ணு மாயாதரிசனத்தால் ராமாவதாரம் எடுக்கும்படி நேறுதல்.

114 ஹாலாஹல விஷம். லக்ஷ்மி உண்டாதல். மூதேவிக்கு பிரியமான இடம். பிரியமில்லாத இடம்.

115 விஷ்ணுவின் அஷ்டாக்ஷர, த்வாதசாக்ஷர மந்த்ர மஹிமை. ஐதிரேய ப்ராம்மண கதை.

116 விஷ்ணு மந்திரத்தை விட சிவ மந்திரம் மிகச் சிறந் தது. அதனால் துந்து, மூக பிராம்மண குமாரன். சிவகணத் தலைவன் ஆதல்.

117 சிவன் பசுபதி. பசு, பதி, பாசம்.

118 சிவன் பிரகிருதி, புத்தி, அஹங்காரம் இவைகளுக்கு மேலானவன். சிவாக்ஞையினலேயே உலகஸிருஷ்டி முதலியன.

119 உமா மஹேச்வர்களின் விபூதி, பக்தியை வளர்க்கும் சிவ பூஜா விதி.

120 உலக ஸிருஷ்டிக்காக சிவன் அஷ்டமூர்த்தி யாதல்.

121 சிவமூர்த்திகளின் தனித்தனியான ஸ்வரூபம், பத்னி, புத்ரர்.

122 பஞ்ச பிரும்ம வடிவனான சிவனே ஸர்வதத்வ ஸ்வரூபி.

123–124 முனிவர்களால் பலவாக கூறப்பட்ட சிவமூர்த்தி களின் பெயர்.

125 ஸத்வகுணனை சிவனிடமிருந்து உலகம் உண்டாதல். ருத்ரன் தேவருக்கு உபதேசம்.

126 பிரும்மாதி தேவர் செய்த சிவ ஸ்துதி. பாசு பத விரதத்தினுல் சிவன் அருள்.

127 சூர்யமண்டல உமாஸஹித மண்டல சிவபூஜை.

128 மண்டல பூஜைக்கேற்ற அதிகாரி. சைவ தீக்ஷை.

129 நியமம். சிவபூஜா பலன்.

130 ஸௌர ஸ்நாநம். பாஷ்கலர் கூறிய சூர்ய பூஜை.

131 சிவ மானஸ பூஜை. அங்கம், மந்த்ரம், மூர்த்தி, வித்யை.

132 தந்திர விதிப்படி சிவார்ச்சனை செய்தல்.

133 சிவன் கூறிய மூன்றுவகையான அக்னி பூஜை.

134 சிவலிங்கத்தில் அகோரார்ச்சனை சிறந்த பலந்தரும்.

135 ஸ்வாயம்புவமனுவிற்கு ஆயிரத்துநாற்பது பரிவார தேவதைகளுடன் கூடிய அபிஷேக வர்ணனம்.

136 ஸ்வாயம்புவமனுவிற்கு ஸனத்குமாரர் கூறிய துலா புருஷ தானவிதி.

137 மஹாதானங்களில் ஹிரண்ய கர்ப்பதானம். அதன் பலன்.

138–139 தில பர்வததானம். ஏழைக்கேற்ற ஸூக்ஷ்ம திலபர்வத தானம்.

140 சுவர்ண பூமி தானவிதி.

141–142–143 கல்பவிருக்ஷ தானம். கணேச தானம். சுவர்ணதேனு தானம்.

144 ஏழைக்கேற்ற சுவர்ணதேனு தானம்.

145 செல்வம் தரும் லக்ஷ்மீ தானம்.

146–147 திலதேனு தானம். கோசஸ்தானம்.

148–149 ஹிரண்ய அச்வதானம். கன்யா தானம்.

150–151 ஹிரண்ய விருஷபதானம். இருவகை யானை தானம்.

152 பிரும்ம விஷ்ணு மஹேச மூர்த்தி தானம்.

153 பிரும்மா கூறிய ஜீவ சிராத்த பலன்.

154–155 லிங்க ப்ரதிஷ்டையின் மஹிமை.
156 யாககுண்டம். சிவகாயத்ரி முதலியன. மண்டப பூஜை.
157 அகோர சிவ ப்ரதிஷ்டை ஹோம விதி.
158 சுக்ரர் இயற்றிய அகோர பூஜாவிதி.
159 வஜ்ரவாஹனி சரிதம்.
160 காயத்ரி மந்திரத்துடன் வஜ்ரேச்வரி பூஜை.
161 ருத்ரத்தைக்கூறி நெய் முதலியவைகளால் ஹோமம் செய்து யமனை ஜயித்தல்.
162 பசுபாசத்தை அகற்றும் திரியம்பக மந்திர மஹிமை.
163 யோக வழியால் திரியம்பக த்யானம். லிங்கபுராண மஹிமை.

**லிங்கபுராண அநுக்ர மணிகா முற்றிற்று.**



# ஸ்ரீ லிங்க புராண அவதாரிகை.

லிங்கம் பரமசிவனுக்கே ஏற்ற சிறப்பான சின்னம். லிங்கம் என்றாலே சிவலிங்கம் எனப்பொருள் தோன்றும். ருத்ரன் சிவன் என்பதெல்லாம் ஒன்றே. ஒரே ருத்ரன் ஏகாதச ருத்ரராகத் தோன்றினார். அவர் சிவனைப் போலவே இருப்பர். ஏகாதச என்பது பதினொன்று. ஏகாதச ருத்ரரைபற்றியும் லிங்கஸ்வரூபம் பூஜை மந்திரம் ருத்ராவதாரம் பஞ்சாக்ஷரீ விபூதி ருத்ராக்ஷ மஹிமை, சிவராத்ரி பிரதோஷம் முதலியவைகளைப் பற்றியும் இது கூறுகிறது. ஏகாதச ருத்ரர்களைப் பற்றி கூறும் புராணமும் பதினொன்றாவதாக அமைத்தது ஸ்ரீ வியாஸரின் சாதுர்யத்தை விளக்குகிறது. பாகவதம் 2-ஆனதால் இங்கு 12-வதாம்.

வல்லாளர் என்பவரின் மனைவி யசோதாதேவி. இவர்களுக்குப் பிறந்த மூன்று புத்ரர்களில் கணேசர் என்பவர் மூத்தவர். அவர் நீலகண்டர் என்றவரிடம் வித்யாப்யாஸம் செய்தவர். சிவ பூஜையில் ஈடுபட்டவர். அவர் இந்த லிங்க புராணத்திற்கு "சிவதோஷிணீ" என்ற அரிய வியாக்யாநத்தை இயற்றி இருக்கிறார்: சிவனே சிறந்த தெய்வம் என்பதை எடுத்துக்காட்டுகிறார்.

இதில் பற்பல அரிய சிவ ஸ்தோத்ரங்கள் இருக்கின்றன. பிரும்ம புத்திரரான தண்டி என்பவர். கூறிய சிவ ஸஹஸ்ர நாமத்தை, 65-வது அத்யாயத்தில் கூறுகிறார். 115 சுலோகங்களால் கூறப்படுகிறது. மற்றொரு சிவ ஸஹஸ்ரநாமமுமிங்குண்டு. சிவனது பெருமையுடன் மற்ற தேவதைகளைப் பற்றியும் கூறுகிறார். சிவ புராணத்திலுள்ள பற்பல கதைகள் இங்குண்டு. வஸிஷ்ட புத்திரரான சக்தி என்பவர் சரிதம் பராசரர் சரிதம் இங்கு மிக விசேஷமாக உளது. சக்தி சரிதம் இங்குதான் விரிவாக இருக்கிறது. மற்ற புராணங்களில் உள்ள மற்றவைகளும் இங்குண்டு.

சிவ ஸம்பந்தமான ஸகல விஷயங்களையும் இதில் காணலாம்.

---



# 12. ஸ்ரீ லிங்க புராணம்.

நாகராக்ஷரியில் பாம்பே வெங்கடேச்வரா ஸ்டீம்பிரஸ்ஸில் கிடைக்கும். பூர்வ பாகம் நூற்றெட்டு அத்யாயங்களும் உத்தர பாகத்தில் ஐம்பத்தைந்து அத்யாயங்களுமாக 163 அத்யாயங்கள் உள்ளது. 11 ஆயிரம் சுலோகம் உள்ளது.

नमो रुद्राय हरये-ब्रह्मणे परमात्मने ।
प्रधान पुरुषेशाय-सर्गस्थित्यन्त कारिणे ॥

பரமாத்மாவாகவும் பிரும்ம விஷ்ணு ஸ்வரூபனாகவும் ஸ்ருஷ்டி ஸ்திதிலயத்திற்குக் காரணமானவரும் பிரதான புருஷனாகவும் ஈசனாகவும் உள்ள ருத்ரனுக்கு நமஸ்காரம்.

---

சிவன் சப்தவடிவன். ஓங்காரமே சிவஸ்வரூபம். ரிக் வேதமே வாய். ஸாமவேதமே நாக்கு. யஜுர் வேதம் கழுத்து. அதர்வ வேதமே ஹிருதயம். சிவ சக்தியே மாயை எனப்படும். ஈசனருளைக் கொண்டு மாயை உலகை உண்டு பண்ணுகிறது. "அஜாமேகாம் லோஹித சுக்ல கிருஷ்ணாம்" என்ற வேதம் இங்கு சுலோக ரூபமாக இருக்கிறது. சிவனிடமிருந்து மாயையால் மும்மூர்த்திகள் உண்டாவதும் பிரும்மா மூலமாக தேவாஸுர நர ஸ்ருஷ்டியும் வர்ணிக்கப்படுகிறது.

### க்ஞானயோகமும் அங்கமும்.

ஜீவன் பிரும்மத்துடன் லயமாவதற்கேற்ற க்ஞானமே யோகம் எனப்படும். ஹ்ருதயமும் புருவங்களுக்கு இடையும் தியானம் செய்வதற்கேற்ற உத்தமஸ்தானமாம்

மனோவிருத்தியை அடக்குவதே யோகம். க்ஞான யோகத்திற்கு யம நியம பிராணாயாம பிரத்யாஹார தியாந தாரண ஸமாதி என்ற அங்கங்கள் உண்டு. இவைகளை நன்கு கடைபிடித்தவர்க்கே க்ஞாநமும் அதன் மூலமாக சிவாநந்தமும் கிடைக்கும்.

யமம் ஆறங்கமுள்ளது. 1. **அஹிம்ஸா.** தன்னைப் போலவே பிறரை நினைத்து அவருக்கு நன்மை புரிவது. தேவபூஜை குருபூஜை அக்நி பூஜை முதலியவைகளில் செடியிலிருந்து புஷ்பம் எடுப்பது மரம் வெட்டுவது பிராணிகளை ஹிம்ஸிப்பது இவை சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டது. ஆதலால் ஹிம்ஸையாயினும் ஹிம்ஸை இல்லை. மநதாலும் வாக்காலும் உடலாலும் ஹிம்ஸை இல்லாமலிருப்பது க்ஞாந ஸாதநமாம். 2. **ஸத்யம்.** தான் கண்டது அனுபவித்தது கேட்டது இவைகளைக்கூறுவது ஸத்யம். பிறருக்கு அவை தீங்கை அளித்தால் அவை ஸத்யமாகா. பிரியமாயும் ஹிதமாயும் உள்ளதே ஸத்தியம். ஆபாஸமாகப் பேசாமலிருத்தல் பிறர்தோஷத்தைக் கூறுமை இவைகள் ஸத்யமாம். 3. **அஸ்தேயம்.** மூன்று கரணங்களாலும் பிறர் பொருளைக் கையாளாமை திருடாமை எனப்படும். 4. **பிரும்மசர்யம்.** கிருஹஸ்தன் தன் மனைவியினிடம் ருது காலத்தில் நிஷித்தமான காலந் தவிர மற்ற நாட்களில் சேருதல் பிரும்மசர்யம் எனப்படும். பிரும்மசாரி ஸன்யாஸி ஆகியவர் எப்பொழுதும் சிருங்காரத்தை நினைக்கக் கூடாது. கல் அல்லது மரத்தால் ஆகிய பெண் உருவைக்கூட கண்ணால் பார்க்கலாகாது. 5. **அபரிக்ரஹம்.** க்ருஹஸ்தன் தன் குடும்பவாழ்க்கையை வளர்க்க பூமி வீடு தநம் இவைகளை மேல் மேலும் விருத்திசெய்ய ஆசை கொள்ளாமையும் தாநம் வாங்காமையும் அபரிக்ரஹமெனப்படும். யதிகள் அந்தந்த வேளைக்கு வேண்டிய உணவு உடுக்க ஆடை இவைகளைத் தவிர வேறெதையும் ஏற்கக்கூடாது. 6. **வைராக்யம்.** பொருளும் போகமும் உடலும் அழிவுள்ளது. இன்பம் போல் தோன்றி துன்பத்தை அளிப்பவை ஆதலால் ஒன்றிலும் ஆசை வைக்காமை, வைராக்யம் எனப்படும்.

**நியமம்.** 10 அங்கமுள்ளது. சௌசம், யக்ஞம் தபஸ் தாநம் அத்யயநம் காமத்தை அடக்குதல் விரதம்

உபவாஸம் மௌநம் ஸ்நாநம் என்பவை நியமமாகும். வெளிஆசாரம் உள் ஆசாரம் என்ற இரண்டும் இருந்தால் தான் க்ஞாநம் உண்டாகும். ப்ரத்யாஹார. சிவக்ஞாநம் குருபக்தி இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்புதல் இவை ப்ரத்யாஹாரமாம். தியாநம். சித்தத்தை ஒரே இடத்தில் வைத்து ஒன்றையே இடைவிடாமல் நினைப்பது தியாநம். பிராணயாமம். பிராண அபாநன் இரண்டை யும் அடக்குவது பிராணயாமமாகும். ஸிம்மம் சரபம் யானை இவைகளை அடக்குவது போல் கொஞ்சம் கொஞ்ச மாக சுவாஸத்தை அடக்கவேண்டும். தாரண. வேறொரு விருத்தி குறுக்கிடாமல் ஒன்றையே மநதில் நிறுத்துவது தாரணை எனப்படும். ஸமாதி: நமது உடலை மறந்து சைதன்யமாத்ரமாக நிற்பது ஸமாதியாம்.

## பத்து வாயுக்களின் பெயரும் வேலையும்.

ஸதா பிரயாணம் செய்யும் வாயு பிராணன். கீழே இறக்கும் வாயு அபாநன். உடலை வளைந்து கொடுக்கும் படி செய்வது வியாநம். மர்மஸ்தாநங்களை நடுங்கும்படி செய்வது உதாநம். உடலை ஸமமாக ஆக்குவது ஸமாநம். ஏப்பம் விடும்படி செய்வது நாகம். கண்ணைச் சிமிட்டும் படி செய்யும் வாயு கூர்மமாம். தும்பல் வரும்படி செய் யும் வாயு கிருகலம். கோட்டுவாய் விடும்படி செய்வது தேவதத்தன். பெரும் சப்தம் செய்வது தநஞ்ஜயன்.

எங்கே சிவனை தியாநம் செய்வது? நாபி, கழுத்து புருவத்தின் இடை நெற்றி தலை த்விதலம் ஷோடசாரம் துவாதசாரம், தசாரம், ஷடச்ரம், சதுரச்ரம், சந்திர பிம்பம் ஆகிய இடங்களில் சிவனைத்யாநம் செய்யவேண் டும். பிரதிபா சிரவண வார்தா தர்சநா ஆஸ்வாதா வேதநா ஆகிய இவை தியாநத்திற்கு பிரதி பந்தகம் செய் யும் ஸித்திகள். இவைகளைவிட்டு மேல் மேலும் தியாநம் செய்தால் சிவக்ஞாநம் தோன்றும். ப்ரதிபா. ஸூக்ஷ்ம மானது தூரத்திலுள்ளது சென்றது வரப்போவது முதலிய காரியங்களில் அறிவுண்டாவது ப்ரதிபா எனப் படும். சிரவண. தூரத்தில் பேசுவது ரஹஸ்யமானது பிரகாசமானது முதலியவைகள் பிரயத்நம் இல்லாமல் காதில்விழுவது சிரவண. ஸ்பர்ச நமது முயற்சியில்லாமல் ஸ்பர்சத்தால் ஆநந்தமளிக்கக் கூடிய பொருள்கள்

மேலேபடுவது. **தர்சநம்.** தேவர் முதலியவர்களின் உருவம் கண்ணில் படுவது. **ஆஸ்வாதம்.** ரஸாயநம் அமிருதம் முதலியவைகள் நாக்கில் தோன்றி இன்ப மளிப்பது. இந்த ஸித்திகளைக் கண்டு ஏமாரக் கூடாது.

பாத்ரமில்லாமல் கையில் ஜலம் பிண்டம்போல் எடுப்பது, ஜலத்தின்மீது அக்நியை வைத்து மூட்டுவது, நீரால் தீபம் ஏற்றுவது. கையால் தீயைத்தரிப்பது. நினைத்தபொருள் கையில் வருவது. கையால் மலையைச் சுமப்பது. வாயுவைக் கட்டுவது. விரலால் பூமியை ஆட்டுவது ஆகாயத்தில் நடப்பது பக்ஷிகளின் பேச்சை அறிவது முதலியவைகளும் சிவயோகத்தால் ஸித்திக் கும். இவைகளில் மகிழ்ந்து நின்றால் முக்திபெற முடியாது. யோகம் கர்ம க்ஞாநம் முதலியன சிவபக்தி உண்டாவதற்காகச் செய்யவேண்டும்.

ஸத்யோஜாதம் தத்புருஷம் அகோரம் வாமதேவம் ஈசாநம் என்ற ஐந்தும் சிவனது முகங்கள். தனித்தனி ஐந்து மூர்த்திகளுமாகும். அவைகளுக்கேற்ற மந்திரம் ஹோமம் அபிஷேகம் முதலியன மிக விரிவாக இருக் கின்றன. பிரும்மாவும் விஷ்ணுவும் ரஜோ குணத்தால் சண்டையிட இடையே சிவலிங்கம் தோன்ற அடி முடி காண இருவரும் செல்ல காணமுடியாமல் திரும்பி வந்து துதிக்கின்றனர். நாதரூபியாகவும் அக்ஷர ரூபனாகவும் இருக்கிறார் சிவன். [இதனால் தலைகால் தெரியாமல் தடமாடுகிறான் என பழமொழி உண்டாயிற்று.]

## சிவாவதாரம்.

ஒவ்வொரு த்வாபர யுகத்திலும் ஒவ்வொரு தேவர் வியாஸராக அவதாரம் செய்யும் பொழுது பரமசிவனும் பிராம்மண குலத்தில் அவதரித்து நான்கு சிஷ்யர்கள் மூலமாக க்ஞாநமார்க்கத்தைப் பிரசாரம் செய்கிறார். முதல் கலியுகத்தில் சுவேதர் என்ற கிருஹஸ்தனாகத் தோன்றி சுவேதன் சுவேதசிகன் சுவேதாஸ்யன் சுவேதலோஹிதன் என்ற நான்கு சிஷ்யர் மூலமாக வேதம் சாஸ்திரம் கர்மா ஸதாசாரம் முதலியவைகளைப் பிரசாரம்செய்தார். அதே போல் ஒவ்வொன்றிலுமாம். சிவன் குருவாகி நாலுசிஷ் யர்களைக்கொண்டு சாஸ்திர பிரசாரம் செய்கிறார். அந்த

குரு சிஷ்யர் பெயர்களைக் குறிக்கிறோம். 2. ஸுதார: துந்துபி, சதரூபர் ரிசிகர் கேதுமான். 3. தமநர். விகோச விகேச விபாச சாபநாசந. 4. ஸுஹோத்ரர்: ஸுமுகர் துர்முகர் துர்தரர் துரதிக்ரமர். 5. கங்கர்: ஸநகர் ஸநந்தநர் ஸநத்குமாரர் ஸநாதநர். 6. லோகாக்ஷி: ஸுதாமா விரஜஸ் சங்கபாத் ரஜஸ். 7. விபு:- ஜைகிஷவ்யன் புத்ரனுவார். ஸாரஸ்வதர் மேகர் மேகவாஹர் ஸுவாஹர் சிஷ்யராவர். 8. ததிவாஹந கபிலர் ஆஸுரி பஞ்சசிகர் பாஷ்கலர். 9. ரிஷபர் பராசரர் கர்க்கர் பார்க்கவர் ஆங்கீரஸ். 10. ப்ருகு பல பந்து. நிராமித்ரர் கேது சிருங்கர் தபோதநர். 11. உக்ரர்-லம்போதரர் லம்பாக்ஷர் லம்பகேசர் பிரலம்பகர். 12. அத்ரி: ஸர்வக்ஞர் ஸமபுத்தி ஸாத்யர் - ஸர்வர். 13. வாலி ஸுதாமா கச்யபர் வாஸிஷ்டர் விரஜஸ். 14. கௌதமர் அத்ரி தேவஸத சிரவணர் சிரவிஷ்டர். 15. வேதசிரஸ்-குணி குணிபாகு. குசரீரர் குநேத்ரகர். 16. கோகர்ணர் காச்யபர் உசநஸ் சியவநர் பிருஹஸ்பதி. 17. குஹாவாஸீ - உதத்யர் வாமதேவர் மஹாயோகர் மஹாபலர். 18. சிகண்டீ - வாச சிரவா ரிசீகர் சியாவாச்வர் யதீச்வரர். 19. ஜடாமாலீ - ஹிரண்யநாபர். கௌசல்யர்-லோகாக்ஷீ குதிமி. 20. அட்டஹாஸ ஸுமந்து பர்பரீ கபந்தகுசிகந்தர. 21. தாருக - ப்லக்ஷ தார்ப்பாயணி கேதுமான் கௌதமர். 22. லாங்கலீ - பல்லவீ மது பிங்கச்வேதகேது. குசர். 23. ச்வேதர் உசிக. பிருஹதச்வ தேவலகவி. 24. சூலீ - சாலிஹோத்ர அக்நிவேச: யுவநாச்வ சரத்வஸு: 25. முண்டீச்வரர். சகல குண்டகர்ண குபாண்ட பிரவாஹக. 26. ஸஹிஷ்ணு உலூக வித்யுத சம்பூக ஆச்வலாயநர். 27. ஸோமசர்மா - அக்ஷபாத குமாரர். உலூகர் வத்ஸர். 28. லகுலீ எனும் பிரும்மசாரி குசிகர் கர்க்கர். மித்ரர் கௌருஷ்யர் இவர்கள் க்ஞாநாவதாரம். பகவானது கலாவதாரமானதால் க்ஞாநப்ரசாரம் செய்து மறைந்தார்கள்.

பிரதக்ஷிணம் செய்யச்செய்ய பாபமகலும. ஆந்ஹிக தர்மம் சிவ பூஜாவிதி விரிவாக உளது. புருஷ என்ற சொல்லுக்கு வேதங்கூறிய பொருளை இங்கு விவரிக்கிறார். முன்னமேயே நான் இங்கு இருந்தேன். ஆதலால்

ஆத்மாவுக்குபுருஷன் எனப்பெயர் தோன்றிற்று. ஸ்தூல மாக பாஹ்யபூஜை செய்வதைவிட மாநஸிகமாக ஆந்தர பூஜை செய்வது சிவனுக்கு மிக பிரியமானது.

---

## தாருகாவந சரிதம்.

தாருகாவந ரிஷிகள் இல்லறத்திலேயே ஈடுபட்டிருந்த னர். அவர்களுக்கு முக்தி மார்க்கத்தை உபதேசிக்க சிவன் அங்கு சென்றார். விசேஷமான உருவத்துடன் வஸ்த்ரமில்லாமல் மந்தஹாஸத்துடன் துறவியாக வந்த சிவனைக்கண்டு பெண்கள் எல்லாம் மோஹித்தனர். இதைக்கண்ட முநிவர் நீ யார் என அவரைக்கேட்டனர். அவர் மௌநியாக இருந்தார். கோபத்தினால் முநிவர் அவரைச் சபித்தனர். சாபம் அவரிடம் பயன் பெற வில்லை. சிவனும் மறைந்தார். முநிவர் பிரும்மாவிடம் சென்று அது யார் என விசாரித்தனர். வந்த விருந்தின ரைப் பூஜியாத உங்கள் ஜன்மம் வீண். ஸுதர்சநன் அதிதி பூஜையால் வந்த மிருத்யுவையும் ஜயித்தார்.

ஸுதர்சநன் தனது மனைவிக்கு அரிய நல்லுபதேசம் செய்தார். விருந்தினராக வருபவர் சிவனே. அவர் உனது உடலைக்கேட்டாலும் தரவேண்டுமென்றார். அவர் வெளியில் சென்றிருந்தபோது தர்மதேவதை விருந்தினராக வந்து அவள் உடலையே கேட்டார். பதியின் உபதேசமே பெரிதென அதை மறுக்காமல் நின்றாள். தர்மர் தெருக் கதவைத் தாளிட்டார். அதே க்ஷணத்தில் ஸுதர்சநன் வந்து கதவைத்தட்டினார். விருந்தினர் உள்ளே இருந்து நான் உமது மனைவியை என் மனைவியாக்கி ரமிக்கிறேன் என்றார். ஆஹா! ஸந்தோஷம்! எங்கள் பிறவி ஸபல மானது என்றார். தர்மம் நிஜ உருவை எடுத்து நான் அவளை மநதினாலும் நினைக்கவில்லை. உங்கள் அதிதி பூஜையைப் பரீக்ஷிக்க வந்தேன். இந்த நிமிஷம் உன்னைக் கொண்டு செல்ல வந்த யமன் நீங்கள் செய்த விருந்தால் விலகிவிட்டான் என்றார். மற்றும் பலர் சிவனுக்கும் பூஜைசெய்து பிறப்பிறப்பை அகற்றிக் கொண்டனர். அத்தகைய சிவனை நீங்கள் சிவமாயையால் ஏமார்ந்து பூஜிக்காமல் இருந்தீர்கள். [அதிதி தேவோபவ என் றதை விவரிக்க இந்த கதை முன்வந்தது.]

**சுவேதன்** என்ற வேதியன் நித்யம் சிவபூஜை செய்து வந்தான். அவனைக் கொண்டுசெல்ல யமன் வந்தபோது அவன் லிங்கத்தை அர்ச்சித்து வந்தான். அசைவற்ற ஸ்தாணுவா ? கட்டையா ? உன்னைக் காக்கும் ? எனச் சுவேதனைப் பாசத்தால் கட்டினன். லிங்கத்திலிருந்து சிவன் தோன்றி சூலத்தினல் யமனைச் சிக்ஷித்து சுவேதனைக் காப்பாற்றினர். இந்த ஐதிஹ்யம் நடந்த இடம் சுவேதாரண்யம். இதைக்கண்டு ஆநந்தக் கூத்தாடும் முநிவருக் கேற்றபடி தாளம் போடுவதுபோல் அழகிய விருத்தத்தால் சுலோகம் கூறுகிறார் வியாஸர்.

**ततः सदाशिवः स्वयं द्विजं निहन्तु मागतं ।**
**निहन्तु मन्तकं स्वयं न्स्मरारि यज्ञहा हरिः ॥**

க்ஞாநமும் முக்தியும் வேண்டுமானால் சிவனைப் பக்தியுடன் பூஜிக்கவேண்டும் என பிரும்மா உபதேசித்தார். தாருகாவந முநிவர் சிவனைப் பூஜிக்க, முன்போலவே பகவான் பிக்ஷாடந மூர்த்தியாகத் தோன்றினர். அவரை நன்கு பூஜித்துச் சிவனது நிஜ ஸ்வரூபத்தைக் காட்டித் தத்துவோபதேசம் செய்யும்படி வேண்டினர்கள்.

பக்தனைப் பூஜிப்பது சிவனைப் பூஜிப்பதைவிட அதிக பலனைத் தரும். பித்தனைப் போலத் திரியும் முக்தனைக் கண்டு அவமதிக்காதே. விபூதி அணிவது சிவ பூஜைக்கு ஸமமாகும். பாபங்களை எல்லாம் பக்ஷிப்பதால் அது பஸ்ம எனப்படும். அக்நிவடிவன் நான். ஸோமரூபமானவள் தேவி. அக்நி எரிந்து ஸோமன் குளிர்ச்சியாக்கியது பஸ்மா. பஸ்மாவை அணிந்து சிவபக்தியில் ஈடுபடுபவர் உத்தராயணத்தில் உடலைவிட்டு அர்ச்சிராதி வழியாக கைலாஸம் செல்வர். சிவனைப் பூஜிக்காதவர் தக்ஷிணாயணத்தில் இறந்து பித்ருமார்க்கமாக யமலோகம் செல்வர் என்று கூறி சிவன் மறைந்தார்.

---

## ததீசி க்ஷுப சரிதம்.

ததீசி எனும் சிவ பக்தருக்கு க்ஷுபன் என்ற அரசன் நண்பன். இருவரும் விளையாட்டாக வாதம் செய்தபோது

"அஷ்டதிக்பாலர் விஷ்ணு இவர்களது அம்சமான க்ஷத்ரியனே சிறந்தவன்" என்றார் க்ஷுபன். மாதேவனையே தெய்வமாகக் கொண்ட பிராம்மணனே உயர்ந்தவன் என்றார் ததீசி. வாய் சண்டை கை சண்டையாயிற்று. ததீசி அரசன் தலையில் குட்டினார். க்ஷுபர் வஜ்ராயுதத்தால் முனிவர் உடலைப் பிளந்தார். முனிவர் சுக்ரரை நினைக்க அவர் வந்து மிருதஸஞ்ஜீவினீ எனும் மந்திரத்தால் எழுப்பி அதை உபதேசித்துச் சென்றார். ததீசி மறுபடியும் அரசனை இடது காலால் உதைத்தார். அரசன் வஜ்ரத்தை அவர் மீது ஏவ அது பயனில்லாமல் வீழ்ந்தது. அரசன் விஷ்ணுவை வேண்ட சிவபக்தனே சிறந்தவன். அதிலும் மஹர்ஷி அவர். சக்தியால் அவரை ஜயிக்க முடியாது. யுக்தியினால் முயற்சிக்கிறேன் என்று பிராம்மண வடிவந்தாங்கி ததீசியிடம் சென்றார். அவர் விஷ்ணோ! க்ஷுபனுக்காக மாறுவேடம் பூண்டு வந்திரா? உமக்கு என்ன வேண்டுமென்றார். எனக்காகத் தாங்கள் ஒருமுறை க்ஷத்ரிய பலத்தைக்கண்டு அஞ்சுகிறேன் என்றால் போதும். உமக்கு நமஸ்காரம் என்றார் விஷ்ணு.

விஷ்ணோ! சிவ பக்தனுக்கு யமனிடமும் அச்சமில்லை! அபயம் பெற்றவர் பயமென்றால் அது சிவனை அவமதிப்பதாகும் என்றார். விஷ்ணு தனது சக்ரத்தை அவர்மீது ஏவினார். சிவன் தந்த சக்ரமது! சிவ பக்தனிடம் நுனி மழுங்கித் திரும்பிற்று. பல திவ்யாஸ்திரங்களை ஏவினார். தேவரும் அவருக்கு உதவியாக வந்து போர் புரிந்தனர். முனிவர் ஒருவர்! ஆயுதமில்லாதவர்! தேவர் பலர்! திவ்யாஸ்திரத்தால் தாக்குகின்றனர். கர்மானுஷ்டானத்திற்காக வைத்திருந்த தர்ப்ப முஷ்டியை விட்டெறிந்தார். அது சூலமாகி தேவரையெல்லாம் விறட்டியது. விஷ்ணு தன்னைப் போல் பலரைப் படைத்துப் போரிட்டார். தனது கண்ணாலேயே முனிவர் அனைவரையும் சாம்பலாக்கினார். விஷ்ணு விச்வரூபமெடுத்தார். ததீசி ஜலத்தை ப்ரோக்ஷித்து விச்வரூபத்தைச் சாந்தமாக்கினார். தன் உடலில் வைகுண்டம் முதல் பதினான்கு உலகையும் காட்டினார். சிவ பக்தியினருகே உமது மாயை நிற்காதென்றார். சதுர்முகன் வந்து இருவரையும் ஸமாதானப் படுத்தினார். சிவபக்தனைவிடச் சிறந்தவரில்லை. சிவன் பிராம்மணன். ஆதலால் பிராம்மணர் எல்லோராலும் பூஜிக்கத்தக்கவர் என்றார். யுத்தம்

நின்றது. தக்ஷ யக்ஞத்தில் தேவரனைவரும் அவமான மடைவர் எனத் ததீசி சாபமளித்தார்.

சிவன் பெருமையை விளக்க வந்தது கதை. விஷ்ணுவையோ க்ஷத்ரியரையோ அவமதிப்பதாக நினைக்கலாகாது. கதைகளிலுள்ள நீதியையே ஏற்கவேண்டும்.

---

## நந்தி சரிதம்.

சிலாதர் என்ற முனிவர் பிறவிக்குருடர். தனக்கு க்ஞானக் கண்ணைத்தரும் புத்திரன் பிறப்பிறப்பில்லாதவனாக உண்டாகவேண்டுமென சக்ரனை நாடித்தவம் செய்தார். சக்ரன் பிரும்மனுக்கே பிறப்பிறப்புண்டு. தத்புருஷ கல்பத்தில் சிவன் பிரும்மாவையும் விஷ்ணுவையும் படைத்தார். விஷ்ணு மேக ரூபமெடுத்து சிவனைச் சுமந்தார். பாற்கடலில் குழந்தையாய் படுத்திருக்கும் விஷ்ணுவிடம் சென்று பிரும்மா நான் தங்களை விழுங்கி என்னிடமிருந்து தங்களைப் படைக்க அருள் புரிய வேண்டுமென்றார். விஷ்ணுவும் அப்படியே பிரும்மாவின் புருவத்திலிருந்து உண்டானார். அதேபோல் சிவனும் தோன்றினார். என்றாலும் நீ கேட்டபடி ஜநநமரணமில்லாத புத்ரனைத்தர சிவனே வல்லவனென்று கூறி மறைந்தார். சிலாதர் சிவனை நாடி ஆயிரமாண்டு தவம் புரிந்தார். அவர்மீது புத்து தோன்றிற்று. சிவன் அப்புத்தை அகற்றி நானே உனக்குப் புத்திரனாக அவதரிக்கிறேன் என்று கூறி அவரது யாக பூமியிலிருந்து சிசுவாகத் தோன்றினார்.

ஆநந்தத்தை அளித்த அந்த குழந்தைக்கு நந்தீ என்று பெயரிட்டார். ஏழாண்டில் நந்தி ஸகல வித்யைகளிலும் நிபுணன் ஆனார். மித்ராவருணர், ஸாலங்காயநர் எனும் சிலாதமுநிவரிடம் வந்து உமது புத்ரன் அல்பாயுஸ் என்றனர். சிவமாயையால், சிவனே தனது புத்ரன் பிறப்பிறப்பில்லாதவன் என்பதை மறந்தார். மூர்ச்சையாகி கீழே விழுந்தார். முநிவர் பல சாந்திகளைச் செய்தனர். நந்தி பெற்றோர் கவலையைத் தீர்க்க ஸ்ரீ ருத்ர ஜபம் செய்தார். சிவன் தனது பரிவாரத்துடன் வந்து தன் கரத்தால் நந்தியைத்தொட்டு தன் கழுத்திலிருந்த தாமரை மாலையை நந்திக்களித்து சிவகணங்களுக்குத் தலைவனாகச் செய்தார்.

ஜடையிலிருந்த ஜலத்தால் அவருக்கு அபிஷேகம் செய்தார். அங்கு ஜடோதகா என்ற நதி உண்டானது. உமையவள் அவரைப் புத்ரன் எனத் தழுவி மூன்று கண்களிலிருந்தும் ஆநந்த பாஷ்யம் பெருக்கினாள். அது த்ரிஸ்ரோதஸ் என்ற நதிகளானது. அவைகளைக் கண்ட விருஷபம் கர்ஜித்தது. அதிலிருந்து விருஷத்வநி என்ற நதி உண்டானது. சிவன் கிரீட குண்டலங்களை அணிவித்து மருத்துக்களின் பெண்ணான ஸுயசஸ் என்பவளை மணம் செய்வித்து கைலாஸம் சென்றார். [திருவையாற்றிற்கருகே உள்ள **திருமழப்பாடி** என்ற க்ஷேத்திரத்தில் **நந்தி விவாஹம்** நடந்ததாக ஐதிஹ்யம்.] நந்தியை வணங்காமல் அவர் உத்திரவு பெறாமல் ஆலயத்திற்குள் நுழைந்தால் பிரும்மஹத்தி பாபம் உண்டாகும்.

## சிவஸ்தாநம்.

நிர்க்குணமூர்த்தியாயுள்ள சிவன் அங்கிங்கெனாதபடி எங்குமிருக்கிறார். உருவுடன்கூட ஏழு கடல் நீரிலும் ஏழுத்வீபங்களிலும் மலைகளிலும் கைலாஸத்திலும் பூமியிலுள்ள மேருமலையிலமைந்த கைலாஸத்திலும் வநங்களிலும் நதிகளிலும் ஸூர்ய மண்டலம் ஸ்வயம்பூ க்ஷேத்ரங்கள் தேவ ரிஷிகள் பிரதிஷ்டை செய்த ஆலயம் முதலிய இடங்களிலும் ஸாந்நித்யத்துடன் வஸிக்கிறார். இதைக்கூறும் வகையில் ஒவ்வொரு த்வீபத்திலுமுள்ள சிவமூர்த்தி அரசர், மலை நதி முதலியன வகைளை வர்ணிக்கிறார். ஸூர்ய மண்டலத்தில் உள்ள தேவ அஸுர கந்தர்வர் நாகர் முதலியவர்களை விரிவாகக் கூறுகிறார். ஸூர்ய ரதம் போல் சந்த்ர ரதம் ஆங்குள்ளவர், அவர்களின் கிரணங்களின் பெருமை. அவர் நவக்ரஹங்கள் ஆதலால், மற்ற கிரஹங்கள் முதலியவைகளை விளக்குகிறார். **துருவ சரிதத்தில் விச்வாமித்திரர்** துவாதசாக்ஷரியை துருவனுக்கு உபதேசித்ததாக வர்ணிக்கிறார்.

## கச்யபர்மூலம் தேவ ஜாதிகள்.

தக்ஷ ப்ரஜாபதி அறுபது கன்யகைகள் மூலமாக ஸிருஷ்டியைப் பெருக்கினார். கச்யபருக்கு பதிமூன்று கன்யகைகளை அளித்தார். அதிதி தேவர்களுடன் துவாதச

ஆதித்யர்களையும், திதி ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுக்களையும், தநு விப்ரசித்தி முதலிய நூறு தானவர்களையும், தாம்ரா கிளி கழுகு பாஸீ ஸுக்ரீவா க்ருத்திகா சுசி என்ற பக்ஷிகளையும், விநதா கருடனையும் அருணனையும், ஸுரஸா ஆயிரம் ஸர்ப்பங்களையும் கத்ரு பல தலைகள் உள்ள ஆயிரம் பாம்புகளையும், குரோதவசா ராக்ஷஸர்களையும், சுரபி கோமஹிஷிகளையும், முநி ரிஷிகணங்களையும், அரிஷ்டா கந்தர்வ அப்ஸரஸ்ஸுகளையும், இலா செடி கொடிகளையும், த்விஷா யக்ஷராக்ஷஸர்களையும் உண்டு பண்ணினார்கள்.

## கச்யப கோத்ரம்.

கச்சயபர் தனது கோத்ரம் விருத்தியாகும்படியான புத்ரர் வேண்டுமென தவம் செய்தார். வத்ஸரன், அஸிதர், என்ற இருபுத்ரர்கள் பிறந்தார்கள். வத்ஸரருக்கு நைத்ருவர் ரைப்யர் என்ற இருவர் உண்டானார்கள். ச்யவந முநிவரது பெண்ணான ஸுமேதஸ்ஸை மணந்து நைத்ருவர் குண்டபாயி என்ற குழந்தைகளைப் பெற்றார். ரைப்யர் ஏகபர்ணா என்பவளை மணந்து பிரும்ம நிஷ்டரான சாண்டில்யர் முதலியவர்களை உண்டு பண்ணினார். இவர்களில் தேவலரே பிரஸித்தமானவர். சாண்டில்ய நைத்ருவ ரைப்ய என்ற மூவர் காச்யப கோத்ரத்தை விருத்தி செய்தவர் ஆவர். **ஆத்ரேய கோத்ரம்.** ராகு ஸூர்ய மண்டலத்தை மறைத்தபோது பூமியில் சில காலம் ஸூர்ய ப்ரபை பிரகாசிக்காமலே இருந்தது. அச்சமயம் தனது தவத்தால் உலகில் ஸூர்யப்ரபை பிரகாசிக்கும்படி செய்தார் அத்ரி முநிவர். மஹரிஷிகள் அத்ரியை **ப்ரபாகரர்** என்றழைத்தார்கள். தத்தர் தூர்வாஸர் என்ற புத்ரர்களும் அமலா என்ற பெண்ணும் பிறந்தார்கள். அத்ரி கோத்ரத்தில் சியாவர், பிரத்வஸர், வவல்கு, கஹ்வர என்ற நால்வர் பிரஸித்தமானவர்கள்.

## சக்தி சரிதம்.

பிரும்மாவினுடைய மாநஸிக புத்ரர் வஸிஷ்டர், அருந்ததியை மணந்து சிறப்பாக இல்லறத்தை நடத்தினார். அவரது உயர்ந்த அநுஷ்டாநமும் அருந்ததியின் கற்பும் மிகக் கொண்டாடத் தக்கதாக இருந்தது. தாரை

நிமித்தமாக தேவாஸுர யுத்தம் நடந்து. முடிந்தபின் உலகில் மழை இல்லாமல் போயிற்று. உணவுப்பொருள் விளையாமல் பலர் பட்டினி கிடந்தனர். வஸிஷ்டர் தனது தவத்தால் உலகிற்கு உணவூட்டினர். அருந்ததி யிடம் சக்தி முதலிய நூறு புத்ரர்கள் பிறந்தனர். சக்தி என்பவர் அத்ருச்யந்தீ என்பவளை மணந்தார். கல்மாஷ பாதன் என்ற அரசன் வஸிஷ்டரால் சபிக்கப்பட்டு ராக்ஷஸனுக ஆனன். ராக்ஷஸனுக வந்தபோது ருத்ரன் என்ற பெயர் பெற்றான். விச்வாமித்திரர் வஸிஷ்ட புத்ரர் களைப் பக்ஷிக்கும்படி அவனைத் தூண்டினர். சக்தி முதலி யவர்களை ருத்ரன் பக்ஷித்தவுடன் தனது குலம் அழிந்த தென பிராணனைவிடத் தீர்மானித்தார். மலையிலிருந்து அருந்ததியுடன் விழுந்தார். பூதேவி அவர்களை அடிபடா மல் காப்பாற்றினள்.

அத்ருச்யந்தீ வஸிஷ்டரைப் பணிந்து உங்கள் குலத்தை விருத்தி செய்யும் குழந்தை எனது கருவிலிருக் கிறது என்று ஸமாதானம் செய்தாள். ஓரிரவு வேதத்வனி யைக்கேட்டு நிசியில் யாரிதைக் கூறுவது? என வஸிஷ் டர் சிந்திக்கும்போது விஷ்ணு, "எனது அம்சத்தால் உண்டானவன் அவளது கருவிலிருந்து வேதமோதினன். ருத்ர பக்தனை அவன் உனது வம்சம் விளங்கும்படி செய்வான்" என்றார். தனது பதி இறந்த பின் தான் பிரஸவிக்கப் போவதை நினைத்து அதிருச்யந்தி மிக வருந்தினள். பத்தாவது மாதத்தில் சக்தி என்ற குழந்தை பிறந்தது. அன்புடனதை வளர்த்துவர தாயைப்பார்த்து நீ ஏன் ஆபரணமில்லாமல் பதியை இழந்தவள் போலிருக் கின்றாய்? என்றான். அவள் கதறி அழுவதைப் பார்த்து வஸிஷ்டர் வந்து அவளைச் சாந்தப்படுத்தி சக்திக்கு நடந்த விஷயத்தைக் கூறினர். அன்னையே! விரைவில் தந்தையை அழைத்து வருகிறேன் என்று ஏகலிங்கார்ச்சநம் செய் தான். இந்த சிறுவனின் தவத்தைக்கண்டு மகிழ்ந்த சிவன் பிரும்மாதி தேவர்சூழ, தம்பிகளுடன் கூட சக்தி யையும் அழைத்துக்கொண்டுவந்து தர்சநம் தந்தார். வஸிஷ்டர் மூலமாக சக்தியை தனது தந்தை என அறிந்து அவரை வணங்கினன். சிவனைத் துதித்தான் குழந்தை. சிவனும் சக்தியும் மறைந்தனர். தந்தையைக் கொன்ற

ராக்ஷஸ ஜாதியை அழிக்க குழந்தை ஸங்கல்பம் செய்து அவர்களைக் கொளுத்தினான். தவ வலிமையால் வஸிஷ்டரும் ராக்ஷஸ வம்ச மூல புருஷரான புலஸ்த்யரும் வேண்டாமென தடுத்தனர். யாகத்தை நிறுத்தினான். பலருக்கு – பகைவர்க்கு – சரம்போலிருந்ததால் பராசரர் எனபட்டஞ் சூட்டி புலஸ்த்யர் ஒரு புராண ஸம்ஹிதையை இவர் இயற்றுவார் என்று கூறி மறைந்தார்.

ஸூர்யன் சாயா ஸம்க்ஞா மநு யமதர்மன் சனைச்சரன் இளன் புதன் விகுக்ஷி ப்ருது துந்துமாரன் மாந்தாதா அநரண்யன் த்ரிதன்வா முதலியவர் சரிதம் விரிவாக உளது. திரிதன்வா என்பவர் பொருளில்லா ஏழை. அச்வமேத வேள்வி செய்ய விரும்பினார். பிரும்ம புத்ரரான தண்டி என்பவரை வணங்கி இதற்கென்ன வழி என கேட்டார். அவர் சிவ ஸஹஸ்ர நாமாவைக்கூறி அதை ஜபித்தால் அச்வமேத பலன் உண்டாகுமென்றார். அவர் அதை ஜபித்து யாகபலனைப் பெற்றார்.

சிவ ஸஹஸ்ரநாம—115 சுலோகம் உள்ளது.

1. स्थिरः स्थाणुः प्रभुर्भानुः प्रवरो वरदोवरः ।
सर्वात्मा सर्व विख्यातः सर्वः सर्वकरो भवः ॥

115. व्रताधिपः परंब्रह्म मुक्तानां परमागतिः ।
विमुक्तो मुक्त केशश्च-श्रीमान् श्रीवर्धनो जगत् ॥

---

## ராஜ வம்சம்.

**ஸூர்ய வம்சத்தில்** த்ரிதன்வா, த்ரய்யாருணி, ஸத்யவ்ரதன் (த்ரிசங்கு), ஸகரன், ஸாகரர், அம்சுமான், திலீபன், பகீரதன் (கங்கையைக் கொண்டுவந்தது), சுருதன், நாபாகன், அம்பரீஷன், ஸிந்துத்வீபன், அயுதாயு, ருதுபர்ணன் (இவன் நளனது நண்பன் சொக்கட்டானுடத் தெரிந்தவன்), வீரஸேநனது புத்ரன் ஒரு நளன். இக்ஷ்வாகுவம்சத்தில் உண்டான நளன் என இரு நளர்கள் புராணப்ரஸித்தர்கள், ஸுதாஸன், ஸௌதாஸன் (அவனே கல்மாஷபாதனானன்), அச்மகன், மூலகன் [இவன் பரசுராமரிடம் பயந்து பெண்கள் நடுவில் வஸித்து வந்ததால்

ஸ்திரீ கவசன் எனப் பெயர் பெற்ருன்], சதரதன், இல விலன், விருத்தசர்மா, விச்வஸஹன், கட்வாங்கன் [இவன் மிக பராக்ரமசாலி ஸத்யஸந்தன் தர்மிஷ்டன் மூன்று லோகத்தையும் ஜயித்தவன். இந்திரனுக்கு உதவியாக அஸுரர்களை ஜயித்து பூமிக்குத் திரும்பும்போது உனக்கு யாது வரம் வேண்டுமென்ருன் இந்திரன். நான் எத்தனை நாள் ஜீவித்திருப்பேன் என்பதைக் கூறுங்கள் என்ருர் அவர். ஒரு முகூர்த்த காலமே உமக்கு ஆயுஸ் என்ருன் இந்த்ரன். உடனே பூலோகம் வந்து புத்ரனுக்கு ராஜ்ய மளித்து முகூர்த்த காலத்திற்குள் பகவானை த்யாநம் செய்து முக்தி பெற்ருன்]. திர்க்கபாஹு, அஜன். ரகு, தசரதன், ராமன், லவன், அதிதி, நிஷதன், நலன், நபன், புண்டரீகன், க்ஷேமதன்வா, தேவாநீகன். அஹீநரன், ஸஹஸ்ராச்வன், ச்ருதாயு, பிருஹத்பலன் இதுவரை ராஜ வம்சத்தைக் கூறி சிலர் சிவலோகம் எய்தனர். சிலர் முக்திபெற்றனர் என்று வர்ணித்தார்.

**சந்த்ரவம்ச அரசர் :** சந்த்ரன், புதன், இலன், புரூர வஸ், ஆயுஸ், நகுஷன் யதி, யயாதி [யயாதி சுக்ரர் பெண் தேவயானியையும், அஸுரேந்த்ரனது புத்ரியான சர் மிஷ்டையையும் மணந்தார்].

## ஜநமேஜயன் செய்த பிரும்மஹத்தி.

யயாதியின் குணத்தைக் கண்டு களித்த சுக்ராசார் யார் அவனுக்குத் திவ்யமான ஸ்வர்ணமயமான தேரை யும் அக்ஷய்யமான இரு அம்புப்பெட்டிகளையும் வில்லை யும் அளித்தார். அதனுல் ஆறுமாதங்களில் அவனி அனைத் தையும் ஜயித்தார். அந்த ரதம் கௌரவ வம்சத்துச் சொத்தாக இருந்தது. பரீக்ஷித்தின் புத்ரனை ஜநமே ஜயன் ஒருநாள் அந்த ரதத்தை கர்க்காசார்யரது புத்ரனை அக்ரூன் மீதேற்றி அவனைக் கொன்ருன். உடனே அந்த ரதம் மறைந்துவிட்டது. அரசன் அறியாமல் செய்த ப்ரும்மஹத்தியை நினைத்துக் கதறினுன். இந்திரேதி எனும் முனிவர் அச்வமேத யாகம் செய்துவைத்து அந்த பாபத்தை அகற்றினர். அவபிருதத்தன்று அந்த திவ்ய ரதம் அவன் கண்முன் தோன்றிற்று. ஆனுல் சக்ரன் அதைச் சேதிராஜனை வஸுவுக் களித்தார்.

யயாதி சரிதத்தில் அவர் வைராக்யத்தால் கூறும் சுலோகங்களும் அதன் கருத்துகளும் மற்ற கவிகளாலும் வேதாந்த நூல்களாலும் கையாளப் படுகின்றன. அங்குள்ள பத்து சுலோகங்களும் மிக மிகச்சிறந்தன. கிருதவீர்யன் கார்த்தவீர்யன் ஜயத்வஜன் தாலஜங்கன் விருஷமது விருஷ்ணிசூரன் குசங்கன் சித்ரரதன் சசபிந்து யக்ஞன் த்ருதி ருக்மகவசன் ஜ்யாமகன் [இவன் மனைவிக்கு அடிமையானவன்]. ஓர் அரசனை ஜயித்து அவனது அழகிய கன்யகையைத் தூக்கிவந்தான். அதைக்கண்ட மனைவி, இவள் யார்? இவளை மணக்கவா அழைத்து வந்தீர்? என்று மிறட்டினாள். அரசன் அச்சத்துடன் இல்லை! இல்லை! நமது புத்ரனுக்கு அளிக்க அவளை அழைத்து வந்தேன் என்று ஸமாதானம் கூறினான். ஆனால் அவர்களுக்குப் புத்திரனில்லை. அவன் மனைவி அதைக் கூறியவுடன் இறைவன் அருளால் புத்ரன் பிறப்பான் என்றார். அங்ஙனமே ஜ்யாமகன் பகவானை உபாஸித்து ஒரு புத்ரனைப் பெற்று அந்த கன்யகையை அவனுக்களித்தார்.

---

இது சிவபுராணமேயானாலும் கிருஷ்ணனுடைய சரிதத்தைப் பாகவதம்போல் பக்தி ததும்ப மிக அழகாக வர்ணிக்கிறார் வ்யாஸர். பாகவதம் விஷ்ணு புராணம் பிரும்ம வைவர்த்தம் முதலியவைகளில் உள்ளதுபோல் கிருஷ்ண சரிதம் மிக ரஸமாக இருக்கின்றது. வியாக்ரபாதருடைய புத்ரரான உபமன்யுவினிடம் பஞ்சாக்ஷரீ சிவதீக்ஷை முதலியவைகளைப் பெற்று கிருஷ்ணன் ஜாம்பவதி மூலமாக ஸாம்பனைப் பெற்றார் என்பது பலவிடங்களில் கூறப்படுகிறது. அந்த கதையுடன் கூட **ருக்மிணீ தேவி**யும் கிருஷ்ணனும் பனிரண்டாண்டு சிவனை நாடித் தவம் புரிந்து பிரத்யும்நன் முதலிய பத்து புத்ரர்களைப் பெற்றதாக இங்கு அதிகப்படியாக காணப்படுகிறது. பிறப்பும் உடலை விடுவதும் விஷ்ணுவுக்கு அவரிச்சைபடி தோன்றுகிறது. கர்மத்தாலல்ல என்கிறார் வியாஸர்.

## பிரபஞ்ச ஸ்ருஷ்டி.

புராண லக்ஷணத்தைத் தழுவி உலகம் பஞ்சபூதங்கள் பூதங்களின் சேர்க்கை காலம் பதினான்கு உலகம்

ஆங்குள்ளவரது லக்ஷணம் முதலியவைகளைக் கூறி எல்லாவற்றிற்கும் சிவனே காரணம் என வர்ணிக்கிறார் இங்கு.

## சிவனது சில நாமாக்களின் பொருள்.

எங்கும் எப்போதுமிருப்பதால் **ஆத்மா.** எல்லா வஸ்துக்களிலும் வியாபித்திருப்பதால் **விஷ்ணு.** எல்லோருக்கும் பகவத் தன்மையை அளிப்பதால் **பகவான்.** நிர்மலமாக இருப்பதால் **சிவன்.** எல்லோரையும்விட மிகச் சிறந்தவர் ஆதலால் **பரமன்.** எல்லோரையும் ரக்ஷிப்பதால் **ஓம்.** முதல்வனானதால் **ஆதி தேவன்.** தேவரில் சிறந்த தேவராதலால் **மஹாதேவன்.** எல்லோரையும் வசமாக்கித் தான் ஒருவருக்கும் வசமாகாததால் **ஈச்வரன்.** மிகப் பெரியவராக இருப்பதால் **பிரும்மம்.** உலகம் உண்டாவதற்கு முந்தியே இருப்பதால் **புருஷன்.** எப்போதும் மங்களத்தை அளிப்பதால் **ஸதாசிவன்.** க்ஷேமத்தை உண்டு பண்ணுவதால் **சம்பு.** துஷ்டர்களையும் பக்தர்களது பாபத்தையும் அழவைப்பதால் **ருத்ரன்.** இதுபோல் எண்ணிறந்த நாமாக்களைப் பெற்ற சிவன் பெருமையை எவன் கூறவல்லவன் என்கிறார். சிவனுக்கும் விஷ்ணு என்ற பெயருண்டு என்பது கவனிக்கத்தக்கது.

## திருபுர வதம்.

குஹனால் கொல்லப்பட்ட தாரகாஸுரனுக்கு வித்யுன்மாலீ தாரகாக்ஷன் கமலாக்ஷன் என மூன்று புத்ரர்களிருந்தார்கள். அவர்கள் மூவரும் பிரும்மனை நாடிக் கடுந்தவம் புரிய அவர் எதிரே தோன்றி யாதுவரம் வேண்டுமென்றார். அவர்கள் சாகா வரம் கேட்க அதைத் தவிற மற்ற வரம் கேட்கும்படிக் கூறினார் சதுர்முகன். தாங்கள் மூன்று நகரங்களாக இருந்து எங்கும் பறந்து செல்ல சக்திபெற வேண்டும் என்றும் ஆயிரம் ஆண்டுகளுக் கோர்முறை தாங்கள் ஒன்று சேரும்பொழுது ஸர்வேச்வரன் அரிய ரதத்திலமர்ந்து ஒரே அம்பால் எங்களை அடித்தால் அப்பொழுதே தங்களுக்கு மரணம் நேரலாமென்றும் வரங்களைக் கேட்டனர். அதை அளித்து பிரும்மா மறைந்தார்.

தாரகாக்ஷன் ஸுவர்ண நகரமானான். கமலாக்ஷன் வெள்ளி நகரமாகவும், வித்யுன்மாலி இரும்பு நகரமாகவும்

ஆனார்கள். அத்புதமான அந்நகரங்களில் ஒவ்வொரு வீட்டிலும் சிவபூஜை வேதாத்யயநம் நித்ய நைமித்திக கர்மா முதலியன சிறப்பாக நடந்துவந்தன. யக்ஞ யாகாதிகளும் கிணறுவெட்டல் முதலிய பூர்த்த கர்மங்களும் மிகச் சிறப்பாக நடந்தன. பெண்களும் மகா பதிவிருதைகளாக விளங்கினர். அக்ஞானத்தால் ஏதேனும் பாபம் நேர்ந்தால் அதை அவர்கள் செய்யும் சிவபூஜை அடியோடு அகற்றிவிட்டது. இவ்வளவிருந்தும் இயற்கை குணமான ஹிம்ஸை மாத்ரம் அவர்களை விடவில்லை. பிறவி குணம் யாரைவிடும்? தேவர்களைக் கண்டவிடத்தில் அடித்து ஹிம்ஸித்து வந்தனர்.

இந்த ஹிம்ஸையைப் பொறுக்க முடியாமல் தேவர் அனைவரும் நாராயணனைச் சரணமடைந்தனர். பகவான் யக்ஞமயமான ஈச்வர ஸ்வரூபத்தை நினைத்து யக்ஞத்தால் சிவனை ஆராதியுங்கள். மஹா பாபங்களைச் செய்தவராயினும் சிவபக்தரைக் கொல்ல முடியாது. சிவனாலேயே மரணம் என அவன் வரம் கேட்டிருக்கிறான். நானும் யாகம் செய்கிறேன் என்று மஹாவிஷ்ணு, லிங்கத்தைப் பூஜித்து யாகமும் செய்தார். அந்த யாகத்திலிருந்து கிளம்பிய பூதங்களை முப்புரத்தை எரித்துவா எனக்கட்டளையிட்டார். அவை அங்கு சென்று வெட்டுக் கிளிபோல் விழுந்து இறந்தன. இதைக்கண்டு தேவர் நடுங்கி விஷ்ணுவைச் சரணம் அடைந்தனர். சிவ பூஜா மஹிமையால் முப்புரத்தை நாம் அணுக முடியவில்லை. அவர்கள் சிவ பூஜையை விடும்படிச் செய்யவேண்டும் எனயோசித்தார்.

தனது உடலிலிருந்து மாயாமயமான ஒரு புருஷனைப் படைத்தார். வேதசாஸ்த்ர மார்க்கத்தைக் கண்டித்தும் ஸ்வர்க்க நரகமில்லாததும் வர்ணாச்ரம தர்மத்தை வெறுப்பதுமான ஒரு சாஸ்த்ரத்தை இயற்றி அவனிடமளித்தார். அது பதினாறு லக்ஷம் சுலோகமுள்ளது. அதைக்கொண்டு அந்த புருஷர் [ஸௌகதர் என ஸ்காந்தம்] முப்புரத்திலுள்ள அஸுரர்களையெல்லாம் வைதிக தர்மங்களை விடும்படிச்செய்தார். நாரதர் அவரிடம் முக்ய முதல் சிஷ்யனாக தீக்ஷை பெற்றுக்கொண்டார். அவருக்குப் பல சிஷ்யர்கள் தோன்றினர். பெண்களையும் கெடுக்க ஸ்த்ரீ தர்மம் என ஒரு சாஸ்த்ரத்தை இயற்றி பிரசாரம் செய்தார். பதிக்கு

அடங்கி பணிவிடை செய்வதை பெண்மக்கள் கைவிட்டார்கள். வேதகர்மா ஸ்மிருதி கர்மா விரதம் சிவபூஜை தானம் முதலியவைகள் சிறிது சிறிதாக மறைந்தன. பெரும் பாலோர் பாஷண்டிகளாயினர். லக்ஷ்மீ தேவி திரு புரத்தை விட்டகன்ருள். மூதேவி சூழ்ந்துகொண்டாள். துராசாரமுள்ள முப்புரத்தை விட்டுவிட்டு அந்த புருஷன் நாராயணனிடம் வந்து தனது வேலை பூர்த்தியானதாகக் கூறினர்.

தேவர்களுடன் மஹா விஷ்ணுவும் பரமசிவனைத் துதித்து ஜலத்திலமர்ந்து கோடிமுறை ஸ்ரீருத்ர ஜபம் செய்தார். ஸந்தோஷமடைந்த மகாதேவன் தேவகார்யம் யாதென அறிவேன். விஷ்ணுவும் நாரதரும் அதர்ம உபதேசத்தால் முப்புரத்தைப் பாஷண்டிகளாக்கியதையும் அறிவேன். விரைவில் முப்புரத்தையும் எரிப்போமென்ருர் அது அப்படியிருக்க ஒரு நாள்—

## ஸ்கந்த நர்த்தநம்.

மிக அழகான அலங்காரத்துடன் திவ்ய ரூபலாவண்யத்துடன் வரும் ஸ்கந்தனைக் கண்டாள் உமையவள். "நாத! குழந்தையின் ஒய்யார நடையைப் பாரும்! அவனது கண்ணழகைப் பாரும்! தோழருடன் அவன் உல்லாஸமாகப் பேசுவதைப் பாரும்!" என்று சிவ சிந்தையைச் சிவகுமாரன் மீது திருப்பினள். அழகே உருவு! அறிவே வடிவு! ஆநந்தமே உடல்! சிவக் கொழுந்தைக் கண்டு சிவன் சித்தமே பரவசமாயிற்று! அருகே சென்ருர். அணைத்து முத்தமிட்டார். சிறிது நடநமாடு பார்போம் என்ருர். நடராஜன் வியக்கும்படி நர்த்தநம் செய்தான் குமரன். சிவகண மாடிற்று. கணேச்வரர் ஆடினர். உலகெலாம் ஆடிற்று. தேவர் பக்க வாத்யம் வாசித்தனர். வானவரும் தானவரும் மானவரும் சித்தம் தெளிந்து பேரானந்தம் அடைந்தனர். பரமசிவன் பரவசமாகி பார்வதியுடனும் வடிவேலனுடனும் உள்ளே நுழைந்தார். தேவகார்யத்தை மறந்தார்.

அமரர் அனைவரும் முப்புரத்தின் துன்பத்தைப் பொறுக்க முடியாமல் வாயற்படியினருகே வந்து முறையிட்டனர். தங்கள் குறைகளைக் கூறி ஓலமிட்டனர்.

கும்போதரன் எனும் கணபதி தேவர்களைத் தடிகொண்டு தாக்கினன். பேச்சை நிறுத்தி பஞ்சாக்ஷரீ ஜபம் செய்தனர். நந்தி பகவான் எதிரே தோன்றி அஞ்சாதிர்! விரைவில் முப்புரம ஒழியும்! சிவனுக்கேற்ற அபூவர்மான ரதம் குதிரை ஸாரதி வில் அம்பு முதலியவைகளை அமைத்து வாருங்கள் என்றுர்.

## அரிய சிவ ரதம்.

விச்வகர்மா ஸர்வ தேவவடிவமான ஸுவர்ண ரதத்தைப் படைத்தான். வலது சக்ரம் ஸூரியன். இடது சக்ரம் சந்திரன். வலது சக்ரம் பனிரண்டு ஆரக்கால் அமைந்தது. பனிரண்டு ஆதித்யர்களே ஆரக்கால்களாம். இடது சக்ரத்தில் பதினறு சந்திரகலைகளே ஆரக்கால்களாம். நக்ஷத்ரங்கள் சக்ர ஆபரணங்கள். ருதுக்கள் சக்ர வட்டைகள். மந்திரம் ஸாரதி உட்காருமிடம். அஸ்தகிரியும் உதயகிரியும் நுகத்தடி கூடுமிடம். மஹாமேரு யஜமானன் உட்காருமிடம். வருஷமே ரதவேகம். இரு அயநங்களும் சக்ரம் சேருமிடம். முகூர்த்தம் கலை காஷ்டை முதலிய காலங்கள் ரதத்தின் அவயவங்கள். ஸ்வர்க்கமும் மோக்ஷமும் இரு துவஜங்கள். தர்மமும் வைராக்யமும் த்வஜஸ்தம்பங்கள். ஐம்பது அக்நிகள் ரதத்தின் ஆணிகள். தர்மமும் கர்மமும் நுகத்தடியின் இரு நுனிகள்.

பத்து இந்திரியங்கள் நுகத்தடியின் ஆபரணங்கள். நான்கு வேதங்களும் குதிரைகள். சீக்ஷா வ்யாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜோதிஷம் கல்பம் என்பவை குதிரையின் பூஷணங்கள். புராணம் நியாயம் மீமாம்ஸா தர்ம சாஸ்திரம் முதலியவை குதிரை வால்மயிர்கள். ஏழுகடல்களும் ரதத்தின் கம்பளங்கள். கங்கை முதலிய நதிகள் சாமரங்கள். பிரும்மா ஸாரதி. பிரணவமே குதிரை ஓட்டும் சாட்டை. மேருமலை பெருங்குடை. மந்த்ரமலை டிண்டிமம். மேரு தநுஸ். வாஸுகி நாண்கயிறு. ஸரஸ்வதி வில்லின் மணி. விஷ்ணு பாணம். காலாக்நியே அம்பின் கூர்மை.

## பசுபதிபாச பாசுபத விரதம்.

இவ்வளவு அபூர்வமான ரதத்தை அமர்த்தி தேவர்கள் சிவனிடம் வந்து விக்ஞாபநம் செய்துகொண்டார்கள்.

பரமசிவன் ரதத்தின்மேலேர காலை வைத்தார். வேத ரூபமான குதிரைகள் முட்டிபோட்டுக் கீழே விழுந்தன. ஆதிசேஷன் விருஷப உருவந்தாங்கி தேரைத் தூக்கி நிறுத்தினர். அரைக்ஷணத்தில் அந்த காலையும் முட்டியிட்டு பூமியில் வீழ்ந்தது. பரமசிவன் தேவர்களை நீங்கள் சுதந்திரமில்லாத ஜீவர்கள். ஆதலால் பசு எனப் படுவீர்கள். உங்களுக்கு பதியான பசுபதியே முப்புரத்தைக்கொல்ல வல்லவன் என்ரூர். பசுக்களான தங்களுக்கு சுதந்திரம் எப்பொழுது எப்படி உண்டாகும்? என கேட்க பாசுபத விருதத்தை அனுஷ்டித்தால் பாசத்திலிருந்தும் பசுத்தன்மையிலிருந்தும் விடுபடுவீர் என்ரூர். பனிரண்டு அல்லது ஆறு அல்லது மூன்றுஆண்டுகளாவது பாசுபத விருதத்தைச் செய்து பசுபதியான ருத்ரன் அருளால் பசுத்தன்மையை அகற்றிக்கொள்ளலாம்.

## கணேச பூஜையின் பெருமை.

இருமுறை அச்வங்கள் கீழே விழுந்தன. இதற்கு என்ன செய்வது என தேவர் கலங்கி நின்றனர். கணேசர் தேவர் முன் தோன்றி என்னை முதலில் பூஜிக்காமல் எந்த வேலை ஆரம்பித்தாலும், அதற்கு விக்நம் செய்வது என் ஸ்வபாவம். தேவரனைவரும் என்னை முதலில் அர்ச்சிப்பதாகக் கூறினீர்கள். இச்சமயம் நீங்கள் அதை மறந்தீர்கள். அதனுல் விக்நம் தோன்றிற்று என்ரூர். உடனே சிவனும் மற்ற தேவரும் ஒன்று கூடி பக்ஷயம் போஜ்யம் மோதகம் முதலியவைகளை நிவேதநம் செய்து புஷ்பங்களால் அர்ச்சித்தார்கள். சிவனும் விநாயகரைக்கட்டித் தழுவி முத்தமிட்டு உச்சி முகர்ந்து திருபுர ஸம்ஹாரம் விக்நமின்றி நடக்க வேண்டுமென்ரூர். ஸகல தேவரும் தேவகணங்களும் அவரவர் வாஹநத்தின் மீதேறி திருபுரத்தை நாடிக் கிளம்பினர்கள். [கணேசனைப் பூஜிக்காததால் ரதத்தின் அச்சு அறுந்ததாகவும் அவ்விடமே அச்சறுப்பாக்கம் என்றும் கூறுவர்.]

## திருபுர தஹநம்.

சிவனைச் சுற்றி விஷ்ணு இந்திரன் வீரபத்ரன் ஷண்முகன் அஷ்டதிக் பாலகர் முதலிய அனைவரும் ஆயுதங்களுடன் கிளம்பினர். அன்னைக் கருகே காலீ பாலா

மாத்ருகா கணங்கள் ஆகியவர் சூழ்ந்தனர். படஹவாத்யம் ஜயகோஷம் முழங்கக் கிளம்பினர். நினைத்தமாத்ரத்தில் மநதினலேயே முப்புரத்தை எரிக்க வல்லவன் சிவன். நம்மை எல்லாம் அருகில் ஸேனையாகக் கொண்டது நமது பாக்யமே என்று பலவாறு பேசிக்கொண்டு சிவகணங்களும் தேவர்களும் கிளம்பினர். பிரும்மா சிவனை வணங்கி ஸ்வாமின்! தாங்கள் புஷ்ய நக்ஷத்திரத்தில் கிளம்புவதும் எங்களைத் துணையாகக் கொள்வதும் தங்களுக்கு லீலையேயாம். இச்சமயம் ஒன்றுசேறும் முப்புரத்தைத் தாங்கள் எரித்து உலகிற்கு இன்பமளிக்கவேண்டும் என்று வேண்டினர். பகவான் அவர்களை உற்று நோக்க உடனே முப்புரம் தீபற்றி எரிந்தது.

அவருக்குப் பாணமாக இருந்த ஸோமன் வாயு காலாக்னி விஷ்ணு முதலியவர்கள் "தங்களுக்கும் பெருமை வேண்டும். இறந்தாலும் முப்புரத்தின்மீது தங்களைவிட வேண்டும்" என வேண்டினார்கள். அங்ஙனமே சரத்தை விடும்போது மிக உக்ரமாகக் காணப்பட்டார் சிவன். ஸகல தேவர்களும் சிவனை வணங்கி துதித்தார்கள். அரியஸ்தோத்ரத்தால் ஸந்தோஷமடைந்த சிவன் யாது வரம் வேண்டுமென்று கேட்க மஹாவிஷ்ணு என்றும் சிவனுக்கு வாஹநமாக இருக்கவேண்டும். ஸர்வக்ஞனாக இருத்தல் வேண்டும் என்று கேட்டார். அதை அளித்து சிராத்த காலத்தில் இதைப்படித்தால் பித்ருக்கள் அழிவில்லா ஸந்தோஷமடைவர் என்றுகூறி மறைந்தார். பிரும்மா தேவரனைவரையும் தங்களிடமுள்ள பசுத்தன்மை அகல லிங்க பூஜை செய்யும்படியும் பாசுபத விருதம் செய்யும்படியும் கூறினர்.

## தேவாஸுரர் அர்ச்சிக்கும் சிவலிங்கம்.

விச்வகர்மா தேவாஸுரர்களுக்கேற்ற வண்ணம் பற்பல லோஹங்களால் லிங்கத்தைச் செய்தளித்தார். விஷ்ணு இந்திர நீலலிங்கம். இந்திரன் பத்மராகலிங்கம். குபேரன் ஹேமமயம். விச்வேதேவர் வெள்ளி மயம். வஸுக்கள் காந்தமயம். வாயு பித்தளைமயம். அச்விநீதேவர் மண்மயம். வருணன் ஸ்படிகம். ஸூர்யன் தாம்ரம். சந்த்ரன் முத்து. அநந்தன் பவழம். தைத்யர்

இரும்பு. ராக்ஷஸர் மூன்றுலோஹம். குஹ்யர் ஸர்வ லோஹம். நிருரிதி மரம். யமன் மரகதம். ருத்ரன் விபூதி. லக்ஷ்மி பில்வம். குஹன் கோமயம். முநிவர் தர்ப்பம் இவைகளால் ஆகிய லிங்கத்தைப் பூஜிக்கின்றனர். நாற்பத்து நான்கு பொருள்களால் சிவ லிங்க நிர்மாணம் செய்யலாம். லிங்கத்தை ஆலயத்தில் முறைப்படி பிரதிஷ்டை செய்பவர் ஸகல லோகஸுகங்களையும் பெற்று முடிவில் கைலாஸம் செல்வர்.

## நிஷ்கலன் ஸகலனுனதேன்.

அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்து ஆநந்தவடிவனுன சிவன், க்ஞாநமயன் பிரகாச வடிவன், ஒளி வடிவன், நாதரூபி, பிரணவரூபீ, ஸத்சித் ஆநந்தன், ஸுகரூபீ. சுத்த க்ஞாந வடிவனுன சிவனை நிஷ்கலன் நிஷ்க்ரியன் சாந்தன் அத்வயன் என்று வேதம் வர்ணிக்கிறபடி அறிந்தால்தான் முக்தி பெறலாம். அத்தகைய க்ஞாநம் எல்லோருக்கும் எளிதல்ல. ஆதலால் கருணுமூர்த்தியான பகவான் தானே ஒரு சரீரத்தைக் கல்பித்துக்கொண்டார். அவரது பிரகிருதி அல்லது இச்சாசக்தியையே உமயவளாகச் செய்தார். பக்தியிலீடுபட்டு முடிவில் முக்தி பெறட்டுமென பலவகை லீலைகளைச் செய்தார். அவைகளைப் படித்தும் கேட்டும் அவர் நாமாவைக் கூறியும் பக்தர் போகமும் யோகமும் மோக்ஷமும் பெறலாம்.

சிவனை உபாஸிக்க நான்கு வர்ணத்திற்கும் கூறிய ஸ்வதர்மம் முக்கிய ஸாதநம். பிரதோஷம் சதுர்தசி சிவராத்ரி முதலிய நாட்களில் உபவாஸமிருத்தல் ஸ்ரீருத்ரம் பஞ்சாக்ஷரீ இவைகளை ஜபிப்பது, அகண்டரூபத்தையும், லிங்கஸோமாஸ்கந்தமூர்த்தி சந்திரசேகரரூபம் முதலியவைகளையும் மனதில் ஏகாக்ரமாக அமைத்து தியாநம் செய்தல் முதலியவைகளைச் செய்துவந்தால் சிவக்ஞாநம் கைகூடும். இதே பிரும்மவித்யை எனப்படும். க்ஞாநி உலகை உடலை மறந்தவர் ஆதலால் அவர் கர்மா செய்ய வேண்டிய அவசிய மில்லை. பரம சுத்தமான சிவன் க்ஞாநிகளுடைய மநதில் இருந்து ஸதா ஆநந்தமளிப்பார். அதை அனுபவிக்கும் சிவ க்ஞாநிகள் ஸ்நாநபாநம் ஜபம் பூஜை முதலியவைகளை மறந்து விடுவர். அதனுல் அவர்களுக்கு தோஷமில்லை. அவை அவர்களுக்கு அவச்யமும்

இல்லை. உலக நன்மையை நாடி சில ஜீவன் முக்தர்கள் தங்களைப் பார்த்து பக்வமில்லாதவர்களும் கர்மாவை விடக்கூடாதென கருணையுடன் கர்மாவைச் செய்வர். அதனால் அவர்களுக்கு ஆவது ஒன்றுமில்லை. போவது ஒன்றுமில்லை.

தனது உள்ளத்திலே உள்ள லிங்கத்தை அறியாதவர் வெளியில் உள்ள லிங்கத்தை அர்ச்சிக்க வேண்டும். இல்லறத்திலுள்ளோர் ஸகளனை சிவனை ஹ்ருதயத்திலிருந்து வெளி லிங்கத்தில் ஆவாஹநம் செய்து பூஜிக்க வேண்டும். யோகிகளும் க்ஞானிகளும் நிஷ்களனை சிவனை உலகெலாம் கண்டு மநதினாலேயே அர்ச்சிப்பர்.

## 24 வகை விக்ரஹ பிரதிஷ்டையும் பலனும்.

உமையவளுடனும் ஸ்கந்தனுடனும் உள்ள ஸோமாஸ்கந்த பிரதிஷ்டை செய்பவர் ஸ்கந்தலோகம் பார்வதி லோகம் முதலிய இடங்களில் ஸகல பாக்யங்களையும் அனுபவித்து முடிவில் கைலாசம் சென்று சிவஸாயுஜ்ய முக்தியைப் பெறுவர். கபாலி விக்ரஹ பிரதிஷ்டை செய்வோரும் சிவஸாயுஜ்யம் பெறுவர். 2. கஜாஸுரனைக்கொன்று சிவகணங்களுடன் தாண்டவமாடும் மூர்த்தியைப் பிரதிஷ்டைசெய்தால் ஸகல விக்நங்களுமகன்று சிவலோகத்தில் கொண்டாடப்படுவார். 3. அர்த்தநாரீச்வர மூர்த்தி பிரதிஷ்டை கைலாஸமளிக்கும். 4. லகுளீச்வர மூர்த்தி பிரதிஷ்டை ஸகல போகங்களையும் க்ஞானத்தையும் தரும். இந்த மூர்த்தியை ஓம் நமோ நீலகண்டாய என்ற அஷ்டாக்ஷரத்தால் பூஜிக்கவேண்டும். 5. ஜாலந்தராஸுர வதமூர்த்தி. 6. ஸுதர்சந சக்ரதாந மூர்த்தி. 7. அந்தகாஸுர ஸம்ஹார மூர்த்தி. 8. திருபுரதஹந மூர்த்தி. 9. கங்காதர மூர்த்தி. 10. ஸுகாஸநமூர்த்தி. 11. சந்த்ரசேகர மூர்த்தி. 12. விநாயகாநுக்ரஹ மூர்த்தி. 13. குஹாநுக்ரஹ மூர்த்தி. 14. துர்க்காநுக்ரஹ மூர்த்தி. 15. வீரபத்ராநுக்ரஹ மூர்த்தி. 16 லிங்கோத்பவ மூர்த்தி. 17. க்ஷேத்ரஸம்ரக்ஷக மூர்த்தி. 18. பாசுபதமூர்த்தி. 19. மார்க்கண்டேயாநுக்ரஹ மூர்த்தி. 20. சூர்யாநுக்ரஹ மூர்த்தி. 21. ஸோமாநுக்ரஹ மூர்த்தி. 22. ப்ரும்மாநுக்ரஹ மூர்த்தி. 23. ப்ரும்மாணீ முதலிய சக்திகளுக்கு

அநுக்ரஹம் செய்த மூர்த்தி. 24. கல்யாணமூர்த்தி ஆகியவைகளை ப்ரதிஷ்டை செய்தவர் வம்சம் சந்த்ர ஸூர்யர் உள்ளவரை வளரும். ஸகல போக பாக்யங்களையும் அனுபவிப்பர். கைலாசத்தில் சிவகணமாகி முடிவில் சிவ ஸாயுஜ்யமடைவர்.

## ஆலய ஸேவை.

இங்கு ஒவ்வொரு மூர்த்தியும் எப்படி இருக்கவேண்டும் என்ற லக்ஷணம் கூறப்படுகிறது. பூர்ணமாக ஆலயங்களை அமைப்பதும் விமாநம் கோபுரம் மண்டபம் முதலியவைகளை அமைப்பதும் உத்யாநம் அமைப்பதும் புதிதாக அமைப்பதை விட ஜீர்ணமானவைகளைப் புதிப்பிப்பதும் அளவுகடந்த புண்யத்தைத் தரும். நித்யம் ஆலயத்தைப் பெருக்குவதும் பசும் சாணியால் மெழுகுவதும் ஆயிரம் சாந்த்ராயன பலனைத்தரும். சிவக்ஷேத்ரங்களில் இறப்பதும் விசேஷமாக காசியில் இறப்பதும் கைலாஸம் செல்லவும் பிறப்பிறப்பு இல்லாமைக்கும் காரணமாகும். சிவ க்ஷேத்ரத்தைத் தூரத்திலிருந்து பார்ப்பதே புண்யம். அங்கு நுழைவது நூறுபங்கு அதிக பலனைத் தரும். பிரதக்ஷிணம் செய்வது அபிஷேகம் செய்விப்பது—பால் தயிர் தேன் நெய் சர்க்கரை கங்காஜலம் இவைகளால் அபிஷேகம் செய்விப்பது — ஒன்றைவிட ஒன்று நூறு நூறு மடங்கு அதிக பலனைத் தரும். சிவாலயத்திலுள்ள புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்வது மிக உயர்ந்த புண்யந்தரும். விதிப்படி மஹிமையை உணர்ந்து ஸ்நாநம் செய்வோரது புண்யம் அளவு கடந்தது. ஒரு நாயிக்குப் பயந்து ஓடிய பன்றிக்குட்டி சிவாலய தீர்த்தத்தில் விழுந்தெழுந்து ஓடிற்று. அதற்கே சிவலோகத்தையும் சிவகணமாயிருக்கும் பதவியையும் தந்தார் கருணை மூர்த்தியான கைலாஸநாதன் எனில் விதிப்படி ஸ்நாநம் செய்வோரைப் பற்றிக் கூறவும் வேண்டுமா ?

காலையில் சிவதர்சநம் மிகச் சிறந்த பயனைத்தரும். மத்யான தர்சநம் யாகம் செய்த பலனைத் அளிக்கும். ஸாயங்கால தர்சநம் ஸர்வ யாக பலனையும் தரும். முக்கரணங்களாலும் செய்த பாபங்களை அகற்றும். மாஸ ஸங்க்ரமணத்தில்—மாதப்பிறப்பில் செய்யும் சிவதர்சநம்

ஒருமாதம் செய்த பாபத்தை அகற்றும். அயந காலத்தில் தர்சித்தால் ஆறுமாத பாபமகலும்.

## ஸவ்ய அபஸ்வ்ய ப்ரதக்ஷிண பலன்.

ஸாதாரணமாக மும்முறை ஆலயத்தை வலம் வருவது எல்லோருமறிந்த முறை. ஸவ்யாபஸவ்ய முறையை பிரதோஷத்தன்று மாத்ரம் அதை அறிந்தவர் செய்வர். துறவிகள் என்றைக்கும் ஸவ்யாப ஸவ்ய முறையாக பிரதக்ஷிணம் செய்யவேண்டுமென ஆகமம் கூறுகிறது. அது முக்திக்கு ஸாதநமாம். நித்யமும் செய்யலாம்.

**वृषं चण्डं वृषं चैव सोम सूत्रं पुनर्वृषम् ।**
**चण्डंच सोम शूत्रंच पुनश्चण्डं पुनर्वृषम् ॥**

விருஷம் சண்டம் விருஷஞ்சைவ - ஸோமஸூத்ரம் புநர்விருஷம் । சண்டஞ்ச ஸோம ஸூத்ரஞ்ச-புநர்: சண்டம் புநர் விருஷம் ॥

முதலில் நந்தியைத் தர்சித்து-அவரேவிருஷபர்.-இடதுபுறமாகச் சென்று சண்டிகேசரைத்தர்சித்து அங்கிருந்து வந்த வழியாகவே திரும்பி வந்து நந்தியைத் தர்சிக்க வேண்டும். அங்கிருந்து வலமாக வந்து அபிஷேக தீர்த்தம் விழும் கோமுகி என்ற ஸோமஸூத்ரத்தை தர்சிக்க வேண்டும். அங்கிருந்து வந்தவழியாகவே திரும்பிவந்து நந்தியைத் தர்சிக்க வேண்டும். மறுபடியும் அங்கிருந்து இடதுபுறமாகச் சென்று சண்டிகேச்வரரைத் தர்சிக்க வேண்டும். அதே வழியாகத் திரும்பிவந்து நந்தியை வலமாக வந்து ஸோமஸூத்ரத்தைத் தர்சிக்க வேண்டும். மறுபடியும் அதே வழியாகத் திரும்பிவந்து இடது புறமாகப் போய் சண்டிகேச்வரரைத் தர்சிக்கவேண்டும். மறுபடி திரும்பிவந்து நந்தியைத் தர்சிக்கவேண்டும்.

## பிரதக்ஷிண தத்துவம்.

இது உடலால் ப்ரணவத்தை எழுதுவதாம். கிரந்தம் அல்லது தமிழில் ஓமென்று எழுதினல் ஆரம்பத்திற்கும் முடிவிற்கும் நடுவில் சிறிது இடவெளியிருக்கும் அதே போல் ஒரே வட்டமாக இல்லாமல் கோமுகி சண்டர் இருவர்க்கும் இடையில் இடவெளி அளிக்கப்படுகிறது. இந்த

பிரதக்ஷிணத்தில் ஓங்கார ஒலிவடிவமாகவும் அக்ஷர வடிவமாகவும் உள்ள இறைவனை ப்ரணவம் சேர்ந்த பஞ்சாக்ஷரியை வாயால் கூறி மநதால் நினைத்து உடலாலும் அமைப்பது மிக விசேஷமானது. அகார உகார மகார எழுத்துக்கள் சேர்ந்தது பிரணவம். அகாரம் நந்தி. உகாரம் ஸோமஸூத்ரம். மகாரம் மௌனியான சண்டி. விருஷபத்தினிடம் அகார ஒலி. அபிஷேகதீர்த்தம் விழும் கோமுகியில் உகார ஒலி. சண்டிகேசரிடம் மகார ஒலியும் முழங்கும்.

ஐம்பது தளமுள்ள தாமரைப் போல் பூமியில் அரிசிமாவால் அமைத்து அதனுள்ளே சிவனையும் அவரது பரிவார தேவதைகளையும் அமைத்து ஐம்பது தீபங்களேற்றி ஐம்பது பிராம்மணர்களுக்கு அன்னமிட்டு பூஜித்தால் ஸர்வ கார்யங்களும் ஸித்திக்கும். கர்ப்ப கிருஹத்தில் உள்ள சுவர்களில் சந்தநத்தை பூசவேண்டும். (தற்கால முறையில் சுவற்றிற்குச் சுண்ணும்பு அடிப்பது பூச்சி புழுக்கள் அண்டாமலிருக்கவும் தீபஒளியை பிரகாசப் படுத்தவும் பயன்படுமெனக் கருதிச் செய்யப்படுகிறது. தேவ ஆலயத்தில் வாஸனை சந்தநம் பூசி இதே பயனைப் பெற முன்னோர் வழிகண்டனர்.) வடிக்கட்டிய ஜலத்தையே சிவாலயத்தை மெழுகவும் அபிஷேகம் செய்யவும் மற்ற கார்யங்களுக்கும் உபயோகிக்க வேண்டும். இல்லையேல் பல தோஷங்களுண்டாகும்.

## அஹிம்ஸை.

ஜலத்தில் கண்ணுக்குத் தெரியாத பற்பல ஜந்துக்கள் இருப்பதால் வடிக்கட்டாமல் ஜலமெடுக்கும்பொழுது அவைகளை ஹிம்சிப்பதாகும். துறவிக்கே அஹிம்ஸை முக்கிய தர்மம் என்றாலும் கூடியவரை கிருஹஸ்தனும் அஹிம்ஸையைப் பின்பற்ற வேண்டும். பரிஹரிக்க முடியாத அஹிம்ஸைகளைச் செய்ய நேருவதால் அதற்குப் பிராயச்சித்தம் செய்துக் கொள்ள வேண்டும். மூன்று உலகையும் ஸத்பாத்ரத்தில் தாநம் செய்த புண்யத்தை விட அஹிம்ஸையால் உண்டாகும் புண்யம் அதிகமாகும். சிவபூஜைக்கு புஷ்பம் எடுத்தல் ஆலயமமைக்க மரம் வெட்டுதல் யாகத்திற்காகச் சிலஜீவனைக் கொல்வது

குற்றவாளியை அரசன் சிக்ஷிப்பது முதலியவைகளை ஹிம்ஸை எனக்கருதக்கூடாது. துறவிகளையும் பெண்களையும் கொல்வது மிகமிக கொடியபாபம் ஆகும்

## பில்வார்ச்சனையும் சிவபக்தர்களும்.

ஸர்வ தேவர்களிலும் சிறந்தவராதலால் சிவலிங்கத்தை ரத்நங்களால் செய்து சிவனைப் பூஜிக்கவேண்டும். ஸுவர்ணமயமான தாமரைப் புஷ்பங்களால் சிவனை அர்ச்சிக்கவேண்டும். வெள்ளை ஊமத்தை பூவில் பிரஜாபதி வஸிப்பதால் அதனுல் பூஜைசெய்பவர் விரைவில் சிவனது அருளைப் பெறுவர். இடைவிடாமல் பனிரண்டாண்டு பனிரண்டுமாதம் பனிரண்டு நாளாவது பக்தியுடன் வெள்ளை ஊமத்தை பூவால் பூஜிப்போர் பசுத்தன்மையிலிருந்து விடுபடுவர். [ காசி விச்வநாதருக்கு நித்யம் ஊமத்தப்பூ மாலை சாற்றுகின்றனர். ] ஸுவர்ணம் அல்லது வெள்ளியினுல் செய்த ஆயிரத்தெட்டு தாமரைப் புஷ்பங்களால் சிவனை அர்ச்சிப்பது மிக விசேஷம். சக்தி இல்லாதவர் தாமரைப் புஷ்பங்களால் அர்ச்சிக்கலாம். அது கிடைக்காவிடில் ஆயிரத்தெட்டு அல்லது ஐநூற்று நாலு அல்லது இருநூற்றிரண்டு அல்லது நூற்றெட்டு பில்வ தளங்களால் சிவனை அர்ச்சிக்கலாம்.

சிவபக்தரில் முதல்வர் விஷ்ணு. பிரும்மா ஸநகாதி முனிவர்களுடன் ஸப்தரிஷிகள் பித்ருக்கள் தேவமாதாக்கள் வசுக்கள் ருத்ரர் ஆதித்யர் மருத்துக்கள் நவக்ரகங்கள் நக்ஷத்திரங்கள் மஹரிஷிகள் ஸித்தர் ஸாத்யர் முதலிய அனைவரும் சிவபக்தர்கள். சிவனுடய அருளைப் பெற தாண்டவமாடுபவர் சிலர். ஸர்வபாபங்களையுமகற்றும் வ்யபோஹந ஸ்தோத்ரம் முதலியவைகளால் துதிப்பவர் சிலர்.

நம: சிவாய சுத்தாய— நிர்மலாய யசஸ்விநே:
துஷ்டாந்தகாய ஸர்வாய பவாய பரமாத்மநே''

என்பது முதலிய நூற்றுபத்து சுலோகங்கள் வ்யபோஹந ஸ்தவமெனப்படும். இதில் சிவனே எல்லாமென கூறப்படுகிறது. நந்தி இதை குஹனுக்கும் அவர் வியாஸருக்கும் கூறினுர். மிக ரஹஸ்யமான ஸ்துதி இது. ஸகல

பாபங்களையுமகற்றி ஸகல நன்மைகளையும் தரவல்லது இந்த உத்தம ஸ்தோத்ரம்.

## சிவ விருதங்களும் சில நியமங்களும்.

சுக்லபக்ஷம் கிருஷ்ணபக்ஷமிரண்டுகளிலும் பகலெலாம் உபவாஸமிருந்து சிவபூஜை செய்து இரவில் போஜநம் செய்வது ஒரு சிவவிருதமாகும். ஓராண்டு இதைச் செய்தால் ஸர்வ யக்ஞபலனையும் பெறுவர். அமாவாஸ்யை அல்லது பௌர்ணமியில் பகலெலாம் உபவாஸமிருந்து சிவார்ச்சனை செய்து இரவில் ஒரேவேளை உண்பது ஒருவகை சிவ விருதமாகும். இப்படி ஒருநாள் விருதம் இருப்பது மூன்று நாள் விருதம் செய்த பலனைத் தரும். இரு பக்ஷங்களிலும் பிரதமை பஞ்சமி என்ற இரு திதிகளிலும் உபவாஸமிருந்து சிவபூஜை செய்வது க்ஷீராதாரா விருதம் எனப்படும். அது அச்வமேத பலனை தரும். கிருஷ்ணபக்ஷ அஷ்டமீ முதல் சதுர்தசிவரை முன் சொன்னப்படி விருதம் செய்வது ஸகல போகங்களையு மளித்து பிரும்மலோகத்திற்கு அழைத்துச் செல்லும். ஓராண்டு பர்வகாலத்தில் உபவாஸமிருந்து சிவபூஜை செய்து முடிவில் விதிப்படி பிராம்மணபோஜநம் செய்தால் கைலாஸம் செல்வர். எல்லா போகபாக்யங்களையும் அனுபவிப்பர்.

இரவில் மாத்ரம் உண்பது நக்த விரதமெனப்படும். இது ஓர் மிகச் சிறந்த விருதம் என்று அதைத்துதிக்க மேலே சில சொற்களைக் கூறுகிறார். உபவாஸத்தைவிட பிக்ஷை எடுத்த அன்னம் சிறந்தது. அதைவிட யாசிக்காமல் ஒருவர் அளிப்பதை உண்பதும் அதைவிட இரவில் ஒரே வேளை புஜிப்பதும் உயர்ந்ததாகும். காலையில் தேவரும் மத்யான்னம் ரிஷிகளும் பொழுதுசாய ஆரம்பிக்கும் போது அபரான்னத்தில் பித்ருக்களும் ஸாயங்காலம் குஹ்யர் முதலியவர்களும் புஜிக்கிறார்கள். அக்காலங்களை கடந்து இரவில் புஜிப்பது உத்தமம். கஞ்சிவடிக்காத அன்னத்தை உண்பது மூன்று வேளை ஸ்நாநம் செய்வது ஸத்யம் பேசுவது ஸ்வல்பமாக புஜித்தல் நித்ய கர்மா அக்நி பூஜை இவைகளைச் செய்வது பூமியில் படுப்பது பொறுமை, தயை, தாநம் சுசியாக இருத்தல், இந்த்ரியங்களை அடக்குவது முதலியவைகளை ஸகல விருதங்களிலும்

கைகொள்ள வேண்டும். இவைகளை கைவிட்டால் விருதம் பூர்ண பலனைத் தராது.

## உமாமகேச விருதம்.

ஓராண்டு நியமத்துடன் இதைச் செய்து ஸுவர்ணத்தாலாகிய உமாமகேச பிரதிமையைத் தானம் செய்யவேண்டும். ப்ரூண ஹத்தி முதலிய ஸகல பாபங்களையும் அகற்றவல்லதிது. மார்கழி மாதம் முதல் கார்த்திகை வரை செய்ய வேண்டிய சில விருதங்களைக் கூறுகிறார் இங்கு புராண கர்த்தா.

## ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹிமை.

விருதங்களில் பஞ்சாக்ஷரீ ஜபம் செய்வது முக்யமான கார்யம். தேவிக்குப் பகவான் இதன்பெருமையை விளக்கினார். தேவி ஒவ்வொரு பிரளயகாலத்திலும் உலகெலாம் என்னிடம் ஒடுங்கும். ஆகமம் வேதசாஸ்திரங்கள் முதலியவையெல்லாம் பஞ்சாக்ஷரியிடம் லயிக்கும். நானும் பஞ்சாக்ஷரியும் என்றைக்கும் நித்யமாக இருக்கிறோம். எனது பிரகிருதியானது மாயையால் நாராயண உருவமெடுக்கும். அவர் நாபிக்கமலத்திலிருந்து சதுர்முகன் உண்டாகி உலகைப் படைக்க ஆரம்பிப்பார். அவர் தனக்கு ஸகாயம் புரிய உதவியாகப் பல புத்ரர்களை மநதால் படைத்தார். அவர்களுக்கும் தனக்கும் ஸிருஷ்டி சக்தி அளிக்கும்படி வேண்ட நான் ஐந்து முகம் எடுத்து பஞ்சாக்ஷரியை உபதேசிப்பேன். அதைக் கொண்டு அவர்கள் என்னை ஆராதிக்க அவர்களுக்கு திவ்ய க்ஞானத்தையும் தருவேன்.

ஆலமர விதையிலிருந்து ஆலமரம் உண்டாவது போல் ஸர்வ மந்திரங்களுக்கும் விதையான பஞ்சாக்ஷரியிலிருந்து ஸகல மத்திரங்களும் வேதமும் உலகமும் உண்டாயின. பஞ்சாக்ஷரியை ஜபித்தால் ஸகல வேதாகம சாஸ்திரங்களையும் ஜபித்த பயன் உண்டாகும். பஞ்சாக்ஷரீ மந்திரத்திற்கு வாம தேவர் ரிஷி. பங்திசந்தஸ் ஸதாசிவன் தேவதை. மந்திரத்தைக் கண்டு பயன் பெற்றவர் ரிஷி. விருத்தம் சந்தஸ். மந்திரத்தால் வர்ணிக்கப்படுவது தேவதை. அ. உ. ம. என்பவை சிவ பிரணவமாகும். உ.

ம. அ. இவை சக்தி பிரணவமாகும். அதனால் உமா என்பதும் ஓம் என்பதும் பிரணவமேயாம். ஓங்காரத்திற்கும் பஞ்சாக்ஷரியிலுள்ள ஒவ்வொரு எழுத்திற்கும் ரிஷிசந்தஸ் தேவதை தனித்தனியாக இங்கு கூறப்படுகிறது.

## நியாஸ விளக்கம்.

உத்பத்தி ஸம்ஹாரம் ஸ்திதி என நியாஸம் மூன்று வகைப்படும். அங்க நியாஸம் தேஹநியாஸம் கரநியாஸம் என்று மூன்ருக அது பிரிக்கப் படும். தலையிலிருந்து கால்வரை அக்ஷரங்களைக் கூறி கைகளை வைப்பது உத்பத்தி நியாஸமாம். பாதத்திலிருந்து தலைவரை வைப்பது ஸம்ஹாரநியாஸம் எனப்படும். ஹிருதயத்திலிருந்து கழுத்துவரை வைப்பது ஸ்திதி நியாஸமாம். முறையே பிரும்மசாரி கிருஹஸ்தன் வாநப்ரஸ்தன் ஆகியோர் இந்த நியாஸங்களைச் செய்யவேண்டும். குடும்பிகளுக்கு ஸ்திதி நியாஸமே சிறந்தது. நியாஸம் செய்தபின் மனிதனது உடல் சிவசரீரமாகிறது. ஜன்மாந்தரத்தில் செய்த பாபங்களெல்லாம் நியாஸத்தால் அகன்றுவிடும். ஆக்ஞை கிரியை சிரத்தை தக்ஷிணை இவைகளில்லாத மந்திரம் பயனைத்தராது. குருவின் உபதேசம் ஆக்ஞை எனப்படும்.

## உபதேசமும் குரு பூஜையும்.

உடல் வாக்கு மநம் என்ற மூன்றுகரணங்களும் சுத்தமானபோது உபதேசம் பெறவேண்டும். மந்திரார்த்தத்தை உணர்ந்து அநுஷ்டிக்கும் ஆசாரமுள்ள குருவை வணங்கி தன் வீட்டிற்கு அழைத்து வந்து புது வஸ்த்ரம் ஆபரணம் கனிவர்க்கம் தாம்பூலம் தக்ஷிணை முதலியவைகளால் அர்ச்சித்து பஞ்சாக்ஷரியைத் தனக்கு உபதேசிக்கும்படி பிரார்த்திக்க வேண்டும். மந்திரபலன் வேண்டுமானல் குரு தக்ஷிணையில் லோபம் கூடாது. குருவுக்குத் தன்பொருள்களையும் தன் உடலையும் அர்ப்பணம் செய்துவிடவேண்டும். ஓராண்டு இங்ஙனம் குருவை பூஜித்து பிறகே உபதேசம்பெறவேண்டும். ஸமுத்ரகரை, நதி, பசுசாலை, தேவாலயம் இந்த இடங்களே உபதேசத்திற்கேற்ற இடமாகும். நித்யம் குருவை நமஸ்கரித்துவிட்டே ஜபம் செய்ய ஆரம்பிக்கவேண்டும். நித்யம் ஆயிரத்தெட்டு

முறை ஜபம் செய்வதே உத்தமம், மந்திரம் ஸித்தியாக வேண்டுமானல் நியமத்துடன் அக்ஷரலக்ஷம் ஜபம் செய்ய வேண்டும்.

## ஜபமும் ஜபமாலையும்.

மந்திரம் ஸித்தியாவதற்காகச் செய்யப்படும் கர்மா புரச்சரணம் எனப்படும். அதற்கு பிரதிதிநம் இவ்வளவு முறை ஜபம் செய்கிறேன் என ஸங்கல்பம் செய்து கொண்டு ஒரேவேளை ஆஹாரம் முதலிய நியமங்களுடன் ஜபம் செய்யவேண்டும். சுத்தமான இடத்தில் ஆஸநத்திலமர்ந்து ஒருவருடனும் பேசாமலும் எதையும் பார்க்காமலும் மிக ஆசாரத்துடனும் மெதுவாகவும் ஜபம் செய்ய வேண்டும். ஆடைக்குள் கையை மறைத்து வைத்துக்கொண்டு ஜபமாலையால் ஜபிக்கவேண்டும். வீட்டில் ஜபம்செய்தால் ஜபம்செய்த அளவு பலன். பசுசாலையில் நூறுமடங்கும் நதியில் ஆயிரம் பங்கும் ஸமுத்திர தீரத்தில் லக்ஷம் பங்கும் சிவாலயத்தில் கோடி பங்கும் அதிகமாக பலன் உண்டாகும். விரலால் எண்ணுவதை விட ரேகையால் எண்ணுவது எட்டு பங்கு அதிகபயனைத் தரும். பத்மராக மாலை பத்து பங்கும் சங்கம் நூறு பங்கும் பவழமாலை ஆயிரம் பங்கும் ஸ்படிகமாலை பத்தாயிரம் பங்கும் முத்துமாலை லக்ஷம்பங்கும் தாமரைமணி பத்து லக்ஷம்பங்கும் ஸுவர்ண மாலை கோடி பங்கும் தர்ப்பமுடியும் ருத்ராக்ஷ மாலையும் அளவுகடந்த பலனையும் தரும். இருபத்தைந்து மணிகளுள்ள மாலையால் ஜபம் செய்தால் அது முக்தியைத் தரும். இருபத்தேழு மணியுள்ள மாலை புஷ்டியையும் முப்பது மணியுள்ளமாலை தநத்தையும் ஐம்பது மணியுள்ள மாலை ஆபிசார பலனையும் தரும். ஸகல யக்ஞங்களிலும் ஜபயக்ஞமே சிறந்தது. ஒருவரை அழிக்க செய்யும் கர்மா அபிசாரமெனப்படும்.

வாக்கினல் மெதுவாக உச்சரிப்பது வாசிக ஜபம் எனப்படும். இதைவிட மநதினல் ஜபிப்பது ஆயிரம் மடங்கு அதிக பலனைத் தரும். ஜபத்திற்கு ஆசாரம் மிக முக்யமானது. ஆசாரத்தை விட்டவர் தாழ்ந்த பிறவியில் தோன்றுவர். ஜபபலனை அடையமாட்டார். ஜபத்திற்கு விக்நத்தை உண்டுபண்ணக் கூடிய கோபம் மதம் பசி

சோம்பல் காறித்துப்பல் கோட்டுவாய் தூக்கம் பேச்சு நாய் நிசர் பஹிஷ்டைக்காரி ஆகியவர்களைப் பார்ப்பது ஆஸநமில்லாமை காலை நீட்டுதல் சாய்ந்து உட்காருவது கட்டிலில் உட்காருவது முதலியவைகளை அகற்றி ஒழுங்காக ஜபம் செய்ய வேண்டும். இங்கு ஸதாசாரம் மிக விஸ்தாரமாகக் கூறப்படுகிறது. பல புராணங்களிலும், கூறப்படும் விஷயமிது.

## ஸ்ரீ பஞ்சாக்ஷரியாலுண்டாகும் பலன்கள்.

மலைச்சாரலிலிருந்து லக்ஷம்முறை பஞ்சாக்ஷரீ ஜபம் செய்தால் அபமிருத்யு அகன்று நீண்ட ஆயுளைப் பெறலாம். குறித்த காலத்திலில்லாமல் இடையே தோன்றும் மரணம் அபமிருத்யுவாம். அரசமரத்தடியிலிருந்து சனிக்கிழமை இரண்டுலக்ஷம் பஞ்சாக்ஷரீ ஜபித்து அரசமரத்தையும் ஆலிங்கநம் செய்தால் எல்லா நோய்களும் அகலும். நீண்ட ஆயுளையும் பெறலாம். நித்யம் எருக்கை ஸமித்தினால் நூற்றெட்டு முறை ஹோமம் செய்தால் அகால மரணம் அகலும். பலாச ஸமித்தால் ஹோமம் செய்தால் நோய் அகலும். நித்யம் ஸூர்யன் எதிரிலிருந்து நூற்றெட்டு முறை ஜபித்து ஒரு மாஸம் நீர் அருந்தினால் வயிற்றில் உண்டாகும் ஸகல ரோகங்களும் அகலும். ஆயிரத்தெட்டு முறை ஜபித்து பிராம்ஹி ரஸத்தை—வல்லாரி சாறு—ஒரு மாதமருந்தினால் புத்தியிலுள்ள தோஷங்களை அகற்றி புத்தித் தெளிவையும் ஸரஸ்வதிக்கொப்பான கல்வியையும் தரும். எட்டாயிரம் முறை ஹோமம் செய்தால் கெட்ட கனவுகள் அகலும். சத்ருவைச் சிக்ஷிக்க பஞ்சாக்ஷர எழுத்துகளைத் திருப்பி எதிர் நடையாகக் கூறி ஹோமம் செய்யவேண்டும். இப்படி ஒவ்வொரு விதமான பலனை நாடி எந்த பொருளினால் எத்தினை முறை ஜபம் அல்லது ஹோமம் செய்யவேண்டுமென விரிவாக வர்ணிக்கிறார் சிவபக்தரான வியாஸ முநிவர்.

## பொதுவான தர்மம்.

ஹிருதய கமலத்தில் சிவனைத் தியாநம் செய்யவேண்டும் என்று கூறும் வகையில் உடலின் தத்துவத்தையும் நாடி மநம் முதலியவைகளையும் விளக்குகிறார். இங்குள்ள சுலோகங்களில் பல ஸ்ரீசங்கரர் நூல் பகவத்கீதை முதலிய

இடங்களில் காணலாம். பல உபநிஷத்துகள் சுலோக ரூபமாக காணப்படுகின்றன.

ஜீவன் சுக்ல சோணித ஸம்பந்தத்தால் கர்ப்பத்தில் எப்படி நுழைகிறது? எப்படி வளருகிறது? தாய் உண்ணும் உணவின் ஸத்து குழந்தையின் நாபிவழியாக உள் சென்று அதன் உடலை எப்படி வளர்க்கிறது? குழந்தை படும் துன்பம், பிரஸவம், ஆந்ஹிக தர்மம், கர்மாவை விட்டவரின் நரக யாதனை, மனிதன் பாபத்தால் மிருகமாகி பக்ஷியாகி புழுவாகிச் செடிகொடிகளாதல், மறுபடி இம்முறையைத் தலைகீழாகக் கொண்டு மநிதனாக மாறுதல், வடிக்கட்டாத ஜலத்தை உபயோகித்தால் ஆறுமாதம் மீன் பிடித்துவாழும் சம்படவனுக்கு உண்டாகும் பாபம் நேரிடுதல், பிக்ஷை எடுப்பவர், அன்றன்று வேண்டிய அளவே பிக்ஷை எடுக்கவேண்டும், சேர்த்துவைக்கலாகாது, அன்றன்று தோய்த்து உலர்த்திய வஸ்த்ரத்தைத் தரித்தே சிவ பூஜை செய்ய வேண்டும். பாத்ர சுத்தி, வேதாத்யயநம் செய்யும்பொழுது எச்சில் மேலே தளித்தால் அது அசுத்தமல்ல, ஏழு தலைமுறை பங்காளிகளுக்குப் பிறப்பு இறப்புகளாலுண்டாகும் தீட்டு பத்துநாள், பிறகு மூன்று நாள், மாதவிடாய் காலத்தில் பெண்கள் நடந்துகொள்ளும் விதம் முதலியன விரிவாக இருக்கின்றன.

## ரிதுகால கர்பாதானம்.

மாதவிடாய் மூன்றுநாள் ஆனபின் பனிரண்டு நாளுக்குள் நன்னாளில் கர்ப்பாதாநம் செய்வது ஸ்வதர்மம். அந்த நியமமுள்ளவனை பிரும்மசாரி என்பர். இந்த நாட்களிலும் ஷஷ்டி அஷ்டமி ஏகாதசி துவாதசி பௌர்ணமி அமாவாஸ்யை பித்ரு மாத்ரு சிரார்த்த பக்ஷம் ஜன்மநக்ஷத்ரம் க்ஷவரம் செய்துகொண்ட நாள் எண்ணெய் தேய்த்து கொண்ட நாள் இவைகளை விலக்கி மற்ற நாட்களில் இன்பமெனக் கருதாமல் தர்மம் எனக் கருதி சேரவேண்டும். நாலாவது நாள் சேர்ந்தால் அல்பாயுளுள்ள குழந்தை உண்டாகும். ஐந்தாவது நாளில் கன்யகை, ஆறுவது நாளில் நல்ல புத்ரன் ஏழில் பெண் எட்டில் ஸம்பத்துள்ள புத்ரன் ஒன்பதில் பெண் பத்தாவது நாளில் பண்டிதன் பதினொருவது நாளில் புத்தியுள்ள புத்ரன் பனிரண்டில்

தர்ம புத்தியுள்ள புத்ரன் பதிமூன்றில் முட்டாளான பெண் பதினாலில் ஸத்புத்ரன் பதினைந்தில் குணமும் தர்மமுள்ள பெண் பதினாறுவது நாளில் க்ஞாநியான புதல்வன் உண்டாவான்.

கர்ப்பாதாந மென்பது தனியான மிக அனுபவ சாஸ்த்ரம். அதைப்பற்றி வாத்ஸ்யாயந முநிவர் வடமொழியில் தனி நூல் எழுதியிருக்கிறார். சில நாட்களில் அழியக்கூடிய நமது உருவப்படமெடுக்க, கடும்வெய்யில் கூடாது இருட்டு கூடாது. அசையக் கூடாது என்பது போன்ற பல நிர்ப்பந்தங்கள் உண்டு. அவைகளுக்கு உட்பட்டால் தான் படம் நன்றாக அமையும். கர்ப்பாதானத்தால் உண்டாகும் படம்—குழந்தை—உயிருள்ளது. நூறாண்டு இருப்பது. வெளி உருவத்துடன் மாத்ரமில்லாமல் உடலுள்ளே உள்ள மநம், குணம், புலன் முதலியவைகளுடன் படம் போல் அமைந்துளது குழந்தை. படமெடுப்பவர்க்கே அந்த நிபந்தனைகளின் பயன் யாதெனத் தெரியும். அவைகளைப் பின்பற்றாததால் உண்டாகும் தீமையை நாம் கண்ணால் காணலாம். அதேபோல் விதியைத் தழுவாமலிருந்தால் உயிருடன் தோன்றும் குழந்தை குருடாகவோ செவிடாகவோ பித்தனாகவோ தோன்றி பெற்றோருக்கு ஓயாத் துன்பத்தைத் தரும். (இதுபற்றி நாற்பது ஸம்ஸ்காரம் என்ற நமது நூலில் விரிவாகக் காணலாம்.)

## மரணகால மறியும் வகை.

மழைகாலம் வரப்போவதை உணர்ந்து எரும்புகள் ஆஹாரத்தைத் தேடிவைத்துக் கொள்வதுபோல் மனிதன் மரணகாலத்தை அறிந்து மறு உலகிற்கு வேண்டியவைகளை முன்னதாகத் தேடிவைத்துக்கொள்ள வேண்டும் என ஸகல புராணங்களும் கூறுகின்றன. ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு மாதிரி கூறப்படுவதால் மாறுதலுள்ள விஷயங்களை மாத்திர மிங்கு கூறுகிறோம்.

அருந்ததீ, துருவன் எனும் நக்ஷத்ரங்கள் நமது கண்ணுக்குத் தெரியாவிடில் ஓராண்டிற்குமேல் ஜீவித்திருக்க முடியாது. ஸூர்யனது கிரணங்கள் கண்ணுக்குப் புலப்படாவிடில் அக்நியில் கிரணம் காணப்பட்டால் பதினேறு

மாதங்களே வாழ்வு. மல மூத்ரங்களை வாயினால் கக்கினாலும் அப்படிக் கக்குவதாகக் கனவு கண்டாலும் பத்து மாதங்களே வாழ்வர். மரங்களை ஸுவர்ண வர்ணமாகக் கண்டாலும் கந்தர்வ உலகம் தெரிந்தாலும் பிரேதப் பிசாசங்களைக் கனவு கண்டாலும் ஒன்பது மாதங்களே வாழ்வு. திடீரென பெருத்தாலும் இளைத்தாலும் எட்டு மாதங்களே ஜீவித்திருப்பர். கால் அடி பூமியில் சேர்ந்தாப் போலில்லாமல் துண்டுதுண்டாகத் தெரிந்தாலும் அடியோடு அடி தெரியாவிட்டாலும் ஏழு மாதங்கள் ஜீவிதகாலம். காக்கை கழுகு புறு இவைகள் நமது தலையில் உட்கார்ந்தால் ஆறு மாதங்களே வாழ்வு. காக்கைக் கூட்டம் அல்லது புழுதி நம்மையோ நமது நிழலையோ மறைத்துவிட்டால் நம் நிழல் விகாரமாக இருந்தால் நான்கு ஐந்து மாதங்களே வாழ்வோம்.

மேகமில்லாதபோது தென்திக்கில் மின்னலைக்கண்டாலும் ஜலத்தில் இந்திரவில்லைக் கண்டாலும் மூன்று அல்லது இரண்டு மாதங்களே வாழ்வர். ஜலத்திலோ கண்ணாடியிலோ நமது தலை தெரியாவிடில் ஒரு மாதமே வாழ்நாள். உடலில் பிணநாற்றம் எடுத்தால் பதினைந்து நாட்கள்தான் வாழ்வு. ஸ்நாநம் செய்தவுடன் ஹிருதயமும் நாக்கும் உலர்ந்தாலும் தலையில் புகை உண்டானாலும் பத்து நாட்கள்தான் வாழ்வு. உடலில் உள்ள உயிர் நிலையான இடங்களில் கத்தியால் வெட்டுவதுபோல் வாயு துன்பத்தை அளித்தால், கரடி குரங்கு கழுதை கட்டிய தேரிலமர்ந்து தென்திசை நாடிப்போவதுபோலும், கறுப்பு வஸ்த்ர மணிந்து கறுப்பான பெண் தென் திசைக்கு அழைத்துப் போவதுபோல் கனவு கண்டாலும் நம் கழுத்தில் சந்து உண்டாவது, வஸ்த்ர மில்லாத திகம்பர துறவி கண்ணில் படுவது கழுத்துவரை சேரில் முழுகுவது போலும் கனவு கண்டால் பத்து நாட்களிலும் மரணம் தோன்றும். இத்தகைய கனவுகளைக் கண்டவர் பிறகு படுத்துறங்கி காலையில் எழுந்தவுடன் ஒருவருடனும் பேசாமல் பசுவின் காதில் இவைகளைக் கூறி ஸ்நாநம் செய்து ஏகாந்தமான இடத்திலமர்ந்து சிவத்யானம் செய்தால் கெட்ட கனவினாலுண்டாகும் பீடையும் அகால மரணமும் அகலும்.

## காசீ மஹிமை.

தர்மங்களில் ஸாரமானது ஸத்யம். மோக்ஷத்திற்கு முக்யமான ஸாதநம் சமம். க்ஷேத்ரங்களில் சிறந்தது காசி. ஆங்கு குஹா என்றவிடத்தில் ஜைகீஷவ்யர் முக்தி பெற்ருர். அதே ஸித்தி பெறுவதற்கேற்ற இடமாகும். குபேரன் வியாஸர் முதலிய பலர் ஸித்தி அடைந்த இடமது. ஹிரண்யகர்பேசர் வ்யாக்ரேசர் சைலேசர் ஸங்கமேசர் மத்யேசர் சுக்ரேசர் ஜம்புகேசர் முதலிய பல லிங்கங்களிருக்கின்றன அங்கு. காசியில் இறப்பவர் மறுபடி பிறப்பதில்லை. ஒரே ஜன்மாவில் முக்திதரு மிடமது. காசியில் ஸ்ரீருத்ரம் பஞ்சாக்ஷரீ இவைகளை ஜபிப்பது எல்லையில்லா புண்ய மளிக்கும். அவிமுக்தம் என்ருெரு பெயருண்டு காசிக்கு. பகவான் எப்பொழுதும் காசியை விடாமல் இருப்பதால் அவிமுக்தம் என்று பொருள் உண்டு. அவி என்ருல் ஸகலவிதமான பாபங்கள் என்று பொருள். அவைகளிலிருந்து நம்மை விடுவிப்பதால் அவிமுக்தம் என்று பெயர் என இங்கு கூறுகிருர் ரஸமாக.

## அந்தகாஸுர வதம்.

சிவனுக்கு அந்தகாஸுர ஸூதநன் என ஒரு பெயர் உண்டு. அந்தகனைக் கொன்றதால் இப்பெயர் தோன்றிற்று. ஹிரண்யாக்ஷனுடைய புத்ரன் அந்தகன். குருடனைப்போல் நடந்ததால் முனிவர் அந்தகன் எனப் பெயரிட்டார்கள். பிரும்மாவை நாடித்தவம்புரிந்து அபரிமிதமான பலத்தையும் சிவனைத்தவிர மற்றவரால் மரணமில்லாமையையும் வரமாகப் பெற்ருன். அஸுரரது பழக்கப்படி இந்திர பதவியைப் பிடுங்கிக்கொண்டு தேவர்களைப் பல வகையிலும் ஹிம்ஸித்தான். இவனுக்குப் பயந்து, அஸுரர் நுழையமுடியாத மந்தர மலையில் ஓடி ஒளிந்தனர் அமரர். தவவலிமையால் அங்கும் நுழைந்தான் அந்தகன். அவனைக்கண்டு நடுங்கிய தேவர் மநமுருக மஹேசனைத் துதித்துச் சரணமடைந்தனர். அவர்கள் முன் தோன்றிய சிவன் அந்தகனையும் அவனைச்சூழ்ந்து அமரரைக்கொல்ல வரும் அரக்கர் சேனையையும் கண்டார். அரைக்ஷணத்தில் சேனையைச் சாம்பலாக்கி சூலத்தினுல் அந்தகனைக் குத்தி மேலே தூக்கினுர். அவன் உடலிலுள்ள ரக்தமெல்லாம்

அகன்று ஸத்வகுணம் மேலிட்டதால் சிவனைத் துதிக்க ஆரம்பித்தான். அவனுக்கு சிவபக்தியையும் சிவகணமாயிருத்தலையும் அளித்தார் சிவன். [இந்த ஐதிஹ்யம் பிநாகிநீ தீரத்திலுள்ள திருக்கோவிலூரில் நடந்ததாகக் கூறுவர்.]

ஹிரண்யனைக் கொன்ற வராகமூர்த்தி அட்டஹாஸம் செய்து கோரபற்களால் பூமியையும் மற்றவர்களையும் பயமுறுத்தினர். அவரது கோரப்பல்லைப் பிடுங்கித் தனது மாலையிலதைச் சேர்த்துக்கொண்டார் பரமசிவன். பிரஹ்லாத சரிதத்தை வர்ணித்து ஸதா நமோ நாராயணுய என்ற அவனைக் காக்க நரஸிம்மாவதாரம் செய்தார். அவரது அட்டஹாஸத்தை ஸஹிக்கமுடியாத தேவர் சிவனிடம் வேண்ட, அவர் சரபாவதாரம் செய்து அவரை அடக்கி அவர் வேண்டியபடி அவர் தோலையும் தரித்தார். நரஸிம்மன் சிவனை நாடிக் கூறிய நூற்றெட்டு சிவநாம அழகாக இருக்கின்றது. நம: என்பதோடு அமைந்தது.

நமோ ருத்ராய ஶர்வாய—மஹாக்ராஸாய விஷ்ணவே |
நம உக்ராய பீமாய—நம: க்ரோதாய மன்யவே ||

இதன் விரிவுரை மிக விஸ்தாரமாக எழுதப்பட்டிருக்கிறது. நரசிம்மன் சிவனை வணங்கி அவரிடம் லயமானுர். அது நீரில் நீரும் பாலில் பாலும் கலந்ததுபோலாம் என்று வர்ணிக்கிருர் சுத்த அத்வைதியான வேதவியாஸர்.

## ஜாலந்தர வதம்.

கடலின் புத்ரனுகப்பிறந்தவன் ஜாலந்தரன். ஜலத்திஞல் தரிக்கப்பட்டவன் என்ற காரணத்தால் ஜாலந்தரன் எனப் பெயர் பெற்ருன். தவத்திஞல் வரம்பெற்று தனது பலத்திஞல் ஸகல தேவாஸுரர்களையும் ஜயித்து எல்லோரையும் ஹிம்ஸித்து வந்தானவன். வைகுண்டஞ்சென்று மஹாவிஷ்ணுவை ஜயித்து சிவனை ஜயிக்க கைலாஸம் சென்ருன். சிவகணங்களும் நடுங்கும்படி சரவர்ஷங்களை வர்ஷித்தான். மாதேவன் தனது கால் கட்டைவிரலால் கடலில் ஒரு சக்ரம் எழுதினர். ஜாலந்தர! இதைத் தூக்க உனக்கு பலமிருந்தால் என்னுடன் போருக்கு வா என்ருர் சிவன். மந்தரமலையை அசைத்தவன்! ஐராவதத்துடன் இந்திரனைத் தூக்கி எறிந்தவன்! விஷ்ணுவைக் கருடனுடன் நாகபாசத்தால் கட்டியவன்! தேவ ஸ்த்ரீகளைச்

சிறைப் படுத்தியவன்! இத்தகைய நான் உமக்கோ அஞ்சுவேன்? என்று வீரவாதம் பேசி அநாயாஸமாக சக்ரத்தை எடுக்கலாமென எண்ணி அதனருகே சென்ருன். அசைக்கமுடியவில்லை அதை. இரு கரங்களாலும் அதைத் தூக்கி அதனுலேயே உன்னைக் கொல்கிறேன் என அதை எடுத்தான். அது ஒரு நிமிஷத்தில் இவனைக் கொன்றது. [திருவாரூருக்கு வடக்கேயுள்ள திருவிற்குடி என்ற க்ஷேத்ரத்தில் ஜாலந்தரனைக் கொன்றதாக ஐதிஹ்யம்.]

## சிவன் விஷ்ணுவுக்குச் சக்கர மளித்தல்.

அஸுரர் அனைவரும் ஒன்றுகூடி அமரரைக் கண்ட இடங்களில் அடித்துத் துன்புறுத்தினர். அவர்களது உத்யோகத்தை அபஹரித்து அமரர் உணவான யாகத்தில் அளிக்கும் ஹவிஸ்ஸையும் பிடுங்கிச் சென்றனர். தேவரனைவரும் திருமாலிடம் சென்று முறையிட்டனர். ஜாலந்தரனைக் கொல்ல பரமசிவன் சக்ராயுதமெனும் அரிய ஸுதர்சநத்தை உண்டுபண்ணினுர். சிவனை ஆராதித்து அதைப் பெற்றுவந்து துந்துமுதலிய அறுபத்தெட்டு ஆயிரம் அரக்கர்களைக் கொன்று உங்களுக்கு நன்மை செய்கிறேன் என்றுகூறி விச்வகர்மாவைக்கொண்டு அழகிய ஒரு லிங்கத்தை நிர்மாணம் செய்தார். ஸ்ரீ ருத்ரத்தைக் கூறி அபிஷேகம் செய்தார். ஆயிரம் வெண்தாமரை மலர் கொண்டு சிவனை அர்ச்சித்தார். அக்நியில் சிவ ஸஹஸ்ர நாமாவைக் கூறி ஹோமம் செய்தார். ஸஹஸ்ர நாமாவால் துதித்தார்.

## சிவஸஹஸ்ர நாமம்.

இங்கு விஷ்ணு கூறிய ஸஹஸ்ரநாமம் 131 சுலோகங்களால் அமயப்பெற்றது. மிக அழகாக சிறிய சிறிய நாமாக்கள் உள்ளது. இதற்கு விரிவுரை நான்கு வேத வாக்யங்களால் ரஸமாக வர்ணிக்கப்படுகிறது.

१ भवः शिवो हरो रुद्रः पुरुषः पद्मलोचनः ।
अर्थितव्यः सदाचारः सर्वशंभुर्महेश्वरः ॥

१३१ परमार्थगुरुर्दृष्टिः गुरुराश्रित वत्सलः ।
रसो रसज्ञः सर्वज्ञः सर्वसत्वावलंबनः ॥

இப்படி ஓராண்டு திருமால் சிவனைப் பூஜித்தார். விஷ்ணுவின் பக்தியைப் பரீக்ஷிக்க சிவன் அவர் அர்ச்சனைக்காக வைத்திருந்த புஷ்பங்களில் ஒன்றை மறைத்தார். பூஜை நடுவில் பேசலாகாது. எழுந்தும் செல்லலாகாது. அச்யுதன் என் செய்வான்? தனது கண்ணையே எடுத்து சிவன் திருவடியில் நாமாவைக்கூறி ஸமர்ப்பித்தார். உலகெலாம் ஒளிவீச ஒரே ஜோதிர்வடிவனாகத் தோன்றினார் பகவான். அவரது உக்ர ரூபத்தைக்கண்டு தேவரனைவரும் பயந்து ஓடினர். அவரது ரூபத்தை விட மிக உக்ரமான ஸுதர்சந மெனும் சக்ரத்தைத் தந்து உக்ரமான இவ்வாயுதத்தால் பயங்கரமான ராக்ஷஸர்களைக் கொல்வாயாக எனக் கூறி சாந்தமானார். போரில் என்னைப்போல் உக்ரனாக இருந்து தேவர்க்கு என் சாந்த உருவம்போலிரு என்றார் சிவன் திருமாலை.

விஷ்ணு சிவனை வணங்கித் துதித்து சிவபக்தியையே வரமாக வேண்டினார். விஷ்ணுவுக்குக் கண்ணையளித்து புண்டரீகாக்ஷன் எனப்பெயரிட்டார். தாக்ஷாயணி பர்வத ராஜ குமாரியாகப் பிறந்த பின் அவனது ஸஹோதரனை நீ எனக்கு பார்வதியை கன்யாதானம் செய்வாய். நீ கூறிய ஸஹஸ்ரநாமா ஒவ்வொன்றும் ஸுவர்ணதாந பலனை அளிக்கும் என்று அருள்புரிந்து மறைந்தார். [**திருவிழிமிழலை** என்ற குற்றாலத்திற்குத் தெற்கே ஆறுமைலிலுள்ள க்ஷேத்ரத்தில் இந்த ஐதிஹ்யம் நடந்ததாகக் கொண்டாடப் படுகிறது. உத்ஸவமூர்த்தியின் பாதத்தில் விஷ்ணுவின் கண் காணப்படுகிறது. ஆதலால் நேத்ர அர்ப்பணேச்வரர் என அழைக்கப்படுகிறார் சிவன்.]

## தக்ஷயக்ஞம்.

ஈச்வரன் லிங்கரூபி. பகா எனும் தேவி திருவேதி வடிவமானாள். அரூபமாக இருந்த இவ்விரண்டும் அர்த்தநாரீச்வரர் ரூபமாக ஆயிற்று. பிரும்மாவின் வேண்டுகோளுக்கு இணங்கி தனியாக தேவியை இடது புறத்திலிருந்து தோற்றி வைத்தார். தக்ஷன் தேவியைத் துதித்து வணங்கி தனக்குப் புத்ரியாகும்படி வேண்டினார். ஸதி என்ற தாக்ஷாயணியைச் சிவனுக்களித்தார். தன்னைக் கண்டு எழுந்து மரியாதைச் செய்யவில்லை எனக் கோபம் கொண்டு சிவனை விலக்கிவிட்டு ஒரு யாகம் செய்தார்.

அழைக்காதிருந்தும் சிவன் மறுத்தும் தாக்ஷாயணி அங்கு சென்று அவமானமடைந்து தக்ஷயக்ஞம் அழியட்டுமென சாபமளித்து உடலை விட்டாள். சிவன் ஆணையின்படி வீரபத்ரன் யக்ஞசாலையைக் கொளுத்தினர். இந்திரனது கையை அசைவற்றிருக்கும்படி செய்தார். பகனது கண்களைப் பிடுங்கினர். சந்திரனைக் காலால் தேய்த்தார். சக்ரன் சிரத்தை அறுத்தார். அக்னியின் கரங்களை வெட்டி நாக்கைப் பிடுங்கி தலையை காலால் உதைத்தார். யமதண்டத்தை ஒடித்தார். ஈசானனைச் சூலத்தால் குத்தினர். இவர் திக்பாலரையும் தேவர்களையும் கொன்றார். வீரபத்ரன் விஷ்ணுவுடன் கூடி போர்புரிந்தார். மாயையால் விஷ்ணு ஆயிரக்கணக்கான உருவமெடுத்தார். அனைவரையும் அரை க்ஷணத்தில் அடித்து மாய்த்தார் வீரபத்ரர். சக்ராயுதத்தை வீரபத்ரர்மீது விட கையைத் தூக்கினர். அசைவற்று நிற்கும்படி செய்தார் அவர் கையை வீரபத்ரர். விஷ்ணுவின் சிரத்தை அறுத்து பாதாளத்தில் தள்ளினர். வாஸு அவர் உடலில் மானின் தலையை வைத்து அவரை எழுப்பினர். தக்ஷனுடன் சேர்ந்த தோஷத்தால் முனிவர்களையும் காலால் உதைத்தார். தக்ஷன் சிரத்தை அறுத்து அக்நியில் எறிந்தார். ஸரஸ்வதியின் மூக்கை அறுத்தார். [மாயவரத்திற்கருகிலுள்ள திருப்பளியலூர் என்ற க்ஷேத்ரத்தில் தக்ஷன் சிரத்தை அறுத்ததாக ஐதிஹ்யம்.]

## சதுர்முகன்.

பரமசிவனைத் துதித்து வேண்ட இறந்த எல்லோரையும் எழுப்பினர். இழந்த அங்கங்களை அனைவருக்கும் தந்தார். விஷ்ணு தக்ஷன் முதலிய அனைவரும் பகவானைத் துதித்து யக்ஞத்தில் தனியாக ஒருபங்கும் எல்லாம் கலந்த ஸ்விஷ்டக்ருத் என்ற பங்கும் அளித்து யாகத்தில் மிகுந்த பொருள்களெல்லாம் ருத்ரபாகம் எனவும் கல்பித்தனர். உக்ரமான வீரபத்ர சிக்ஷையால் சிவாபசாரபாபமகன்றது. தேவர்க்கு சிவன் கோரமாகவும் சாந்தனுகவும் இருப்பார். பாபிக்கு உக்ரம். பக்தனுக்கு சாந்தம்.

## பார்வதீ விவாஹம்.

சிவபுராணத்திலுள்ளது போலவே பெரும்பாகம் காணப்படுகிறது. பார்வதீ ஸ்வயம் வரத்தில் சிவன்

சிசுவாகி உமையவள் மடிமீதமருவது, இந்திரன் அவரை அடிக்கஆரம்பித்தது, தேவரனைவரும் அசைவற்று நின்றது பிறகு துதித்து ஸ்வாதீநம்பெற்றது, மகாவிஷ்ணு கன்யகா தானம் செய்தது, பிரும்மா புரோஹிதராயிருந்தது இவைகளே இங்கு மாறுதலானவைகள்.

## விக்நேச்வராவதாரம்.

தேவரைப்போல் தைத்யரும் யாகம் சிவபூஜை முதலியவைகளைச்செய்து சிறந்த வீரர்களாகி தேவர்களையும் சிவ பக்தர்களையும் ஹிம்சிப்பதால் அவர்களுக்கு விக்நம் உண்டாக்க விக்நேச்வரரைப் படைக்க வேண்டும் என தேவர் வேண்டினர். சிவனே விக்நேச்வரராக அவதாரம் செய்தார். அந்த பாகத்தை **ப்ரமாணீ** என்ற சந்தஸ்ஸால் வர்ணிக்கிறார்.

---

ஸமஸ்த கர்ம ஸித்தயே ஸுராபகார காரிபி:
கணேச்வரம் ஸுரேச்வரம் வபுர்ததார ஸ: சிவ:

இது பஞ்சசாமர விருத்தம்போல் கூறத்தக்க சுலோகம். முதல் பூஜை விக்நேசருக்கு, ஸ்வதர்மத்திலும் ஆசாரத்திலும் சிறிது பிசகினாலும் உன்னைப் பூஜிக்காவிடிலும் அவர் செய்யும் கர்மாவிற்குப் பயன் இல்லாதபடி விக்நம் செய் என வரமளித்தார் சிவன். விக்நேசர் நர்த்தநம் செய்வதைக் கண்டு களித்து நர்த்தந கணபதி எனப் பெயரிட்டார்.

## நர்த்தநம் எப்போதுண்டானது ?

தாருகன் என ஓர் அஸுரன் இருந்தான். அவன் தவம் செய்து ஸ்த்ரீகளைத் தவிர மற்றவரால் மரணமில்லை என வரம் பெற்றான். ஆதலால் கர்வங்கொண்டு இந்திரன் பிரும்மா விஷ்ணு முதலியவர்களுடன் சண்டையிட்டு வெற்றி பெற்றான். அடிக்கடி அவர்களுடன் போரிடுவான். அவர்கள் பெண்ணுருவம் தாங்கி பெண் எனக் கருணையாலும் பெண்ணால் மரணம் வரும் என்ற அச்சத்தாலும் தங்களை ஹிம்ஸிக்க மாட்டான் எனநினைத்தார்கள். அதை அறிந்த தாருகன் பெண்ணாகி நிற்கும் தேவர்களையும் ஹிம்ஸித்தான். பிரும்மாவுடன் ஸகல தேவரும்

பரமசிவனிடம் சென்று பணிந்து துதித்து வேண்டினர்கள். கொடிய தாருகனுக்குப் பெண்ணால் மரணமாதலால் பார்வதியை வேண்டுவோம் என்றார் சிவன். பார்வதி வேறொரு உருவமெடுக்க எண்ணி தனது ஒரு அம்சத்தினால் பரமசிவன் உடலில் புகுந்தாள். இதை அறிந்த ருத்ரன் தனது கழுத்திலுள்ள விஷத்தால் கருப்பான காலகண்டீ என்ற உக்ரமான காளியைப் படைத்தார்.

சிவனைப் போலவே உள்ள அவளிடமிருந்து எண்ணிறந்த பயங்கரமான பூதப்ரேத பிசாசங்கள் தோன்றின. அவர்களுடன் கூட காளிதேவி அதிவேகமாகச்சென்று தாருகனைக் கொன்று கோபாக்நி ஜ்வலிக்க அட்டஹாஸம் செய்தாள். இதைக்கேட்டு உலகெலாம் நடுங்கிற்று. பலர் இறந்தனர். பரமசிவனைச் சரணமடைந்தனர் தேவர். காளியினருகே சென்று சிவன் ஒரு குழந்தைபோல் உருவெடுத்து அழுதார். காளிகாதேவி குழந்தையை மடியில் எடுத்து பாலளித்தாள். பாலுடன் அவளது கோபத்தையும் சேர்த்துப் பருகினார் சிவன். சிவனிடத்தில் வந்த காளியின் கோபத்தால் எட்டு க்ஷேத்ர பாலர்களது சரீரங்கள் தோன்றின. காளியை ஸந்தோஷப்படுத்த குழந்தை வடிவங்கொண்ட சிவன் நடனமாடினர். ஸகல பூதங்களும் பிரேத பிசாசங்களும் கூத்தாடின. காளியும் யோகினிகளும் கூடவே தாண்டவமாடினர். அது முதல் காளி பூதப்பிரேதம் முதலியவைகளால் உலகிற்கு உபத்ரவம் உண்டாகாதபடி பிரதிதினமும் மாலையில் பரமசிவன் தாண்டவமாடுகிறார். அதைஅனுபவிக்க பிரும்மா விஷ்ணு முதலிய தேவர்கள் அங்கு வருகின்றனர். தாளம் ஒத்து மிருதங்கம் பின்பாட்டு முதலிய கைங்கரியத்தில் ஈடுபடுகின்றனர். பிரதோஷதாண்டவம் நடராஜ தாண்டவம் பல தாண்டவங்கள் தோன்றின,

## உபமன்யு சரிதம்.

பக்த விலாஸம் எனும் நூலை இயற்றிய உபமன்யுவின் சரிதம் பல விடங்களிலிருந்தாலும் இங்கு சில விசேஷங்களுண்டு. வியாக்ரபாத முனிவருடைய புத்ரன் உபமன்யு. அவன் சிறுவனாக இருக்கும் பொழுது மாமனது வீட்டிலே இருந்து பசும்பால் அருந்தினான். மாமன் மகன் தனக்கு நிறைய ருசியானபால் தரும்படிகேட்டான்

அவன் தாயளித்த பாலை ஆநந்தமாக அருந்தி களித்தான். அதைக்கண்டு தானும் அங்ஙனம் தாய் வீட்டில் தரும் பாலை அருந்த வேண்டுமென்று அவாகொண்டு தாயிடம் வந்து அழுதான். எவ்வளவு சமாதாநம்செய்தும் அழுகை ஓயவில்லை. பதியோ ஸதா சிவ பூஜையிலீடுபட்டவர். குடும்பத்தைக் கவனிப்பதில்லை. தாய் பிக்ஷை எடுத்து வந்து அரிசையை அறைத்துச் சூடாக்கிப் பால் போல் தந்தாள். சிறிது சாப்பிட்டுப் பார்த்து இதுபால் இல்லை என அதை துப்பிவிட்டு குழந்தை அழுதான். ருசியான பாலைக் கொடு என்றான்.

தாயும் கண்ணீர் விட்டுக்கதறி குழந்தாய்! பசுபதியின் அருள் இல்லாதவர்க்கு ராஜ்யமோ ஸுவர்க்கமோ மோக்ஷமோ பாலன்னமோ கிடைக்காது. நான் பாக்யமற்றவள். முற்பிறவில் சிவபூஜை செய்யாதவள் என கதறினள். தாயழுவதைக் கண்டான், பால சிவபக்த சிகாமணி. அம்மா! அழாதே! சிவன் இருந்தால் இன்றே என்றே பாற்கடலையே அவர் நமக்குத் தரும்படி செய்கிறேன் என்று கூறி தவம் செய்ய ஹிமயமலை சென்றான். உணவைவிட்டு வாயுவை உண்டு சிவனை நாடிக் கடுந்தவம் புரிந்தான். அவனது சிரஸ்ஸிலிருந்து கிளம்பிய உஷ்ணம் உலகை எலாம் தஹித்தது. தேவர் விஷ்ணுவிடம் சென்று முறையிட்டனர். தனது க்ஞாநக்கண்ணால் உபமன்யுவே அதற்குக் காரணமென உணர்ந்தார்.

இதனிடையில் பரமசிவன் தேவேந்திர வேடம்பூண்டு சிறுவனிடம் வந்தார். உபமன்யோ! நிர்குணனாக ஏழையாக இருக்கும் சிவனைவிட்டு மூன்று லோகங்களுக்கும் பதியான என்னைப் பூஜை செய்! வேண்டியதைத் தருகிறேன் என்றார். ஜன்மாந்திர பாபத்தால்தான் சிவநிந்தையைக் கேழ்க்க நேரிட்டது! எனது உடலை விடுவதும் சிவநிந்தை செய்தவர் நாக்கைப் பிடுங்குவதுமே பிராயச்சித்தம் என எண்ணினார். பாலைப் பெருவதிருக்கட்டும். முதலில் இவனைக்கொன்று என் உடலையும் விடுகிறேன் என பிடி விபூதியை எடுத்து அதர்வாஸ்த்ரத்தை ஜபித்தான். [சிறிது காலம் சிவத்யாநம் செய்தவுடன் ஸகல வித்யைகளும் அவனுக்கு தானே தோன்றின.] யோக அக்னியால் தன்னுடலையும் தஹிக்க முயற்சித்தான்.

பரம சிவன் அதர்வாஸ்த்ரத்தைச் சுருக்கி சிறுவனது யோகாக்நியையும் அவித்தார். சந்திர சேகரனாக தனது நிஜ உருவைக் காட்டினார். ஆயிரக்கணக்கான பால் தாரையையும் பாற்கடலையும் தயிர் கடலையும் நெய்க் கடலையும் பழக்கடலையும் பக்ஷ்ய பர்வதங்களையும் அவன் எதிரே தோற்றிவைத்தார்.

குழந்தாய்! நீ அமரனாகி விட்டாய்! உனது தந்தை தாய் எல்லாம் நானே! என்று கூறி அவனை மடிமீது வைத்து உச்சி முகர்ந்து வேண்டிய வரத்தைக்கேள் என்றார். அசஞ்சலமான சிவபக்தியே தனக்கு வேண்டுமென்றுவரங்கேட்டான். அங்ஙனமே அளித்து அணைத்து மறைந்தார். தன்னிஷ்டத்தால் கிருஷ்ணனாகத் தோன்றிய நாராயணன் அந்த உத்தம பக்தனான உபமன்யுவுக்குச் சிவனளித்த பெருமையை உணர்ந்து தானுமவரைக் கௌரவிக்க அவரிடம் சிவ தீக்ஷைபெற்று சிவனருளால் ஸாம்பன் முதலிய புத்ரர்களைப் பெற்றார். அடியார் பெருமை, ஆண்டவன் அருள், இவர் ஹரிஹரர்களின் அன்யோன்ய அன்பும் மற்றும் பல நீதிகளைக்கொட்டுகிறாரிங்கு வியாஸர்.

**பூர்வ பாகம் முற்றிற்று.**

---

# உத்தரபாகம்.

## நாமஜபம், கீர்த்தநம் கேட்பது.

வேதம் பகவானையே துதிக்கின்றது. கௌசிகன் எனும் வேதியன் ஸாமவேதத்தால் பகவானைப்பாடி ஸதா நாம ஜபம் செய்துவந்தார். ஒரு விஷ்ணு க்ஷேத்திரத்திற்கு அவர் சென்றார். பத்மன் என்பவர் அன்புடன் அவருக்கு அன்னமளித்து நாம கீர்த்தனத்தைக் குடும்பத்துடன் கேட்டுவந்தான். பலர் அவருக்கு சிஷ்யராகி இதில் ஈடுபட்டனர். அனைவருக்கும் பத்மன் அன்னமளித்தான். மாலவன் எனும் வைச்யன் பஜனைக்குத் தீபம் ஏற்றிவந்தான். நாளுக்கு நாள் பஜனையும் அடியார் கூட்டமும் அதிகமாயிற்று. கலிங்கராஜன் கௌசிகரை அண்டி தனது பெருமையை அவர் பாடவேண்டும். சிஷ்யர்

கேட்கவேண்டுமென கூறினன். பகவானைத் தவிற மற்ற வரைப்பாட குருவும் அதைக்கேட்க சிஷ்யரும் மறுத்தார்கள். அரசன் தனது வேலைக்காரர்களைப் பாடச்சொல்லி இவர்களைப் பலவந்தமாக கேட்கும்படிச் செய்தான். அனைவரும் அவன் புகழைக்கேட்க மநமின்றி தம் காதில் மரக்கட்டையை அடைத்துக் கொண்டனர். தங்களையும் பலாத்காரம் செய்வனே என்று கௌசிகர் தன் நாக்கை தானே அறுத்துக்கொண்டார். அரசன் அனைவரையும் ஊரைவிட்டு வெளியேற்றினன்.

சிலகாலம் சென்றபின் எல்லோரும் இறக்க பிரும்மா அனைவரையும் வைகுண்டமழைத்துச் சென்ருர். கௌசிகனைத் தன் அருகில் அமர்த்தி அன்னமளித்த பத்மாக்ஷனைக் குபேரனுக்கினர். மாலவனை வைகுண்டத்தில் தீபமேற்றி அங்கேயே வஸிக்கும்படி செய்தார்.

பகவான் நாம கீர்த்தனம், அதை கேட்பது, அதற்கு உதவி புரிவது முதலியன வைகுண்டத்தை யளிக்கும். சிவ புராணத்தில் விஷ்ணுபக்தியைக்கூறி வியாஸர் ஸமரஸ புத்தியைப் புகட்டுகிருர் உலகிற்கு.

தும்புருவை அருகில் அமர்த்தி அவர் காநத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார் மகாவிஷ்ணு. இதைக்கண்ட நாரதர் தானும் அவருக்கு ஸமமாக அமர்ந்துபாட ஆயிரம் ஆண்டு தவம் புரிந்தார். பகவான் நீண்ட காலம் சென்றபின் அவரையும் அருகில் அமர்த்தி காநத்தைக்கேட்டார்.

## நாரதர் காநம் கற்றது.

தும்புருவுக்கு ஸமமாக ஆகவேண்டுமென நாரதர் தவம் செய்யும்பொழுது, மாநஸ ஸரஸ்ஸிலுள்ள கோட்டானிடம் சென்று காநம் கற்றுவா என ஒரு அசரீரி வாக்கு கூறியது. அவர் பல கந்தர்வர்களுக்கு காநம் கற்பிக்கும் காநபந்து என்ற கோட்டானிடம் சென்று தனது ஸமாசாரத்தைக்கூறி அவருக்கு கோட்டான் உடல் உண்டாகக் காரணமென்ன என்று கேட்டார்.

## காநபந்து சரிதம்.

புவநேசன் என்ருெர் அரசனுக இருந்து மறுநீதி தவருமல் ராஜ்யமாண்டான். பெண்களைத்தவிர புருஷர்

கானத்தினால் பகவானை ஆராதிக்கக்கூடாது. வேதத்தால் தான் ஆராதிக்கவேண்டுமென கட்டளையிட்டான். ஹரி மித்ரர் என்பவர் பூஜையில் உபசாரமாக கானம்செய்தார். அரசன் அவர் பொருளை எல்லாம் எடுத்துக்கொண்டு அவரை வெளிப்படுத்தினன். அவர் பூஜித்த விக்ர ஹத்தை மிலேச்சர் எடுத்துச் சென்றனர். அவரும் இறந்தார். நானும் இறந்து ஸ்வர்க்கம் சென்றேன். என்னைப் பசி பீடிக்க என்ன செய்வதென கேட்டேன். உனது பிணத்தையே பூமியில் சென்று புசி என்றார் யமதர்ம ராஜன். மறுபிறவியில் இக்கோட்டானைகப்பிறந் தேன். ஹரிமித்ரர் விமானத்தில் கானம் செய்து செல் வதைக்கண்டு நானும் ஸங்கீதம் பயின்றேன். ஸங்கீத குருவாக அமர்ந்து பலருக்கு கானம் கற்பிக்கிறேன். நீயும் வெட்கத்தைவிட்டு நன்ருக ஸங்கீதம் கற்றுக்கொள் என்றது. கற்றேன் பல காலம். முடிவில் அவர் அடுத்த கல்பத்தில் கருடனுகும் பாக்யத்தைக் குரு தக்ஷிணையாகத் தந்தார். பகவான் கூறியபடி ஜாம்பவதி ருக்மிணி முதலிய வரிடம் ஸங்கிதம் கற்ருர். ஸ்வரக்ஞானமில்லை நாரதனுக்கு என்றனரவர்கள். ருக்மிணீ ஸ்வர ஸ்திரீகளை அருகில் அழைத்து மூன்று ஆண்டுகள் கற்பித்தாள் அவருக்கு. கிருஷ்ணன் தானே இவரை அழைத்து ஸங்கீதம் கற்பித் தார். பிறகு தும்புருவைவிட அதிக வித்வானுக ஆனர் நாரதர். விஷ்ணு சிவபூஜை செய்யும் பொழுது நாரத ரைப் பாடச் சொல்வார். நல்ல ஸங்கிதம் பல நாள் கற்று குரு கிருபையால் தான்வரும். அதைபகவா னுக்கே ஸமர்ப்பிக்க வேண்டும்.

## அம்பரீஷனும் ஸ்ரீமதி பரிணயமும்.

திருசங்குவும் பத்மாவதி என்ற அவர் பத்நியும் தங்களுக்கு விஷ்ணு பக்தனை புத்ரன் பிறக்கவேண்டு மென கடுந்தவம் செய்தனர். அப்படியே அம்பரீஷன் என்ற புத்ரனைப் பெற்றனர். அவர் விஷ்ணுவை நாடித் தவம் செய்தார். விஷ்ணு கருடனை ஐராவதமாக்கித் தானும் இந்திரனுகி அரசனிடம் வந்து யாதுவரம் வேண்டு மென்ருர். நான் விஷ்ணுவிடமிருந்தே வரம் பெறுவேன். நீர் செல்லுமென்ருர் அரசனவரை. பகவான் நிஜ உருவைக்காட்ட உமக்குச் சிவனிடத்தில் ஸ்திரமான பக்தி

உள்ளதுபோல் உம்மிடத்தில் எனக்கு பக்தி உண்டாக வேண்டும். உலகபற்று குறைந்து உம்மை ஸதா முக்கரணங்களாலும் உபாஸிக்கவேண்டுமென்றார். அங்ஙனமே வரம் தந்து மறைந்தார் மால்.

அம்பரீஷனுக்கு அழகிய ஸ்ரீமதி எனும் கன்யாரத்னம் தோன்றினாள். நாரதரும் பர்வதரும் ஒரு ஸமயம் அரசனிடம் வந்து ஏகாந்தமாக இருந்து தனக்கே அவளைத்தரும்படி வேண்டினர். இருவரும் எனக்கு ஸமமே. ஸ்ரீமதி யாரை வரிக்கிறாளோ அவருக்கு அளிக்கிறேன் என்றான் அரசன். நாரதரும் பர்வதரும் தனித்தனியே மகாவிஷ்ணுவிடம் சென்று தனக்கே அழகைத்தந்து மற்றவரைக் குரங்கு முகமாகச் செய்ய வேண்டும் என வரம் பெற்றனர். விவாஹ மண்டபத்தில் மாலையுடன் வந்த ஸ்ரீமதி இரு குரங்குகளையும் இடையே மன்மதனைப் போன்ற ஒரு மன்மத புருஷனையும் கண்டாள். ஆச்சர்யமும் பயமும் குடிகொண்டது அவளிடம். திகைத்து நின்றாள். அரசன் இருவரில் ஒருவருக்கு மாலையிடு என்றான். இருவர் இடையிலே உள்ள ஸுந்தர புருஷனுக்கே மாலையிட்டாள் ஸ்ரீமதி. அவர் மகாவிஷ்ணு ஸ்ரீமதியுடன் வைகுண்டம் சென்றார் ஒருவருக்கும் தெரியாமல்.

ஏமாந்த இரு ரிஷிகளும் வைகுண்டம் சென்றபோது ஆங்குள்ள ஸ்ரீமதியை மறைத்துவைத்து நீங்கள் ரஹஸ்யமாகக் கேட்டவரத்தைத் தந்தேன். நடுவில் யாரோ ஒரு மாயாவி ஸுந்தரனாக வந்து அவளைத் தூக்கிச்சென்றிருப்பான் என்றார். ஆமாம். மற்ற புருஷனையும் அங்கு அழைத்த அம்பரீஷன்தான் குற்றவாளி என்று கூறி அவனிடம் சென்று நீ இருட்டினால் மூடப்படுவாய் என சபித்தனர். அரசனிடம் வந்த இருளை விஷ்ணு சக்கரம் விரட்ட அது முனிவர்களிடமே சென்றது. முனிவர் பகவானைச் சரணமடைய உங்கள் சாபமும் பக்தன் சக்ரமும் வீணாகாது. அம்பரீஷன் குலத்திலே ராமனாக அவதரிக்கும் என்னிடம் வரட்டும் அந்த தமஸ். (இருவர்) சக்ரத்தை வணங்கி செல்லுங்கள் என்றார். அந்ததமஸ் நீலவர்ணமாகவும் மோஹமாகவும் வந்து ராமனை அண்டிற்று. அதனாலவர் நீலமேகச்யாமளனாகவும் சில ஸமயம் சோக மோஹங்களுக்கும் ஆளானார்.

## மூதேவி துஸ்ஸஹ விவாஹம்.

பாற்கடலிலிருந்து முதலிலுண்டான மிக பயங்கரமான விகாரமான மூதேவியை யதேஷ்டமான புண்ய பலனை அளித்து துஸ்ஸஹர் என்ற முனிவர்க்களித்து பிறகு பகவான் லக்ஷ்மியை மணந்தார். அவள் முனிவருடன் போகும் பொழுது தெய்வ ஸான்னித்யமுள்ள இடம் தனக்குப் பிடிக்காதென அழுதாள். உனக்கேற்ற இடம் எது? என்று முனிவர் கேட்க அவள் பதில் கூறும் வகையில் தர்மமும் ஆசாரமும் உள்ள இடத்தில் லக்ஷ்மீ கடாக்ஷமிருக்கும். அநாசாரமும் நாஸ்திகமும் உள்ள இடம் மூதேவிக்குப் பிரியமானதென தர்ம அதர்மங்களை மிக விரிவாக வர்ணிக்கிருர். உனக்கேற்ற இடத்தைத் தேடி வருகிறேன், என்று கூறி பாதாளம் சென்ற முனிவர் இன்னும் திரும்பவில்லை. அநாசாரமுள்ளவரிடமும் பாபிகளிடமும் தங்கிநிற்கிருளவள். ருத்ரஜபம் செய்பவர்களிடம் மூதேவி அணுகமாட்டாள்.

## சிவஷடக்ஷரீ பஞ்சாக்ஷரீ ஸப்தாக்ஷரீ மந்திரம்.

வேதஸாரமான ஸ்ரீ ருத்ரத்தின் ஸாரமாக உள்ளது சிவஷடக்ஷரீ. பிரணவத்துடன் சேர்ந்தால் பஞ்சாக்ஷரியே ஷடக்ஷரியாகும். இதையே பஞ்சாக்ஷரி என்பர். சிவதராய என்பது ஒரு பஞ்சாக்ஷரீ. மயஸ்கராய என்பது ஒரு பஞ்சாக்ஷரீ. நமஸ்தே சங்கராய என்பது சிவஸப்தாக்ஷரீ மந்த்ரமாகும். மிக மிகக் கொடியதும் மற்றெந்த மந்திரங்களாலும் பிராயச்சித்தங்களாலும் அகலாத எல்லா பாபங்களும் சிவ மந்திரத்தால் உடனே அகலும் என்பதில் சந்தேஹமில்லை.

## பிரணவத்தால் அறியத்தக்க சிவ ஸ்வரூபம்.

யாக்ஞ்யவல்க்யர் கார்க்கிக்கு இதை உபதேசிப்பதாகக் கூறுகிருர். ஓங்காரப் பொருளான சிவன் ஸ்தூலம் அநந்தம் மஹாச்சர்யம், அதீர்க்கம் அலோஹிதம் ஆஸாயம் புநாரஸம், அஸங்கம் அகந்தம் அரசம் அசக்ஷுஷ்கம் அச்ரோத்ரம், அவாங்மநஸ கோசரம். அதேஜஸ்கம் அப்ரமாணம், அநுஸுகம், அநாம கோத்ரம், அமரம் அஜரம் அநாமயம், அம்ருதம் ஓம் சப்தம் அம்ருதம்

அஸம் விருநம் அபூர்வம் அநபரம் அநந்தம் அபாஹ்யம் தத்அஸ்நாதி கிஞ்சந, நதத் அஸ்நாதி கிஞ்சந|| என்று கூறிய சிவஸ்வரூபத்தைக் கூறி த்யாநம் செய்தால் சிவ க்ஞாநம் பெறலாம். அர்த்தம் பொதுவாக விளங்கும். ஓங்காரப் பொருளான சிவன் ஸ்தூலமல்ல. மூப்பு மரணம் நாம கோத்ரம் நோய் முதலியவைகளில்லாதவன் என்று அதன் கருத்து.

## சிவனே எல்லாம்.

சிவன் சக்தியுடன் கூடி நமது உடலிலுள்ள நாடி நரம்பு பிராணன் அபாநன் பத்துபுலன்கள் எல்லாவற்றையும் அதன் அதன் வேலையைச் செய்யும்படி செய்கிருர். அவருடைய ஆணையினுலேயே ஐம்பூதங்களும் தன்தொழிலை நடத்துகின்றன. உண்ட உணவு ஜீர்ணமாவது சிவனுல். வேதங்களை உபதேசித்து அதன் மூலமாக உலகைப் படைப்பது காப்பது லயிப்பது என்ற முத்தொழிலையும் செய்விக்கிருர். இந்திரன் திக்பாலர் வஸு ருத்ரர் ஆதித்யர் மருத்து நவகிரஹம் முதலியவைகளாக இருந்து உலக கார்யத்தைச் செய்கிருர். பாபிகளுக்கு நரக சிக்ஷை வியாதி பீடை முதலியவைகளைச் செய்விப்பவர் அவரே. பக்தர்களையும் தார்மிகர்களையும் ரக்ஷிப்பவர் அவர்தான். கடலும் மலையும் அவரே. காலமும் தேசமும் அவரே. அவனன்றி அணுவும் அசையாது.

## சிவ சக்திகளின் விபூதி.

ஈச்வரன் சிவஸ்வரூபம். மாயை கௌரி ஸ்வரூபம். இங்ஙனமே எல்லாவற்றையும் சிவனும் கௌரியுமாக கூறுகிருர். புருஷன் பிரகிருதி. அர்த்தம் சப்தம். யக்ஞம் தக்ஷிணை. ஆகாசம் பூமி. கடல் கடற்கரை. மரம் கொடி. பிரும்மா ஸாவித்திரீ. விஷ்ணு லக்ஷ்மி. இந்திரன் இந்திராணி. அக்நி ஸ்வாஹா. யமன் யமன் மனைவி. வருணன் ஸர்வார்த்ததாயினி. வாயு மநோரமா. யக்ஷராஜன் ரித்தி. சந்த்ரன் ரோகிணீ. ஸூர்யன் ஸுவர்ச்சலா. ஷண்முகன் தேவஸேனை. தக்ஷன் ப்ரஸூதி மநு சதரூபா. ருசி ஆகூதி. பிருகு க்யாதி. மரீசி ஸம்பூதி. கவி ருசிரா. அங்கிரஸ் ஸ்மிருதி. புலஸ்த்யர் பரிதி: புலகர் தயா. க்ரது ஸந்நதி. அத்ரி அநஸூயா. வஸிஷ்டர் ஊர்ஜா. (அருந்ததி)

புருஷனாக உள்ளவர் அனைவரும் சிவனே பெண்ணாக உள்ளவர் அனைவரும் உமாதேவியே ஆவர்.

சிவ லிங்கத்தில் பீடமாக இருப்பவள் தேவி. லிங்கமாக இருப்பவர் சிவன். க்ஷேத்ரம் தேவி, க்ஷேத்ரக்ஞன் சிவன். சிவனை விட்டு அன்ய தேவனைப் பூஜிப்பது ஸ்த்ரீ தன் பதியை விட்டு அன்யனை ஸேவிப்பது போலாம். ராமாவதாரம் செய்த விஷ்ணு சிவபக்தனும் பிராம்மணனுமான ராவணனைக் கொன்ற பாபம் அகல ராமேச்வரத்தில் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூஜித்தார்.

## அஷ்ட மூர்த்திகளின் குடும்பம்.

உலகெலாம் சிவமயமாயினும் சிற்சில இடங்களில் சிவனது ஸான்னித்யம் அதிகமாக பிரகாசிக்கிறது. மூர்த்தியே இல்லாதவர் பஞ்ச மூர்த்தியாகவும் அஷ்ட மூர்த்தியாகவும் அநேக மூர்த்தியாகவும் இருக்கிறார். ஆகாசம் வாயு அக்நி ஜலம் பூமி சந்த்ரன் ஸூர்யன் யாகம் செய்பவர் என்றவைகள் ஈச்வரனது எட்டு மூர்த்திகளாம். இவைகளே வேதத்தில் பவ சர்வ ஈசானன் பசுபதி ருத்ரன் உக்ரன் பீமன் மஹாத் என்ற பெயர்களாலும் அஷ்ட மூர்த்திகள் என்ற பெயராலும் அழைக்கப் படுகின்றனர். அவர்களின் மனைவி புத்ரர்கள் யாரென வர்ணிக்கிறார்.

## அஷ்ட மூர்த்திகளின் குடும்பம்.

| | | |
|---|---|---|
| 1 சர்வன் | பத்நீ விகேசி. | புத்ரன் அங்காரகன். |
| 2 பவன் | பத்நீ உமா. | புத்ரன் சுக்ரன். |
| 3 பசுபதி | பத்நீ ஸ்வாஹா. | புத்ரன் ஷண்முகன். |
| 4 ஈசானன் | பத்நீ சிவா. | புத்ரன் மனோஜவன். |
| 5 பீமன் | பத்நீ திக்குகள். | புத்ரன் ஸர்க்கன். |
| 6 ருத்ரன் | பத்நீ ஸுவர்ச்சலா. | புத்ரன் சனைச்சரன். |
| 7 மஹாதேவன் | பத்நீ ரோஹிணி. | புத்ரன் புதன். |
| 8 உக்ரன் | பத்நீ திக்ஷாபத்நீ | புதரன் ஸந்தானன். |

1 சர்வன்-பூமி ரூபி, 2 பவன்-ஜலரூபன், 3 பசுபதி-அக்நி ரூபன், 4 ஈசானன்-வாயு வடிவன், 5 பீமன்-ஆகாச ரூபன், 6 ருத்ரன்-சூர்ய ரூபன், 7 மஹாதேவன்-சந்த்ர வடிவன், 8 உக்ரன்-யாகம் செய்தவர் வடிவன். இப்படி

அஷ்ட மூர்த்திகளின் ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்து தியானம் செய்பவர் கைலாஸத்தில் வஸிப்பர்.

## பஞ்சபிரும்ம ஸ்வருபம்.

**1. ஈசாந பிரும்மம் :** இது க்ஷேத்ரக்ஞன் எனப்படும் அனுபவிக்கத்தக்க எல்லா பிரகிருதி வர்க்கத்திற்கும் போக்தாவாக—அனுபவிப்பவனாக உள்ளது—காது இந்திரியமாக ஸகல பிராணிகளிடமும் இருக்கின்றது. **2. தத்புருஷ பிரும்மம் :** பிரகிருதி வடிவமானது. பரமாத்மாவின் முக்ய இடமான குஹையிலிருப்பது. ஸகல ஜீவரிடமும் த்வக் எனும் தோல் இந்திரியமாக அமைந்திருப்பது. **3. அகோர பிரும்மம் :** தர்மம் முதலிய எட்டு அங்கங்களுடன் கூடிய புத்திவடிவமானது. எல்லோரிடமும் கண் வடிவமாக இருப்பது. **4. வாமதேவ பிரும்மம் :** அஹங்கார வடிவமாகவும் நாக்கெனும் இந்திரியமாகவும் எல்லோரிடமும் இருக்கின்றது. **5. ஸத்யோஜாதம் :** மநஸ் தத்வவாகவும் மூக்கு இந்திரியமாகவும் இருக்கிறது. இங்ஙனம் த்யானம் செய்வது நற்பயனைத் தரும்.

## சிவஸ்துதி அக்ஞானத்தை அகற்றும்.

ஸகல உலகையும் படைத்து பிரும்மா விஷ்ணு முதலிய தேவர்களைப் பரமசிவன் உலக கார்யத்தில் ஈடுபடும்படிச் செய்தார். எல்லோரும் பகவானைப் பணிந்து நிற்கும்பொழுது நான் என்ற அஹங்காரம் அனைவரையும் ஆட்கொண்டது. லீலையினால் சிவனும் தான் அளித்த தனது நிஜ ரூபமான க்ஞாநத்தைச் சிறிது மறைத்தார். அஹங்காரம் அக்ஞாநமிரண்டும் சேர்ந்து தேவர்களது க்ஞாநக்கண் ஊனக்கண் என்ற இரண்டையும் மறைத்துவிட்டன. பகவானைப் பார்த்து நீ யார்? எங்கிருந்து வந்தாய்? எனக் கேட்டனர். என்னே அறியாமை! இதே தக்க சமயம் என்று குழந்தைகளுக்குத் தந்தை கூறுவதுபோல் தனது ஸ்வரூபத்தை விளக்கினார் உலக பிதாவான பரமசிவன்.

நான் ஒருவனே, முன்னமேயே எங்குமிருக்கிறேன். என்னைத் தவிர வேறு வஸ்து உலகிலில்லை. பிரும்மா, பிரும்மணஸ்பதி, வேதசந்தஸ், மூன்று அக்நிகள், நான்கு

வேதங்கள், ஆறு அங்கங்கள், பதினெண் புராணங்கள், மந்திர ராசி, நதி மலை பதினான்கு லோகம், புத்தி, இந்திரியம், எல்லாம் நானே என்று கூறி அங்கிருந்து மறைந்தார். நாராயணன் முதலிய ஸகலதேவர்களும் பகவானைத் துதித்தார்கள். சம்போ! தாங்கள் எங்களைப் படைத்த ஜகத்பிதா! தங்களை மறந்து அக்ஞானத்தால் யார் என்று கேட்டோம். கருணையுடன் தாங்கள் கூறிய உண்மையை உணர்ந்தோம். '' விச்வம் பூதம் '' என்ற வேதசொற்படி சென்ற காலத்தில் உண்டானவை. இப்போதுண்டாகின்றவை இனி உண்டாகப் போகின்றவை எல்லாம் நீயே. '' அபாம ஸோமம் '' என்ற வேதங் கூறியபடி உமது உபதேசமெனும் அமிருதத்தைப் பருகினோம். அமிருதர்களாக ஆகிவிட்டோம். எல்லோருடைய ஹ்ருதயத்திலுமிருந்து எல்லோரையும் ஜீவிக்கும்படிச் செய்கிறாய். ஹ்ருதயத்தின் வலது புரத்தில் அ என்ற எழுத்தாகவும் நடுவில் உ என்ற எழுத்தாகவும் இடது பக்கம் ம என்ற எழுத்தாகவும் இருக்கிறீர். ஓங்காரரூபியான பரபிருமமம் நீர் என வேதங்கூறுகிறது. பிறவிக்கடலிலிருந்து தாண்டி வைப்பதால் பிரணவம் தாரமெனப்படும். இந்த தாரக மந்த்ரமான பிரணவத்தையே காசியில் இறப்போரது வலது காதில் விச்வநாதனாக இருந்து உபதேசிக்கிறீர். அதனால் மறுபிறப்பின்றி ஜீவர் முக்தி பெறுகின்றனர். '' ஈசாநஸ் ஸர்வித்யாநாம்,'' '' ஏஷஹிதேவ,'' '' யதோ வாசோ,'' '' யோ ப்ரும்மாணம்,'' '' வாலாக்ர மாத்ரம்,'' '' அணோரணீயான்,'' '' தத்ராபிதஹ்ரம் '' என்பது போன்ற வேத வாக்யங்களைச் சுலோகமாக அமைத்து தேவர் கூறியதாக வியாஸர் வர்ணிக்கிறார். சிவனே பரமன் என்று காட்டும் ஸகல வேத வாக்யங்களும் இந்த ஸ்தோத்ரத்தில் காணலாம். மிக அருமையான வேதாந்த ஸ்துதி.

## பஸ்ப மஹிமை விரஜா ஹோமம்.

விபூதியை அணிந்து அதன் பெருமையை உணர்ந்து பசுபதியைப் பூஜிப்பது பாசுபத விரதம் எனப்படும். சுத்தமான பசும் சாணியை உலர வைத்து அதை விதிப்படி விரஜா ஹோமம் செய்து எடுக்கும் விபூதியே சிவனுக்கு அபிஷேகம் செய்யவும் நாம் அணியவும் சிறந்த

தாம். விரஜா என்றால் பாபத்தை அகற்றுவது எனப் பொருள். விரஜா மந்திரம், நமது பஞ்சப்ராணன் ஏழு தாதுக்கள் பத்து இந்திரியங்கள் உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை உள்ள அவயவங்கள், பஞ்ச பூதங்கள். அவைகளுக்கேற்ற ரூபரஸம் முதலிய விஷயங்கள். அன்னம் பிராணம் மநஸ் ஆகிய இவைகள் எல்லாம் சுத்த மாகட்டும் என்ற பொருள் உள்ளது. இம் மந்திரங்களைக் கூறி நெய் ஸமித் அன்னம் இவைகளால் அக்நியில் ஹோமம் செய்யவேண்டும். விபூதியே ஸத்குணம். க்ஞானம் கர்மாவை எரிக்கும், தீ விபூதியை எரிக்காது.

சுத்தம் செய்யக்கூடிய ஜலம் முதலியவைகளில் அக்நியே மிகப் பாவநமான வஸ்து. தேவ பவித்ரம் என வர்ணிக்கப்படுகிறது வேதம். வேத மந்த்ரங்களைக் கூறி அக்நியில் ஹோமம்செய்து சுத்தமான பஸ்மாவை அணிய வேண்டும். நான்கு வர்ணத்தாரும் நான்கு ஆச்ரமிகளும் அணியவேண்டியது பஸ்மா. அக்நி ஹோத்ர ஹோமத்தில் பயன்பட்ட விபூதி மிகச் சிறந்தது. "அக்நி ரிதிபஸ்ம" அல்லது "த்ரயம் பகம்" அல்லது "ஈசாநஸ் ஸர்வ" அல்லது பஞ்சாக்ஷரியைக் கூறி விபூதி அணியவேண்டும். இதே பாசுபத விரதம். அக்நியினுடைய வீர்யம் விபூதி ஆதலால் அதை அணிந்தவன் வீர்யமுள்ளவன் ஆவான். ஸர்வ பாபங்களையும் அகற்றக்கூடிய விபூதியை அணிந்தவனே சிவனுக்குப் பிரியமானவன். விபூதி அணிந்தவரை அடே என்றோ நீ என்றோ அழைக்கக் கூடாது. அப்படி அழைப்பவர் நரகம் செல்வர்.

விபூதி அணியாமல் செய்யும் ஜபம் ஹோமம் தாநம் யாகம் முதலியவை வீணாகும். பயனைத்தரா. திருபுண்டரம் அணியவே நெற்றி நீளமாக அமைக்கப்பட்டிருக்கிறது. மூன்று ரேகைகளும் மும்மூர்த்தி வடிவம். மூன்று அக்நி வடிவம். மூன்று உலக வடிவம். மூன்று எழுத்து வடிவம். ஒரு அணு கூட பூமியில் விழாமல் தன் மீதே விழும்படி அண்ணார்ந்து விபூதியை அணியவேண்டும் என பஸ்ம மஹிமையைப் பிரும்மா கூற அதனால் மிக சந்தோஷம் அடைந்த சிவன் தேவஸபையில் பிரத்யக்ஷமாகத் தோன்றினார். தேவரனைவரும் எழுந்து நின்று ஸ்ரீ ருத்ரத்தினால் ருத்ரனைத் துதித்து நமஸ்காரம் செய்தார்கள். பகவான்

உங்களுக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்கமிக்கப் பாபிகளும் குண்டகோளர்களும் கூட (பதி இருக்கும் போது அன்யனல் உண்டானவன் குண்டன். பதி இறந்த பின் அன்ய புருஷனல் உண்டானவன் கோளகன்) எந்த பூஜைசெய்தால் நற்கதி பெறுவர் என அருள்புரிய வேண்டுமென்றனர்.

## ஸூர்ய மண்டலத்தில் சிவ தர்சநம்.

தேவர்கள் கேட்க கேள்விக்குப் பதில் கூற முதலில் பகவான் ஸூர்ய மண்டலத்தில் நின்று திவ்ய தர்சநம் தந்தார். கோடி மின்னல்போன்ற ஒளி! எட்டு கரங்கள்! நான்கு முகங்கள்! பனிரண்டு கண்கள்! பாதி தேவியும் பாதி ஈசனுமான அர்த்தநாரீச்வர ரூபம். சிரஸில் ஜடாமண்டலம்! கால்முதல் தலைவரை ஆபரணம்! செவந்த சந்தநம்! செவந்த புஷ்பமாலை !செவந்த ஆடை! கிழக்கே உள்ள முகம் சிறிது மஞ்சள் வர்ணமானது! தெற்கு முகம் சிவப்பானது! மேற்கு முகம் வெளுப்பானது! வடக்கு முகம் பவழ வர்ணமானது! இவை முறையே, ஈசாநம் தத்புருஷம் அகோரம் வாமதேவமென்பனவாம். ஸத்யோஜாதம் என்பது ஸூர்யனுக்கு எதிரானது. உத்தரா, போதிநீ, அத்யாயநீ, ஏகவக்த்ரா என்ற சக்திகளும் நான்கு திக்குகளிலும் காணப்பட்டன. வலது புரம் பிரும்மா இடது பக்கத்தில் விஷ்ணு அருகில் தேஜோமயமான தேவி. அவளைச் சுற்றி சக்திகணங்கள். நவக்ரகங்கள். ஸூர்யன் சிவனுகவும் சந்திரன் தேவியாகவும் காணப்பட்டனர். முநிவர் ஸ்ரீ ருத்ரத்தில் உள்ள சொற்களைக் கொண்டு அரிய ஸ்தோத்ரங்களால் பகவானைத் துதித்தார்கள். ஸந்தோஷமடைந்த பகவான் எல்லோரும் நற்கதிபெற யாது வழி என்று கேட்டதற்கு பதில் கூறினர்.

ஸூர்ய மண்டலத்திற்குள் இருக்கும் என்னை த்யாநம் செய்து ஸூர்யனை நமஸ்கரித்து எல்லோரும் இன்பம் பெறலாம். மூன்று வர்ணத்தாரும் சிவலிங்கார்ச்சனை அல்லது பாணத்தில் என்னை நினைத்து பதினறு உபசாரங்களால் பூஜிக்கலாம். பெண் மக்களும் நான்காவது வர்ணத்தாரும் சிவலிங்கம் பாணமிவைகளைத் தொட்டு

பூஜிக்கக்கூடாது. மற்றவர் செய்யும் சிவ பூஜைக்கு வேண்டிய பணிவிடை செய்தே பூஜா பலனைப்பெறலாம். சிவநியாமம் செய்யலாம். சிவாலய தர்சநம் ஆலய கைங்கர்யம் செயயலாம் சிவநாம ஜபம் செய்யலாம் என்று கூறி பகவான் மறைந்தார்.

''ஸௌர மண்டல மத்யஸ்தம் ஸாம்பம் ஸம்ஸாரபேஷஜம்
நீலக்ரீவம் விரூபாக்ஷம் நமாமி சிவமவ்யயம்'' ||

ஸூர்யமண்டலத்தின் நடுவில் இருப்பவரும் ஸம்ஸார நோயுக்கு மருந்தானவரும், கறுத்த கழுத்துள்ளவரும் நெற்றியில் கண்ணுள்ளவரும் ஒப்பற்றவருமான சிவனை நமஸ்கரிக்கிறேன் என்பது அதன் கருத்து. இதைப்பலர் சூர்ய நமஸ்காரம் செய்யும் பொழுது சொல்வர்.

## நந்தி கூறும் சிவபூஜாவிதி.

**குருலக்ஷணம்.** சாஸ்த்ர அர்த்தங்களை நன்கு கற்றுணர்ந்து அனுஷ்டிப்பவரும், சிஷ்யர்களுக்குக் கற்பிக்கும் சக்தி வாய்ந்தவரும், சஞ்சலபுத்தி இல்லாதவரும், ஆசாரத்தை ரக்ஷிப்பவரும், வேத சாஸ்திர வழியைப்பின் பற்றுபவருமான உத்தம குருவைத்தேடி அவரைப்பூஜிக்க வேண்டும். குரு ஸந்தோஷம் அடையும்படி தநத்தினால் அர்ச்சிக்க வேண்டும். பொருளில்லாதவர் பணிவிடை செய்து குருவைப் பக்தியுடன் வணங்கவேண்டும். குரு ஈச்வரன் மந்த்ரம் மூன்றும் ஒன்றே என எண்ணவேண்டும். குருவின் அருள் இருந்தால்தான் மந்த்ரம் பலனைத் தரும். ஈச்வரன் அருள் புரிவார். பெற்றோர் தந்த அழியக் கூடிய உடலைவிட அழியாத சிறந்த பிறவியைத்தருபவர் குரு. குருவிற்கு ஸமமானவர் ஒருவருமில்லை.

## சிஷ்ய லக்ஷணமும் பரீக்ஷையும்.

மூன்று ஆண்டுவரை சிஷ்யனைப் பரீக்ஷிக்கவேண்டும். கடுமையான வேலையிட்டாலும் திட்டினாலும் அடித்தாலுங் கூட வருந்தாமல் குருவைவிட்டு அகலாமல் மநதால் கூட அவரை வெறுக்காமல் இருக்கும் சிஷ்யனே உத்தமன். இந்திரியம் மநது வாக்கு இவைகளை அடக்கியவன் ஸத்தியந்தவறாதவன், கபடமில்லாதவன், அநுகூலமானவன், கர்வம், குருத்துரோஹம், சோம்பல், பொறாமை,

பேராசை முதலிய துர்குணமில்லாதவன், கூறுமலே குருவிற்கு நன்மைசெய்பவன், முகங்கோணுமல் குருகட்டளையைச் செய்பவன் இத்தகைய லக்ஷணம் உள்ளவனு என பல முறை பரீக்ஷித்தே சிஷ்யனைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

ஒழுங்கான சிஷ்யனே குருவின் கீர்த்திக்குக் காரணமாவான். உத்தமமான குருவே சிஷ்யனைக் கரை ஏற்றி வைப்பார். சிஷ்யன் மந்திரத்தை விட்டாலும் மற்ற பாபத்தைச் செய்தாலும் அது குருவிற்கும் வந்து சேரும். ஆதலால் நன்ருகப் பரீக்ஷித்த பின் உபதேசம் செய்ய வேண்டும்.

## மண்டலத்தில் சிவபூஜை.

சிஷ்யனுக்கு சிவதீக்ஷை செய்வித்து பஞ்சாக்ஷரீ மந்திரத்தை உபதேசித்து பூஜா விதியையும் குரு உபதேசிக்க வேண்டும். முதலில் ஒரு முழம் அளவு பசும் சாணியால் பூமியை மெழுகி எட்டு தளமுள்ள தாமரை புஷ்பத்தை அரிசிமாவினுல் எழுதவேண்டும். வெள்ளைப் பொடி அல்லது குங்குமத்தால் தளங்களை நிரப்பவேண்டும், எட்டு தளங்களிலும் அணிமாதி அஷ்டசித்திகளையும் நடுவில் வைராக்யம் தண்டில் க்ஞாநம் வேறில் தர்மம் கிழக்கே தத்புருஷம் தெற்கே அகோரம் வடக்கே வாமதேவம் மேற்கே ஸத்யோஜாதம் நடுவில் ஈசாநம் தாமரையின் கேஸரங்களில் வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ, காலி, விகரணீ, பல விகரணீ, பலப்ரமதிநீ, ஸர்வ பூத தமநீ, மநோன்மனீ, இந்த சக்திகளையும் நடுவில் மகாமாயையையும் அந்தந்த புருஷர்களுடன் தம்பதி தம்பதிகளாக ஆவாஹநம் செய்யவேண்டும்.

முறையே பதினுறு உபசாரங்களைச் செய்து அந்தந்த மூல மந்த்ரத்தால் ஹோமம் செய்து ஹோமத்தில் மிகுந்ததைச் சிஷ்யனுக் களித்து புது வஸ்த்ரத்தால் அவனை மூட வேண்டும். இது புதிய பிறவிக்கு கர்ப்பவாஸம் செய்வது போலாம். பஞ்சகவ்யத்தைச் சாப்பிடும்படிச் செய்து ருத்ர காயத்ரியைக் காதில் உபதேசிக்கவேண்டும். இரவெல்லாம் உபவாஸத்துடன் விழித்திருக்கும்படிச் செய்து காலை ஸ்நாநம் நித்ய கர்மா ஆனபின்பு பட்டினுல் சிஷ்யன்

கண்ணைக் கட்டி ஸுவர்ண புஷ்பத்துடன் மந்த்ர புஷ்பம் ஸமர்ப்பித்து அபிஷேகம் செய்துவைக்க வேண்டும். தத்வ சுத்திசெய்து பூர்ணாகுதி செய்ய வேண்டும். இங்ஙனம் விதிப்படி உபதேசமான சிஷ்யன் ஒரு நாள் கூட சிவ பூஜை பஞ்சாக்ஷரீ ஜப மில்லாமல் உண்ணக் கூடாது. மூன்று வேளையும் சிவபூஜை செய்வது உத்தமம். அது முடியாவிடில் காலை மாலைகளிலாவது செய்யவேண்டும். காலை ஒரு வேளையாவது பூஜை செய்யாமலிருக்கக் கூடாது.

சிஷ்யனது ஜீவனைச் சிவனாக்கி தாடநம் செய்து த்வா ரத்தைக் காண்பித்து திபநம் கிரஹணம் பூஜநம் பந்தநம் அம்ருதிகரணம் என்பவைகளைச் செய்விக்கவேண்டும். ருத்ரனாகத் தனது உடலைச் செய்யாதவன் ருத்ரனைப் பூஜிக்கக்கூடாது. தீண்டக்கூடாது. அவன் திருநாமத்தைக் கூறவும் கூடாது. அதற்காக பீஜாக்ஷரங்களைக் கூறி உடலையும் கைகளையும் தொட்டு (நியாஸம் செய்து) பிறகு பூஜை ஜபம் முதலியவைகளைச் செய்யவேண்டும்.

சிவ பூஜாங்கமாக ஸூர்ய பூஜை. கண்ணால் காணக் கூடியவனாக இருப்பதாலும் சிவனுக்கு வாஸஸ்தலமாக இருப்பதாலும் சிவனது அஷ்டமூர்த்திகளில் ஒருவனாக இருப்பதாலும் சிவ பூஜையுடன் ஸூர்யனையும் சிவபக்தர் பூஜிக்கவேண்டும். பலவகையான ஸூர்ய மந்திரங்கள் உண்டு. ஏழு வ்யாக்ருதிகளும் ரிதகும் ஸத்யம் என்பதும் காயத்ரியும் வேதம் கூறிய க்ருணிஸூர்ய என்ற அஷ்டா க்ஷரியும் ஓம் நம: ஸூர்யாய கஶுகோல்காய நம: என்ற நவாக்ஷரியும் ஸூர்யமந்திரங்களேயாம். ஆரோக்கியத்தை அளிக்கும் ஸூர்யனைச் சிவ பூஜாங்கமாகச் செய்வதுடன் காலையில் தனியாக ஸூர்ய நமஸ்காரமும் அர்க்யப்ரதா நமும் செய்யவேண்டும். தாம்ப்ரபாத்ரத்தில் அக்ஷதை சந்தநம் சிவந்த புஷ்பம் எள்ளு அருகம்புல் நாயுருவி முதலியவைகளைப் போட்டு சந்தநஜலத்தை நவாக்ஷரியைக் கூறி பாத்திரத்தில் விடவேண்டும். கிழக்கு முகமாக இரு முழங்கால்களால் நின்று தலையில் அந்த கலசத்தை வைத்து மூலமந்திரத்தைக்கூறி ஸூர்யனுக்கு அர்க்யம் அளிக்கவேண்டும். அது ஆயிரம் அச்வமேதயாகப் புண்யத் தைத் தரும். ஸூர்யனருகில் மற்ற எட்டு கிரகங்களும்

இருப்பதாகத் தியானம் செய்யவேண்டும். ஸூர்யனுக்கும் மற்ற கிரகங்களுக்கும் நியாஸம், முத்ரை முதலியவைகள் ஆகமம்போல் விரிவாகக் கூறப்படுகின்றன.

அபிஷேகம் செய்யவேண்டிய முறை அபிஷேகப் பொருள்கள் இந்த பொருளுக்குப் பிறகு இந்தப் பொருளால் அபிஷேகம் என்ற முறை, அபிஷேக காலத்தில் கூறவேண்டிய மந்திரங்கள், பதினாறு உபசாரங்கள், சிவாலயத்தில் ஏழு பிரதக்ஷிணம் செய்யவேண்டும், சிவ மந்திரங்களைக்கூறி அக்நியில் ஹோமம்; ஹோமம் செய்யும் பாத்திரம், எந்தமரத்தாலதைச் செய்யவேண்டும்? எவ்வளவு நீளமுள்ளதாய் இருக்கவேண்டும், வாகீச்வரீ முதலிய தேவிகளின் ஸ்வரூபம், மூலமந்திரம், பூஜாவிதி சிவாவரணங்கள் ஆவரணதேவதைகள் அம்பிகாவர்ணங்கள் ஆவரண சக்திகள் மஹாவிஷ்ணு கூறிய ஸஹஸ்ர நாமங்களை ஆயிரம் கலசங்களில் ஆவாஹநம் செய்து விதிப்படி பூஜைசெய்து ஶிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தல் ஶிவாபிஷேகத்தினால் யார் யார் என்னென்ன பலனை அடைந்தார்கள் என்ற விவரங்களை மிக விரிவாக வர்ணிக்கிறார் புராண முனிவர்.

## ஸநத்குமாரர் ஒட்டை உடல் அகலுவது.

சிவ அபிஷேக மஹிமையை விளக்க ஒரு கதை கூறுகிறார். ஸ்வாயம்புவமநு ஸ்ரீ ருத்ரஜபம் செய்து ஸதாசிவனையே த்யாநம் செய்தார். பல்லாண்டுகள் சென்றபின்னும் சிவனருள் கிடைக்கவில்லை. ஸ்ரீ ருத்ரத்தைக்கூறி சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய் என்று ஒரு அசரீரியான சொல் தோன்றிற்று. ஸ்வாயம்புவமநு ஒரு சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்து விதிப்படி ருத்ரத்தைக் கூறி அபிஷேகம் செய்தார். அபிஷேகப்ரியன் ருத்ரன். அலங்காரப்ரியன் விஷ்ணு. ருத்ரத்தையும் கூறி அபிஷேகம் செய்தவுடன் கருணாமூர்த்தியான கைலாஸநாதன் மநுவின் எதிரே பிரத்யக்ஷமாகத் தோன்றினார். ஸ்வாயம்புவமநு பகவானது திருவடியில் விழுந்துப்போற்றி ஆநந்தக் கண்ணீர்பெருக, மயிர்கூச்சலிட பாஷ்பம் குறளை அடைக்க தழுதழுத்த நாவுடன், ஒன்றும் கூறத்தெரியாமல் சம்போ! மஹா தேவ! ஸாம்ப! ஸதாசிவ! எனக் கதறினார். அவரது பக்தியைக் கண்டு பரமஸந்தோஷமடைந்த பரமசிவன்

குழந்தாய்! உனது அபிஷேகத்தாலும் ருத்ரஜபத்தாலும் கபடமற்ற பக்தியினாலும் ஸந்தோஷமடைந்தேன். உனக்கு யாது வரம்வேண்டும்? என்றார். சிவபக்தியைத்தவிர யாதொன்றும் வேண்டேன். அபிஷேகத்தின் பெருமையை விரிவாக உபதேசியுங்கள் என்றார் மநு.

வடிக்கட்டிய சுத்தஜலம் எனது ஆத்மஸ்வரூபமாகும் சுத்தஜலத்தாலும், கங்கா ஜலத்தாலும், பஞ்ச கவ்யந்தாலும், பாலாலும், தேனாலும், பழரசங்களாலும், வாஸனைத் திரவியத்தாலும் எனக்கு அபிஷேகம் செய்தால் ஸகல தாபங்களும் அகலும். மநதிலுள்ள மலமும் நீங்கும். ஆயிரம் கலசங்களால் அபிஷேகம் செய்வதும் இடைவிடாமல் தாராபிஷேகம் செய்வதும் மிகச் சிறந்த புண்யமாகும். வேண்டியவிஷயங்களை நமது நந்தியின் சிஷ்யனான ஸநத்குமாரனிடம் கேட்டு அறிவாயாக என்று கூறி பகவான் மறைந்தார். மன்னன் மஹாமேரு மலைக்குச் சென்றார். ஸநத்குமார முனிவரது திருவடியை பணிந்து ஸத்குரோ! அடியேனை ஆட்கொண்டு அருள் புரியவேண்டும். பகவானே உம்மிடம் என்னை அனுப்பினார். உமது மஹிமை அளவு கடந்தது. கர்மாவினால் முக்தியா? க்ஞாநத்தால் முக்தியா? கர்மாவும் க்ஞாநமும் சேர்ந்து அதனால் முக்தி உண்டாகுமா? என வினவினார். ஸநத்குமாரர் கூறினார். ஓ மநுவே! முதலில் நமது பாபங்களும் துர்குணங்களும் அகல ஈச்வரனை ஆராதிப்பது என்ற கர்மாவைச் செய்யவேண்டும். கர்மாவை விடாமல் செய்துக்கொண்டே க்ஞாநத்தை அப்யஸிக்க வேண்டும். சுத்த சிவக்ஞாநம் உண்டானபின் கர்மா தானே அகலும். சிவாநந்தம் தானே கைகூடும். எனது அனுபவத்துடன் கூறுகிறேன் கேள்.

ஒருஸமயம் நான் கர்மாக்களை விட்டுவிட்டு த்யாநத்தி லீடுபட்டேன். அச்சமயம் கைலாஸநாதன் சிவகணங்களும் உமையவளும் ஸ்கந்தனும் கணநாதனும்சூழ நந்தி முன்நின்று வழிகாட்ட மஹரிஷிகள் வேதமோத அப்ஸரஸ்ஸுகள் ஆட கந்தர்வர் காநம் செய்ய நான் தவம் செய்யும் இடத்திற்கு ஸமீபமாகச் சென்றார். எனது மநம் ஏகாந்த நிலையை விட்டது. கண் காது முதலிய புலன்கள் விழித்தெழுந்து அது அதன் வேலையைச்செய்ய ஆரம்பித்தன. சிவ பூஜை செய்யாததால் பாபம் அகலவில்லை.

அருகில் வந்தபகவானை எழுந்து வணங்கவில்லை, மநப் புலன்களை அடக்க முயற்சித்தேன். பரமசிவன் என்னை பார்த்து பார்வதி! பரிபாகமில்லாத பிரும்மபுத்ரனைப் பார் என்றுகூறிச் சென்றார். சிவனுக்கு முன்னே செல்லும் நந்தி "யாரிவன்? சிவனைக்கண்டும் எழுந்திருக்காமல் ஒட்டையைப்போல் உட்கார்ந்திருக்கிறான்? சிவாபசாரம் செய்த இவன் ஒட்டையாகட்டும்" என்று சபித்தார். சிவ பூஜை எனும் கர்மாசெய்யாத நான் ஒட்டையானேன்.

எனது தந்தையைத் தேடிச்சென்றேன். அவர் அவனியில் ஒரு வேள்விச் செய்து கொண்டிருந்தார். அவரை அடுத்து என்குறையைக் கூறினேன். என்பிதாவான சதுர்முகன் பரமசிவனைப் பணிந்து ஸ்தோத்ரம் செய்தார். மஹேச்வரன் அவரைப் பார்த்து யாதுவரம் வேண்டும் என்றார். ப்ரபோ! எனது அருமைப் புதல்வனை நந்தி ஒட்டையாக்கி விட்டார். அவன் க்ஞாநி. அவன் நிஜ உருவைப் பெற்று தவம்செய்ய அருள்புரியவேண்டுமென பிரார்த்தித்தார். பக்தனுன நந்தியின் சாபத்தை அகற்ற என்னாலாகாது. அவனையே உபாஸித்துத் தனது உருவை பெறட்டுமென்றார். [ பிரும்மா யாகம் செய்த இடம் காஞ்சீபுர க்ஷேத்ரம். அங்கு ஒட்டை உருவத்துடன் உள்ள விக்ரகம் சிவனைப் பூஜிப்பதாக கச்சபேச்வரர் ஆலயத்தில் இரண்டு மூன்று இடங்களில் தூண்களில் காணப்படுகிறது. காஞ்சீபுராணத்தைக் கச்சபேச்வரர் ஆலயத்தில் உபன்யஸிக்கும்படி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் ஆக்ஞையிட்டு, அந்தந்த இடங்களைக்கூறி அவைகளைப் பார்த்துவிட்டு வந்து கதை கூறு என எனக்கு உத்தரவிட்டார்கள். இந்த கதை காஞ்சீ புராணத்தில் விரிவாக உளது ] அங்ஙனமே நான் நந்தியை உபாஸித்து அவர் அருளால் சாபம் நீங்கப்பெற்று அவரிடமே சிவபூஜா விதியைக் கற்றுபூஜை செய்து வருகிறேன்.

சிவபூஜை செய்வதுடன் சிவார்ப்பணம் என சில தாநங்களைச் செய்யவேண்டும். முதலில் துலா புருஷ தாநம் செய்ய வேண்டும். அதாவது பூஜை செய்பவன் ஒருபுறம் தராசுத்தட்டில் அமர்ந்து மற்றொரு தட்டில் அந்த இடைக்கேற்ற ஸுவர்ணம் அல்லது வெள்ளியை வைத்து நிறுத்து சிவபக்தருக்கு அளிக்க வேண்டும். திலபர்வத

தாநம் ஸுவர்ண பூமிதாநம் கல்பக விருக்ஷதாநம் முதலிய தாநங்கள் சிறந்தவை. சிவகாயத்ரீ கௌரீகாயத்ரீ ருத்ர காயத்ரீ தந்தி காயத்ரீ ஸ்கந்த காயத்ரீ விருஷ காயத்ரீ நந்தி காயத்ரீ விஷ்ணு காயத்ரீ லக்ஷ்மீ காயத்ரீ ராதா காயத்ரீ கருட காயத்ரீ பிரும்ம காயத்ரீ வாக் காயத்ரீ சக்ர காயத்ரீ அக்நி காயத்ரீ யம காயத்ரீ நிரிரிதிகாயத்ரீ வருண காயத்ரீ வாயு காயத்ரீ யக்ஷ காயத்ரீ துர்க்கா காயத்ரீ ஆகியவைகளைக் கூறுகிருர். இங்கு அம்பஸ்ய பாரே என்ற தைத்திரீய நான்காம் உபநிஷத்தில் கூறப் படும் காயத்ரிகளைவிட அதேபோன்ற காயத்ரிகள் பல கூறப்படுகின்றன. எந்த எந்த காயத்ரீ மந்திரத்தால் இந்த இந்த திரவியத்தைக் கொண்டு ஹோமம் செய்தால் இந்த இந்த நோய் அகலும். பயன் உண்டாகும் என்ப வைகளை இங்கு விரிவாகக் காணலாம்.

## தாநவிதி.

நல்ல இடத்தில் நல்ல காலத்தில் நல்ல பாத்ரத்தில் நல்ல பொருளைத் தருவதே தாநம். தவத்திஞல் நல்ல உலகம் சென்ருலும் தாநம் செய்தால்தான் இன்பம் உண்டாகும். மறுபிறவிக்கும் பயனைத் தருவது தாநம். நமக்கு எது பிரியமானப் பொருளோ அந்த பொருளையே அளிக்கவேண்டும். அளிக்கும் பொருள் வாடிவதங்கியதாக வோ, பழையதாகவோ, ஸாரமில்லாததாகவோ இருக்கக் கூடாது. பார்ப்பதற்கும் அநுபவிப்பதற்கும் நன்ருகயிருப் பதும் ரஸமுள்ளதுமான பொருள்களையே தர வேண்டும். தாநம் வாங்குபவரிடம் ஒரு பதில் உபகாரத்தை நாடி தாநம் செய்யக் கூடாது. வேதமறிந்தவனே தாநத்திற்கு முக்ய பாத்ரம். அவர் அநுஷ்டாநம் உள்ளவராகவும் குடும்பியாகவுமிருந்து சூத்ருருடைய அன்னத்தை உண்ணு தவராக இருந்தால் அதைவிட உயர்ந்த பாத்ரம்வேறில்லை. பிரியமான சொற்களைக்கூறி ஆதரவுடனும் பக்தியுடனும் தாநம் செய்யவேண்டும் என தாந விதியை வர்ணித்தார் மிக விஸ்தாரமாக அகோரமூர்த்தி.

அகோர ரூபியான சிவனைப் பிரதிஷ்டை செய்யும் விதி அதனுலுண்டாகும்பயன் சுகாசார்யர்கூறிய அகோர மூர்த்தி பூஜா விதி. [சுவேதாரண்ய க்ஷேத்ரத்தில் அகோர மூர்த்தி பிரதிஷ்டை. பாநுவார மிரவில் விசேஷமான

பூஜை இன்னும் நடைபெற்று வருகிறது. அந்தந்த க்ஷேத்ரத்திலுள்ள பகவானது நாமாவை ஆங்காங்குள்ளோர் வைத்துக் கொள்வது ஸஹஜம். இங்குள்ள பலருடைய நாமா அகோரம் என்றே அமைந்திருக்கும். ஸ்தூலமாகப் பார்த்தால் அ. என்பது எதிரிடையான பொருளையே காட்டும். தர்மம் அதர்மம் என்பது போல் கோரம் அகோரம் கோரமில்லாதது என்றே தோன்றும். ஆனால் மிக கோரமான மூர்த்திக்கு அகோரம் என்ற பெயருண்டாகக் காரணம் யாதெனில் இவரைவிட கோரமானவர் எவருமில்லை என்ற காரணத்தால் அகோரர் என்று அழைக்கப் படுகிறார்.]

## அபிஷேக த்ரவ்ய முறை.

பொதுவாகப் பனிரண்டு அபிஷேக த்ரவ்யங்கள் கூறப்படுகின்றன. அவைகளில் முதலில் எது? பின்னர் எது? என்ற முறையை இங்கு காணலாம்.

1 வாஸனை கலந்த எண்ணெய் அபிஷேகம்.
2 ஒரே கபில பசுவிடமிருந்து எடுத்த பஞ்சகவ்யம்.
3 பஞ்சாமிருத அபிஷேகம்.
4 பசும்பாலால் தாரையாக அபிஷேகம்.
5 தோய்த்த பசும் தயிரால் அபிஷேகம்.
6 பசும் நெய்யால் அபிஷேகம்.
7 தேனால் அபிஷேகம்.
8 கருப்பஞ்சாரினால் அபிஷேகம்.
9 பழ ரஸங்களால் அபிஷேகம்.
10 இளநீரால் அபிஷேகம்.
11 சந்தந ஜலத்தால் அபிஷேகம்.
12 பஞ்சகலசத்தால் அபிஷேகம்.

ஒவ்வொரு அபிஷேகமும் பரமசிவனுக்குப் பேரானந்தத்தை உண்டுபண்ணும். பக்தருக்குண்டான ஆத்யாத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிகமெனும் ஸம்ஸார தாபம் வராமல் செய்யும்.

இப்படி நந்திபகவான் கூறிய பாசுபத யோகத்தை வர்ணித்து ஸூதபுராணிகர் லிங்க புராணத்தைப் பூர்த்தி செய்கிறார். மஹர்ஷிகள் பரமசிவனை ஹிருதயத்தில் தியாநம் செய்து வாயினால் போற்றி உடலால் நமஸ்கரித்

தார்கள். ஸத்ய லோகத்திலிருந்து பிரும்மா ஹம்ஸ வாஹநத்திலேறி வந்து நைமிசாரண்ய மஹர்ஷிகளையும் ஸூத புராணிகரையும் கொண்டாடினர். உத்தமமான இந்த புராணத்தைக்கூறியதால் ரோமஹர்ஷணஸூதரும், கேட்டதால் இங்குள்ள மஹர்ஷிகளும், உயர்ந்த கதியை அடைந்தார்கள். உபநிஷத் வித்யைகளை உபாஸிப்பதாலும் ஸோமயாகம் அப்தோர்யாமம் வாஜபேயம் அச்வமேதம் முதலிய யாகங்களாலும், கேட்பது கூறுவது ஸ்மரிப்பது பாத ஸேவநம் முதலிய பக்தியாலும் வேதாந்த விசாரத்தாலும் வரக்கூடிய புண்யத்தை லிங்க புராணத்தால் அடைந்தீர்கள் என்று கூறி மறைந்தார்.

எல்லோரும் ஸூதரைக் கொண்டாடி தக்கபடி பூஜித்தார்கள். அவர் கீழுள்ளதைக் கூறி முடித்தார்.

க்ருத க்ருத்யனாக ஆனேன். பிராம்மணர்களுக்கு நமஸ்காரம். யக்ஞத்திற்கு நமஸ்காரம். சிவனுக்கு நமஸ்காரம். சாந்தரான வியாஸருக்கு நமஸ்காரம். பவாநீ சங்கரார்ப்பணம்.

**ஸ்ரீ லிங்க புராணம் முற்றிற்று.**



# லிங்கபுராண அநுபந்தம்.

## ஸஹஸ்ர நாமம்.

உலகிலுள்ள ஸமஸ்தமும் ஈஶ்வரரூபம். சப்தங்களெல்லாம் அவனது திருநாமம். நூறு ஆயிரம் என்பதெல்லாம் ஒரு கணக்கைக் கூறினாலும் அநந்தம் அளவில்லாதது என்ற பொருளேயே அர்த்தமாகக் கொள்ளும். பகவானை வர்ணிக்கும் புருஷஸூக்தம், ஆயிரம் தலை உள்ளவன் ஆயிரம் கண் உள்ளவன் ஆயிரம் கால் உள்ளவன் என்று வர்ணிக்கிறது. ஆயிரம் தலை உள்ளவனுக்கு இரண்டாயிரம் கண்களும் கால்களுமன்றோ இருக்கவேண்டும்! எண்ணிறந்த ஜீவராசிகளது தலைகளும் கண்களும் கால்களும் பகவானுடையவைகளே என்று கருத்து. அதேபோல் எண்ணிறந்த பெயர்களுள்ள ஈஶ்வரனை அஷ்டோத்ர சதநாமா - 108—த்ரிசதீ - 300—ஸஹஸ்ரநாம - 1008 என பெரும்பாலும் ஒவ்வொரு தேவதைகளையும் இவைகளால் அர்ச்சிக்கிறோம். சிவநாம பத்தாயிரம் நாமா கொண்ட ஓர் அர்ச்சனை நூல் உண்டு.

## பாராயணமா? அர்ச்சனையா?

ஒவ்வொரு ஸஹஸ்ரநாமாவையும் திநந்தோறும் பாராயணம் செய்வது முக்யம். ஒவ்வொன்றிலும் "ய: படேந்நித்யம்" என்றே கூறப்படுகிறது ப்ரதிதிநம் பாராயணம் செய்வதே எல்லோர்க்கும் எளிது. ஸௌகர்யம் உள்ளவர் அர்ச்சனை செய்வது விசேஷமே. விசேஷகாலங்களில் சதுர்த்தியில் விக்நேஶ்வர ஸஹஸ்ரநாமம், ஷஷ்டியில் ஸ்கந்த ஸஹஸ்ரநாமம், பிரதோஷமல்லது சிவராத்ரியில் சிவஸஹஸ்ர நாமம், ஏகாதசியில் விஷ்ணு ஸஹஸ்ரநாமம், சுக்ரவாரம் அல்லது நவராத்ரியில் தேவீ ஸஹஸ்ரநாமம் இவைகளைச் செய்யலாம். குறிப்பிட்ட காலத்தில் நூறு ஸஹஸ்ரநாமங்களைச் செய்து லக்ஷார்ச்சனை செய்வதும் விசேஷமே.

## சிவ ஸஹஸ்ர நாமம்.

பாரதம் ஆநுஶாஸநிக பர்வாவில் 48வது அத்தியாயத்தில் கூறப்படும் சிவ ஸஹஸ்ரநாமமே பொதுவாக உலகில் வழங்குகிறது. மற்றும் பற்பல ஸஹஸ்ரநாமாக்கள்

பாஷ்யத்துடன்கூட அச்சிலிருக்கின்றது. பாரதத்தில் உள்ளதே இந்த லிங்க புராணத்திலும் முதலில் தண்டியினால் நாரதருக்கு கூறப்பட்டது. அது அறுபத்தைந்தாம் அத்தியாயம். நூற்றுப்பதினைந்து சுலோக வடிவமானது. சிவபுராணத்திலும் லிங்கத்திலும் இருப்பதும் ஒன்றே. விஷ்ணு ஸஹஸ்ரநாமாவை ஒத்தது.

மஹாவிஷ்ணுவினால் சக்ராயுதத்தை பெறுவதற்காகக் கூறப்பட்டது. தொண்ணூற்றெட்டாவது அத்தியாயம் நூற்று முப்பத்தி நாலு சுலோகமுள்ளது. "அஸ்ய ஸ்ரீ சிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரஸ்ய மஹாவிஷ்ணு ரிஷி: அநுஷ்டுப்சந்த: ஸதாசிவோ தேவதா" சிறிய சிறிய பதங்களால் ஆகியது. வேதார்த்தத்தை விளக்குவது. பெரும்பாலும் விஷ்ணு ஸஹஸ்ரநாமாவை ஒத்தது. நூற்றுக்கணக்கான நாமாக்கள் இரண்டிலும் ஒன்றுகவே காணப்படுகின்றன. சிலஇடங்களில் "உத்தரோ கோபதிர் கோப்தா க்ஞாந கம்ய: புராதந:" என்பதுபோல் பாதி சுலோகங்களும் மஹர்ஷி: கபிலா சார்ய: சத்ருஜித் பித்ருதாபந: வித்வத் தமோ விதபய: என்பதுபோன்ற பலபாதங்களும் அப்படியே காணப்படுகின்றன. அடியில் கோடிட்டவைகளைக் கவனிக்கவும்.

விஷ்ணுஸஹஸ்ரநாமம் தெரிந்தவர்கள் இதைஸுலபமாக பாடம்செய்யலாம். சிறந்தபயனைத் தருவது என்று எல்லோருக்கும் பயன்பட தமிழில்எழுதுகிறோம். அதனால் ஸம்ஸ்கிருதம் தெரிந்தவர் வருந்துவர். ஆக்ஷேபிப்பர் என்றாலும் உச்சரிப்பு தவறின்றிப் படிக்கவே சில ஸம்ஸ்கிருத எழுத்துக்களையும் நம்பரும் போட்டிருக்கிறோம். அதை முதலில் இருமுறை படித்து புரிந்துகொண்டு பிறகு பாராயணம் செய்யவும். இதை உபதேசிப்பவர் அரிது. ஸ்வாமி அருகில் வைத்து ஆரம்பிக்கலாம்.

ஶ — சநிக்கிழமை. ஶு-சுக்ரர். ஶூ - சூர்பநகை.

ஹு-ராஹு, ஹூ-ஹூணன். ஸுரர்-தேவர் ஸூர்யன்.

க2 – கர்ஜூரி. க3 – கஜம். க4 – கநம். ட3 – ஆடம்பரம். த3-தரித்ரன். த4-தநம். ப3-பதரிகா. ப4-பயம்.

மற்ற ஸகஸ்ரநாம ஓம் ஸ்திரஸ்தாணு ப்ரபுர் பாநுப்வரேஎவரதோவர: என ஆரம்பம்.

---

உ

# சிவ ஸஹஸ்ர நாம.

1 ப4வ: சிவ: ஹரோருத்ர:—புருஷ: பத்ம லோசந:
அர்த்தி2 தவ்ய: ஸதா3சார:—ஸர்வ சம்பு4ர் மஹேச்வர:.

2 ஈச்வர: ஸ்தா2ணுரீஶாந:—ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத:
வரீயான் வரதோ3 வந்த்3ய:—சங்கர: பரமேச்வர:.

3 க3ங்க3ாத4ர: சூலத4ர:—பரார்த்தை2க ப்ரயோஜந:
ஸர்வக்ஞ: ஸர்வதே3வாதி3:—கி3ரித4ந்வா ஜடாத4ர:.

4 சந்த்ரா பீட3: சந்த்ரமௌளி:—வித்வான் விஶ்வாமரேஶ்வர:
வேதாந்த ஸார ஸந்தோ3ஹ:—கபாலீ நீல லோஹித:.

5 த்4யாநாதா4ர: அபரிச்சே2த்3ய:-கௌரீப4ர்தா க3ணேஶ்வர:
அஷ்டமூர்த்தி: விஶ்வமூர்த்தி:-திரிவர்க்க3: ஸ்வர்க3 ஸாத4ந:.

6 க்ஞாந க3ம்ய: த்3ருட4 ப்ரக்ஞ:—தேவதேவ: த்ரிலோசந:
வாமதேவோ மஹாதேவ:-பாண்டு3: பரித்3ருடே4ா த்3ருட4:.

7 விஶ்வரூபோ விரூபாக்ஷ:—வாகீ3ஶ: ஶுசிரந்தர:
ஸர்வ ப்ரணய ஸம்வாதீ3—வ்ருஷாங்கோ வ்ருஷ வாஹந:.

8 ஈஶ: பிநாகி க2ட்வாங்கீ3—சித்ர வேஷ: சிரந்தந:
தமோஹரோமஹாயோகீ3-கோ3ப்தா ப்3ரும்மாங்கஹ்ருத்-ஜடீ:

9 காலகால: க்ருத்திவாஸா:—ஸுப4க3: ப்ரணவாத்மக:
உன்மத்த வேஷ: சக்ஷுஷ்ய:—து3ர்வாஸா: ஸ்மரஶாஸந:.

10 த்3ருட4ாயுத4: ஸ்கந்த குரு:—பரமேஷ்டீ2 பராயண:
அநாதி3 மத்4ய நித4ந:—கி3ரீஶ: கி3ரி ப3ாந்த்த4வ:.

11 குபேர ப3ந்து4: ஸ்ரீகண்ட2:—லோகவர்ண உத்தம உத்தம:
ஸாமான்ய தேவ: கோத3ண்டீ4—நீலகண்ட2: பரஶ்வதீ4:.

12 விஶாலாக்ஷோ மிருக3 வ்யாதர4—ஸுரேஶ:-ஸூரதாபந:
த4ர்ம கர்மாக்ஷம: க்ஷேத்ரம்—ப4க3வாந் ப4க3நேத்ரபி4த்.

13 உக்3ர: பஶுபதி: தார்க்ஷ்ய:—ப்ரிய ப4க்த: ப்ரியம்வத3:
த3ாதா த3யாகரோ த3க்ஷ:—கபர்தீ3 காம ஶாஸந:.

14 ஶ்மஶாந நிலய: ஸூக்ஷ்ம:—ஶ்மஶாநஸ்த2: மஹேஶ்வர:
லோககர்தா பூ4தபதி:—மஹாகர்த்தா மஹௌஷதீ4:.

15 **உத்தர: கோ3பதி: கோ3ப்தா-க்ஞாநக3ம்ய: புராதந:**
நீதி: ஸுநீதி: ஶுத்தா4த்மா—ஸோம ஸோமரத: ஸுகீ2.

16 **ஸோமப: அமிருதப: ஸோம:**—மஹாநீதிர் மஹாமதி:
அஜாத ஶத்ரு: ஆலோக:—ஸம்பா4வ்ய: ஹவ்ய வாஹந:.

17 லோக காரோ வேதகார:—ஸூத்ரகார: ஸநாதந:
**மஹர்ஷி: கபிலாசார்ய:** விஶ்வதீ3ப்தி: த்ரிலோசந:.

18 பிநாகபாணி: பூ4தே3வ:—ஸ்வஸ்தித3: ஸ்வஸ்தி க்ருத்ஸதா3
த்ரிதா4மா ஸௌப4க3: ஶர்வ:—ஸர்வக்ஞ: ஸர்வகோ3சர:.

19 ப்3ரும்ம த்4ருக் விஶ்வ ஸ்ருக் ஸ்வர்க3:—கர்ணிகார: ப்ரிய: கவி:
ஶாக2: விஶாக2: கோ3ஶாக2:—ஶிவோ நைக: க்ரது: ஸம:.

20 க3ங்கா3 ப்லவோத3க: பா4வ:—ஸகலஸ்த2பதி: ஸ்தி2ர:
விஜிதாத்மா விதே4யாத்மா—பூ4த வாஹந ஸாரதி2:.

21 ஸக3ணோ க3ண கார்யஶ்ச—ஸுகீர்த்தி: சி2ந்ந ஸம்ஶய:
காமதேவ: காமபால: ப4ஸ்ம—உத்தூ4ளித விக்3ரஹ:.

22 ப4ஸ்ம ப்ரிய: பஸ்மஶாயீ—**காமீ காந்த: க்ருதாக3ம:**
ஸமாயுக்தோ நிவ்ருத்தாத்மா—த4ர்மயுக்த ஸதா3ஶிவ:.

23 சதுர்முக2: சதுர் பா3ஹு:—து3ராவாஸோ து3ராஸத3:
து3ர்கமோ து3ர்லபோ4 து3ர்க்க3:—ஸர்வாயுத4 விஶாரத3:.

24 அத்4யாத்ம யோக3நிலய:—**ஸுதந்து: தந்து வர்த்த4ந:**
**ஶுபா4ங்க: லோக ஸாரங்க3:**—ஜக3தீஶ: அமிருதாஶந:.

25 ப4ஸ்ம ஶுத்தி4 கரோமேரு:—ஓஜஸ்வீ ஶுத்த4 விக்3ரஹ:
ஹிரண்ய ரேதா: தரணி:—மரீசிர் மஹிமாலய:.

26 மஹாஹ்ரத3: மஹாக3ர்ப4:—ஸித்த4 ப்3ருந்தா3ர வந்தி3த:
வ்யாக்4ர சர்மத4ர: வ்யாலி:—மஹாபூ4தோ மஹாநிதி4:.

27 **அமிருதாங்க: அமிருதவபு:**—பஞ்ச யக்ஞ: ப்ரப4ஞ்ஜந:
பஞ்ச விம்ஶதி தத்வக்ஞ:—பாரிஜாத: பராவர:.

28 **ஸுலப4: ஸுவ்ரத:** ஶூர:—வாங்மயைக நிதி4: நிதி4:
வர்ணாஶ்ரம குருர்வர்ணீ—**ஶத்ருஜித் ஶத்ருதாபந:**.

29 **ஆஶ்ரம: க்ஷபண: க்ஷாம:**—க்ஞாநவான் அசலா சல:
ப்ரமாண பூ4த: து3ர்க்ஞேய:—**ஸுபர்ணோ வாயுவாஹந:**.

30 த4நுர் த4ர: த4நுர்வேத3:—குணராஶி: குணாகர:
அநந்த த்3ருஷ்டி: ஆநந்த:—**த3ண்ட3: த3மயிதா த3ம:**.

31 அபி4 வாத்3யோ மஹாசார்ய:—விஶ்வகர்மா விஶாரத3:
வீதராகே3ா விநீதாத்மா—தபஸ்வீ பூ4த ப4ாவந:.

32 உந்மத்த வேஷ: ப்ரச்ச2ந்ந:—ஜிதகாமோ ஜிதப்ரிய:
கல்யாண ப்ரக்ருதி: கல்ப:—ஸர்வலோக ப்ரஜாபதி:.

33 தபஸ்வீ தாரகோ தீ4மாந—ப்ரத4ாந: ப்ரபு4: அவ்யய:
லோகபால: அந்தர்ஹிதாத்மா—கல்பாதி3: கமலேக்ஷண:.

34 வேத ஶாஸ்த்ரார்த்த2 தத்வக்ஞ:—நியமோ நியமா ஶ்ரய:
சந்த்ர: ஸூர்ய: ஶநி: கேது:—விராமோ வித்3ருமச்ச2வி:.

35 ப4க்தி க3ம்ய: பரம் ப்ரும்ம—ம்ருக3 ப3ாணா்பணோ, நக4:
அத்3ரி ராஜாலய: காந்த:—பரமாத்மா ஜகத்குரு:.

36 ஸர்வ கர்மா சல: த்வஷ்டா—மங்கல்யோ மங்கலா வ்ருத:
மஹாதபா: தீ3ர்க்க4 தபா:-**ஸ்த2விஷ்ட2:ஸ்த2விரோத்4ருவ:**

37 **அஹ: ஸம்வத்ஸரோ** வ்யாப்தி:—ப்ரமாணம் பரமம் தப:
ஸம்வத்ஸர கரோ மந்த்ர:—**ப்ரத்யய: ஸர்வ த3ர்ஶந:**.

38 **அஜ: ஸர்வேஶ்வர:** ஸித்3த4:—மஹாரேதா மஹாப3ல:
யோகீ3 யோக்3யோமஹாரேதா:-ஸித்த4:ஸர்வாதி3:அக்நித3:

39 **வஸுர் வஸுமநா: ஸத்ய:**—ஸர்வ பாபஹரோ ஹர:
**அம்ருத: ஶாஶ்வத:** ஶாந்த:-ப3ாண ஹஸ்த: ப்ரதாபவான்.

40 கமண்ட3லுத4ரோத4ன்வீ-**வேத3ாங்கே3ா வேதவிந்முநி:**
**ப்4ராஜிஷ்ணு: போ4ஜநம்—போ4க்தா** லோகநேதா து4ராத4ர:

41 **அதீந்த்3ரியோ மஹாமாய:**—ஸர்வாவாஸ: சதுஷ்பத2:
காலயோகீ3 மஹாநாத3:-**மஹோத் ஸாஹோ மஹாப3வ:**.

42 **மஹாபு3த்தி4: மஹா வீர்ய:**-பூ4தசாரீ புரந்த3ர:
நிஶாசர: ப்ரேத சாரி—மஹாஶக்தி: மஹாத்3யுதி:.

43 **அநிர்தே3ஶ்ய வபு: ஸ்ரீமான்**—ஸர்வ ஹார்யமிதோக3தி:
ப3ஹுஶ்ருதோ ப3ஹுமய:—நியதாத்மா ப4வோத்3ப4வ:.

44 **ஓஜஸ் தேஜோத்3 யுதிகர:**—நர்தக: ஸர்வ காமக:
ந்ருத்ய ப்ரியோந்ருத்ய ந்ருத்ய:—ப்ரகாஶாத்மா ப்ரகாஶந:.

45 பு3த்த4: **ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ர:**-ஸந்மாந: ஸாரஸம்ப்லவ:
**யுக3ாதி3க்ருத் யுக3ாவர்த்த:**-க3ம்பீ4ரோ வ்ருஷவாஹந:

46 **இஷ்டோ விஶிஷ்ட: ஶிஷ்டேஷ்ட:**-ஶரப4: ஶாபே4ாத4நு:
**அபாம் நிதி4: அதி4ஷ்டா2நம்**—விஜயோ ஜயகாலவித்.

47 ப்ரதிஷ்டி2த: ப்ரமாணக்ஞ:—ஹிரண்ய கவசோஹரி:
விரோசந: ஸுரக3ண:—வித்3யே ஶோவிபு3த4ாஶ்ரய:

48 ப3ாலரூபோ ப2லோந் மாதீ2—விவர்தோ க3ஹநோ கு3ரு:
**கரணம் காரணம் கர்த்தா**—ஸர்வ ப3ந்த4 விமோசந:.

49 **வித்3வத்தமோ வீதப4ய:**—விஶ்வ ப3ர்த்தா நிஶாகர:
**வ்யவஸாயோவ்யவஸ்த2ாந:**-ஸ்த2ாநதே3ாஜக3த3ாதி3ஜ:

50 து3ந்துபே4ா லலிதோ விஶ்வ:-ப4வாத்மா ஆத்மநி ஸம்ஸ்தி2த:
வீரேஶ்வரோ வீரப4த்3ர:—வீரஹா வீரப்4ருத் விராட்.

51 வீரசூட3ாமணிர் வேத்தா—தீவ்ர நாதே3ா நதீ3த4ர:
ஆக்ஞாத4ார: த்ரிஶூலீச—ஶிபிவிஷ்ட: ஶிவாலய:.

52 வாலகி2ல்யோ மஹாசாப:—திக்3மாம்சுர் நிதி4ர வ்யய:
அபி4ராம: ஸுஶரண:—ஸுப்ரம்மண்ய: ஸுத4ா பதி:.

53 மக4வான் கௌஶிகோ—கே3மான் விஶ்ராம: ஸர்வஶாஸந:
லலாடா க்ஷோ விஶ்வதே3ஹ:—ஸார: ஸம்ஸார சக்ர ப்4ருத்.

54 அமோக4த ண்ட3 மத்4யஸ்த2:-ஹிரண்யோ ப்3ரும்மவாகஸி
பரமார்த்த2: பரமய:—ஶம்ப4ரோ வ்யாக்4ர கோநல:.

55 ருசிர் வரருசிர் வந்த்3ய:—வாசஸ்பதி: அஹர்பதி:
ரவிர் விரோசந: ஸகந்த4:—ஶாஸ்தா வைவஸ்வதோ ஜந:.

56 யுக்தி: உந்நத கீர்திஶ்ச—ஶாந்த ராக3: பராஜய:
கைலாஸபதிகாமாரி:—**ஸவிதா ரவிலோசந:.**

57 **வித்3வத் தமோவீதப4ய:**—விஶ்வஹர்த்தா நிவாரித:
நித்ய: நியத கல்யாண:—**புண்ய ஶ்ரவண கீர்தந:.**

58 தூ3ர ஶ்ரவா: விஶ்வஸஹ:—த்4யேயோ து3ஸ்வப்ந நாஶக:
**உத்தார கோது3ஷ்க்ருதிஹா**—து3ர்த்த4ர் ஷோது3ஸ்
ஸஹோப4ய:

59 **அநாதி3ர் பூர்ப்பு4வோ லக்ஷ்மீ:**—கிரீட த்ரித3ஶாதி4ப:
விஶ்வ கோ3ப்தா விஶ்வ ப4ர்தா—ஸுதீ4ரோரு சிராங்க3த3:.

60 **ஜநநோ ஜந ஜந்மாதி3:**—ப்ரீதிமான் நீதிமான் நய:
விஶிஷ்ட: காஶ்யபோ பா4நு:—**பீ4மோ பீ4ம பராக்ரம:.**

61 ப்ரணவ: ஸப்த தா4சார:—மஹாகாயோ மஹாத4நு:
ஜன்மாதி4போ மஹாதேவ:—ஸகலாக3ம பாரக3:.

62 தத்வா தத்வ விவேகாத்மா—விபூ4ஷ்ணி: பூ4திபூ4ஷண:
ரிஷி: ப்ராம்மணவித் ஜிஷ்ணு:-**ஜன்ம மிருத்யு ஜராதிக3:.**

63 **யக்ஞோ யக்ஞபதிர் யஜ்வா**—யக்ஞாந்தோ மோக4விக்ரம:
மஹேந்த்ர: து3ர்ப்ப4ர:—ஸேநீ**யக்ஞாங்கோ3யக்ஞவாஹந:**

64 பஞ்ச ப்3ரும்ம ஸமுத்பத்தி:—விஶ்வேஶோ விமலோத3ய:
ஆத்மயோநி: அநாத்3யந்த: ஷட்3விம்சத் ஸப்தலோகத்4ருத்.

65 கா3யத்ரீ வல்லப4: ப்ராம்ஶு:—விஶ்வாவாஸ: ப்ரபா4கர:
ஶிஶு: கி3ரிரத: ஸம்ராட்—ஸுஷேண: ஸுரஶத்ருஹா.

66 அமோக4: அரிஷ்ட மத2ந:—முகுந்தோ3 விக3த ஜ்வர:
ஸ்வயூம் ஜ்யோதி: அநுஜ்யோதி:—ஆத்மஜோதி: அசஞ்சல:.

67 பிங்க3ல: கபிலஶ்மஶ்ரு:—ஶாஸ்த்ர நேத்ர: த்ரயீதநு:
க்ஞாந ஸ்கந்த4: மஹாக்ஞாநீ—திருத் பத்தி ருபப்லவ:.

68 ப4கோ3விவஸ்வான் ஆதி3த்ய:-யோகா3சார்யோ ப்3ருஹஸ்பதி:
உதா3ரகீர்த்தி: உத்3யோகீ3—ஸத்3யோகீ ஸத3ஸன்மய:.

69 நக்ஷத்ர மாலீ நாகேஶ:—ஸாதி4ஷ்டா2ந: ஷடா3ஶ்ரய:
பவித்ரபாணி: பாபாரி:—மணிபூரோ மநோக2தி:

70 ஹ்ருத் புண்ட3ரீக மாஸீந:—ஶுக்ல: ஶாந்த: விருஷாகபி:,
விஷ்ணு: க்3ருஹபதி: க்ருஷ்ண:-ஸமர்த2: அநர்த்த2 நாஶந:.

71 அத4ர்ம ஶத்ரு: அக்ஷய்ய:—புருஹூத: புருஷ்டுத:
ப்3ரும்மக3ர்ப்ப4:ப்3ருஹத்3க3ர்ப்ப4:த4ர்மதே4நு:த4நாக3ம:

72 ஜக3த் ஹிதைஷீ ஸுக3த:—குமார: குஶலாக3ம:
ஹிரண்யவர்ணோ ஜ்யோதிஷ்மான்-நாநாபூ4த த4ரோத்4வநி:.

73 அரோகோ3 நியமாத்4யக்ஷ:—விஶ்வாமித்ரோ த்3விஜோத்தம:.
ப்3ருஹத் ஜ்யோதி: ஸுதா4மாச—மஹாஜ்யோதி: அநுத்தம:

74 மாதாமஹோ மாதரிஶ்வா—நப4ஸ்வான் நாக3ஹாரத்4ருக்
புலஸ்த்ய: புலஹோக3ஸ்த்ய:—ஜாதூகர்ண்ய: பராஶர:.

75 நிராவரண த4ர்மக்ஞ:—**விரிஞ்சோ விஷ்ட2ர ஶ்ரவா:**
ஆத்மபூ4: அநிருத்தோ4த்ரி—க்ஞாந மூர்த்தி: மஹாயஶா:.

76 லோக சூடா3மணி: வீர:—சண்ட3 ஸத்ய பராக்ரம:
வ்யால கல்போ மஹாகல்ப:—மஹா வ்ருக்ஷ: கலாத4ர:.

77 அலங்கரிஷ்ணு: த்வசல:—ரோசிஷ்ணு: விக்ரமோத்தம:
ஆஶு ஶப்3த3 பதி: வேகீ3—ப்லவந: ஶிகி2 ஸாரதி2:.

78 அஸம் ஸ்ருஷ்ட: அதிதி2: ஶக்ர—ப்ரமாதீ2 பாபநாஶந:
வஸு ஶ்ரவா: கவ்யவாஹ:—ப்ரதப்தோ விஶ்வபோ4ஜந:.

79 ஜர்யோ ஜராதி4 ஶமந:—லோஹிதஶ்ச தநூநபாத்
ப்ருஷ த3ஶ்வ: நபோ4 யோநி:-ஸுப்ரதீக: தமிஸ்ரஹா.

80 நிதா3க4: தபநோ மேக4:—பக்ஷ: பரபுரஞ்ஜய:
முகா2நில: ஸுநிஷ்பன்ன:—ஸுரபி4: ஶிஶிராத்மக:

81 வஸந்தோ மாத4வோ க்3ரீஷ்ம:—நப4ஸ்ய: பீ3ஜவாஹந:
அங்கி3ரா முநிராத்ரேய:—விமலோ விஶ்வ வாஹந:.

82 பாவந: புருஜித் ஶக்ர:—த்ரிவித்3யோ நரவாஹந:
**மநோ பு3த்தி4 ரஹங்கார:**—க்ஷேத்ரக்ஞ: க்ஷேத்ரபாலக:.

83 தேஜோ நிதி4: க்ஞாந நிதி4:—விபாகோ விக்4நகாரக:
அத3ர: அநுத்தர: க்ஞேய:-ஜ்யேஷ்டோ2 நிஶ்ரேயஸ ஆலய:.

84 ஶைலோ நக3ஸ்தநு: தே3ஹ:—தா3நவாரி: அரிந்த3ம:
சாருதீ4ர்ஜநக: சாரு—விஶல்யோ லோக ஶல்யக்ருத்.

85 சதுர்வேத3: சதுர் பா4வ:—சதுர: சதுர ப்ரிய:
ஆம்நாயோத2 ஸமாம்நாய:—தீர்த்த2தே3வ: ஶிவாலய:.

86 ப3ஹு ரூப: மஹாரூப:—ஸர்வரூப: சராசர:
ந்யாய நிர்வாஹகோ ந்யாய:—ந்யாய க3ம்ய: நிரஞ்ஜந:.

87 ஸஹஸ்ர மூர்த்தா4 தே3வேந்த்ர:-ஸர்வ: ஶஸ்த்ரப்ரப4ஞ்ஜந:
முண்டோ3 விரூபோவிக்ருத:-த3ண்டீ3 தா3ந்தோகு3ணோத்தம:

88 பிங்க3 லாக்ஷோத2 ஹர்யக்ஷ:—நீலக்3ரீவோ நிராமய:
ஸஹஸ்ர பா3ஹு: ஸர்வேஶ:-ஶரண்ய: ஸர்வலோகப்4ருத்.

89 பத்3மாஸந: பரம்ஜ்யோதி:—பராவர பரம்ப2ல:
பத்3ம க3ர்போ4 மஹா க3ர்ப4: விஶ்வக3ர் போ4 விசக்ஷண:.

90 பரா வரக்ஞோ பீ3ஜேஶ:—ஸுமுக2: ஸுமஹாஸ்வந:
தே3வாஸுர கு3ரு: தே3வ:—தே3வாஸுர நமஸ்க்ருத:.

91 தே3வாஸுர மஹாமாத்ர:—தே3வாஸுர மஹாஶ்ரய:
தே3வாதி4 தே3வோ தே3வர்ஷி: தே3வாஸுர வரப்ரத3:.

92 தே3வாஸு ரேஶ்வரோ தி3வ்ய:— தே3வாஸுர மஹேஶ்வர:
ஸர்வ தே3வ மயோ சிந்த்ய:—தே3வதாத்மா ஆத்ம ஸம்ப4வ:.

93 ஈட்3யோऽனீஶ: ஸுரவ்யாக்4ர: தே3வஸிம்ஹோ தி3வாகர:
விபு3த4ாக்3ரவர: ஶ்ரேஷ்ட2: ஸர்வதே3வ உத்தமோத்தம:.

94 ஶிவக்ஞாந ரத: ஶ்ரீமான்—ஶிகி2 ஶ்ரீபர்வத ப்ரிய:
ஜயஸ்தம்பே4 விஶிஷ்டம்ப4:—நரஸிம்ம நிபாதந:.

95 ப்3ரும்மசாரீ லோகசாரீ—த4ர்மசாரீ த4நாதி4ப:
நந்தீ3 நந்தீ3ஶ்வர: நக்3ந: நக்3ந வ்ரதத4ர: ஶுசி:.

96 லிங்க3ா த்4யக்ஷ: ஸுராத்4யக்ஷ:-யுக3ா த்4யக்ஷ: யுக3ா வஹ:
ஸ்வ வஶ: வஸஶ: ஸ்வர்க3:-ஸ்வர: ஸ்வரமய: ஸ்வந;.

97 பீ3ஜா த்4யக்ஷோ பீ3ஜகர்தா-த4நக்ருத் த4ர்ம வர்த்த4ந:
த3ம்பே4 த2ம்பே4 மஹாத3ம்ப4:-ஸர்வபூ4த மஹேஶ்வர:.

98 ஶ்மஶாந நிலய: திஷ்ய:—ஸேது: அப்ரதிம ஆக்ருதி:
லோகோத்தர: ஸ்பு2ட ஆலோக:-த்ர்யம்ப3க: நாக3 பூ4ஷண:.

99 அந்த4 காரி: மக2 த்3வேஷீ—விஷ்ணு கந்த4ர பாதந:
வீததே3ாஷ: அக்ஷய கு3ண:—த3க்ஷாரி: பூஷத3ந்த ஹ்ருத:.

100 தூ4ர் ஜடி: க2ண்ட3 பரஶு: ஸகலோ நிஷ்கலோ நக4:
ஆத4ார: ஸகலாத4ார:-பாண்டு3 ராபே4ா ம்ருடே3ா நட:.

101 **பூர்ண: பூரயிதா புண்ய:**— ஸுகுமார: ஸுலோசந:
ஸாமகே3ய: ப்ரியகர:—**புண்ய கீர்த்தி: அநாமய:.**

102 **மநோஜவ: தீர்த்த2 கர:** ஜடிலோ ஜீவிதேஶ்வர:
ஜீவிதாந்த கரோ நித்ய:—**வஸுரேதாவ ஸுப்ரிய:.**

103 **ஸத்3 க3தி: ஸத்க்ருதி: ஸக்த:**-காலகண்ட2: கலா த4ர:
மாநீ மான்யோ மஹாகால:-ஸத்3 பூ4தி: ஸத்பாராயண;.

104 சந்த்ர ஸஞ்ஜீவந: ஶாஸ்தா—லோக கூ3ட4: அமராதி4ப:
லோக ப3ந்து4: லோகநாத2: க்ருதக்ஞ: கிருதிபூ4ஷண:.

105 அநபாயீ அக்ஷர: காந்த:—ஸர்வ ஶாஸ்த்ர ப்4ருதாம் வர:
**தேஜோமய: த்3யுதித4ர:**லோகமாயோऽக்3ரணீ: அணு:.

106 ஶுசிஸ்மித: ப்ரஸன்னாத்மா—து3ர்ஜய: து3ரதிக்ரம:
ஜ்யோதிர் மய: நிராகார: ஜக3ந் நாதே2ா ஜலேஶ்வர:.

107 தும்ப3வீணீ மஹாகாய:—விஶோக: ஶோக நாஶந:
த்ரிலோகாத்மா த்ரிலோகேஶ:—ஶுத்த4: ஶுத்தி4:
அதோக்ஷஜ:.

108 அவ்யக்த லக்ஷணோ வ்யக்த:—வ்யக்தா வ்யக்த; விஶாம்பதி:
வரஶீலோ வரதுல:—மானோ மானத4னோ மய:.

109 ப்3ரும்மாவிஷ்ணு: ப்ரஜாபால:—ஹம்ஸோ ஹம்ஸக3தி:யம:
வேத4ா த4ாதா வித4ாதாச—அத்தாஹர்தா சதுர்முக2:.

110 கைலாஸ ஶிக2ர வாஸீ—ஸர்வாவாஸீ ஸதாம்க3தி:
ஹிரண்ய க3ர்பே4ா ஹரிண—புருஷ: பூர்வஜ: பிதா.

111 பூ4தாலய: பூ4தபதி: பூ4தித3:—பு4வனேஶ்வர: ஸம்யோகீ3
யோக3வித் ப்3ரும்மா—ப்ரும்மண்ய: ப்3ராம்மண ப்ரிய:.

112 தே3வப்ரிய: தே3வநாத2:—தே3வக்ஞ: தே3வ சிந்தக:
விஷமாக்ஷ: கலாத்4யக்ஷ:—வ்ருஷாங்கோ விருஷவர்த்த4ந:.

113 நிர்மதே3ா நிரஹங்கார: நிர்மோஹ:—நிருபத்3ர வ:
த3ர்பஹா த3பிதோ த்3ருப்த:—ஸர்வதுக்க நிவர்தக:.

114 ஸப்தஜிஹ்வ: ஸஹஸ்ரார்சி:—ஸ்நிக்3த4: ப்ரக்ருதி த3க்ஷிண:
பூ4தப4வ்ய ப4வந்நாத2:—ப்ரப4வ: ப்4ராந்தி நாஶக:.

115 அர்த்த2:அநர்த்த2:மஹாகோஶ:-பரகார்யஏகபண்டி3த:
நிஷ்கண்டக: க்ருதாநந்த3:—நிர்வ்யாஜ:வ்யாஜ மர்த3ந:.

116 ஸத்வவாந் ஸாத்விக: ஸத்ய—கீர்த்தி ஸ்தம்ப4க்ருதாக3ம:
அகம்பித: கு3ணக்3ராஹீ—நைகாத்மா நைககர்மக்ருத:.

117 ஸுப்ரீத: ஸுமுக2: ஸூக்ஷ்ம:—ஸுகர: த3க்ஷிணோ நல:
ஸ்கந்த4:ஸ்கந்த4த4ரோ து4ர்ய:-ப்ரகட:ப்ரீதிவர்த்த4ந:.

118 அபராஜித: ஸர்வஸஹ:—வித3க்3த4 ஸர்வ வாஹந:
அத்ருத:ஸ்வத்4ருத:ஸாத்4ய:-பூர்த மூர்த்தியஶோத4ர:.

119 வராஹ ஶ்ருங்க3 த்4ருக்வாயு:—ப3லவான் ஏகநாயக:
ஶ்ருதி ப்ரகாஶ: ஶ்ருதிமான்—ஏகப3ந்து4: அநேகத்4ருக்.

120 ஸ்ரீவல்லப4: ஶிவாரம்ப4: ஶாந்த:—ப4த்3ர: ஸமஞ்ஜஸ:
பூ4ஶயோ பூ4திக்ருத் பூ4தி:—பூ4ஷண: பூ4தவாஹந:.

121 அஜாயோ ப[4]க்த காயஸ்த[2]:—காலக்ஞாநீ கலாவபு:
ஸத்ய வ்ரத மஹாத்யாகீ[3]—**நிஷ்ட[2]ா ஶாந்தி: பராயண:**

122 பரார்த்த[2] வருத்தி: வரத[3]:—**விவிக்த: ஶ்ருதிஸாக[3]ர:.**
அநிர்விண்ணோ கு[3]ண க்[3]ராஹீ—கலங்காங்க: கலங்கஹா.

123 ஸ்வப[4]ாவ ருத்[3]ரோ மத்[4]யஸ்த[2]:-ஶத்ருக்[4]நோ மத்[4]யநாஶக:
ஶிக[2]ண்டீ[3] கவசீ ஶூலீ—சண்டீ[3]முண்டீ குண்டலீ[3].

124 மேக[2]லீ கவசீ க[2]ட்[3]கீ[3]—மாயீ ஸம்ஸார ஸாரதி[2]: [மணி:.
**அம்ருத்யு: ஸர்வத்[3]ருக்ஸிம்ஹ:**-தேஜோராஶிர் மஹா

125 **அஸங்க்[2]யேய: அப்ரமேயாத்மா**—வீர்யவான் கார்ய
கோவித[3]:—வேத்[3]யோ வேத[3]ார்த்த[2] வித்கே[3]ாப்தா-
ஸர்வாசாரோ முநீஶ்வர:

126 **அநுத்தமோ து[3]ராத[4]ர்ஷ:**—மது[4]ர: ப்ரியத[3]ர்ஶந:
**ஸுரேஶ: ஶரணம்** ஸர்வ:—ஶப்த[3] ப்[3]ரும்ம ஸதாம்க[3]தி:.

127 காலப[4]க்ஷ: கலங்காரி:—கங்கணீக்ருத வாஸுகி:
**மஹேஷ்வாஸோ மஹீப[4]ர்தா**-நிஷ்கலங்க: விஶ்ருங்க[2]ல:.

128 த்[3]யுமணி: தரணி: த[4]ந்ய:—**ஸித்தி[4]த[3]:ஸித்தி[4]ஸாத[4]ந:**
நிவ்ருத்த: ஸம்விருத: ஶில்ப:-வ்யூடோ[4]ரஸ்கோமஹாபு[4]ஜ:.

129 ஏகஜ்யோதிர் நிராதங்க:—நரோ நாராயண ப்ரிய:
நிர்லேபோ நிஷ்ப்ரபஞ்சாத்மா—நிர்வ்யக்[3]ர: வ்யக்[3]ர நாஶந:.

130 **ஸ்தவ்ய: ஸதவப்ரிய: ஸ்தோதா** வ்யாஸ மூர்த்திரநாகுல:
நிரவத்[3]ய பதே[3]ாபாய:—வித்[3]யா ராஶிர விக்ரம:.

131 ப்ரஶாந்தபு[3]த்தி[4]: அக்ஷுத்[3]ர:-க்ஷுத்[3] ரஹா நித்யஸுந்த[3]ர:
தை[4]ர்ய அக்[3]ர்ய து[4]ர்யா த[4]ாத்ரீஶ:—ஶாகல்ய: ஶர்வரீபதி:.

132 பரமார்த்த[2] கு[3]ருர் த்[3]ருஷ்டி:—கு[3]ரு: ஆஶ்ரித வத்ஸல:
ரஸோ ரஸக்ஞ: ஸர்வக்ஞ: ஸர்வ ஸத்வாவ லம்ப[3]ந:

**ஶிவஸஹஸ்ரநாம முற்றிற்று.**

---

இந்த ஸஹஸ்ரநாமாவைக் கேட்டு பரமஸந்தோஷம் அடைந்த பரமசிவன் ஸுதர்சநம் என்ற சக்ரத்தை மஹா விஷ்ணுவுக்களித்து புண்டரீகாக்ஷன் என்ற பெயரையும் அளித்தார். அன்றியும் இந்த ஸஹஸ்ரநாம புண்யத்தால்

ஸந்தோஷமடைந்து பார்வதியைத் தனக்குக் கன்யாதாநம் செய்யும் புண்யத்தையும் அவருக்கு அளித்தார். அசஞ்சல மான சிவபக்தியையும் தந்தார். ஒவ்வொரு நாமாவையும் பாராயணம் செய்தவருக்கு ஒவ்வொரு ஸுவர்ணதாந பலனை அளிக்கும். ஒவ்வொருநாமாவும் ஒவ்வொரு அஸ்வ மேத மஹாயாகப் பலனைத்தரும். இந்தஸஹஸ்ரநாமாவை கூறி நெய்யினாலோ பாலினாலோ சிவலிங்கத்திற்கு அபி ஷேகம் செய்தால் ஸகலவிதமான போகபாக்யங்களையும் அனுபவித்து உடலைவிட்டபின் கைலாஸஞ் சென்று பேரா நந்தத்தை அனுபவிப்பர். மறுபடிபூமியில் பிறக்கமாட் டார்.

ஸிவார்ப்பணமஸ்து.



# கைவசமுள்ள எமது பிரசுரங்கள்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | 40 ஸம்ஸ்காரம் .... | 1 | 4 |
| 2. | ஸ்துதி குஸுமாஞ்ஜலி 7வது பதிப்பு | 0 | 4 |
| 3. | ஸ்தோத்திர சிந்தாமணி 3 ,, ,, | 0 | 4 |
| 4. | வேதமும் வேதாங்கமும் 3 ,, ,, | 0 | 3 |
| 5. | ஸ்ரீ சங்கரசரிதம் பூஜாகல்பத்துடன் | 0 | 3 |
| 6. | ஸ்ரீ வ்யாஸ சரிதம் .... | 0 | 2 |
| 7. | அஷ்டபதி தத்வார்த்த ஸாரம் | 0 | |
| 8. | ஸ்ரீகோபிகாகீதமும் ஸ்ரீபஜகோவிந்தமும் (2-ம் பதிப்பு) | 0 | |
| 9. | ஆதித்ய ஹ்ருதயமும் கனகதாராஸ்தவமும் | 0 | |
| 10. | துளஸீ சரிதமும்-பூஜா கல்பமும் | 0 | |
| 11. | காவேரி பூஜை .... .... | 0 | |
| 12. | சங்கராந்தி பூஜையும், கோ பூஜையும் | 0 | |
| 13. | ஸரஸ்வதி பூஜை .... .... | 0 | |
| 14. | ஸ்ரீ சிவராத்ரி பூஜையும் கதையும் | 0 | |
| 15. | ஸ்ரீ சித்ரகுப்த, காமாக்ஷி, (காரடை நோன்பு) ஸ்ரீராமநவமி பூஜாகல்பங்கள் | 0 | |
| 16. | ஸதாசாரம் .... .... | 0 | 1 |
| 17. | ஸ்ரீ வரலக்ஷ்மீ வ்ருதமும் பூஜாகல்பமும் | 0 | |
| 18. | நவராத்ரிபூஜை .... .... | 0 | |
| 19. | ஸ்ரீ விநாயகசதுர்த்தியும் பூஜா கல்பமும் | 0 | |
| 20. | வேங்கடேச வ்ரதமும், அஷ்டோத்ரமும் | 0 | |
| 21. | ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாஷ்யம் | 2 | 8 |
| 22. | ப்ரதோஷ பூஜை .... | 0 | 2 |
| 23. | 18 புராணம் (முதல் பாகம்) | 2 | 0 |
| 24. | ஷை (2-ம் பாகம்) | 4 | 0 |
| 25. | ஆபஸ்தம்ப தர்ப்பணம் ஸ்வரத்துடன் | 0 | 10 |
| 26. | ஸ்ரீ புவநேச்வரீ த்ரிசதிநாமாவும் ஸ்தோத்ரமும் | 0 | 8 |

வைதிக தர்மவர்த்தனீ (மாதப்பத்திரிகை) வருடசந்தா ரூ. 4.

Printed at the "Sri Meenakshi Press, Sirkali."

